# ந சுப்புரெட்டியாரின்
# தமிழ்ப்பணிகள்

முனைவர் க ஜோதிமணி



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

மதுரை காமராசர் பல்கலைக்கழக
முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேட்டின் நூல்வடிவு

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-936450-0-0




*eBOOK* ~ *மின் நூல்*

ந சுப்புரெட்டியாரின்

# தமிழ்ப்பணிகள்

முனைவர் க ஜோதிமணி

மதுரை காமராசர் பல்கலைக்கழக
முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேட்டின் நூல்வடிவு



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

ந சுப்புரெட்டியாரின்

# தமிழ்ப்பணிகள்



Published by:



1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

Centenary Committee Publications
AD-13, 5th Street
Anna Nagar West
Chennai – 600 040

**March 2018**

**Price: Rs.625.00**

©




**Printed at:**
**DJ Printers, Chennai – 600 09**




## முனைவர் க ஜோதிமணி

உதவிப்பேராசியர்
தமிழ்த்துறை
இ.மா.கோ.யாதவர் மகளிர் கல்லூரி
மதுரை – 625 014


முனைவர் க ஜோதிமணி தடைக்கற்களை படிக்கற்களாக ஆக்கிக்கொண்டவர். இலக்கியவியல் இளையர் (பி,லிட்.), முதுகலைத்தமிழ் ஆகிய இரு பட்டங்களையும் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் பெற்றவர். திருநெல்வேலியில் இரண்டு ஆண்டுகள் பட்டய ஆசிரியர் பயிற்சி (டி.டி.இ) பெற்றவர். ஓரத்தநாடு அரசு கல்வியியல் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதர் பயிற்சிச்சான்றிதழ் (டி.பி.டி) பெற்றவர். ஆய்வியல் நிறைஞர், காந்தியசிந்தனையில் சான்றிதழ் படிப்பும் பட்டய சான்றிதழும், பி.ஜி.டிப்ளமோவில் யோகா சான்றிதழும், முனைவர் பட்டமும் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் பெற்றவர்.

காந்தியசிந்தனைப் பொறுப்பாசிரியாகப் பணியாற்றி மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் சுழற்கேடயத்தை தம் கல்லூரிக்குப் பெற்றுத்தந்தவர்.

# பதிப்புரை

பேராசிரியரின் நூற்றாண்டில் (2015-2016), நூற்றாண்டுக்குழு பன்னிரெண்டு நூட்களை வெளியிட்டது. அவரது 100 நூல்கள் இணையதளத்தில் அனைவருக்கும் பயன்பெறும் வகையில் பதிவேற்றம் செய்யப்பெற்றுள்ளன. (http://tinyurl.com/nsr100collections)

‘***ந சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்***’ எனும் இந்நூல், முனைவர் க ஜோதிமணி, (உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, இ.மா.கோ.யாதவர் மகளிர் கல்லூரி, மதுரை – 625 014) அவர்களால் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 2015-ல் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேட்டின் நூல்வடிவு. 2017-ல் முனைவர் பட்டம் வழங்கப்பெற்றது.

1993-ல் முனைவர் உலகநாயகி பழனி அவர்கள் பேராசிரியரின் நூட்களில் ஆய்வு மேற்கொண்டு, ‘***தமிழ்வள மேம்பாட்டில் டாக்டர் ந சுப்புரெட்டியாரின் பணி***’ எனும் ஆய்வேட்டினை சென்னை பல்கலைக்கழகத்தில் அளித்து முனைவர் பட்டம் பெற்றார்.

கே அரிகர சுதன், முழுநேர ஆய்வாளர் (கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்), பேராசிரியரின் வைணவ நூட்களை (20) மையமாகக் கொண்டு பாரதியார் பல்கலைக்கழகத்தின் முனைவர் பட்டத்திற்கான ஆய்வினை மேற்கொண்டுள்ளார். முனைவர் பட்டம் பெற்ற பின்பு, அவ்வாய்வேடு நூலாக வெளியிடப்பெறும்.

பேராசியரின் நூட்களை மையமாகக் கொண்டு ஆராய்ச்சி மேற்கொள்ள விழையும் ஆராய்ச்சி மாணவர்கள் வரவேற்கப்பெறுகின்றனர்

**நூற்றாண்டுக் குழு**

# நன்றியுரை

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளராக சேர்ந்து **“ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்”** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதியளித்த மரியாதைக்குரிய துணைவேந்தர் மற்றும் பதிவாளர் ஆகியோர்க்கு என் பணிவான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னை ஆய்வாளராக ஏற்றுக்கொண்டு ஆய்வுக்குத் தேவையான தலைப்பினையும், இயல்களையும் பகுத்துக் கொடுத்து பல்வேறு பணிகளுக்கிடையே ஆய்வுப்படிகளைத் திருத்திச் செப்பனிட்டுக் கொடுத்து இவ்வாய்வு நிறைவு பெற வழிகாட்டியாக அமைத்த நெறியாளர் மரியாதைக்குரிய **முனைவர் செ.எபநேசர் எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி., டி.ஜி.டி.,** தமிழ் உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழ்துறை, அரசு கலைக்கல்லூரி, மேலூர் அவர்களுக்கும், அவர்தம் துணைவியார் **திருமதி மு.கிறிஸ்டி செலீனாள்பாய்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வேட்டின் செம்மையாக்கத்தில் நெறியாளரோடு தோழமை உணர்வுடன் செயல்பட்டு நூல்களும் கருத்தாக்கங்களும் வழங்கிய **முனைவர் நா.நாகலிங்கம்**, தமிழ் உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழ்த்துறை, அரசு கலைக்கல்லூரி, மேலூர், அவர்களுக்கும், அவர்தம் துணைவியார் **இந்திராணி நாகலிங்கம்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆய்விற்குத் தேவையான நூல்களை இன்முகத்துடன் வழங்கிய இ.மா.கோ.யாதவர் மகளிர் கல்லூரி, யாதவர் (இருபாலர்) கல்லூரி மற்றும் செந்தமிழ்க் கல்லூரி நூலகத்தார்க்கும், ஆய்வு மாணவர்களால் புத்தகத்தாத்தா என்று அன்புடன் அழைக்கப்படும் **சா.மு.முருகேசன்** ஐயா அவர்களுக்கும், நியூசெஞ்சுரி புத்தக நிறுவன ஊழியர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வில் சேர எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து உறுதுணையாக இருந்த அன்பு நிறைந்த **தாயார் மற்றும் சகோதர, சகோதரிகளுக்கும், கணவர் மற்றும் என் குழந்தைச் செல்வங்களுக்கும்** என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டைத் அச்சுவடிவில் கொணர்ந்திட்ட **ந சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை**க்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**க. ஜோதிமணி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இளம். | - | இளம்பூரணர் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| கம்பரா. | - | கம்பராமாயணம் |
| கலித். | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| திருவா. | - | திருவாசகம் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நச்சி. | - | நச்சினார்க்கினியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மு.நூ. | - | முன்னர் சுட்டிய நூல் |
| மேலது. | - | மேற்காட்டிய நூல் |
| ed. | - | Editor |
| p. | - | Page |
| pp. | - | Pages |
| Vol. | - | Volume |

# உள்ளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | பதிப்புரை | |
| | நன்றியுரை | |
| | சுருக்கக் குறியீட்டு விளக்கம் | |
| | ஆய்வு அறிமுகம் | 1 – 8 |
| 1. | ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கைத் தகவல்களும் இலக்கியப் பின்புலமும் | 9 – 29 |
| 2. | ஆசிரியப் பணிக்கு ந.சுப்புரெட்டியாரின் பங்களிப்பு | 30 – 55 |
| 3. | ந.சுப்புரெட்டியாரின் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகளும் இலக்கியப் பணிகளும் | 56 – 129 |
| 4. | ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பணிகள் | 130 – 180 |
| 5. | ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள் | 181 – 216 |
| 6. | ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணிகள் | 217 – 261 |
| | ஆய்வு நிறைவுரை | 262 – 271 |
| | துணைநூற்பட்டியல் | i - xii |

# ஆய்வு அறிமுகம்

## முன்னுரை

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், திரு.வி.கல்யாண சுந்தரனார், மு.வரதராசன், வ.சுப.மாணிக்கம், **'தமிழண்ணல்'** என்று போற்றப்பெறும் இராம.பெரியகருப்பன் போன்ற தமிழ்ச்சான்றோர்கள் தமிழ் இலக்கியத்திற்கும் தமிழ்மொழிக்கும் பன்முகப் பார்வையில் பயன்தரும் பல அரிய நூல்களை எழுதி, ஆக்கப்பூர்வமான தமிழ்ப்பணிகளைச் செய்துள்ளார்கள். இதனால் தமிழிலக்கியமும், தமிழிலக்கணமும் தமிழ்மொழியும் பெற்ற வளர்ச்சியும் பயன்களும் எண்ணற்றவை. இந்த வரிசையில் குறிப்பிடத்தக்க தமிழ்ச்சான்றோராக விளங்குபவர் ந.சுப்புரெட்டியார் ஆவார். தமிழிலக்கிய வரலாற்றில் இவரது தமிழ்ப்பணிகள் முக்கியத்துவம் வாய்ந்தன.

## ஆய்வுத்தலைப்பு விளக்கம்

**'ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்'** என்பது இவ்ஆய்வேட்டின் தலைப்பாகும். இவ்ஆய்வேடு, ந.சுப்புரெட்டியார் எழுதிய இலக்கிய நூல்கள் அனைத்தையும் முதன்மைச் சான்றாதாரமாக எடுத்துக்கொண்டு, அவற்றை ஆய்வுக்கு உட்படுத்தி ந.சுப்புரெட்டியாரின் தமிழிலக்கியப் பணிகளையும் தமிழ்ப்பணிகளையும் வகைதொகைப்படுத்தித் திறனாய்ந்து மதிப்பீடு செய்வதாக அமைகின்றது.

## ஆய்வின் நோக்கம்

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர் ந.சுப்புரெட்டியார். கள்ளங்கபடமற்ற குழந்தையுள்ளம் படைத்த இவர் தம் உழைப்பால் உயர்ந்த ஒழுக்கசீலன் ஆவார். பரந்த, விசாலமான உள்ளம் கொண்ட இவர் அனைவரையும் அரவணைத்து உறவு கொள்வதில் வல்லவர்.

ந.சுப்புரெட்டியார் ஆசிரியப்பயிற்சி, ஆசிரியத்துறை, உளவியல், இலக்கியம், சமயம், தத்துவம், திருத்தலப்பயணம், இலக்கியத்திறனாய்வு, வரலாறு, தன் வரலாறு, தமிழிலக்கிய ஆராய்ச்சி, அறிவியல், வானியல், இயற்பியல் முதலான துறைகளில் தமிழில் பல அரிய நூல்களை எழுதியுள்ளார். கலையியல் சிந்தனைகளும் அறிவியல் சிந்தனைகளும் அறிவியல் கருத்துக்களும் தமிழில் அவரெழுதிய இந்நூல்களில் பரவலாக வெளிப்பட்டு நிற்கின்றன. தம் வாழ்நாள் முழுவதும் ஓயாமல் உழைத்துத் தமிழ்ப்பணியாற்றிய இவர், தமிழிலக்கியம், வரலாறு, அறிவியல் துறைகள் சார்ந்து தமிழில் எண்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். அவரெழுதிய இந்நூல்களை முதன்மை ஆதாரங்களாகக் கொண்டு இவருடைய தமிழ்ப்பணிகளை ஆராய்ந்து மதிப்பீடு செய்வதே

இவ்ஆய்வேட்டின் நோக்கமாகும். தொல்காப்பியத்திலிருந்து இக்கால இலக்கிய வகைமைகள் வரையில் ஆழங்கால்பட்டு புலமைத்திறத்தாலும் அனுபவங்களினாலும் இவரெழுதியுள்ள நூல்கள் தமிழ்மொழிக்கும் தமிழிலக்கியத்திற்கும் கிடைத்த அருங்கலைச் செல்வம் எனல் மிகையன்று. அருங்கலைக்கோன் **'ஸ்ரீசடகோபன் பொன்னடி'** எனப் போற்றப்பெறும் ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள் காலம் கடந்து வாழும் வலிமையை பெற்றன. இத்தகைய தமிழ் ஆளுமைகளின் தமிழ்ப்பணிகளை இக்கால இலக்கிய உலகிற்கு அறிமுகப்படுத்துவது காலத்தின் கட்டாயத் தேவையாகும்.

## கருதுகோள்

**'தொல்காப்பியம், சங்கச் செய்யுட்கள், காப்பியங்கள், பக்திப்பனுவல்கள் முதலான தமிழிலக்கியப் படைப்புக்களைப் போலவே, அப்படைப்புக்களின் திறன்களை விளக்கியும் மதிப்பீடு செய்தும் எழுதப்பெற்ற நூல்களும் இலக்கிய முக்கியத்துவம் பெற்றவைகளே. இவ்வாறு இப்பணியைச் செய்த தமிழ்ச்சான்றோர்கள் தமிழன்னைக்குக் கூடுதல் வளம் சேர்த்துள்ளனர். இவ்வகையில் ந.சுப்புரெட்டியார் தமிழிலக்கியப் படைப்புக்களின் திறன்களையும் அதன் சமுதாய, பண்பாட்டு முக்கியத்துவத்தையும் விளக்கி எழுதிய நூல்கள் வாயிலாகத் தமிழ்ப்பணியைத் திறம்படச் செய்துள்ளார்'** என்பதே இவ்ஆய்வேட்டின் கருதுகோளாகும்.

## ஆய்வின் பயன்பாடு

இலக்கியங்கள் வாழ்க்கையிலிருந்தே தோன்றுகின்றன. அவை வாழ்க்கையைப் பற்றிய திறனாய்வாகப் போற்றப்படுகின்றன. இலக்கியங்கள் அவை தோன்றிய காலகட்டத்தில் வாழ்ந்த சமுதாய மக்களின் வாழ்க்கையையும் பண்பாட்டுக் கூறுகளையும் வெளிப்படுத்தும் வரலாற்று ஆவணங்களாகவும் திகழ்ந்து வருகின்றன. காலந்தோறும் தமிழ் மொழியிலும் தமிழிலக்கியத்திலும் பல்வேறு மாற்றங்களும் வளர்ச்சிகளும் புதுமைகளும் நிகழ்ந்து கொண்டே வருகின்றன. இந்த வகையில் ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளும், தமிழிலக்கியப் பணிகளும் தமிழர்களின் வரலாற்றையும், தமிழ்ப்பண்பாட்டையும் மீட்டுருவாக்கம் (Reconstraction) செய்வதற்கும், தமிழினம் மற்றும் தமிழிலக்கியத்தின் பழம்பண்பாட்டு மரபுகளையும், தமிழிலக்கிய மரபுகளையும் கண்டறிவதற்குத் துணையாக அமையும். ந.சுப்புரெட்டியாரின் தமிழ் ஆளுமை பண்புகளை முழுமையாக விளக்கும் இவ்ஆய்வேடு, தமிழ்ச் சான்றோர்களின் வாழ்வையும் பணிகளையும் மதிப்பீடு செய்வதற்கு துணையாக அமையும்.

## ஆய்வின் எல்லையும் பரப்பும்

ந.சுப்புரெட்டியார் தமிழில் ஆசிரியம், உளவியல், பல வகை இலக்கியங்கள், சமயம், தத்துவம் ஆகியன குறித்த

விளக்கம், திருத்தலப் பயணங்கள், திறனாய்வு, வரலாறு, தன் வரலாறு, அறிவியல், தமிழிலக்கிய ஆராய்ச்சி என்னும் பொருண்மைகளில் எழுதியுள்ள எண்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எடுத்துக்கொண்டு, அந்நூல்களை முதன்மைச் சான்றுகளாகக் கொண்டு, அவருடைய தமிழ்ப்பணிகளை வகைதொகைப்படுத்தி மதிப்பீடு செய்து வெளிப்படுத்துதலே இவ்ஆய்வு முயற்சியின் எல்லையும் பரப்புமாகும்.

### ஆய்வு முன்னோடிகள்

ந.சுப்புரெட்டியார் எழுதிய நூல்கள் அனைத்தையும் ஆய்வுக்கு உட்படுத்தி, ந.சுப்புரெட்டியார் என்ற தமிழ் ஆளுமையின் தமிழிலக்கியப் பணிகளையும் தமிழ்ப்பணிகளையும் இதுநாள் வரையில் எவரும் ஆய்வு செய்யவில்லை. ஆதலால் **'ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்'** என்னும் பொருண்மையில் இதுவே முதல் முன்னோடி ஆய்வாக அமைகின்றது.

### ஆய்வுச் சான்றுகள்

இவ்ஆய்வுக்குரிய சான்றுகளை முதன்மைச் சான்றுகள் துணைமைச் சான்றுகள் என இருவகைப்படுத்தி விளக்கலாம்.

### முதன்மைச் சான்றுகள்

தமிழில் ந.சுப்புரெட்டியார் ஆசிரியம், உளவியல், இலக்கிய வகைமைகள், இலக்கணம், கவிதைகள், சமய, தத்துவ விளக்கங்கள், திருத்தலப்பயணங்கள், திறனாய்வு, வரலாறு, தன் வரலாறு, அறிவியல், தமிழிலக்கிய ஆய்வுகள் ஆகியன குறித்து எண்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். இந்நூல்கள் அனைத்தும் இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றுகளாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

### துணைமைச் சான்றுகள்

இவ்ஆய்வுப்பொருள் தொடர்பாக இதுகாறும் வெளிவந்துள்ள விளக்கவுரை நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வு மலர்கள், இதழ்களில் வெளியாகியத் தன் திறனாய்வுக் கட்டுரைகள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வுக் குறிப்புகள், ஆய்வேடுகள் ஆகியன இவ்ஆய்விற்குத் துணைமைச் சான்றுகளாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

### ஆய்வு அணுகுமுறைகள்

இவ்ஆய்வு உள்ளடக்கப் பகுப்பாய்வு முறையில் (Content Analysis Methods) அமைந்ததாகும். இவ்வாய்வில் விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticison), பகுப்பு முறைத் திறனாய்வு (Analytical Criticism) முதலான இலக்கியத் திறனாய்வு முறைகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. தேவையான இடங்களில் வரலாற்றியல் அணுகுமுறை (Historical Approach), உளவியல் அணுகுமுறை (Psychological Approach), ஒப்பியல் அணுகுமுறை

(Comperative Approach) முதலான இலக்கிய ஆய்வு அணுகுமுறைகளும் மேற்கொள்ளப் பெற்றுள்ளன.

## ஆய்வேட்டின் கட்டமைப்பு

இவ்ஆய்வேடு, ஆய்வு அறிமுகம், ஆய்வு நிறைவுரை நீங்கலாகப் பின்வரும் ஆறு இயல்களைக் கொண்டதாகும்.

1. **ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கைத் தகவல்களும் இலக்கியப் பின்புலமும்.**
2. **ஆசிரியப் பணிக்கு ந.சுப்புரெட்டியாரின் பங்களிப்பு.**
3. **ந.சுப்புரெட்டியாரின் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகளும் தமிழ்ப்பணிகளும்.**
4. **ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பணிகள்.**
5. **ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள்.**
6. **ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப்பணிகள்.**

**'ஆய்வு அறிமுகம்'** என்னும் இயலில் முன்னுரை, ஆய்வுத் தலைப்பு விளக்கம், ஆய்வின் நோக்கம், கருதுகோள், ஆய்வின் பயன்பாடு, ஆய்வின் எல்லையும் பரப்பும், ஆய்வு முன்னோடிகள், ஆய்வுச் சான்றுகள், முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வேட்டின் கட்டமைப்பு, இயல் விளக்கங்கள், ஆய்வு நிறைவுரை, மேலாய்வுக்களன்கள், துணைநூற்பட்டியல் என்பன குறித்த செய்திகளும் விளக்கப்பெற்றுள்ளன.

## இயல் விளக்கங்கள்

1. **'ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கைத் தகவல்களும் இலக்கியப் பின்புலமும்'** என்னும் முதல் இயலினுள் ந.சுப்புரெட்டியாரின் பிறப்பும் வளர்ப்பும், தொடக்க நிலைக்கல்வி, கற்பிக்கப்பட்ட பாடங்கள், ந.சுப்புரெட்டியாரின் தொடர்கல்வி முயற்சிகள், குடும்ப வாழ்க்கை, கல்லூரிக்கல்வி, திருக்குறளில் ஈடுபாடு, தாய்மொழிக்கல்வி, ந.சுப்புரெட்டியாரின் கல்விப் பணிகள், ந.சுப்புரெட்டியார் வாழ்க்கை மதிப்பீடு, ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ள நூல்களின் வகை தொகை, ந.சுப்புரெட்டியார் பெற்ற விருதுகளும் பாராட்டுக்களும், வெளிநாட்டுப் பயணங்கள், ந.சுப்புரெட்டியாரைக் கவர்ந்த சான்றோர், அவர் பங்கேற்ற குழுக்களும் பொறுப்புக்களும், ந.சுப்புரெட்டியாரின் புலமைத்திறன், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், ந.சுப்புரெட்டியார் நிறுவியுள்ள அறக்கட்டளைகள் என்பன குறித்த செய்திகள் செறிவாகவும் நுணுக்கமாகவும் விளக்கப்பெற்றுள்ளன.

2. **'ஆசிரியப் பணிக்கு ந.சுப்புரெட்டியாரின் பங்களிப்பு'** என்னும் இரண்டாம் இயலினுள் தமிழ் பயிற்றும் முறை, இலக்கிய நயம் காணல், பள்ளி வாழ்க்கையில் தாய்மொழி, பாடத்திட்டங்கள், பயிற்றுமுறைகள், மூவகையான கல்வி ஏற்பாடுகள், கற்பித்தல் நெறிமுறைகள், பயிற்று முறைகள்,

பயிற்றல் உத்திகள், மொழித்திறன்களை வளர்த்தல், வாய்மொழிப் பயிற்சி, படிப்பு, மொழிப்பயிற்சிகள், கட்டுரைப் பயிற்சி, இலக்கியம் - விளக்கங்கள், கவிதை கற்பித்தல், உரைநடை கற்பித்தல், இலக்கணம் பயிற்றுவித்தல், ஆசிரியரின் செயல் திட்டங்கள், பள்ளிக்குரிய நூல்கள், கல்வித்துறைச் சோதனைகள், தாய்மொழி ஆசிரியர்கள், கவிதை பயிற்றும் முறை, கவிதையைக் கற்பிப்பவர் தகுதி, ஆசிரியத்துறையின் சிறப்பு, கவிதையைத் தேர்ந்தெடுத்தல், கவிதை அறிமுகம், கவிதையைப் படித்தல், கவிதை விளக்கம், கவிதையும் வாழ்க்கையும், கவிதைகளை மனப்பாடம் செய்தல், நான்கு யோசனைகள் என ஆசிரியப் பணி குறித்து ந.சுப்புரெட்டியார் கூறியுள்ள கருத்துக்கள் செறிவாகவும் விரிவாகவும் விளக்கப் பெற்றுள்ளன.

3. **‘ந.சுப்புரெட்டியாரின் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகளும் இலக்கியப் பணிகளும்’** என்னும் மூன்றாம் இயலினுள் சமய, தத்துவ நூல்கள், நூற்றியெட்டு வைணவத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள் - பதினெட்டு, மலைநாட்டுத் திருப்பதிகள் - பதின்மூன்று, தொண்டை நாட்டுத் திருப்பதிகள் - இருபத்திரெண்டு, வடநாட்டுத் திருப்பதிகள் - பன்னிரெண்டு, நம்மாழ்வாரின் வைணவநெறி, திவ்வியப் பிரபந்தங்கள் - தென்புலத்து வைணவ நெறியின் அடிப்படை, மணவாள மாமுனிகள் தொண்டு, அர்ச்சாவதாரம், சடகோபன் செந்தமிழில் ந.சுப்புரெட்டியார், பிரமேயம், பிரமாணம், பிரமாதாக்கள், அர்த்த பஞ்சகம், சில நோக்கில் நாலாயிரம், திருவரங்கம், வைணவ தத்துவத்தின் தொன்மை, தர்மபூத ஞானம், வசிட்டாத்வைதம், மூலமந்திரம் - ஓம் நமோ நாராயணாய, ஞானம் கனிந்த மாறன், நெடியோன் குன்றத்து நீலமுகில், ஆழ்வார் பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம், தூது, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - பிரபந்தத் தொகையும், பாசுரத் தொகையும், இசைப்பாத் தொகுதிகள், முதலாயிரம், பெரிய திருமொழி, ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் வைணவம், தத்துவம், ஈசுவர தத்துவம், திருமாலின் திருமேனி நிலைகள், இதம், புருஷார்த்தம், திருமழிசையாழ்வார் திருநெறி, திருவாய்மொழி, இயற்பாத் தொகுதி - இயற்பா, கம்பனும் ஆழ்வார்களும், ஆழ்வார்களின் சமுதாயப்பார்வை, ந.சுப்புரெட்டியாரின் கலியன் குரல், **‘கலியன் குரல்’** நூல் வரலாறும் பகுப்பும், கலியனின் வடநாட்டுத் திருத்தலப் பயணம், கலியனின் பாசுரங்கள், கலியனின் பக்தி ஈடுபாடு, அருளிச் செயல்களில் இலக்கிய இன்பம், ஒலிநயம், யாப்பமைதி, கட்புலப்படிமம், அருளிச் செயல்களில் தத்துவக் கருத்துக்கள், சரீரிபாவனை, நாயக நாயகி பாவனை மரபு, திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இதம், திருத்தலப் பயண விளக்க நூல்கள், சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி, அர்த்த பஞ்சகம், சோழநாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி, கோதைத் தமிழ், சம்பந்தர் - திருமங்கயைாழ்வார் வாதம், திருப்பதியின் பெருமை,

தலைச்சங்காடு குறித்த விளக்கம், வைணவச் செல்வம், வைணவ சீலர்கள், திவ்வியப் பிரபந்த பெருவிழா, வைணவத் திருத்தலங்கள், அபிமான புராணத் திருத்தலங்கள், அன்றாட கடைப்பிடிப்பு விதிகள், திருக்கோயில் வழிபாட்டு முறைகள், நடைமுறைச் சம்பிரதாயங்கள், பிற சமய நெறிகளில் இராமானுச நெறியின் தாக்கம், ந.சுப்புரெட்டியாரின் சைவ, சமய இலக்கியப் பணிகளில் மூவர் தேவாரம, தேவாரம் - மறைவும் தொகுப்பும், நம்பியாண்டார் நம்பியின் தொகுப்பு, தேவாரப் பாடல்களுக்குப் பண்வகுப்பு, தேவாரப் பதிகங்கள் தொகுக்கப்பட்ட வரிசைமுறை, பாடல்களின் தொகை, **'தேவாரம்'** என்னும் பெயர், மூவர் அருளிய திருப்பதிகங்கள், பண்சுமந்த தேவாரப்பாடல்கள், முருகப்பெருமானின் (ஆற்றுப்படை) ஆறுபடை வீடுகள், பெயர்ப் பொருத்தம், ந.சுப்புரெட்டியார் - பார்வையில் சைவ சித்தாந்தம், அவரது **'சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்'** என்னும் நூல், சைவ சித்தாந்த சாத்திரங்கள், சந்தானாசாரியர்கள், பதி, பசு, பாசம் என்னும் தத்துவங்கள், வீடுபேற்றுக்குரிய வழிகள், வீடுபேறு, வழிபாட்டு முறைகள் ஆகியன குறித்தும் ந.சுப்புரெட்டியார் கூறும் தமிழ் மரபு சார்ந்த வைணவ, சைவ, சமய தத்துவச் சிந்தனைகள் விரிவாகவும் விளக்கமாகவும் ஆராய்ந்து தெளிவுப்படுத்தப் பெற்றுள்ளன.

4. **'ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பணிகள்'** என்னும் நான்காம் இயலினுள் ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வு நெறி, கவிதைத் திறனாய்வு, கவிதையின் உடலும் உள்ளமும், கவிதையின் உணர்ச்சியும் உள்ளக் கிளர்ச்சியும், கவிதை விளக்கம், கவிதை வரையறை, கவிதைகளில் குறிப்புப் பொருள், படிமங்கள், வடமொழி – தமிழ்மொழிக் கவிதைச்சுவைகள், கவிதையுணர்த்தும் உண்மை, ந.சுப்புரெட்டியாரின் புதுக்கவிதைத்திறன், புதுக்கவிதை அறிமுகம், புதுக்கவிதை விளக்கம், தோற்றம், புதுக்கவிதையின் உருவம், புதுக்கவிதை உத்திகள், குறியீட்டு உத்தி, புதுக்கவிதையின் உள்ளடக்கம், புதுக்கவிதையில் காதலுணர்வும் முருகுணர்வும், மார்க்சியக் கொள்கை வழியில் புதுக்கவிதைகள், தனிமனித நோக்கில் புதுக்கவிதைகள், புதுக்கவிதைகளில் நகைச்சுவை, கிண்டல், எள்ளல், சில இலக்கிய இயக்கங்களின் அடிப்படையில் புதுக்கவிதைகள், ந.சுப்புரெட்டியாரின் **'கண்ணனின் பாட்டுத் திறன்',** இறைவனுடன் சீவான்மா உறவு, **'ரஸம்'** – பாரதியார் விளக்கம், பாரதியார் காட்டிய புதுநெறி, கண்ணன் தனிப்பாடல்களில், ந.சுப்புரெட்டியார் அறிவியல் புலமை, அவரது **'பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு',** பாஞ்சாலி சபதம் அறிமுகம், தமிழில் காப்பியங்கள், காப்பியத்தின் கதைக்கரு, காவியத்தின் ஒருமைப்பாடு, திரௌபதி, துரியோதனன் - எதிர்நிலைத் தலைவன், பிறமாந்தர்கள், தெய்வீகக் கூறுகள், காப்பிய நடை, உருக்காட்சிகள், பாஞ்சாலி சபதம் உணர்த்தும் உண்மை, ந.சுப்புரெட்டியாரின் குயில்பாட்டு: ஒரு மதிப்பீடு, குயில் பாட்டின் பின்னணி, குயிலின் காதல் கதை, குயில்பாட்டின் உள்ளுறை,

குயில்பாட்டின் மதிப்பீடு, ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் அனுமன், இராமகாதையின் அனுமன், கவிக்கு நாயகன், சிந்தனைச்செம்மல், விழையும் உருவினன், அஞ்சாநெஞ்சன், இராமதூதன், இராமபக்தன், குணக்குன்றன் என்னும் நிலைகளில் ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பார்வையும், திறனாய்வுத்திறனும் ஆழமாகவும் அழுத்தமாகவும் விளக்கப் பெற்றுள்ளன.

5. **'ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள்'** என்னும் ஐந்தாம் இயலினுள் ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் பார்வை – வகை தொகை, வானவியல் அறிவு, சோதிடக்கலை, அகிலம் குறித்த அறிவியல், பாரதியாரின் அறிவியல் சிந்தனை, பொறியியல் அறிவு, உயிரியல் அறிவு, மரபு அணுக்கள் வாயிலாகப் பரவுதல், மக்களிடம் பண்புகள் உருவாதல், நிறக்கோல்கள், மாண்ட இனத்தின் மலடற்ற தன்மை, மருத்துவ இயலறிவு, காந்தச் சிகிச்சை முறை, கணிதவியலறிவு, வானொலியும் தொலைக்காட்சியும், விண்வெளி ஆய்வுகள், மனித வாழ்க்கையில் அறிவியல், விண்வெளிப் பயணக் கனவுகள், விண்வெளிப் பயணக் கதைகள், வளிமண்டலக்கடல், அண்டை உலகங்கள், விண்வெளிப் பயணத்தில் சில அடிப்படை அறிவியல் மெய்மைகள், துணைக்கோளினை இயக்கும் முறை, துணைக்கோள்கள், விண்வெளியைத் துருவி ஆய்தல், திங்கள் மண்டல ஆராய்ச்சி, பிறகோள்கள் மீது சிறப்புக் கவனம், விண்வெளிப் பயணத் துயரங்கள், விண்வெளியில் உயிர்கள், விண்வெளி அனுபவங்கள், அம்புலிப் பயணத்திட்டம், சந்திரனில் மனிதன் மேற்கொண்ட ஆய்வுகள், விண்வெளி நிலையங்கள், விண்வெளிப் பயணத்தின் பயன், ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் **'தமிழ்ப் பணிகள் - மதிப்பீடு'** என்னும் நிலைகளில் ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள் நுணுக்கமாக விளக்கப் பெற்றுள்ளன.

6. **'ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணிகள்'** என்னும் ஆறாம் இயலினுள் திருக்குறள் பணி, திறக்குறள் தெளிவு – உரையின் - அமைப்பும் சிறப்பும், வாழ்வார் - வாழாதவர், ந.சுப்புரெட்டியாரின் பகுப்பு முறையில் திருக்குறள் தெளிவுரை, சொற்பொருள் விளக்கம், அனுபவ மொழிகள், வடவேங்கடமும் திருவேங்கடமும், சங்க இலக்கியத்தில் வடவேங்கடம், அகநானூற்றில் வேங்கடம், சங்கப்பாடல்களில் விழவு, **'வேங்கடம்'** என்னும் பெயர்க் காரணம், வடவேங்கடத்தின் வறட்சி, வடவேங்கடத்தை ஆண்ட மன்னர்கள், இன்றைய திருவேங்கடம், **'வேங்கடம்'** சொற்பொருள் மாற்றம், திருப்பதியின் வரலாற்றுச் சிறப்பு, திருவேங்கடத்தின் புகழ், இளங்கிரி, இளங்கோயில், இலக்கிய வகை ஆராய்ச்சி, தமிழ் இலக்கியத்தின் வரலாற்றுப் பின்னணி, தமிழ் இலக்கிய வளர்ச்சி, தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கிய வகைகள், செய்யுள் வகைகள், வெண்பா, ஒலிநயமும் யாப்பும், உணர்ச்சிக்கேற்ற யாப்பு, கவிதைச் சுவைகள், உலகியல் நிகழ்ச்சிகள்,

பாவினங்களின் தோற்றம், ஆசிரியப்பாவினம், வெண்பா இனம், கலிப்பாவினம், வஞ்சிப்பா இனம், அடிவரையறை இல்லாச் செய்யுள் வகை, தமிழ் இலக்கிய வகைகள் வளர்ச்சி வரலாறு, சிலப்பதிகாரத்தில் நாட்டுப்பாடல் வடிவங்கள், விருத்தக் காப்பியங்கள், தமிழ் இலக்கியம் - வகைமைப்பாடு, சிற்றிலக்கியங்களின் வளர்ச்சி, பாண்டிக்கோவை, புதிய வகைச் செய்யுட்கள், குழந்தை இலக்கியம், பேச்சுப் பயிற்சி, புதுக்கவிதை இலக்கியம், புதுக்கவிதை இலக்கணம், புதுக்கவிதையின் தோற்றம், மரபுக்கவிதையும் புதுக்கவிதையும், புதுக்கவிதையின் உருவம், உத்திகள், உள்ளடக்கம், இலக்கியக் கொள்கைகள் என்பன குறித்த செய்திகள் விரிவாகவும் விளக்கமாகவும் ஆராயப் பெற்றுள்ளன.

**‘ஆய்வு நிறைவுரை’** என்னும் இப்பகுதியில் இவ்ஆய்வுரையில் இயல்தோறும் திறனாய்வு அடிப்படையில் கண்டறியப்பட்ட முக்கிய ஆய்வு முடிவுகள் நிரல்படத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. **‘ஆய்வு நிறைவுரை’**ப் பகுதியில் தொடர்ந்து இனிவரும் ஆய்வாளர்களுக்கு இவ்ஆய்வேடு முன்வைக்கும் மேலாய்வுக் களன்கள் சுட்டிக் காட்டப்பெற்றுள்ளன. இதனைத் தொடர்ந்து இவ்ஆய்வுற்குப் பயன்படுத்தப்பெற்ற முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள் ஆகியன அடங்கிய துணைநூற்பட்டியல் அகரவரிசையில் நிரல்படத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இயல்களில் இடம் பெற்றுள்ள குறிப்பு எண்களின் விபரம் அந்தந்த இயல்களின் இறுதியில் இடம்பெற்றுள்ளன.

~ ~ ~ ~ ~

# இயல் - 1
# ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கைத் தகவல்களும் இலக்கியப் பின்புலமும்

## முன்னுரை

இருபதாம் நூற்றாண்டின் தமிழக வரலாற்றிலும், தமிழ் இலக்கிய வரலாற்றிலும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் சீரிய தமிழ்ப்பணி பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கதாகும். அவர் அறிவியல் பேராசிரியராக வளர்ந்து பின்னர் தமிழ்ப் பேராசிரியராகத் திறம்படப் பணியாற்றியவர். இவர்தம் தமிழ்ப்பணி போற்றுதலுக்குரியது. இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற எழுத்தாளர்களுள் முதன்மையிடம் பெறுபவர் ந.சுப்புரெட்டியார் ஆவார். இவரது வாழ்க்கைத் தகவல்களையும் இலக்கியப் பின்புலத்தையும் விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

## பிறப்பும் வளர்ப்பும்

ந.சுப்புரெட்டியார் தம் வாழ்க்கை வரலாற்றை **‘நினைவுக் குமிழிகள்’** என்னும் தலைப்பில் நான்கு பகுதிகளாக எழுதியுள்ளார். **‘மலரும் நினைவுகள்’, ‘நீங்காத நினைவுகள்’** ஆகிய தன் வரலாற்று நூல்களிலும் அவர்தம் வாழ்க்கை வரலாற்றை விரிவாகவும் விளக்கமாகவும் எழுதியுள்ளார். இந்நூல்களின் துணைகொண்டு அவருடைய வாழ்க்கை வரலாற்றைத் தெளிவாக அறிய முடிகின்றது.

ந.சுப்புரெட்டியார் **‘ஞானியார்’** பரம்பரையைச் சேர்ந்த ஞானி நல்லப்ப ரெட்டியாருக்கும், காமாட்சி அம்மாளுக்கும் மகனாக 27.08.1916 இல் தோன்றியவர். திருச்சி மாவட்டம் இலால்குடி வட்டத்திலுள்ள பெரகம்பி என்னும் சிற்றூரில் தன் தாய்மாமனாகிய பண்ணை நல்லப்ப ரெட்டியாரின் **‘பண்ணையார் வீடு’** என்றழைக்கப்படும் பண்ணை இல்லமே ந.சுப்புரெட்டியார் பிறந்த இடமாகும். **‘பெரகம்பி’** என்னும் சிற்றூருக்கு மேற்கில் ஆறுகல் தொலைவிலுள்ள கோட்டாத்தூர் என்னும் சிற்றூரே ந.சுப்புரெட்டியாரின் தந்தையாகிய ஞானி நல்லப்ப ரெட்டியார் பிறந்த ஊராகும்.

ந.சுப்புரெட்டியார் 1926 வரையில் பெரகம்பியில் வளர்ந்து பின்னர் கோட்டத்தூருக்குக் குடிபெயர்ந்தவர். ந.சுப்புரெட்டியாரின் தாய்மாமனான பண்ணை நல்லப்ப ரெட்டியாருக்கும், ந.சுப்புரெட்டியாரின் தந்தையான ஞானி நல்லப்ப ரெட்டியாருக்கும் ஏறக்குறைய ஒத்த வயதே. ந.சுப்புரெட்டியாரின் தாய்மாமனான பண்ணை நல்லப்ப ரெட்டியார் பரம சாது. இவருக்கும் பெரகம்பியிலுள்ள ஒரு பெண்ணுக்கும் திருமணம் நடந்தது. ஆயினும் இரண்டாண்டுகள் கூட அவர்களது இல்லற வாழ்க்கை இனிதாக நடைபெறவில்லை. பண்ணை நல்லப்ப ரெட்டியாரின் தாயாரும் தனது பாட்டியுமான செல்லாயம்மாள் அரவணைப்பில்

ந.சுப்புரெட்டியார் செல்லப்பிள்ளையாக வளர்ந்து வந்தார். ந.சுப்புரெட்டியாருக்கு தம் மூன்று வயது நிறைவடையும் முன்னர், ஞானி நல்லப்ப ரெட்டியார் தம் முப்பது அகவையை எட்டும் முன்னர் இறந்து விட்டார்.[1] ந.சுப்புரெட்டியாரின் தாய்மாமனாகிய பண்ணை நல்லப்ப ரெட்டியார் தம் மனைவியைப் பிரிந்து வாழ்ந்தார். அப்போது அவருக்கு மூன்று வயதில் செல்லப் பாப்பா என்ற பெண்குழந்தை இருந்தது. பண்ணை நல்லப்ப ரெட்டியார் தம் மனைவியைப் பிரிந்து வாழ்ந்ததாலும், அவருடைய தங்கையான காமாட்சி அம்மாள் இளம் வயதில் விதவையானதாலும் அவருடைய முழுக்கவனமும் ந.சுப்புரெட்டியாரின் பால் திரும்பியது. ந.சுப்புரெட்டியார் இளமையில் பண்ணையார் வீட்டுப் பண்ணைச் செல்லமாகப் போற்றி வளர்க்கப்பட்டார். ந.சுப்புரெட்டியார் பாட்டியார் அவருக்காக மட்டுமே அரிசிச்சோறு, பருப்பு, குழம்பு, ரசம் ஆகிய உணவைச் சுவைபடச் சமைத்தார்.

## தொடக்க நிலைக்கல்வி

ந.சுப்புரெட்டியாருக்கு ஐந்து வயது நிறைவு பெறும் போது திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர் இலிங்கச் செட்டியார், வைதிகச் சடங்குகளுடன் ந.சுப்புரெட்டியாருக்கு, பண்ணை நல்லப்ப ரெட்டியார் இல்லத்தில் வித்தியாப்பியாசம் (எழுத்தறிவித்தல்) என்னும் சடங்கினைத் தொடங்கி வைத்து அவருக்குத் தொடக்க நிலைக்கல்வியை ஊட்டினார். **“ஆசிரியர் (இலிங்கச் செட்டியார்) மஞ்சள் தடவிய அளவுபடுத்தப் பெற்றுத் தயாரித்த நான்கைந்து பனையோலை அடங்கிய ஒரு சிறு கட்டில் ‘ஹரி : நமோத்துசித்தம்’ என்று எழுதித் தந்ததும், சருக்கரை கலந்த காய்ச்சிய பாலில் ஏதோ மந்திரம் எழுதிப் பருகச் செய்தலும், அதன் மேற்படியேட்டில் எழுதியதைத் தனித்தனி எழுத்தை மூன்று முறையும், சேர்த்து வாசகமாக மூன்று முறையும் ஆசிரியர் சொல்ல அப்படியே என்னைச் சொல்லும்படி செய்தலும் இவையாவும், ஒரு சிறு விநாயகர் வழிபாட்டிற்குப் பின்னரே நடைபெற்றதும் நினைவுக்கு வருகின்றன. மறுநாள் தொடங்கி பள்ளிக்கூடத்திற்கு முற்பகலும் பிற்பகலும் ஒழுங்காகப் போய்வந்ததும் நினைவுக்கு வருகின்றது”**[2] என ந.சுப்புரெட்டியார் தம் தொடக்க நிலைக்கல்வி அனுபவத்தைக் குறிப்பிட்டுள்ளார். இலிங்கச் செட்டியாரின் தொடக்க நிலைக் கல்வித்திட்டம் இக்காலத்தில் மிகச் சிறந்ததெனக் கருதப்பெறும் அமெரிக்க டால்டன் கல்வித் திட்டத்தோடு ஓரளவு ஒப்பிடக்கூடியதாகவே அமைந்திருந்தது. டால்டன் கல்வித்திட்ட அமைப்புபோலவே இலிங்கச் செட்டியாரின் கல்வித்திட்டத்திலும் வகுப்பறைகள், பாடவேளைப் பகர்வுகள் (Time – tables), தேர்வுகள் வகுப்பு மாற்றங்கள் ஆகியன இல்லை. வகுப்பாசிரியரும் கிடையாது.

## கற்பிக்கப்பட்ட பாடங்கள்

இலிங்கச் செட்டியார் காலத்தில் கா.நமச்சிவாய முதலியாரால் எழுதப்பெற்ற பாடநூல்களே புழக்கத்தில் இருந்தன. அப்போது அறிவியல், புவியியல், சமூகஇயல் போன்ற பாட நூல்கள் புழக்கத்தில் இல்லை. மாணவர்களுக்கு அப்பாடங்கள் கற்றுக் கொடுக்கப்படவும் இல்லை. உலகநீதி, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, நல்வழி, நன்னெறி, விவேக சிந்தாமணி போன்ற நீதி நூல்களும், அருணகிரி அந்தாதி, அறப்பனீசுவர சதகம், குமரேச சதகம் போன்ற நூல்களும் கற்றுக் கொடுக்கப் பெற்றன. மாணவர்கள் தங்கள் அறிவிற்கேற்பவும், சுறுசுறுப்பாகப் படிக்கும் திறனுக்கேற்பவும் ஒன்றன்பின் ஒன்றாகக் கற்றுக்கொண்டே போகலாம். இவற்றை இலிங்கச் செட்டியார் தம் மாணாக்கர்கட்குத் தனித்தனியே கற்பித்து வந்தார்.

தன் வீட்டிலேயே திண்ணைப் பள்ளிக்கூடத்தை நடத்தி வந்த இலிங்கச் செட்டியார், பின்னர் பெரகம்பி என்னும் சிற்றூருக்குக் கிழக்கேயுள்ள சாவடியில் தம் திண்ணைப் பள்ளிக்கூடத்தை நடத்தி வந்தார். மாணவர்களுக்கு மணலில் எழுதும் பயிற்சியை அவர் கொடுத்தார். எண்சுவடியை மனப்பாடம் செய்ய வைத்தார். அவர் மாணவர்களுக்குத் தெலுங்கும் தமிழும் கற்பித்தார். இம்முறையிலேயே ந.சுப்புரெட்டியாரின் தொடக்கநிலைக் கல்வி அமைந்திருக்கிறது.

கா.நமச்சிவாய முதலியார் எழுதிய தமிழ்ப்பாட நூல்களின் (பாட நூல்கள்) தெலுங்கு மொழிப்பெயர்ப்பு நூல்களும் பயன்பாட்டில் இருந்தன. ஆங்கிலேயர் ஆட்சியில் தென்னாட்டில் மொழி அடிப்படையிலான மாநிலப்பிரிவுகள் இல்லை. ஆதலால் கா.நமச்சிவாய முதலியாரின் நூல்கள் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மூன்று மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டிருந்தன. இலிங்கச்செட்டியார் **‘பெத்த பால சிட்ச’** (பெரிய பாலர் பயிற்சி நூல்) என்ற நூலையும் மாணவர்களை வாங்கச் செய்து பயிற்றுவித்தார்.[3] ஓராண்டில் ந.சுப்புரெட்டியார், பெரகம்பியிலிருந்து கோட்டத்தூர் சென்றார். இதனால் அவரது தெலுங்கு மொழிப் பயிற்சி வீணாயிற்று.

## ந.சுப்புரெட்டியாரின் தொடர்கல்வி முயற்சிகள்

கோமுட்டி செட்டியர் இனத்தைச் சேர்ந்த இலிங்கச் செட்டியாரிடம் ந.சுப்புரெட்டியார் அவரது திண்ணைப் பள்ளியில் 1921 – 1926 களில் பயின்றார். பெரகம்பியில் செல்லப்பிள்ளையாக ந.சுப்புரெட்டியார் வளர்ந்த போது அவரிடம் அழுதழுதே காரியத்தை சாதித்துக் கொள்ளும் பண்பும், தான் செய்த குற்றத்தைப் பிறர்மேல் சுமத்தும் பண்பும் இருந்தது. பெரகம்பியில் ஆடிப் பதினெட்டு அன்று நடைபெற்ற கரகாட்ட விழா, கண்ணன் பிறப்புத் திருவிழா, காமன் பண்டிகை ஆகிய மூன்று விழாக்களும் ந.சுப்புரெட்டியாரைப்[4] பெரிதும் கவர்ந்தன.

ந.சுப்புரெட்டியார் ஆறு வயதில் நீச்சல் பயிற்சியைக் கற்றுக் கொண்டார். ஏழு, எட்டு வயதுகளில் கோலிகுண்டு, கிட்டிப்புள், பம்பரம், கார்த்தி சுற்றுதல், பீச்சுக்குழல் ஆகிய விளையாட்டுக்களில் ஆர்வம் கொண்டிருந்தார்.

ந.சுப்புரெட்டியாரின் தாய்மாமனான பண்ணை நல்லப்ப ரெட்டியார் தன்னைப் பிரிந்து வாழ்ந்த மனைவியை இழந்து, மறுமணம் செய்து கொண்டார். அவருடைய ஒரே மகனான செல்லப்பாப்பா, அவள் பாட்டி செல்லாயம்மாள் வீட்டில் வளர்ந்து வந்தாள். பண்ணை நல்லப்ப ரெட்டியாருக்குத் திருமணமான இருமாதங்களில் ந.சுப்புரெட்டியாரும் செல்லாயம்மாளும் பெரகம்பி பண்ணை வீட்டிலிருந்து வெளியேற்றப்பட்டனர். அதன் பின்னர் நான்கு வருடங்கள் செல்லாயம்மாள் கோட்டாத்தூரில் தன் மகள் காமாட்சி அம்மாளுடன் வாழ்ந்து வந்தாள். ந.சுப்புரெட்டியார் கோட்டாத்தூரில் நான்கு வருடங்கள் (1927 – 1930) கழகத் தொடக்கப் பள்ளியிலும், சாமுவேல் பிள்ளை என்பவரால் நடத்தப் பெற்ற ஆங்கிலப் பள்ளியிலும் படித்தார்.[5] இக்கால கட்டத்தில் ந.சுப்புரெட்டியாரின் தாயார் காமாட்சி அம்மாளுக்கும், அவரது தாய்மாமனான பண்ணை நல்லப்ப ரெட்டியாருக்கும் உறவில் பலமான விரிசல் ஏற்பட்டது.

ஒருசில ஆண்டுகளில் காமாட்சி அம்மாளின் தாயாரும் ந.சுப்புரெட்டியாரின் பாட்டியுமான செல்லாயம்மாள் இறந்துவிட்டார். இந்நிலையில் ந.சுப்புரெட்டியாரின் குடும்பத்துப் பொருளாதாரநிலை சிறப்புடையதாக அமையவில்லை. 1931இல் ந.சுப்புரெட்டியார் முசிறியில் நான்காவது படிவம் படித்துக் கொண்டிருந்தார். கோட்டாத்தூர் கழகத் தொடக்கப் பள்ளியில் வேலூர் வாத்தியார் சந்திரசேகரய்யர் என்னும் ஓராசிரியரே இருந்தார். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. ஆயினும் சோதிடம் நன்றாகத் தெரிந்தவர். **‘சிவிக்ஸ்’** என்ற பாடநூலும், கணித நூலும் பாடநூல்களாகும். சந்திரசேகரய்யர் இவற்றைச் சொல்லித் தராமல், வாய்பாட்டினை மனப்பாடம் செய்தல், கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் கணக்குகள், ரூபாய் அணா பைசா கணக்கு, அருணகிரி அந்தாதி, அறப்பளீசுர சதகம், அரிச்சந்திரபுராணம்[6] ஆகியனவற்றையே ந.சுப்புரெட்டியார் உள்ளிட்ட மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார். பின்னர் அந்தப் பள்ளிக்கு சுப்பராய உடையார், என்னும் தலைமை ஆசிரியர் வந்தார். சுப்பராய உடையாருக்கு ஆங்கிலம் நன்றாகத் தெரியும். அத்துடன் அவருக்கு நாட்டு வைத்தியமும் தெரிந்ததால், மிக விரைவாக அவர் பொதுமக்களிடம் செல்வாக்குப் பெற்ற ஆசிரியரானார். சுப்பராய உடையார் தம் வீட்டில் ஆங்கிலத்தையும் வட்டிக்கணக்கையும் இலாப நட்டக் கணக்கையும் தனிப்பாடமாகச் சொல்லிக் கொடுத்து கூடுதல் வருமானத்தைப் பெற்றார்[7]. கோட்டத்தூர் கழகத் தொடக்கப் பள்ளியில் வேலூர் வாத்தியார் - சந்திரகேரய்யர், சுப்பராய

உடையார், வி.கே.அரங்கநாத அய்யர்[8] ஆகிய மூவரும் ந.சுப்புரெட்டியாருக்கு ஆசிரியர்களாகப் பணியாற்றினர். வேலூர் வாத்தியார் தொடக்கநிலை ஆசிரியர் பழைய தமிழ் மரபையொட்டிக் கற்பித்தவர். சுப்பராய உடையார் உயர்நிலை ஆசிரியர் அவர் வீட்டில் மாலை வேளையில் ஆங்கிலம் கற்றுக் கொடுத்த விதம் ந.சுப்புரெட்டியாரைப் பெரிதும் கவர்ந்தது. இவர் கோட்டத்தூர் கழகத் தொடக்கப் பள்ளியிலிருந்து மாறுதல் பெற்றுச் சென்றதும், ந.சுப்புரெட்டியார் சாமுவேல்பிள்ளை தனியாக நடத்தி வந்த ஆங்கிலப் பள்ளியில் சேர்ந்தார். அவர் துறையூர் உயர்நிலைத் தொடக்கப்பள்ளியில் சேர்ந்து எட்டாவது படித்த எட்டுமாதக் காலத்தில் தான் தசமபின்னக் கணக்குகளைக் கற்றுக் கொண்டார். ந.சுப்புரெட்டியார் கல்லூரிக் கல்வியை முடித்துக் கொண்டு துறையூரில் ஒரு உயர்நிலைப்பள்ளியைத் தாமே நிறுவி, அப்பள்ளியின் தலைமையாசிரியானார்.

## குடும்ப வாழ்க்கை

ந.சுப்புரெட்டியார் 1936 இல் தம் தந்தை வழியில் ஒன்றுவிட்ட அத்தை மகளான செல்லபாப்பா அம்மையாரை மணந்தார். அவர்களுக்குப் பல்லாண்டுகள் மக்கட்பேறு இல்லை. 1949 இல் இராமலிங்கமும் 1953 இல் இராமகிருஷ்ணனும் பிறந்தனர். இராமலிங்கத்திற்கு மிருணாளினி, அனுபமா என்ற இரு பெண் மக்கள் உள்ளனர். மிருணாளினி தன் கணவன் அரவிந்த் விஷ்ணுராமனுடன் அமெரிக்காவில் ஒரே நிறுவனத்தில் உயர்பதவிகளில் பணியாற்றி வருகின்றனர்.

மருத்துவக் கல்வியைப் பயின்ற டாக்டர் இராமகிருஷ்ணனும் அமெரிக்காவில் அரிசோனா மாநிலத்தில் முதியோர் மருத்துவராகப் பணியாற்றி வருகின்றார். அவர் சொந்த வீட்டில் வாழ்ந்து வருகின்றார். இவர்தம் முதல் மகன் வேங்கடேசன் மருத்துவமும், இரண்டாம் மகன் பிரகாசு பொறியியலும் படித்து முடித்துள்ளார்கள்.

## கல்லூரிக் கல்வி

ந.சுப்புரெட்டியார் 1937 – 1939 ஆம் ஆண்டுகளில் திருச்சி சூசையப்பர் கல்லூரியில் படித்து இளங்கலைப் பட்டம் பெற்றார். விடுமுறையில் அடிக்கடி நாமக்கல் வட்டத்திலுள்ள பொட்டணம் என்னும் சிற்றூரில் அடிக்கடி தங்கியிருந்தார். ந.சுப்புரெட்டியார் கோட்டாத்தூரில் தங்கியிருந்த போது **‘பொம்மலாட்டம்’** என்னும் கலையைத் தானே உருவாக்கி அதனைப் பலருக்கும் காண்பித்து மகிழ்ந்தார்.

1930 ஆகஸ்டில் முசிறியிலுள்ள கழக உயர்நிலைப் பள்ளியில்,அவருடைய துறையூர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியரான வி.கே.அரங்கநாத அய்யர் சேர்த்து விட்டார். ந.சுப்புரெட்டியார் அவருக்கு நன்றிக் கடப்பாடு உடையவராகவே திகழ்ந்தார். அவர்

துறையூர் பெருநிலக்கிழவர் உயர்நிலைத் தொடக்கப் பள்ளியில் 1944 ஆம் ஆண்டில் தலைமையாசிரியராகப் பணியாற்றினார்.

## திருக்குறளில் ஈடுபாடு

1931இல் முசிறி உயர்நிலைப் பள்ளிக்கென ஐம்பாளையம் தாண்டவராய பிள்ளையவர்களின் கட்டடத்தில் கே.இராமச்சந்திர அய்யரின் அரிய முயற்சியில் மாணாக்கர் விடுதி ஒன்று தொடங்கப் பெற்றது. ந.சுப்புரெட்டியார் அந்த விடுதியில் தங்கிப் பயின்று வந்தார். அக்காலத்தில் திருச்சி மற்றும் தென்னாற்காடு மாவட்டங்களில் ரெட்டியார் இனத்தவர் மிகுதியாக வாழ்ந்தனர். அவர்களுள் பலர் வள்ளல்களாகவும் திகழ்ந்தனர். நாராயணமங்கலம் கணபதி ரெட்டியாரின் மகனாகிய நடராசனின் பொருளுதவியால் ஐம்பாளையத்தில் மாணவர் விடுதி தொடங்கப்பட்டது. ந.சுப்புரெட்டியார் முசிறி உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் காலத்தில்தான் குறள்வழி வாழ்க்கையை மேற்கொள்ளும் உணர்வினைப் பெற்றார். இதனை **“நான் ஐந்தாம் படிவத்தில் பயின்று வந்தபோது முசிறியிலுள்ள செல்வக் குடும்பத்தைச் சேர்ந்த மைனர் கிருட்டிணசாமிபிள்ளை திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் பட்டப்படிப்பு வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். அவர் முயற்சியில் முசிறி உயர்நிலைப்பள்ளியில் ‘பழைய மாணாக்கர் கழகம்’ என்பதன் ஆதரவில் ஒருபெருங்கூட்டம் நடைபெற்றது திருச்சி புனித சூசையப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு.மு.நடேச முதலியார் ‘திருக்குறள்’ என்ற தலைப்பில் பேசினார். அக்காலத்திலோ பின்னர் கல்லூரி வாழ்க்கையிலோ இத்தகைய ஓர் அழகிய இலக்கியப் பொழிவை நான் கேட்டதே இல்லை. அந்தப் பேச்சால்தான் திறக்குறள் மீது எனக்கு ஓர்வித ஆர்வமும் மதிப்பும் ஏற்பட்டது. அன்றிலிருந்து ‘திருக்குறள்’ என்ற நூல் (கழகப் பதிப்பு) என் அரும்பெரும் பொருளாக அமைந்துவிட்டது”**[9] என அவர் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

## தாய்மொழிக் கல்வி

ந.சுப்புரெட்டியார், மாணவர்களுக்குத் தாய்மொழியாகிய தமிழ்மொழி வாயிலாகத்தான் அனைத்துப் பாடங்களையும் பயிற்றுவிக்க வேண்டுமென வலியுறுத்தியுள்ளார். இதனை அவர்,

**“பயிற்றிப் பல கல்வி தந்து - இந்தப்**
**பாரை உயர்த்திட வேண்டும்”**

**என்பது பாரதியாரின் கல்வித்திட்டம். இந்தத் திட்டம் வெற்றிகரமாக நிறைவேற வேண்டுமானால் தாய்மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் கற்பித்தல் வேண்டும். விலைப்பாலைவிட முலைப்பால் (தாய்ப்பால்) சிறந்ததல்லவா? கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கூடத் தாய்மொழி வாயிலாகக் கற்பிக்கும் நிலை ஏற்பட்டால்தான் எத்தனையோ விதங்களில் வீணடிக்கப்பெறும் ஆற்றல்கள் சரியான முறையில்**

**பயன்படும். தாய்மொழியிலும் வடமொழியிலும் உள்ள சமயக் கருத்துக்களையும் அம்மொழிகளிலுள்ள கல்வெட்டுகள் போன்றவற்றையும் கூட ஆங்கிலத்தில் படிப்பதுதான் சிறப்பு என்று கருதும் குறுகிய எண்ணமும் நீங்கும்”**[10] எனக் கூறுவதிலிருந்து தெளியலாம். அக்காலத்தில் நாட்டுப் புறங்களிலிருந்து வந்து உயர்நிலைப் பள்ளிகளில் பயின்ற பெரும்பான்மையான மாணவர்களுக்கு ஆங்கில மொழியறிவு மிகக் குறைவாகவே இருந்தது. பாடங்களைக் கற்பிக்கும் ஆசிரியர்களும் ஆங்கிலத்தில் எளிமையாக மாணவர்களுக்கு விளக்க இயலாமல் சிரமப்பட்டனர். ந.சுப்புரெட்டியார் கணிதத்தையும் வேதியியலையும் விருப்பப்பாடமாகப் பயின்றதனால் அவருக்கு மொழிச்சிக்கல் ஏற்படவில்லை. நாடு விடுதலை பெறுவதற்கு முன்னர் அனைத்துப் பாடங்களும் ஆங்கிலத்திலேயே கற்பிக்கப்பெற்றன. அக்காலத்தில் உயர்நிலைப் பள்ளியில் பயின்றவர்களின் ஆங்கிலமொழியறிவு தரமாக இருந்தது.

## ந.சுப்புரெட்டியாரின் கல்விப்பணிகள்

(அ) ந.சுப்புரெட்டியார் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராக ஒன்பதாண்டுகள் பணியாற்றியுள்ளார். அப்போது அவர் முதற்படிவத்திலிருந்து பள்ளியிறுதித் தேர்வு வரையில் பொது அறிவியலையும், நான்காம் படிவத்திலிருந்து பள்ளியிறுதித் தேர்வு வரையில் தொடக்கக் கணிதத்தையும், ஐந்து ஆறாம் படிவங்களில் இயற்கணிதம் மற்றும் வடிவக் கணிதத்தையும், பள்ளியிறுதித் தேர்வில் (ஆறாம் படிவம்) மாணவர்களுக்கு ஆங்கிலத்தையும் கற்பித்து நல்லாசிரியராக விளங்கியுள்ளார்.

(ஆ) இதன்பின்னர் ந.சுப்புரெட்டியார், காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பத்தாண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி உள்ளார். தமிழ் பயிற்றும் முறைகள் குறித்துச் சிந்தித்துத் **‘தமிழ் பயிற்றும் முறை’** என்னும் நூலினை எழுதியுள்ளார்.

(இ) பத்தாண்டுகள் இங்குப் பணியாற்றிய பின்னர், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பதினேழு ஆண்டுகளுக்குமேல் பணியாற்றினார். அப்போது அவருக்கு எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி. மாணவர்களுக்குத் தமிழ் கற்பிக்கவும் ஆராய்ச்சிப் பட்டங்களுக்கு வழிகாட்டவும் அவருக்கு வாய்ப்புகள் கிடைத்தன.

ந.சுப்புரெட்டியார் அறிவியல் ஆசிரியராகப் பணியைத் தொடங்கி, திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கித் தமிழில் தேர்ந்த புலமையைப் பெற்றவர். இவர் தமக்கு ஆரம்பகணிதம், இயற்கணிதம், வடிவகணிதம், ஆகியனவற்றைக் கற்பித்த கே.இராமச்சந்திர

அய்யரையும், வேதியியல் பாடத்தைக் கற்பித்த டி.கே.இராமநாத பிள்ளையையும் நல்லாசிரியர்கள் இருவர் எனக் குறிப்பிட்டுள்ளார். ந.சுப்புரெட்டியார் வரலாற்றுப் பாடத்தைக் கற்பிப்பதில் வல்லவரான செல்லப்பா என்றழைக்கப்பெறும் எஸ்.அரங்கசாமி அய்யங்கார், வரலாறும் புவியியலும் கற்பிப்பதில் வல்லுநரான மணி அய்யர் என்றழைக்கப்பெறும் என்.சுப்பிரமணிய அய்யர், பெரிய தமிழ் அய்யாவான வீ.குமார வீரய்யா, சின்னத் தமிழய்யா ஜம்புலிங்க குருக்கள்[11] ஆகியோர்களையும் தாம் அறிந்த நல்லாசிரியர்களாகக் குறிப்பிடுகின்றார்.

## ந.சுப்புரெட்டியார் வாழ்க்கை மதிப்பீடு

ந.சுப்புரெட்டியார் 1934 மார்ச்சு மாதத்தில் பள்ளி இறுதித் தேர்வில் தேர்ச்சி பெற்றார். அறுபது விழுக்காடு மதிப்பெண் பெற்று, பள்ளியில் இரண்டாவது மாணவராகத் தேர்ச்சி பெற்றார். அவருடைய உயர்நிலைப்பள்ளி வாழ்க்கை முசிறியில் கழிந்தது. திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் கணிதத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்துக் கொண்டிருந்த அரங்கசாமியின் உதவியால் ந.சுப்புரெட்டியார் அக்கல்லூரியில் சேர்ந்தார். அவர் அக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கிய மு.நடேச முதலியாரிடம் தமிழ் இலக்கண, இலக்கியங்களைப் பயின்றார்.

திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் இடைநிலை வகுப்பில் ந.சுப்புரெட்டியார் சேர்ந்த போது அவருக்குப் பேராசிரியர் சீநிவாசன் கணிதப்பாடத்தையும், காம்பெர்ட் என்னும் ஃபிரெஞ்சு சாமியார் இயற்பியல் பாடத்தையும் திறம்படப் பயிற்றுவித்தனர். ந.சுப்புரெட்டியார் இளங்கலைப் பட்டப் படிப்பில் வேதியியலை முக்கியப் பாடமாகவும் கணிதம், இயற்பியலைத் துணைப் பாடங்களாகவும் எடுத்துக் கொண்டு படித்தார். இதற்குக் காரணம் அவருக்கு கோவிந்தராவ் என்னும் வேதியில் பேராசிரியர் கொடுத்த ஊக்கமே ஆகும்.

திருச்சியில் ந.சுப்புரெட்டியார், கல்லூரியில் இரண்டாமாண்டு படிக்கும்போது பணக்கஷ்டம் அதிகம் இருந்ததால் காசியப்ப ராவுத்தர் ஸ்டோரில் ரூபாய் மூன்று வாடகைக்கு ஒரு சிறிய அறையில் தங்கி இருந்தார். **“காசியப்ப ராவுத்தர் ஸ்டோர் வாழ்க்கையில் அருகிலிருந்த நகர்மன்ற மைதானத்தில் (Town Hall) சில பொதுக்கூட்டங்கள் அடிக்கடி நடைபெறும். அக்காலத்தில் பேச்சினால் என் மனத்தைக் கவர்ந்தவர்கள் கி.ஆ.பெ.விசுவநாதன், பெரியார் ஈ.வே.ரா, பட்டுக்கோட்டை அழகிரிசாமி, வல்லத்தரசு, ப. ஜீவானந்தம், நீலாவதி, இராமசுப்பிரமணியம் ஆகியோர். ஒருமுறை நான் பள்ளி இறுதி வகுப்பில் இருந்த காலத்தில் குளித்தலையில் திரு.வி.க.பேச்சைக் கேட்டதுண்டு. 1934 இல் திருச்சி தேசியக்கல்லூரியில் பேராசிரியர் சாரநாதன் முதல்வராக இருந்த காலத்தில் நீலாவதி அம்மையாரும் ஜீவானந்தமும் பேசிய புரட்சிகரமான இலக்கிய உரைகள் இன்னும் என்மனத்தில்**

**ஒலிக்கின்றன. அக்காலத்தில் மிக்க புகழுடன் விளங்கிய மறைமலைஅடிகள், ஞானியார் சுவாமிகள் இவர்களைப் பார்க்கவும் பேச்சுக்களைச் செவிமடுக்கவும் நான் நற்பேறு பெறவில்லை. பெரகம்பி என்னும் சிற்றூரில் பிறந்து திருச்சிவரை எட்டிய எனக்கு எத்தனையோ வாய்ப்புகள் இல்லாதொழிந்தன”**[12] என்கின்றார் ந.சுப்புரெட்டியார். கி.ஆ.பெ.விசுவநாதன், ஈ.வே.ரா, பட்டுக்கோட்டை அழகிரிசாமி, ப.ஜீவானந்தம், நீலாவதி அம்மையார், திரு.வி.க ஆகியோர்களின் பேச்சுக்களைளக் கேட்ட ந.சுப்புரெட்டியார் தமிழூட்டம் பெற்றுள்ளார். நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார், பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் ஆகியோர் இலக்கியப் பேருரைகளைக் கேட்டு மகிழ்ந்துள்ளார்.

நாமக்கல் வட்டம் பொட்டணம் என்னும் சிற்றூரைச் சேர்ந்த ஆ.பெ.இராமசாமிரெட்டியார், ந.சுப்புரெட்டியாரின் பாட்டியான செல்லாயம்மாளின் மூத்தசகோதரி நாகம்மாளின் மகள் வயிற்றுப்பேரன் ஆவார். இவருடைய சகோதரியே ந.சுப்புரெட்டியாரின் மனைவியான செல்லப்பாப்பா ஆவாள். ந.சுப்புரெட்டியாரின் தாயாகிய காமாட்சி அம்மாள் சோதிடத்தில் மிகுந்த நம்பிக்கை உடையவர். இவருக்கு வள்ளுவர் பண்டாரம், வேலுவாத்தியார், அங்கமுத்து ஆச்சாரி ஆகிய மூன்று சோதிடர்களையும் பிடிக்கும். இருபத்தொரு வயதில் ந.சுப்புரெட்டியார் திருமணம் செய்து கொண்ட போது திருச்சியில் கல்லூரியில் வேதியியல் பட்டப்படிப்பைப் படித்துக் கொண்டிருந்தார்.

ந.சுப்புரெட்டியாருக்கு கணிதப் பாடத்தில் நல்ல தெளிவு இருந்தது. ந.சுப்புரெட்டியார் இடைநிலை வகுப்பில் தேர்ச்சி பெற்று பட்டப்படிப்பில் முதலாண்டு சேர்ந்ததும் பல்கலைக்கழகப் பயிற்சிப் படையில் சேர்ந்தார். ந.சுப்புரெட்டியார் நாமக்கல் வட்டம் வரகூரைச் சேர்ந்த **‘வித்துவான்’** பட்டம் பெற்ற இரா.கிருட்டிணசாமியிடம் நன்னூல் காண்டிகை, யாப்பருங்கலம் ஆகிய நூல்களைப் பயின்றார். ந.சுப்புரெட்டியார் 1940–1941 இல் சைதை ஆசிரியர் கல்லூரியில் சேர்ந்து படித்தார். அவர் படிக்கின்ற காலத்தில் நூலகங்களை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார். பொட்டணத்தில் மாமனார் வீட்டில் தங்கி இருக்கும் போதும் ந.சுப்புரெட்டியார் நூல்களைப் படித்துக் கட்டுரைகளை எழுதுவார். இது அவரது மாமியாருக்குப் பிடிப்பதில்லை. இதற்குக் காரணம் திருமணமாகி மூண்றாண்டுகள் ஆகியும் அவர்களுக்குக் குழந்தை இன்மையே. அவர் **‘அறிவியல் வரலாறு’** (History of Science) என்ற நூலை விரும்பிப் படித்துள்ளார். நாற்பத்தொரு ஆண்டுகள் தமிழ் இலக்கண, இலக்கியங்களின் அகப்பொருளில் ஆழங்கால்பட்ட ந.சுப்புரெட்டியார், பத்தாண்டுகள் அகப்பொருளைத் தமிழ் முதுகலை மாணவர்களுக்குக் கற்பித்து அந்த அனுபவங்களின் அடிப்படையில் 1981 இல் **‘அகத்திணைக் கொள்கைகள்’** என்ற திறனாய்வு நூலினை எழுதி வெளியிட்டுள்ளார்.

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிப்படிப்பும், பின்னர் நாற்பது ஆண்டுகள் பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகங்களில் கற்பித்த அறிவும் பல உளவியல் அறிவியல், கல்வியியல் நூல்களை ஆழ்ந்து கற்கத் தூண்டின. இதனால் ந.சுப்புரெட்டியார் **'கல்விப்பருவம்', 'கல்வி கற்றல்'** ஆகியன குறித்துச் சிந்தித்து பல நூல்களைத் தமிழில் எழுதினார். ந.சுப்புரெட்டியார் புதுமையான கடித உத்திமுறையைப் பின்பற்றி **'இல்லறநெறி'** (1964), **'முத்திநெறி'** (1982), **'சைவ சமய விளக்கு'** (1982) ஆகிய நூல்களை எழுதியுள்ளார். கல்வி உளவியல் கோட்பாடுகளை விளக்கி ந.சுப்புரெட்டியார் **'கல்வி உளவியல் கோட்பாடுகள்'** (1985) என்னும் நூலினை எழுதியுள்ளார். இந்நூல் ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் அனைவருக்கும் பயனளிக்கும் அருங்களஞ்சியமாகும்.

## ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ள நூல்கள்

ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ள நூல்களை ஆசிரியத்தொழில், உளவியல், இலக்கியம், சமயம் - தத்துவம் குறித்த விளக்க நூல்கள், திருத்தலப் பயண நூல்கள், திறனாய்வு நூல்கள், வரலாறு மற்றும் தன் வரலாற்று நூல்கள், அறிவியல் நூல்கள், ஆராய்ச்சி நூல்கள் என வகைப்படுத்திக் குறிப்பிடலாம். தமிழ்ப்பணிக்காகவே தமிழில் இவரெழுதிய நூல்கள் போற்றுதலுக்கும் சிறப்பிற்கும் உரியவை.

## ஆசிரியத்தொழில், உளவியல்

ந.சுப்புரெட்டியார் ஆசிரியத் தொழிலில் ஈடுபடுபவர்களுக்குப் பயன்படும் வகையில் ஆசிரியர்களுக்குத் தேவையான கற்றல், கற்பித்தல், உளவியல் கோட்பாடுகளை விளக்கி ஐந்து நூல்களை எழுதியுள்ளார். அவை வருமாறு:

1. ***தமிழ் பயிற்றும் முறை***
2. ***கவிதை பயிற்றும் முறை***
3. ***அறிவியல் பயிற்றும் முறை***
4. ***கல்வி உளவியல் கோட்பாடுகள்***
5. ***யுனஸ்கோ: அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல்***

இந்நூல்கள் தமிழ் மொழியையும் தமிழ் இலக்கியத்தையும் பயிற்றுவிக்கும் முறை, தமிழ்க்கவிதைகளைப் பயிற்றுவிக்கும் முறை, அறிவியல் கல்வியைக் கற்றுக்கொடுக்க வேண்டிய முறை, கல்வி உளவியல் கோட்பாடுகள் அவற்றின் முக்கியத்துவம், யுனெஸ்கோ நிறுவனம் வெளியிட்டுள்ள '***அறிவியல் பயிற்றும் அடிப்படை நூல்***' ஆகியன தமிழ் வழிக்கல்வியின் முதன்மையையும் முக்கியத்துவத்தையும் தெளிவு படுத்துகின்றன.

## தமிழ் இலக்கிய நூல்கள்

தமிழ் இலக்கிய வகைமைகளுள் சிறப்பிடம் பெறுவது கவிதைகளே. ந.சுப்புரெட்டியார் அக்கவிதைகளைப் படைக்கும் கவிஞர்களின் நோக்கங்களை **'கவிஞன் உள்ளம்'** என்னும் நூலில் எளிமையாக விளக்கிக் கூறியுள்ளார். காலத்தால்

உருவாக்கப்படும் கவிஞர்களும் உண்டு தமக்கென காலத்தை உருவாக்கிக் கொள்ளும் கவிஞர்களும் உண்டு. கவிஞர்கள் தோன்றிய அல்லது தோன்றும் காலப் பின்புலத்தை அவர் **'காலமும் கவிஞர்களும்'** என்னும் நூலில் தெளிவுப்படுத்தியுள்ளார். இலக்கியங்களில் காணப்பெறும் நுட்பமான காதலுணர்வை விளக்கி அவர் **'காதல் ஓவியங்கள்'** என்னும் நூலினை எழுதியுள்ளார். இலக்கியம் கற்பவர் உணர்வைத் தூண்டிச் சிந்தனையை வளர்ப்பதை அவர் **'அறிவுக்கு விருந்து'** என்னும் நூலில் விளக்கியுள்ளார். ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளுள் மிக அரியதாகக் கருதப்பெறுவது அவரது **'முத்தொள்ளாயிர விளக்கம்'** என்னும் நூலாகும். அவர் முத்தொள்ளாயிரப் பாடல்களுக்கு நுட்பமான விளக்கங்களைத் தந்துள்ளார். அவர் கலிங்கத்துப்பரணியின் இலக்கியச் சிறப்புக்களை விளக்கிய நிகழ்த்திய சொற்பொழிவுகள் **'பரணிப் பொழிவுகள்'** என்னும் நூலாக வெளிவந்திருக்கின்றது. அவர் அறிவியல் தமிழின் தேவையையும் முதன்மையையும் விளக்கி **'அறிவியல் தமிழ்'** என்னும் நூலினைத் தமிழ்ச் சமூகத்திற்கு அறிமுகப்படுத்தியுள்ளார்.

காப்பியங்களில் ந.சுப்புரெட்டியாரின் உள்ளத்தை ஈர்த்தது கம்பராமாயணமே. இதற்குக் காரணம் பன்னிரு ஆழ்வார்களின் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களின் உட்பொருளைக் கம்பன் ஆண்டுள்ள திறனே ஆகும். இவ்வகையில் அவரெழுதியுள்ள **'கம்பனின் மக்கள் குரல்'**, **'பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம்'** என்னும் இரண்டு நூல்களும் குறிப்பிடத்தக்கவை. தமிழ்ச் சான்றோர்களும் தமிழறிஞர்களும் தத்தம் கொள்கைக்கேற்பவும் கருத்திற்கேற்பவும் திருக்குறளுக்கு உரைவிளக்கம் கண்டுள்ளனர். ந.சுப்புரெட்டியாரும் திறக்குறளுக்குத் தனது பங்களிப்பாக ஒவ்வொரு குறளுக்கும் மூன்று வரிகளில் சுருக்கமான உரையினை எழுதியுள்ளார். அவரெழுதிய உரை **'திருக்குறள் தெளிவு'** என்னும் தலைப்பில் நூலாக வெளிவந்திருக்கின்றது. **'திருக்குறள் கருத்தரங்கு மலர் - 1974'** என்னும் திருக்குறள் ஆய்வுக்கட்டுரைகள் அடங்கிய ஆய்வு மலர் ஒன்றையும் வெளியிட்டுள்ளார். **'திருக்குறள் - வாழ்வியல் சிந்தனைகள்'**, **'வள்ளுவர் காட்டும் வாழ்வியல்'** என்னும் இருநூல்களில் அவர் வள்ளுவர் காட்டும் வாழ்வியல் நெறிகளை எளிமையாக விளக்கியுள்ளார். திருவேங்கடம் தமிழுக்கு அளித்துள்ள பங்களிப்புக் குறித்துத் **'திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்'** என்னும் நூலினையும் ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ளார். அறிவியல் சிந்தனைகளில் ந.சுப்புரெட்டியார், பல்கலைக்கழகப் பேராசிரியர்களுக்கு நிகரானவர். தமிழ் இலக்கியம், சமயம், தத்துவம் ஆகியனவற்றில் காணலாகும். அறிவியல் சிந்தனைகளையும் கருத்தாக்கங்களையும் விளக்கி அவர் **'அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்'**

என்னும் நூலினையும் எழுதியுள்ளார். தமிழ் இலக்கியங்கள் அறத்திற்கும் நீதிக்கும் அளித்துள்ள பங்களிப்புக்களே மிகுதி. அவற்றைத் தமிழ் இலக்கியச் சான்றுகளைக் கொண்டு விளக்குவதற்காகத் **'தமிழ் இலக்கியத்தில் அறம் நீதி முறைமை'** என்னும் நூலினை எழுதி உள்ளார். தமிழில் தோன்றி வளர்ந்துள்ள இலக்கிய வகைகள், அவற்றின் வளர்ச்சி, இக்கால இலக்கியத்தின் நோக்குகள், போக்குகள் ஆகியன குறித்து விளக்குவதற்காக அவர் **'இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியமும்'** என்னும் ஆய்விலக்கிய நூலினையும் எழுதியுள்ளார்.

**'பாவேந்தர் பாரதிதாசன் - ஒரு கண்ணோட்டம்', 'வாய்மொழியும் வாசகமும்', 'பல்சுவை விருந்து', 'புதுவை(மை)க் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் - ஒரு கண்ணோட்டம்'** முதலான இலக்கிய நூல்களையும் ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ளார். அவருடைய **'காந்தியடிகளின் நெஞ்சுவிடு தூது'** என்னும் இலக்கிய நூலும் இவ்வகையில் குறிப்பிடத்தக்கதாகும்.

## சமய, தத்துவ விளக்க நூல்கள்

ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ள சமய, தத்துவ விளக்க நூல்கள் அனைத்தும் சைவ, வைணவ சமயங்களின் கொள்கைநெறி விளக்கங்களாகவே அமைந்துள்ளன. அவரது **'திருப்பாவை விளக்கம்', 'அர்ச்சிராதி', 'ஐந்து இரகசியங்கள்'** என்னும் வைணவ சமய தத்துவ விளக்க நூல்களை திருமலை, திருப்பதி தேவஸ்தானம் வெளியிட்டுள்ளது. ந.சுப்புரெட்டியாரின் **'வைணவமும் தமிழும்'**, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடான **'கலியன் குரல்', 'கீதைக்குறள்', 'கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில்', 'ஆண்டாள் பாவையும் அழகு தமிழும்'**, ஐதிகம், இதிகாசம், சம்வாதம் ஆகியன குறித்து அவரெழுதியுள்ள **'வைணவ உரைவளம்', 'கண்ணன் துதி', 'இராமர் தோத்திரம்', 'வைணவ புராணங்கள்', 'நவவித சம்பந்தம்', 'அர்த்த பஞ்சகம்'** ஆகிய நூல்கள் வைணவ சமய விளக்கம் தொடர்பானவைகளாகும். அவர் கடித உத்திமுறையில் எழுதிய **'சைவ சமய விளக்கு', 'சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்', 'சைவமும் தமிழும்'** ஆகிய நூல்கள் சைவ சமயம் தொடர்பான தத்துவச் சிந்தனைகளை எளிமையாக விளக்குபவை. ந.சுப்புரெட்டியார் சமய, தத்துவச் சிந்தனைகளைப் பொதுநிலையில் விளக்குவதற்காக **'முக்தி நெறி'** என்னும் நூலினை எழுதியுள்ளார். இந்நூல் தமிழக அரசின் பரிசினைப் பெற்ற நூலாகும். அவர் ஆன்மீக நெறியை அறிவியலுடன் இணைத்து **'ஆன்மிகமும் அறிவியலும்'** என்னும் நூலொன்றையும்

எழுதியுள்ளார். **‘சமயம், தத்துவம்’** என்னும் பொருளமைதியில் அவர் இருபது நூல்களை எழுதியுள்ளார்.

## திருத்தலப் பயண நூல்கள்

ந.சுப்புரெட்டியார், வைணவத் திருத்தலங்களுக்குப் புனிதப் பயணங்களை மேற்கொண்டு அத்திருத்தலங்களின் வரலாறு, புராணக் குறிப்புக்கள், பெருமைகள் ஆகியனவற்றை விளக்கி **மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், தமிழக அரசின் பரிசுகளைப் பெற்ற சோழநாட்டுத் திருப்பதிகள்** - (முதல், இரண்டாம் தொகுதிகள்) முதலான திருத்தலப் பயண நூல்களை எழுதியுள்ளார். சைவ சமயச் சான்றோர்கள் மேற்கொண்ட திருத்தலப் பயணங்களின் பெருமைகளையும் அவர்கள் பாடிய தேவாரப் பாடல்களின் சிறப்புக்களையும் விளக்கி அவர் நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் **‘தம்பிரான் தோழர்’ (சுந்தரர்), ‘ஞானசம்பந்தர்’, ‘நாவுக்கரசர்’, ‘மாணிக்கவாசகர்’** எனும் நூல்கள் குறிப்பிடத்தக்கன. ந.சுப்புரெட்டியார் அமெரிக்கா, இலங்கை ஆகிய நாடுகளுக்கும் சுற்றுப்பயணம் செய்துள்ளார். அந்நாடுகளில் தாம் மேற்கொண்ட பயண அனுபவங்களை விளக்கி **‘என் அமெரிக்கப் பயணம்’, ‘என் இலங்கைப் பயணம்’** என்னும் இரண்டு பயண இலக்கிய நூல்களை எழுதி, பயண இலக்கியத்திற்கும் வித்திட்டுள்ளார்.

## திறனாய்வு நூல்கள்

தமிழ் இலக்கியப் பரப்பில் திறனாய்வு நூல்களின் எண்ணிக்கை மிகக் குறைவு என்றே குறிப்பிடலாம். இக்குறையைப் போக்கும் அளவிற்கு ந.சுப்புரெட்டியார் தமிழ்க் கவிதை, தொல்காப்பியம், கம்பராமாயணம், புதுக்கவிதை, பாரதியார் கவிதைகள், ஆழ்வார்களின் பாசுரங்கள், பாரதிதாசன் பாட்டுத்திறன், வாலியின் வசனகவிதைக் காப்பியத்திறன், அற இலக்கியங்கள், தமிழ் இலக்கியங்களின் சமய, தத்துவச் சிந்தனைகள், தமிழ் இலக்கிய வகைகள், இக்கால இலக்கியங்களின் நோக்கும் போக்கும், கவிமணியின் கவிதை வாயிலாக ஆற்றிய தமிழ்ப்பணிகள், புதிய பார்வையில் **மூவர் தேவாரம், பல்சுவை இலக்கிய விருந்து** எனப் பல திறனாய்வு நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள், **‘கவிதை அனுபவம்’, ‘பாட்டுத்திறன்’** ஆகிய இரண்டும் மிகச்சிறந்த தமிழ்க் கவிதைத் திறனாய்வு நூல்களாகும். **‘தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை’, ‘அகத்திணைக் கொள்கைகள்’** ஆகிய இரண்டு நூல்களும் தொல்காப்பியத் திறனாய்வு நூல்களாகும். **‘கம்பன் படைத்த சிறுபாத்திரங்கள்’, ‘பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியங்கள்’, ‘அண்ணல் அநுமன்’** ஆகிய மூன்று நூல்களும் கம்பராமாயணத் திறனாய்வு நூல்களாகும். **‘புதுக்கவிதை நோக்கும் போக்கும்’** என்னும் நூல் புதுக்கவிதைத் திறனாய்வு நூலாகும். **‘கண்ணன்**

**பாட்டுத்திறன்'**, **'பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு'**, **'குயில்பாட்டு – ஒரு மதிப்பீடு'**, தமிழ்நாடு அரசின் பரிசு பெற்ற நூலான **'பாரதீயம்'** ஆகிய நூல்கள் பாரதியார் கவிதைகள் பற்றிய திறனாய்வு நூல்களாகும்.

**ஆழ்வார்கள் ஆரா அமுது, விட்டுசித்தன் விரித்த தமிழ், சடகோபன் செந்தமிழ், பரகாலன் பைந்தமிழ்** ஆகிய நூல்கள் ஆழ்வார்களின் பாசுரங்கள் குறித்த திறனாய்வு நூல்களாகும். **'பாவேந்தா் பாட்டுத்திறன்'**, **'பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு'** ஆகிய நூல்களும் பாரதிதாசன் பாட்டுத்திறன் குறித்த மதிப்பீட்டுத் திறனாய்வு நூல்களாகும். **'கவிஞா் வாலியின் அவதார புருஷன் - ஒரு மதிப்பீடு'**, **'கவிஞா் வாலியின் பாண்டவா் பூமி ஒரு மதிப்பீடு'** ஆகிய இரு நூல்களும் கவிஞா் வாலியின் வசனகவிதைக் காப்பியத்திறன்களை எடுத்துரைக்கும் திறனாய்வு நூல்களாகும். ந.சுப்புரெட்டியாா் தமிழ் இலக்கியங்களில் காணலாகும் அறம், சமயம், தத்துவச் சிந்தனைகளை **'அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்'** என்னும் திறனாய்வு நூலை விளக்கியுள்ளாா். அவா் தமிழ் இலக்கிய வகைகள், அவற்றின் தோற்றம் வளா்ச்சி, இக்கால இலக்கியங்களின் நோக்கு, போக்கு ஆகியனவற்றை **'இலக்கிய வகையின் வளா்ச்சியும் இக்கால இலக்கியங்களும்'** என்னும் நூலினுள் விளக்கியுள்ளாா். கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை தம் கவிதை வாயிலாக ஆற்றிய தமிழ்ப் பணிகளை **'கவிமணியின் தமிழ்ப்பணி – ஒரு மதிப்பீடு'** என்னும் நூலினுள் விளக்கியுள்ளாா். அவா் மூவா் தேவராப்பாடல்களை புதியநோக்கில் ஆராய்ந்து **'மூவா் தேவராம் - புதிய பாா்வை'** என்னும் திறனாய்வு நூலினை எழுதியுள்ளாா். இந்நூல் தமிழ்நாட்டின் சமய, சமூக, பண்பாட்டியல் சூழல்களில் மூவா் தேவாரப் பாடல்களை விளக்கியுரைக்கின்றது. இதனைத் தவிர ந.சுப்புரெட்டியாா் **'வாழும் கவிஞா்கள்'**, **'தந்தை பெரியாா் சிந்தனைகள்'**, **'பல்சுவை விருந்து'** போன்ற திறனாய்வு நூல்களையும் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## வரலாற்று நூல்களும் தன்வரலாற்று நூல்களும்

ந.சுப்புரெட்டியாா் இலக்கியம், சமயம், தத்துவம், அறிவியல், பயண அனுபவம், இலக்கியத் திறனாய்வு ஆகிய துறைகளில் மட்டுமின்றி, வரலாற்றுத் துறைசாா்ந்தும், தன் வரலாற்றை எடுத்துக்கூறியும் பல நூல்களை எழுதியுள்ளாா். அவற்றுள், **'வேமனாா்'**, **'குரஜாட'**, **'சி.ஆா்.ரெட்டி'**, **'தாயுமான அடிகள்'**, **'பட்டினத்தடிகள்'**, **'இராமலிங்க அடிகள்'**, **'பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள்'**, **'தமிழ்க்கடல் ராய.சொ.'**, **'முத்தமிழ்க் காவலா் கி.ஆ.பெ.விசுவநாதம்'** ஆகியன வரலாற்று நூல்கள். **'நினைவுக்குமிழிகள் - முதற்பகுதி'**,

**‘நினைவுக்குமிழிகள் - இரண்டாம் பகுதி’, ‘நினைவுக்குமிழிகள் - மூன்றாம்பகுதி’, ‘‘நினைவுக்குமிழிகள் - நான்காம் பகுதி’, ‘மலரும் நினைவுகள்’, ‘நீங்காத நினைவுகள்’** ஆகிய நூல்களும் ந.சுப்புரெட்டியார் தன் வரலாற்றை விளக்கும் நூல்களாகும். ந.சுப்புரெட்டியார், தன் வரலாற்று நூல்களில் எளிமை, உண்மை, நம்பகத்தன்மை ஆகியனவற்றைக் காணமுடிகின்றது.

**அறிவியல் நூல்கள்**

தமிழ்ப் பேராசிரியரான ந.சுப்புரெட்டியார் ஆழ்ந்த அறிவியல் புலமையுடன் தமிழில் மனித உடலியல், மரபியல், அணுவியல், வானொலி, தொலைக்காட்சித் தொழில் நுட்ப அறிவியல், பௌதிகவியல், விண்வெளிப் பயணம், இராக்கெட்டுகள் ஆகியன குறித்துப் பல அறிவியல் நூல்களை எளிமைப்படுத்தி எழுதியுள்ளார். அவற்றுள், **‘மானிட உடல்’** தமிழக அரசின் பரிசுபெற்ற நூலான **‘நமது உடல்’. ‘வாழையடி வாழை’** [Gentics – மரபியல்] ஆகிய நூல்கள் மனித உடலியலும் மரபியலும் சார்ந்தவை. **‘அணுவின் ஆக்கம்’, ‘அதிசய மின்னனு’** ஆகிய இருநூல்களும் அணுவியல் தொடர்பானவை. **‘இளைஞர் வானொலி’, ‘இளைஞர் தொலைக்காட்சி’** ஆகிய இருநூல்களும் வானொலி மற்றும் தொலைக்காட்சியின் தொழில்நுட்ப அறிவியல் தொடர்பானவை. சென்னைப் பல்கலைக்கழகத்தின் பரிசினைப் பெற்ற நூலான **‘அணுக்கரு பௌதிகம்’** என்னும் நூல் பௌதிகவியல் தொடர்பானவை. **‘அம்புலிப் பயணம்’, ‘தொலை உலகச் செலவு’**, தமிழக அரசின் பரிசினைப் பெற்ற **‘விண்வெளிப் பயணம்’** ஆகிய நூல்கள் விண்வெளிப் பயணம் குறித்தன. தமிழக அரசின் பரிசு பெற்ற நூலான **‘இராக்கெட்டுகள்’** இராக்கெட்டின் அறிவியல் உருவாக்கம் மற்றும் பயன்பாடு பற்றியது.

ந.சுப்புரெட்டியார் கடித உத்தி முறையில் ஆண் - பெண் பாலுறவின் அறிவியல் உண்மையையும் அதன் தேவையையும் வலியுறுத்தி **‘இல்லற நெறி’** என்னும் நூலினை எழுதியுள்ளார். இந்நூல் இல்லற வாழ்வில் ஈடுபடும் ஆண், பெண் இருபாலரும் படித்தப் பயன்பெற வேண்டிய நூலாகும். அறிவியல் துறை சார்ந்து அவரெழுதிய **‘அறிவியல் விருந்து’** என்னும் நூல் தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசினைப் பெற்ற நூலாகும். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவு **‘தமிழில் அறிவியல் - அன்றும் இன்றும்’** என்னும் தலைப்பில் நூலாக வெளிவந்துள்ளது. இந்நூல் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெளியீடாகும். அவர் **‘தமிழில் அறிவியல் செல்வம்’** என்னும் நூலினையும் எழுதியுள்ளார்.

## ஆராய்ச்சி நூல்கள்

ந.சுப்புரெட்டியார் தமிழ் ஆர்வலர் மட்டுமன்று; தம் வாழ்க்கையையே தமிழ்ப்பணிக்காகவும் தமிழாராய்ச்சிக்காகவும் அர்ப்பணம் செய்தவர். அவரெழுதிய நூல்கள் அனைத்துமே ஆராய்ச்சி நூல்களே என்றாலும், **'கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி", 'வைணவச் செல்வம் - முதல், இரண்டாம் பகுதிகள்'** (தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு), **'வடவேங்கடமும் திருவேங்கடமும்'** ஆகிய நூல்கள் முழுமையான மிகச் சிறந்த ஆராய்ச்சி நூல்களாகும்.

1. 'Religion and Philosophy of Nalayira Divya Prabandam with special reference to Nammalvar'.
2. 'Studies in Arts and Science' (61st Birth Day Commemoration Volume)
3. 'Collected Papers' ஆகிய நூல்கள் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ள அவரது ஆராய்ச்சி நூல்களாகும்.

## ந.சுப்புரெட்டியார் பெற்ற விருதுகளும் பாராட்டுக்களும்

1. 1969இல் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் **'அருங்கலைக்கோன்'** என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்துள்ளது.
2. 1993இல் பண்ருட்டி, வைணவ சபை ந.சுப்புரெட்டியாருக்கு **'ஸ்ரீசடகோபன் பொன்னடி'** என்னும் விருதினை வழங்கிச் சிறப்பித்துள்ளது.
3. 1993இல் மதுரை காமராசர் பல்கலைக்கழகம், ந.சுப்புரெட்டியாருக்கு **'தமிழ் பேரவைச் செம்மல்'** என்னும் விருதினை வழங்கிக் கௌரவித்ததோடு, இப்பல்கலைக்கழகத்தின் கல்வி ஆலோசனைக் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் தகுதியையும் வழங்கிக் கௌரவித்துள்ளது.
4. 1995இல் தமிழக அரசு, ந.சுப்புரெட்டியாருக்கு **திரு.வி.க. விருதினையும்** ரூபாய் பத்தாயிரம் ரொக்கப் பணத்தையும் வழங்கிச் சிறப்பித்துள்ளது.
5. 1984இல் ந.சுப்புரெட்டியாருக்கு **இராசா சர் முத்தய்ய வேள் விருதும்** ரூபாய் ஐம்பதாயிரம் ரொக்கப் பணமும் வழங்கிக் கௌரவிக்கப்பட்டது.
6. 1996 இல் சென்னை ஆழ்வார் ஆய்வு மையம் ந.சுப்புரெட்டியாருக்கு **இராமானுசர் விருதும்** ரூபாய் இருபத்தையாயிரம் ரொக்கப்பணமும் வழங்கி கௌரவித்துள்ளது.
7. 1996 இல் சென்னைக் கம்பன் கழகம் ந.சுப்புரெட்டியாருக்கு பேராசிரியர் **இராதாகிருஷ்ணன் விருதும்** ரூபாய் ஆயிரம் ரொக்கப் பணமும் வழங்கிச் சிறப்பித்துள்ளது.

8. 1999 இல் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ந.சுப்புரெட்டியாருக்கு **டி.லிட். கௌரவ டாக்டர்** மதிப்புறு முனைவர் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்துள்ளது.
9. 1999 இல் தமிழக அரசின் இயல் இசை நாடகத்துறை **‘கலைமாமணி’** விருதினையும், மூன்று சவரன் தங்கப்பதக்கத்தையும் வழங்கிக் கௌரவித்துள்ளது.
10. 1999 இல் காஞ்சியில் காஞ்சிப்பெரியவர் நூற்றாண்டு விழாக்குழு ந.சுப்புரெட்டியாருக்கு **‘சேவாரத்னா’** விருதினையும், ரூபாய் ஆயிரம் ரொக்கப்பணத்தையும் வழங்கிச் சிறப்பித்துள்ளது.
11. 2000-த்தில் துறையூர் நகராண்மைக் கழகம் இவர்தம் பணியைப் பாராட்டிச் **சிறப்பு வரவேற்பு அளித்துக்** கௌரவித்துள்ளது.
12. 2001இல் ந.சுப்புரெட்டியாருக்கு சி.பா.ஆதித்தனார் விருது (தமிழஞர்களுக்கான சிறப்பு விருது) ரூபாய் ஒரு இலட்சம் வழங்கிக் கௌரவிக்கப்பட்டுள்ளது.
13. 2001 இல் சென்னை, திருப்பெருந்திரு சோமசுந்தரர் குருவருள் அருட்பணி மன்றம் **‘ஆய்வுத் தமிழரசு’** என்ற விருதினையும் ரூபாய் மூவாயிரம் ரொக்கப் பரிசினையும் வழங்கிச் சிறப்பித்துள்ளது.
14. 2002 இல் குருபழநி ஆதினமும் திருக்குறள் பீடமும் குருகுலம் மதுராந்தகமும் இணைந்து ந.சுப்புரெட்டியாருக்கு **‘பொதுமறைச் செம்மல்’** என்னும் விருதினையும், ரூபாய் இரண்டாயிரம் ரொக்கப் பணத்தையும் வழங்கிக் கௌரவித்துள்ளது.
15. சேலம் தமிழ்ச்சங்கம் ந.சுப்புரெட்டியாருக்கு 2003 ஆம் ஆண்டில் **‘தமிழ்வாகைச் செம்மல்’** என்னும் விருதினையும் ரூபாய் பத்தாயிரம் ரொக்கப் பணத்தையும் வழங்கிச் சிறப்புத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## வெளிநாட்டுப் பயணங்கள்

ந.சுப்புரெட்டியார் அறிவியல் துறைகளில் பெரும் புலமை பெற்றுப் பின்னர்த் தமிழ்ப்பேராசிரியராக வந்தவர். அவர் அமெரிக்கா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் செய்துள்ளார். அந்நாட்டு மக்களின் சமூக, பண்பாட்டியல் சார்ந்த வாழ்வியல் நெறிகளை உற்றுக் கவனித்து அவற்றைத் தமது பயண அனுபவ நூல்களாக எழுதியுள்ளார். ந.சுப்புரெட்டியார் 2002 ஆம் ஆண்டில் ஏப்ரல் - ஜுன் மாதங்களில் அமெரிக்காவில் சுற்றுப்பயணம் செய்தார். அமெரிக்காவின் நான்கு மாநிலங்களைச் சுற்றிப் பார்த்த அவர் இரண்டு இடங்களில் சொற்பொழிவு நிகழ்த்தினார். அப்பயண அனுபவங்களை விளக்கி **‘என் அமெரிக்கப் பயணம்’** என்னும் பயணநூலினை எழுதியுள்ளார். அவர் 2003 இல் மே ஒன்று முதல் பதினைந்து வரை, பதினைந்து நாட்கள் இலங்கையில் சுற்றுப்பயணம் செய்து இலங்கையின்

பெரும்பான்மையான இடங்களைச் சுற்றிப் பார்த்தார். அவர்தம் இலங்கைப் பயண அனுபவங்களை விளக்கி **'என் இலங்கைப் பயணம்'** என்னும் பயண நூலினை எழுதியுள்ளார். அவர் 2005 ஆம் ஆண்டில் ஜூன் மாதத்தில் மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கு பயணம் செய்துள்ளார். இவரது வெளிநாட்டுப் பயணங்கள் தமிழ்மொழி, தமிழிலக்கியம் என்னும் முறையில் உலகத் தமிழர்களின் இருப்பினையும் செயலினையும் மதிப்பிடும் வகையில் அமைந்திருந்தன.

## ந.சுப்புரெட்டியாரைக் கவர்ந்த சான்றோர்

காந்தியடிகள், திரு.வி.க, சித்பவானந்த அடிகள், பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளை, தந்தை பெரியார், இராமநுசர், தாயுமான அடிகள், இராமலிங்க அடிகள் என்னும் வள்ளலார், இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், **'தம்பிரான் தோழர்'** என்னும் சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சைவ சமயக் குரவர்கள் நால்வர், நம்மாழ்வர், திருமங்கையாழ்வார், பட்டினத்தடிகள், வங்கக் கவிஞர் தாகூர், பெர்னாட்ஷா ஆகியோர் ந.சுப்புரெட்டியாரைக் கவர்ந்த சான்றோர் பெருமக்கள் ஆவார். இவர்களது வாழ்க்கை வரலாற்றை ஆழமாகப் படித்த அவர், அப்பெருமக்கள் காட்டிய வழியில் மக்கள் வாழ்க்கையும் செயலும் அமைய வேண்டுமென விழைகின்றார். இவர்களைப் பற்றிய தம் கருத்துக்களையும் சிந்தனைகளையும் விளக்கிச் சிறுசிறு நூல்களையும் எழுதியுள்ளார் ந.சுப்புரெட்டியார்

## ந.சுப்புரெட்டியார் பங்கேற்ற குழுக்களும் பொறுப்புக்களும்

தமிழகப் பல்கலைக்கழகங்கள், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சிச் செயல் திட்டங்கள், திருமலை – திருப்பதி தேவஸ்தானம் ஆகியனவற்றில் பல்வேறு பொறுப்புக் குழுக்களில் பங்கேற்று ந.சுப்புரெட்டியார் தமிழுக்கு ஆக்கப்பூர்வமான பணிகளைச் செய்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

(அ) 1953 – 1956 ஆம் ஆண்டுகளில் சென்னைப் பல்கலைக்கழகத்தின் கல்வியியல் ஆலோசனைக் குழு உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார். அவர் திருப்பதி, திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பணியாற்றியபோது, அப்பல்கலைக்கழகத்தின் கல்வியியல் ஆலோசனைக் குழுவில் உறுப்பினராகப் பங்கேற்றுக் கல்விப் பணியைத் திறம்படச் செய்துள்ளார். அவர் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் கல்வியியல் ஆலோசனைக் குழுவில் வாழ்நாள் உறுப்பினராக நியமிக்கப்பட்டுத் திறம்படச் செயலாற்றியுள்ளார்.

(ஆ) 1953 – 1956 ஆம் ஆண்டுகளில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் **'பேரவை'** உறுப்பினராக இருந்துள்ளார். திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பணியாற்றியபோது

அப்பல்கலைக்கழகத்தின் பேரவை உறுப்பினராகவும் இருந்துள்ளார்.

(இ) ந.சுப்புரெட்டியார் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகம் மற்றும் மைசூர், பெங்களூர், கேரளப் பல்கலைக்கழகங்கள் பலவற்றிலும், பாடத்திட்டக்குழு உறுப்பினராகவும், ஒருங்கிணைப்பாளராகவும் செயலாற்றியுள்ளார்.

(ஈ) சென்னை, மதுரை காமராசர், திருவேங்கடவன் பல்கலைக் கழகங்களில் பேராசிரியர்கள் நியமனக்குழு உறுப்பினராகவும் இடம் பெற்றிருந்தார்.

(உ) சென்னை, மதுரை காமராசர், திருப்பதி – திருவேங்கடவன் பல்கலைக்கழகங்களில் தேர்வாளராகவும் பணியாற்றியுள்ளார்.

(ஊ) திருவேங்கடவன் பல்கலைக்கழகக் கல்லூரிகளில் உயர்நிலைத் தமிழ்ப்பாடம் (முதுகலைத் தமிழ், இளநிலை, முதுநிலை ஆய்வுகள்) தொடங்குவதற்கு ந.சுப்புரெட்டியார் ஓர் உறுப்பினர் ஆணையத்திலும் சில காலங்கள் பணியாற்றியுள்ளார்.

**தமிழக அரசின் தமிழ் வளர்ச்சிப் பணியிலும் ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணி குறிப்பிடத்தக்கதாகும். அவர்,**

(அ) தமிழக அரசின் எழுத்துச் சீர்திருத்தக்குழுவின் உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

(ஆ) தமிழக அரசு நிதியுதவி அளிப்பதற்குச் சிறந்த நூல்களைத் தேர்வு செய்யும் வல்லுநர் குழுவின் உறுப்பினர் செயலராகவும் அவர் பணியாற்றியுள்ளார்.

(இ) வயது முதிர்ந்த தமிழறிஞர்களுக்கு ஊதியம் அளிப்பதற்காக அமைக்கப்பட்ட பரிந்துரைக் குழுவிலும் உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார்.

(ஈ) தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் உயர்மட்டக்குழுவின் உறுப்பினராகவும் இருந்துள்ளார்.

(உ) அயல் மாநிலங்களிலும் அயல்நாடுகளிலும் தமிழ் பரப்புவதற்காகத் திட்டங்கள் வகுப்பதற்குத் தமிழக அரசால் அமைக்கப்பட்ட திட்டங்கள் வகுக்கும் குழுவிலும் ந.சுப்புரெட்டியார், உறுப்பினராகப் பங்குபெற்றுத் திறம்படச் செயலாற்றியுள்ளார்.

(ஊ) தமிழை அனைத்து நிலைகளிலும் கட்டாயம் ஆக்குவதற்கான வழிவகைகள் பற்றி ஆராய்ந்து திட்டவரைவுகளைப் பரிந்துரைக்கும் வல்லுநர்குழுவில் ந.சுப்புரெட்டியார், முதன்மை உறுப்பினராகப் பங்கேற்றுச் செயலாற்றியுள்ளார்.

இதனைத் தவிர ந.சுப்புரெட்டியார், திருமலை, திருப்பதி தேவஸ்தானம் சிறந்த நூல்களைத் தேர்ந்தெடுத்து நிதியுதவி அளிப்பதற்காக அமைத்த வல்லுநர் குழுவின் தலைவராகவும் அவர் திறம்படச் செயலாற்றியுள்ளார். இதற்கெல்லாம் காரணம் அவரது தமிழ்மொழியறிவும், தமிழிலக்கிய, இலக்கணத் திறனாய்வு மற்றும் ஆராய்ச்சித் திறன்களே ஆகும்.

## ந.சுப்புரெட்டியாரின் புலமைத்திறன்

ந.சுப்புரெட்டியார் வேதியியல், இயற்பியல், அணுவியல், மின்னியல், மின்னணுவியல், மனித உடலியல், உயிரியல் முதலான எழு அறிவியல் துறைகளில் முதுகலை அறிவியல் பட்டத்திற்கு நிகரான, தரமான அறிவியல் புலமையைப் பெற்றவர். தமிழ், ஆங்கிலம், தெலுங்கு ஆகிய மொழிகளிலும் அம்மொழிகளின் இலக்கியங்களிலும் தேர்ந்த புலமையும், கூர்ந்த அறிவும் உடையவர் ந.சுப்புரெட்டியார். அவருக்கு வடமொழியிலும் சிறிதளவு அறிவுப்புலமை உண்டு.

## ந.சுப்புரெட்டியாரின் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

ந.சுப்புரெட்டியார் தம் வாழ்நாளில் தமிழகப் பல்கலைக் கழகங்களில் பதினான்கு அறக்கட்டளைச் சொற்பொழிவுகளைத் தமிழ் இலக்கியம், வைணவ சமயம், தத்துவம் சார்ந்து நிகழ்த்தியுள்ளார். இச்சொற்பொழிவுகள் அனைத்தும் செம்மைப்படுத்தப்பட்டன. பின்னர் அவரால் நூல்களாக வெளியிடப்பெற்றுள்ளன.

## அறக்கட்டளை நிறுவனர்

தமிழகப் பல்கலைக் கழகங்களின் பல்வேறு அறக்கட்டளைகளில் சிறப்புச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ள ந.சுப்புரெட்டியார் தாமே ரூபாய் இருபத்தைந்தாயிரம் வீதத்தில் ஒன்பது பல்கலைக் கழகங்களில் அறக்கட்டளைகளையும் நிறுவியுள்ளார். அவற்றுள் கோவை பாரதியார் பல்கலைக்கழகம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், சேலம் பெரியார் பல்கலைக்கழகம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், குப்பம் திராவிடப் பல்கலைக்கழகம் ஆகியனவற்றில் அவர் நிறுவியுள்ள அறக்கட்டளைகளும், திருச்சி காவிரி மகளிர் கல்லூரி, திருச்சி மாவட்டம், நெடுங்கூர், அண்ணாமலைபுரத்திலுள்ள சிந்து மெட்ரிகுலேசன் பள்ளியிலும் அவர் நிறுவியுள்ள அறக்கட்டளைகள் குறிப்பிடத்தக்கவை.

## முடிவுரை

ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கையும் இலக்கியப் பின்புலமும் தமிழுக்குப் பல அரிய இலக்கண, இலக்கிய நூல்களை வழங்கியுள்ளது. வைணவத்திற்குத் தொண்டு என்ற வகையில் அவர் பல வைணவ இலக்கியத் திறனாய்வு நூல்களை எழுதியுள்ளார். கல்வியியல் துறைக்குப் பயன்படும் வகையில் அவர் கற்றல் - கற்பித்தல் முறை குறித்த பல நூல்களைத் தமிழில் எழுதியுள்ளார். இந்த வகையில் அவருடைய தமிழ்ப்பணிகள், தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு ஏற்றம் தருவதாகும்.

~ ~ ~ ~ ~

## குறிப்புகள்

1. ந.சுப்புரெட்டியார், நினைவுக்குமிழிகள் - 1, பக். 3–16.
2. மேலது., பக். 19–20.
3. மேலது., பக். 30–32.
4. மேலது., பக். 43–51.
5. மேலது., ப. 63.
6. மேலது., பக். 81–83.
7. மேலது., பக். 86–87.
8. மேலது., ப. 88.
9. மேலது., ப. 194.
10. மேலது., ப. 197.
11. மேலது., பக். 221–254.
12. மேலது., பக். 307–308.

# இயல் - 2
# ஆசிரியப் பணிக்கு ந.சுப்புரெட்டியாரின் பங்களிப்பு

## முன்னுரை

ந.சுப்புரெட்டியார் தம்முடைய ஆசிரியப்பணியின்வழி ஆசிரியப் பணிக்குத் துணை நிற்கும் பல நூல்களை எழுதியுள்ளார். அந்நூல்களில் தமிழாசிரியர்களுக்கும் தமிழ் இலக்கியம் பயிலும் மாணவர்களுக்கும் பெரிதும் பயன்பாடுடைய வகையில் அமைந்திருக்கின்றன. **'தமிழ்பயிற்றும் முறை', 'கவிதை பயிற்றும் முறை'** ஆகிய இருநூல்களும் குறிப்பிடத்தக்கன. அவர் அறிவியல் கல்வியைப் பயிற்றுவிக்கும் முறையை விளக்கி **'அறிவியல் பயிற்றும் முறை'** என்னும் நூலினையும் எழுதியுள்ளார். அவருடைய **'அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல்'** என்னும் நூலினை யுனெஸ்கோ நிறுவனம் பதிப்பித்து வெளியிட்டுள்ளது. ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டிருந்த அவர் கல்வியியல் மாணவர்களுக்குத் திறம்படக் கற்பித்த அனுபவம் உடையவர். அந்த வகையில் அவருடைய **'கல்வி உளவியல் கோட்பாடுகள்'** என்ற நூலும் குறிப்பிடத்தக்கது. இவரது ஆசிரியப் பணியின் பங்களிப்பை விரிவாக ஆயும் வண்ணம் இவ்வியல் அமைகிறது.

## தமிழ் பயிற்றும் முறை

ந.சுப்புரெட்டியாரின் **'தமிழ் பயிற்றும் முறை'** என்னும் இந்நூல் தமிழ் பயிற்றும் முறை குறித்த அடிப்படை ஆதார நூலாகும். இந்நூலிள் நோக்கங்கள், பயிற்றுவிகக்ப்படும் கல்வியில் பாடத்திட்டங்கள் பயிற்றுமுறைகள், மொழித்திறன்களும் துறைகளும் மற்றும் ஆசிரியர் செயலாற்றும் வழிகள் என்னும் நான்கு பெரும் பிரிவுகளில் மொத்தம் பதினேழு இயல்கள் அடங்கியுள்ளன. தமிழ் மொழியைப் பயிற்றும் நோக்கங்கள், கல்வி ஏற்பாடும் மொழிப்பாடத்திட்டமும், பயிற்றலின் அடிப்படை விதிகள், பயிற்று முறைகள் எனும் - 1, 2 பயிலல் உத்திகள் குறிப்பிடப்படுகின்றன, **மொழித்திறன்களும் துறைகளும்** என்னும் பிரிவில் வாய்மொழிப் பயிற்சி, படிப்பு, கையெழுத்தும் எழுத்துக் கூட்டலும், மொழிப்பயிற்சிகள், கட்டுரைப் பயிற்சி, இலக்கியம், இலக்கணம், ஆசிரியரின் வேலைத்திட்டங்கள், பள்ளிக்குரிய நூல்கள், கல்வித்துறைச் சோதனைகள், தாய்மொழி ஆசிரியர்கள் என்னும் பதினெழு இயல்களில் ந.சுப்புரெட்டியார் தமிழ் பயிற்றும் முறையை விரிவாக விளக்கியுள்ளார்.

ஒருவன் பிறந்தது முதல் இறப்பது வரையில் பேசி வருவதே தாய்மொழியாகும். குழந்தையின் இயல்பான மொழி தாய்மொழியே. ஒருவன் தன் எண்ணங்களையும் சிந்தனைகளையும் எழுத்து மூலமாகவும் பேச்சு மூலமாகவும் பிறருக்கு வெளியிடுவதற்கு அவனது தாய்மொழியே சிறந்த

ஊடகமாகத் திகழ்ந்து வருகின்றது. இத்தகைய சிறப்புமிக்க தாய்மொழி மற்றும் தாய்மொழிக் கல்வியின் முக்கியத்துவம் குறித்து ந.சுப்புரெட்டியார், **"உயர்ந்த மனவெழுச்சிகளையும் கற்பனை ஆற்றலையும் கொண்ட தாய்மொழி இலக்கியங்களைச் சுவைப்பது போல் அயல்மொழி இலக்கியங்களைச் சுவைக்க முடியாது. தாய்மொழி எழிலுணர் திறனையும் கற்பனையாற்றலையும் நன்முறையில் வளர்க்கின்றது. வழிவழியாக வரும் சமூக இயலையும் பண்பாட்டையும் அறியும் திறவுகோலாகவும் பயன்படுகிறது. வாழ்க்கையை வளப்படுத்தி நீதியை இனியமுறையில் புகட்டுகின்றது. தாய்மொழி மூலம் கல்வி பெறுங்கால் காலச்செலவு, பணச்செலவு, முயற்சி ஆகியவை குறைகின்றன. தாய்மொழியைப் பயில்வதால் மொழிப்பற்றும் நாட்டுப்பற்றுங்கூட நன்முறையில் அமைகின்றன"**[1] என விளக்கியுள்ளார். தாய்மொழி, தாய்மொழி இலக்கியங்கள் ஆகியனவற்றைப் பயில்வதால் ஒருவன் தன் சொந்தச் சமூகவியல் சார்ந்த இருப்பையும் பண்பாட்டையும் கற்றுணர்ந்து வாழ்க்கையை வளமாக அமைத்துக் கொள்ள முடியும் என்பது ந.சுப்புரெட்டியாரின் கருத்து.

## இலக்கிய நயம் காணல்

தமிழ் பயிற்றலின் தலையாய நோக்கமாக இலக்கியநயம் கண்டு இன்புறுதலைக் குறிப்பிடுகின்றார். ந.சுப்புரெட்டியார். தமிழ்மொழியில் நம் மூதாதையர் குடிவழிச் சொத்தாக வைத்துவிட்டுச் சென்ற அறிவுக் கருவூலங்களாக எண்ணற்ற இலக்கியங்கள் உள்ளன. மாணவர்களை இளமையிலிருந்தே இலக்கிய நயமுணர்ந்து இன்புற்றுச் சுவைத்தலில் ஈடுபடுத்த வேண்டும். இதுவே தாய்மொழி ஆசிரியர்கள் **'தாம் கற்றலிலும் கற்பித்தலிலும் கண்ட வெற்றியாகும். இலக்கியச்சுவையில் திளைத்து அறிதோறும் அறியாமை கண்டே 'தமிழ் விடுதூது', "இருந்தமிழே உன்னால் இருந்தேன்: இமையோர் விருந்து அமிழ்தம் என்றாலும் வேண்டேன்"**[2] எனக் குறிப்பிட்டுள்ளது. இலக்கியப் படைப்புக்கள் பயில்தோறும் புதுப்புதுப் பொருள் தந்து இன்பம் அளிப்பன. இலக்கியங்களில் இலைமறை காய்களாகச் செறிந்து கிடக்கும் உள்ளுறை உவமம், இறைச்சிப்பொருள் நயங்களையும் அவற்றின் வெளித்தோற்றங்களாகக் காட்சியளிக்கும் மோனை, எதுகை, மடக்கு, யமகம், திரியு போன்ற சொல்நயங்களையும் கண்டுணர்ந்து சுவைக்கும் பொழுது அதில் இலக்கிய இன்பம் ஊற்றுக்களாகச் சுரந்து நிற்பது புலப்படும். சங்கப்பாடல்கள் முதல் இக்காலக் கவிதைகள் வரை இத்தகைய இலக்கிய இன்பத்தை அளிப்பனவே. ஆதலால் தமிழ்மொழியைக் கற்பிக்கும் ஆசிரியர்கள், **"மாணாக்கரின் அறிவுநிலை, பட்டறிவு முதலியவற்றிற்கேற்றவாறு இவற்றைத் தேர்ந்தெடுத்துக் கற்பிக்க வேண்டும். இவற்றைக் கற்பிக்கும் பொழுதே கற்பனையாற்றலையும் முருகுணர்ச்சியையும் எடுத்துக்காட்ட**

**வேண்டும். கற்பனையாற்றலுக்கு அடிப்படை உள்ளத்தில் படிந்து கிடக்கும் உணர்ச்சியே. உணர்ச்சியும் கற்பனையும் ஒன்றையொன்று பின்னிக்கிடப்பன. இதில் ஒன்று குறைந்தாலும் அதற்கேற்றவாறு பிறிதொன்றன் ஆற்றலும் குறைந்துவிடும். சிந்தனையும் காட்சித்திறனும் கலந்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இக்கற்பனையாற்றல் உயர்ந்த கவிஞர்களிடம் காணப்படும் ஓர் அருளாற்றல். இத்தகைய ஆற்றல் பொதிந்துள்ள பாடல்களைக் கற்பிக்கும் பொழுது மாணாக்கர்களிடம் மெய்மறந்து பாட்டுக்களைத் துய்க்கும் ஆற்றலை உண்டாக்கிவிட்டால், அவர்களிடம் அது வளர்வதுடன் அவர்களாகவே பல இலக்கியங்களைப் படித்துத் துய்க்கும் திறனைப் பெறுவர். தாய்மொழி கற்பிக்கும் ஆசிரியர்கள் இதை நோக்கமாகக் கொண்டு பணியாற்ற வேண்டும். இன்று வெளிவரும் சில திறனாய்வு நூல்கள் இவர்கட்குத் துணையாக அமையும்.”**[3] என்கின்றார் ந.சுப்புரெட்டியார். மாணவர்களுக்கு இலக்கியங்களைப் படிக்கும் திறனையும் சுவைக்கும் திறனையும் வளர்த்தல் தமிழ் ஆசிரியர்களின் கடமையென வலியுறுத்துகின்றார்.

## பள்ளி வாழ்க்கையில் தாய்மொழி

பள்ளி வாழ்க்கையில் குழந்தைகளுக்குத் தாய்மொழி அவசியம் தேவை என்கின்றார் ந.சுப்புரெட்டியார். ஜார்ஜ் சாம்சன் என்பவர் ஆங்கில மொழிக்கு, **“தாய்மொழி பள்ளி வாழ்க்கைக்கே இன்றியமையாதது. அவ்வாழ்க்கையிலிருந்து அதைப் பிரிக்க இயலாது பள்ளியாகிய உடலுக்கு உயிராக இருப்பது. ஒவ்வொருவருடைய வாழ்விலும் அது தொட்டிலிலிருந்து சுடுகாடு மட்டும் புறக்கணிக்க முடியாத ஒரு நிலையைப் பெற்றிருப்பது. அறிவை வளர்த்துக் கொள்ளும் ஒரு கருவியாக இருப்பது மட்டுமின்றிக் குழந்தையை வாழ்க்கையில் ஈடுபடுத்தும் இன்றியமையாத உறுப்பாகவும் உள்ளது”**[4] எனக் கூறியுள்ள கருத்து தமிழ்மொழி உள்ளிட்ட எம்மொழிக்கும் பொருந்தும்.

இதனை மனத்தில் கொண்டே ந.சுப்புரெட்டியார் தமிழ்மொழிப் பயிற்சி எல்லாப் பாடங்களுக்கும் அடிப்படையான பொதுப்பயிற்சி என்றும், தமிழ்மொழி கல்வி ஏற்பாட்டில் (Curriculum) காணப்பெறும் ஏனைய பாடங்களைப் போல் ஒரு பாடம் மட்டும் இல்லை: அது பள்ளி வாழ்க்கையின் அனைத்துச் சூழ்நிலைகளையும் ஊடுருவிச் செல்லும் சாதனம் என்றும், தமிழாசிரியர்கள் மட்டுமில்லாமல் அனைத்து ஆசிரியர்களும் தலைமையாசிரியர்களும் ஆட்சியாளர்களும் உணர்ந்து, அதற்குரிய ஆக்கப் பணிகளில் செயல்பட வேண்டும் என்றும் வலியுறுத்திக் கூறுகின்றார்.

## பாடத்திட்டங்கள், பயிற்றுமுறைகள்

கல்வி ஏற்பாடு என்பது தொடக்க நிலை, மேல்நிலை, கல்லூரி நிலைப்படிப்புக்களில் கற்க வேண்டிய பாடங்களைப்

பற்றி கூறும் ஒருவித ஏற்பாடு ஆகும். ‘பாடத்திட்டம்’ என்பது அத்திட்டத்திலுள்ள பாடப்பொருள் ஒன்றில் அமைய வேண்டிய பாட விவரங்களைக் குறிப்பது ஆகும். கல்வி ஏற்பாட்டினையும் பாடத்திட்டங்களையும் தக்கவாறு வகுத்துக் கொண்டே கற்பித்தலைத் தொடங்க வேண்டும் என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

## மூவகையான கல்வி ஏற்பாடுகள்

ந.சுப்புரெட்டியார் மூவகையான கல்வி ஏற்பாடுகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவை **குழந்தையைப் பற்றியவை, வாழ்க்கையில் பயன்தரத்தக்கவை, குறிக்கோள் தன்மையை உடையவை**[5] என்பன ஆகும். கல்வி ஏற்பாட்டினை வகுப்போர் குழந்தையின் பல்வேறு இயல்புகளை முக்கிய நோக்கமாகக் கொள்ள வேண்டும் என்பதே குழந்தையைப் பற்றியவையாகும். குழந்தையின் வாழ்க்கைக்கு அறிவையும் பிற திறன்களையும் வளர்க்கும் பகுதிகளுடன் குழந்தையின் வளர்ந்த நிலையில் அதன் பிற்கால வாழ்க்கையில் தேவைப்படும் பல பாடப்பகுதிகளும் சேர்க்கப் பெறுதல் வேண்டும் என்பது வாழ்க்கையில் பயன் தரத்தக்கவை என்ற கொள்கையாகும். பள்ளிக் குழந்தைகளுக்குக் குறிக்கோள் தன்மையை வலியுறுத்துபவர்கள், இதுகாறும் மனிதன் பெற்றுள்ள அறிவுச் செல்வத்தைச் சுருங்கிய முறையில் பள்ளி மூலம் அளிக்க வேண்டும் என்கின்றனர். மானிட இனம் பெற்றுள்ள அறிவுத்துறைகள் ஏதாவதொரு குறிப்பிட்ட முறைகளில் பாகுபாடு செய்யப்பட்டு குழந்தைகளுக்கு அளிக்கப் பெறுதல் வேண்டும் என்பது இவர்களது கொள்கையாகும். ஆதலால் கல்வி ஏற்பாட்டில் இலக்கியம், அறிவியல், கணிதம், வரலாறு, புவியியல், இசை, ஓவியம், விளையாட்டு போன்ற பல துறைகளைக் குறித்த செய்திகள் அடங்கியிருத்தல் வேண்டுமென குறிக்கோள் தன்மையைக் கல்வியியல் சிந்தனையாளர்கள் வலியுறுத்திக் கூறுகின்றனர். கல்வி ஏற்பாடுகள் எவ்வளவு கவனத்துடன் வகுக்கப்பெறினும், கல்விமுறையை இவை மாற்றிவிடும் என்று கருத இயலாது. அடிக்கடி கல்வி ஏற்பாட்டில் புதிய நோக்கும் போக்கும் சேர்க்கப்பட வேண்டும். நாட்டின் தேவைக்கேற்றவாறும் சோதனைகளின் முடிவுக்கு ஏற்பவும் கல்வி ஏற்பாட்டில் மாற்றங்கள் தேவை என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## கற்பித்தல் நெறிமுறைகள்

ந.சுப்புரெட்டியார் கற்பித்தல் நெறிமுறைகளாகப் பின்வருபனவற்றை வகைப்படுத்திக் கூறியுள்ளார். **ஊக்குவித்தல், செயல் மூலம் கற்றல், கற்பனவற்றை வாழ்க்கையுடன் இணைத்துக்காட்டல், கற்றலில் அக்கறையை உண்டாக்குதல், மனத்தைத் தயாரித்தல், பாடநோக்கம், எடுத்துக்கூறல், ஒப்பிடல், பொதுவிதி காணல்** என்பன அவர் கூறும் கற்பித்தல் நெறிமுறைகளாகும். தெரிந்தவற்றிலிருந்து தெரியாதவற்றுக்குப் போதல், முழுமையிலிருந்து பகுதிக்குப் போதல், காட்சி நிலையிலிருந்து கருத்து நிலைக்குச் செல்லல், சிறப்பிலிருந்து

பொதுவிதிக்குப் போதல், எளிமையிலிருந்து அருமைக்குப் போதல், தெளிவிலிருந்து சிக்கலுக்குப் போதல், தெளிவற்ற நிலையிலிருந்து தெளிவான நிலைக்குப் போதல் என்னும் நிலைகளில் ஆசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்பித்தல் வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். கற்பித்தல் இயற்கையையொட்டிச் செல்ல வேண்டும். குழந்தைகளின் உளநிலை, மனவளர்ச்சிக்கு ஏற்ப இருத்தல் வேண்டும். காரணகாரிய முறைப்படி கற்பித்தல் வேண்டும் என்பது தவறு. கற்பித்தல் துறையில் புதிதாகப் புகும் இளைஞர்களின் பயன்பாட்டிற்கு ஏற்றவாறு ந.சுப்புரெட்டியார் கற்பித்தல் நெறிமுறைகளை வகுத்துக் கூறியுள்ளார். ஆயினும் பட்டறிவு மிக்க ஆசிரியர்களுக்கு இவை பெரிதும் பயன்படா.

## பயிற்றுமுறைகள்

ந.சுப்புரெட்டியார் பயிற்றுமுறைகளை விளக்கும்போது ரூஸோ, பெஸ்டலாஸ்ஸி, ஜொகான் பிரைடெரிச் ஹெர்பார்ட், ஃபிராபெல், இத்தாலி நாட்டைச் சார்ந்த மாண்டிசோரி அம்மையார், அமெரிக்க நாட்டைச் சார்ந்த ஜான் ட்யூமி ஆகியோரின் பயிற்று முறைச் சிந்தனைகளை முதலில் சுருக்கமாக விளக்கியுள்ளார். முதலில் கேட்டல் பின்னர் பேசுதல் பின்னர் படித்தல் பின்னர் எழுதுதல் என்று பேச்சு, பின்னர் படிப்பு, பின்னர் எழுத்து என்று கற்பித்தலே முறையாகும் என்கின்றார். எழுத்தை முதலில் தொடங்குவது முறையன்று என்கின்றார். நெட்டுருச்செய்வதால் (மனப்பாடம்) பண்டையோர் மொழித் திறமை பெற்றிருந்தனர் என்கின்றார். அவர் கல்வியைப் பயிற்றும் முறைகளை,

1. **கிண்டர்கார்ட்டன் முறை.**
2. **விளையாட்டுமுறை**
3. **செயல்திட்ட முறை.**
4. **வார்தாக் கல்வி முறை**
5. **நடிப்பு முறை**[6]

என ஐவகைப்படுத்தித் தெளிவுபடுத்தியுள்ளார்.

செருமானிய நாட்டுப் பேராசிரியரான பிரைடரிச் ஃபிராபெல் (கி.பி. 1782 – 1852) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டதே கிண்டர்கார்ட்டன் பயிற்றுமுறையாகும். இம்முறை விளையாட்டு உந்துதலின் அடிப்படையில் அமைந்ததாகும். **'கிண்டர்கார்டன்'** (Kindergarden) என்னும் செருமானியச் சொல்லுக்கு **'குழந்தையின் தோட்டம்'** என்பது பொருளாகும். குழந்தைகளின் முழுக்கல்விக்கும் பயிற்சிக்கும் என்றே ஃபிராபெல் இருபது விதமான துணைக்கருவிகளை உருவாக்கினார். குழந்தைகளின் இயல்பையொட்டிக் கற்பித்தலுக்கு விளையாட்டு முறையை சிறந்ததென்று இவர் கண்டுபிடித்தார். குழந்தைகளின் புலன்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும் எனக் கூறிய இவர் செயல்முறைக் கல்விக்கும் வழிகாட்டியாக அமைந்தார். விளையாட்டு முறைக் கல்வி என்பது ஆங்கிலக் கல்வியாளரான

**கால்டுவெல் குக்** என்பவரால் முதன்முதலாகப் பின்பற்றப் பெற்றதாகும். ஆங்கிலத்தைக் கற்பிப்பதில் இவர் முதன்முதலில் இம்முறையைப் பின்பற்றினார். இதனைத் தொடர்ந்து குழந்தைகளை வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்வது என்னும் செயல் நோக்கத்தில் **'செயல் திட்ட முறை'**க் கல்வி தோன்றியது.

**'தொழில்முறைக் கல்வி'** என்றும் **'செய்முறைக் கல்வி'** என்றும் வார்தாக் கல்வி முறை சிறப்பிக்கப் பெற்றது. இத்திட்டம் மத்தியப் பிரதேசத்திலுள்ள வார்தா என்ற ஊரில் முதன்முதலாக மகாத்மா காந்தியடிகளால் தொடங்கப்பட்டது. 1937 இல் அக்டோபரில் நடைபெற்ற கல்வி மாநாட்டின் தீர்மானத்தையொட்டி இத்திட்டம் தயார் செய்யப்பட்டு ஜாகீர் ஹுசைன் கமிட்டியாரால் வடிவமைக்கப் பெற்றது. நாட்டு மக்கள் அனைவரும் கல்வியைப் பெறும் வகையில் இத்திட்டம் வடிவமைக்கப்பட்டது. காந்தியடிகளின் கல்விச் சிந்தனைகள் இத்திட்டத்தில் இடம்பெற்றது. பயன்படத்தக்க ஏதாவதொரு தொழிலை மையப்புள்ளியாகக் கொண்டு அதைச்சுற்றியே பிற பாடங்களைக் கற்பித்தல் இம்முறையின் முக்கிய நோக்கமாகும். விளையாட்டு முறையை அடிப்படையாகக் கொண்டதே நடிப்புமுறைக் கல்வியாகும். இது மனத்தின் ஆற்றல்களில் முக்கியமானதாகிய கற்பனையின் ஊற்றுப்பெருக்கால் நடைபெறுவதாகும். கற்பனைப் பயிற்றலால்தான் குழந்தைகள் அரிதான செயல்களை எளிதாக நிறைவேற்றுகின்றனர். ஊனக்கண்ணால் காண முடியாதவற்றை மனக்கண்ணால் கண்டு இன்புறுகின்றனர். இதனைத் தவிர ந.சுப்புரெட்டியார் பின்வரும் ஐந்து பயிற்றுவித்தல் முறைகளையும் தம் அனுபவத்தில் கண்ட செயல்களின் வாயிலாக எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். அவை,

1. **தனிப்பயிற்சி முறை.**
2. **டால்ட்டன் திட்டம்.**
3. **மாண்டிசோரி முறை**
4. **மேற்பார்வைப் படிப்பு**
5. **கண்டறி முறை**[7]

என்பனவாகும். வகுப்பறையில் மாணவர்களிடம் காணப்பெறும் குறைகளை நீக்குவதற்கு தனிப்பயிற்சி முறையில் கற்பித்தல் பெரிதும் பயன்படும். இதில் மாணவர்கள் தங்கள் விருப்பப்படி விரைவாகவோ மெதுவாகவோ கற்கும் வாய்ப்புக்கள் உள்ளன. தனிப்பயிற்சி முறையை அடிப்படையாகக் கொண்டதே டால்ட்டன் திட்ட கற்பித்தல் முறையாகும். ஒன்றுபட்ட அமெரிக்க நாடுகளில் **ஹெலன் பார்க் ஹர்ஸ்ட்** என்னும் அம்மையாரால் இத்திட்டம் மெசாசுசெட்ஸ் என்ற மாநிலத்தில் டால்ட்டன் என்னும் ஊரில் முதன்முதலாக அறிமுகப்படுத்தப்பட்டது. இத்தாலி நாட்டைச் சேர்ந்த மாண்டிசோரி அம்மையாரால் தோற்றுவிக்கப்பட்டதே மாண்டிசோரி முறையாகும். மாண்டிசோரி அம்மையார் ஃபிராபெலைப் போலவே ஒவ்வொரு குழந்தையையும் ஒரு செடியாகக் கருதினார். குழந்தைகளின் பிறப்பிலேயே அவர்களின்

பிற்கால வாழ்க்கைக்குத் தேவையான அனைத்தும் மறைந்து காணப்படுகின்றன என்பதே இவ் அம்மையாரின் கருத்தாகும். குழந்தைகளை எச்செயலிலும் கட்டாயப்படுத்தக் கூடாது. அவர்களுக்கு முழு உரிமை தர வேண்டும். ஒவ்வொரு குழந்தையையும் தனித்தனியாகக் கவனிக்க வேண்டும் என்பதே மாண்டிசாரி பயிற்றுவித்தல் முறையாகும். இக்கல்வி முறையில் இயக்கக் கல்வி, புலன் கல்வி, மொழி கற்றல் ஆகிய மூன்றும் முக்கியப் பிரிவுகள் ஆகும்.

**'மேற்பார்வைப் படிப்பு'** என்பதை ஒரு கற்பிக்கும் முறை என்பதைவிட படிப்பில் நல்ல பழக்க வழக்கங்களை உண்டாக்க மேற்கொள்ளும் ஒருவழிமுறை என்றே கூறலாம். மாணவர்களுக்கு எப்படி ஒரு பகுதியைப் படிக்க வேண்டும் என்பது குறித்த சரியான முறைகளைக் காட்டலே மேற்பார்வைப் படிப்பின் முதன்மையான நோக்கமாகும். குழந்தைகளுக்கு எவ்வளவு செய்திகளைக் குறைவாகச் சொல்லக்கூடுமோ அவ்வளவுக்கு குறைவாகக் கூறவேண்டும். எவ்வளவுக்கு எவ்வளவு கண்டறியக் கூடுமோ அவ்வளவுக்கு அவ்வளவு செய்திகளைக் கண்டறியத்தூண்ட வேண்டும் என்று கல்வித்துறைச் சிந்தனையாளர் ஹெர்பர்ட் ஸ்பென்சர் கூறினார். அவர் கூறிய இக்கருத்துக்களே கண்டறி முறையில் கற்பித்தலாகும். குழந்தைகளிடம் அறிவியல் சிந்தனையைத் தூண்டி வளர்ப்பதே இக்கல்விமுறையின் முக்கியமான நோக்கமாகும். இம்முறையில் ஆசிரியர்கள் மாணவர்களுக்குப் பயிற்றுவிக்க வேண்டுமானால் அவர்கள் ஏராளமான நூல்களைப் படித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

## பயிற்றல் உத்திகள்

ந.சுப்புரெட்டியார் பயிற்றல் உத்திகளாக **வாய்மொழி வினாக்கள், விளக்கம் தருதல், துணைக்கருவிகள், வீட்டுவேலை தருதல்**[8] ஆகிய நான்கினையும் குறிப்பிடுகின்றார். உடலும் மனமும் ஒத்தியங்கிக் கற்க இவை துணை புரிகின்றன. மேற்சொன்ன நான்கும் மிகச்சிறந்த பயிற்றல் உத்திகளாகும்.

கற்பித்தலில் வாய்மொழி வினாக்கள் பல்வேறு விதங்களில் பயன்படுகின்றன. வினாக்களைத் தக்க முறைகளில் கையாளுவதில் இளம் ஆசிரியர்கள் நல்ல பயிற்சியைப் பெறுதல் வேண்டும். புகுமுக வினாக்கள், பாடவளர்ச்சி வினாக்கள், தொகுத்துரை வினாக்கள் முதலான வினாக்களில் நல்ல பயிற்சியுடைய ஆசிரியர்களால்தான் மாணவர்களுக்குத் தரமான கல்வியைக் கொடுக்க இயலும். மாணவர்கள் தரும் விடைகளையும், அறிவுத்திறனுடன் எழுதப்பட்ட விடைகளையும் ஆசிரியர் மனம் திறந்து பாராட்டுதல் வேண்டும். ஆசிரியர் பாடம் தொடர்பான செய்திகளைக் கோவையாக எடுத்துக் கூறி விளக்குதலே **'விளக்கம் தருதல்'** (Exposition) ஆகும். ஆசிரியர் மாணவர்களுக்குப் பாட நோக்கத்தை நன்கறியச் செய்ய

வேண்டும். பாடத்தை நேராகக் கற்பிக்க வேண்டும். சுற்றி வளைத்து மயக்கத்தை ஏற்படுத்தும் வண்ணம் கற்பித்தல் கூடாது.

வாய்மூலமாகக் கற்பித்தலில் விளக்கம் தருவதைவிட புலன்களுக்கும் கற்பனைக்கும் முறையீடு செய்து கற்பித்தலால் இன்னும் தெளிவு கிடைக்கும். இதற்காக வகுப்பறைகளில் பயன்படுத்தப்பெறும் கற்பிக்க உதவும் கருவிகளே துணைக்கருவிகள் (Teching Aids) ஆகும். இவை கற்பித்தலில் கவர்ச்சியை ஊட்டி கற்பதற்கு ஆவலைத் தூண்டுகின்றன. பார்க்க வேண்டிய பொருட்கள், பொம்மைகள், படங்கள், வரிவடிவங்கள், நாட்டுப்படங்கள், விளக்கப்படங்கள், வாய்மொழிச் சொற்கள் ஆகியன கற்பித்தலில் துணைக்கருவிகளாகப் பயன்படுத்தப் பெறுகின்றன. பள்ளியில் கற்றவற்றைத் திரும்பக் கூறுவதாலும், பன்முகப் பயிற்சியாலும் மாணவர்களின் மனத்தில் பதிவதற்கு வீட்டுவேலைகள் பெரிதும் பயன் அளிக்கின்றன. மொழிப்பாடத்தில் இப்பயிற்றல் உத்தியைச் சிறப்பாகப் பயன்படுத்தலாம். மொழிப்பாடத்தைப் பொறுத்தவரையில் கதை படித்தல், நாடகம் நடித்தல், கவிஞர்கள், அறிஞர்களின் படங்களைச் சேகரித்தல் ஆகியன வீட்டுவேலைகளாக அமையலாம்.

## மொழித்திறன்களை வளர்த்தல்

ஒலிகளைக் குறியீடுகளாகக் கொண்டு கருத்துக்களை உணர்த்துவதே மொழியாகும். மொழி உலகிற்கு ஒலிகளும் கருத்துக்களும் பொதுவானவை. மொழியே கருத்து வளர்ச்சிக்கு அடிப்படை மொழி கற்றலில் கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல் என்ற முறையே இயல்பானது. பேச்சுப்பழக்கம், நன்கு அமைந்த பிறகே படிக்கும் பழக்கத்தை தொடங்குதல் வேண்டும். அதன்பிறகு எழுத்துப் பயிற்சி தொடங்குதலே முறையாகும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## வாய்மொழிப் பயிற்சி

மொழி கற்பித்தலில் கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல் ஆகிய நான்கினுள் பேசுதலாகிய வாய்மொழியே மிகவும் முக்கியமானதாகும். மொழிப் பயிற்சியின் முதற்படியாக அமைவதும் வாய்மொழிப் பயிற்சியே. மொழிப்பாடத்தில் வாய்மொழிப் பயிற்சியின் முக்கியத்துவத்தைக் குறிப்பிட வந்த ந.சுப்புரெட்டியார், **“தொடக்கநிலைப் பள்ளி வகுப்புகளில் குழந்தைகளுக்கு விருப்பமான பொருள்களைப் பற்றி உரையாடுதல், செவிவழிப் பாட்டுக்கள், ஆட்டப் பாடல்கள், கதை சொல்லல், நடப்பு படங்கள் ஆகியனவற்றை இதற்குப் பயன்படுத்தலாம். நடுநிலைப்பள்ளி வகுப்புகளில் நாடகமுறையில் உரையாடல், அப்போதைய ஏற்பாடாக மேற்கொள்ளப்படும் நடிப்பு, சிறுசொற்பொழிவுகள், கதை சொல்லுதல், நடிப்பு, வருணனை செய்தல், கலந்து ஆய்தல் முதலியனவற்றில்**

**வாய்மொழிப் பயிற்சிக்கு வாய்ப்புக் கிடைக்கின்றது. உயர்நிலை மேல்நிலைப் பள்ளி வகுப்புகளில் சொற்போர், கலந்து ஆய்தல், சொற்பொழிவுகள் முதலியனவற்றால் நல்ல வாய்மொழிப் பயிற்சியினைப் பெற முடிகின்றது.”**[9] என்கின்றார்.

வீடுகளில் பாடப்பெறும் அம்மானை, தாலாட்டு, கும்மி, தெம்மாங்கு, கோலாட்டம் முதலிய பாடல்களை வகுப்புக்கேற்ற முறையில் தொகுக்கலாம் என்றும், தொடக்கநிலை வகுப்புகளில் தாலாட்டுப் பாடல்கள், விடுகதைப் பாடல்கள், நாட்டுப்பாடல்கள் ஆகியனவற்றைக்கொண்டு மொழிப் பயிற்சி தரலாம் என்றும் ந.சுப்புரெட்டியார் கருத்துக் கூறியுள்ளார். பிறர் சொன்ன கதைகளைக் குழந்தைகள் சொந்த நடையில் சொல்லும் வாய்ப்புக்களைப் பெறும் போது அவர்களுக்குச் சிறந்த வாய்மொழிப் பயிற்சி ஏற்படும். இளம் சிறுவர்களுக்கு மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் ஊட்டுவதே கதைசொல்லலின் நோக்கமாகும். இத்தகைய கதைகளைச் சொல்லுவதற்கு ஆசிரியரின் ஆயத்தமும் மிகவும் அவசியம். கதை சொல்லும் ஆசிரியர் உற்சாகம் மற்றும் முகமலர்ச்சியுடன் கதையைச் சொல்லுதல் வேண்டும். இயற்கைக் கதைகள், நகைச்சுவைக் கதைகள், மோகினிக் கதைகள், வரலாற்றுக் கதைகள், புராணக் கதைகள் ஆகியனவற்றை ஆசிரியர்கள் குழந்தைகளுக்கு நல்லறத்தையும் ஒழுக்கத்தையும் போதிப்பதற்காக வியப்பூட்டும் முறையில் சொல்ல வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். குழந்தைகளுக்கு நடிப்பையும் வாய்மொழிப் பயிற்சிக்குப் பயன்படுத்தலாம். குழந்தைகளுக்கு நடிப்பிற்கேற்ற சிறுபாடல்களையும் கதைகளையும் தேர்ந்தெடுத்து நடிக்கக் கற்பிக்க வேண்டும். இளம் சிறுவர்களுக்குப் வாய்மொழிப் பயிற்சி அளிக்கப் படங்களே பெரிதும் பயனுள்ளவை. படங்களை உற்றுநோக்குவதன் மூலம் கூர்ந்து நோக்கும் திறன், கற்பனை ஆற்றல், ஓவியக்கலையில் ஆர்வம், அழகுணர்வு ஆகியவை ஏற்படும். சிறுசொற்பொழிவுகள், கலந்து ஆய்தல், சொற்போர் நிகழ்த்தச் செய்தல் ஆகியனவற்றின் வாயிலாகச் சிறுவர்களுக்கும் மாணவர்களுக்கும் திருந்திய பேச்சுக்கு வழிகாட்டலாம்.

## படிப்பு

அடுத்த நிலையில் மாணவர்களைக் கருத்துணர்விற்காகவே படிக்க வைக்க வேண்டும். அகன்ற படிப்பின் பொழுதே எத்தனையோ அறிமுக மாணவர்கள் நண்பர்களாகவும், புதியவர்கள் அறிமுகமானவர்கள் ஆதலும் கூடும். திறன்களை வளர்க்கும் படிப்பு, பொழுதுபோக்குப் படிப்பு, பயன்கருதிய படிப்பு[10] ஆகியனவற்றில் மாணவர்களை ஈடுபடுத்துதல் வேண்டும். சிறுவர்களையும் இளைஞர்களையும் படிப்பில் ஊக்குவித்தல் படிப்பைத் தொடரும் முறைகள், படிப்பில் பயிற்சி தருதல், தனிப் பயிற்சி அட்டைகளைப் பயன்படுத்துதல், வாய்விட்டுப் படித்தல், வாய்க்குள் படித்தல், கருத்துணரும்

ஆற்றல் ஆகியனவற்றை மாணவர்களுக்கு ஆசிரியர்கள் கற்றுத் தருதல் வேண்டும்.

## மொழிப்பயிற்சிகள்

வாய்மொழிப் பயிற்சி, வாசிப்பு, எழுத்து ஆகியனவற்றில் தேர்ந்து வளர்ந்துவிட்ட மாணவர்களுக்கு சொற்கள், வாக்கியங்கள், வாக்கியப் பொருத்தம், சொந்த வாக்கியங்களில் அமைத்தல், மரபுத் தொடர்கள், உவமைகள், பழமொழிகளை ஆளுதல், பல்வகை வாக்கிய வடிவ மாற்றங்கள், சில சொற்களை மாற்றுதல், பலவகையான பிழை திருத்தங்களைக் கற்றுக் கொடுத்தல், நிறுத்தல் குறிகளை ஏற்ற இடங்களில் இடுவதற்குப் பயிற்சி அளித்தல், எழுத்து வேறுபாடும் பொருள் வேறுபாடும், இடம் விட்டு எழுதுதல் சேர்த்து எழுதுதல் ஆகியனவற்றில் பயிற்சி அளிக்க வேண்டும்.[11] எனக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார் எண்ணற்ற எடுத்துக்காட்டுகளையும் மொழிப்பயிற்சிகளையும் தந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இப்பகுதி மொழியைப் பயிலும் மாணவர்களை விட மொழியைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்களுக்கே, மிகவும் முக்கியமாக வேண்டப்படுவதாகும்.

## கட்டுரைப் பயிற்சி

மனத்தில் தோன்றும் கருத்துக்களைக் கோவையாக காரணகாரியத் தொடர்பில் செம்மையான மொழிநடையில் அமைப்பதே கட்டுரையாகும். மறைமலையடிகள் கட்டுரையைக் **‘கோப்புரை’** என்றார். ந.சுப்புரெட்டியார் **‘கட்டுரைப் பயிற்சி’** என்னும் பகுதியில் வாய்மொழிக் கட்டுரை, எழுத்துக்கட்டுரை, கட்டுரை எழுதுவதற்குப் பயிற்சி தருதல், கட்டுரை எழுதுவதற்கு மாணவர்கள் அறிய வேண்டிய குறிப்புகள், எழுத்துப் பயிற்சிகள், கதைக் கட்டுரை, படக்கட்டுரை, கடிதம் வரைதல், கடிதத்தலைப்பு, உரையாடல், கட்டுரை அமைப்பு, சிறந்த கட்டுரையின் கூறுகள், வரலாற்றுக் கட்டுரை, வருணனைக் கட்டுரை, விளக்கியற் கட்டுரை, சிந்தனைக் கட்டுரை, பாணிப்புக் கட்டுரை, தருக்கியற் கட்டுரை, ஆராய்ச்சிக் கட்டுரை, அங்கதக் கட்டுரை, புகழ்ச்சிக் கட்டுரை, நோட்டக் கட்டுரை முதலான கட்டுரைகளை எழுதுதல், சுருக்கி வரைதல், பெருக்கி வரைதல், பொழிப்புரை வரைதல், கருத்துணர் பயிற்சிகள், மொழிபெயர்ப்பு, எழுத்துப் பயிற்சிகளைத் திருத்துதல், திருத்துவது பற்றிய சில குறிப்புகள், பள்ளிகளில் எழுத்துவேலை பற்றிய குறிப்புகள், படைப்பாற்றலுக்கு வழிகோலுதல், பள்ளி இதழ்கள்[12] என்னும் பகுப்பு நிலைகளில் முப்பத்தேழு பக்கங்களில் விரிவாகக் கட்டுரைப் பயிற்சியை விளக்கியுள்ளார். ந.சுப்புரெட்டியார் இப்பகுதியில் விளக்கிக் கூறியுள்ள கட்டுரைப் பயிற்சி குறித்த கருத்தாக்கங்கள் தமிழாசிரியர்களின் மொழிச் செம்மைக்கு ஆக்கமும் தேர்ச்சியும் தெளிவும் அளிப்பன.

## இலக்கியம் - விளக்கங்கள்

ந.சுப்புரெட்டியார் **'இலக்கியம்'** என்பதற்குப் பல நுட்பமான வரையறைகளையும், தனித்தன்மை கொண்ட விளக்கங்களையும் தந்துள்ளார். அவர் கருத்துப்படி அறிவாற்றலில் சிறந்தவர்களே இலக்கியப் படைப்பாளியாக ஆகமுடியும். ந.சுப்புரெட்டியாரின் இக்கருத்துத் தற்கால படைப்புலகம், படைப்பாளிகள் குறித்த சிந்தனைக்கு எதிராக அமைந்திருப்பதைக் காணலாம்.

> **"ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றாம்புலவர்**
> **வார்த்தை பதினா யிரத்தொருவர்"**[13]

என்னும் ஔவையாரின் வெண்பா இதனைத் தெளிவுபடுத்தும். எழுதப்பட்ட அனைத்தும் இலக்கியங்கள் ஆகிவிடாது. மனிதனுடைய அறிவு வளர்ச்சிக்குப் பயன்படுபவையே இலக்கியங்கள் ஆகும். இதனால் தான் **'மாந்தர் மனக்கோட்டம் தீர்க்கும் நூல்'** என்றனர். இலக்கியத்திற்கு மட்டுமே மனிதனுடைய உள்ளுணர்ச்சியைத் தூண்டும் ஆற்றல் உண்டு. மனித வாழ்க்கைக்கு அரணாக இருந்து பாதுகாப்பதும் இலக்கியமே என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இலக்கியம் என்பதற்கு விளக்கம் தர வந்த அவர். **"எந்த நூலைப் படித்த பிறகு மீண்டும் மீண்டும் படிக்க வேண்டும் என்ற வேட்கை எழுகின்றதோ அதுதான் இலக்கியம். பன்முறை படித்தாலும் சிறந்த இலக்கியங்கள் படிக்குந்தோறும் புதுப்புதுச் சுவையைத் தோற்றுவிக்கும். அவை எத்தனை முறை படித்தாலும் சலிப்புத் தராதவை. அனுமனது ஆற்றலும் இலக்குவனது தொண்டும் பரதனுடைய சகோதர வாஞ்சையும் குகனது நட்பும் சீதையின் கற்பும் கும்பகர்ணனுடைய செய்ந்நன்றியறிதலும் நம் மனத்தை விட்டு என்றும் நீங்காதிருப்பவை. இத்தகைய உயர்ந்த பண்புகளைப் பெற்றிருப்பவை தாம் காலவெள்ளத்தில் அழியாது என்றும் நிலைத்து நிற்பவை. இவற்றைப் படிக்குந்தோறும் இன்பத்தைப் பெறலாம்."**[14] என இலக்கியம் என்பதற்கு விளக்கம் தந்துள்ளார். கம்பராமாயணம், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள் ஆகியனவற்றை அவர் சிறந்த இலக்கியமாகக் கருதுகின்றார். இப்பகுதியில் அவர் இலக்கிய வடிவங்கள், பாநடை – உரைநடை ஆகியனவற்றையும் ஆய்வுக் கோணத்தில் விளக்கியுள்ளார்.

## கவிதை கற்பித்தல்

கவிதையின் உயர்நிலைக் கருத்தை உணர்ந்து அவற்றை இயற்றிய கவிஞர்களின் கருத்துக்கள், உணர்ச்சிகள் முதலியனவற்றையும், அவர்கள் கண்ட இயற்கை எழில்கள், மக்கள் மனப்பான்மை, இதயப்பாங்கு ஆகியனவற்றையும் மாணவர்கள் அறியச் செய்தலே கவிதை கற்பித்தலின் சிறந்த நோக்கமாக இருக்க வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். கவிஞனது வரலாற்றைக் கூறியும், விளக்கமுறையிலும்

சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறும் வினாமுறையிலும் கவிதையை மாணவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டுமென வலியுறுத்திக் கூறுகின்றார். கவிதையை மாணவர்களுக்கு விளக்கும்போது கவிதையின் சொற்பொருள், பொழிப்புரை, கருத்துரை, இலக்கணக் குறிப்புக்கள், தொடை நயம், அணி நயம் ஆகியனவற்றை நன்கு எடுத்துக்கூறி விளக்க வேண்டும் என்கின்றார். இதற்கு அவர் பல எடுத்துக்காட்டுக் கவிதைகளையும் சுட்டிக்காட்டித் தெளிந்த விளக்கத்தைத் தந்துள்ளார். பாட்டுக்களை மாணவர்கள் நெட்டுருச் செய்தல் (மனப்பாடம் செய்தல்) அவசியம் என்கின்றார்.

## உரைநடை கற்பித்தல்

தமிழ்மொழியைப் பிழையின்றித் தெளிவாகவும் கோவையாகவும் பேசவும் படிக்கவும் எழுதவும் பழக வேண்டியது முக்கியமான நோக்கமாகும். அன்றாட வாழ்க்கை முதல் ஆராய்ச்சித்துறை வரையில் நடைமுறையில் பயன்படக்கூடியது உரைநடையே. ஆதலால் ஒருவர் ஒன்றை எழுதினால் அதனைப் படித்துப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற பரந்த நோக்கத்துடன் உரைநடையை எழுதுதல் வேண்டும். தெளிவான நடையே வேண்டற்பாலானது. அதையே அனைவரும் பின்பற்ற வேண்டும். வாழ்க்கை பன்முகப் பிரிவில் இயங்கும் இக்காலத்தில் உரைநடையே நடைமுறையில் அதிகம் தேவைப்படுகின்றது. ஆதலால் பள்ளிகளில் உரைநடைப் பாடத்தில் ஆசிரியர்கள் சிறப்புக்கவனம் செலுத்த வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## இலக்கணம் பயிற்றுவித்தல்

உடற்கூற்றியல் அறிவு மருத்துவத்துறை வல்லுநர்களுக்குப் பயன்படுவதைப்போல, இலக்கண அறிவு மொழியைக் கற்பிக்கும் ஆசியர்களுக்குப் பெருந்துணையாகும். உடற்கூற்றியல் அறிவு உடலைப் பற்றி விவரங்களை அறிந்து கொள்ளவும் உடலைப் பேணிப் பாதுகாத்துக் கொள்ளவும் பயன்படுகிறது. இலக்கண அறிவு மொழியின் அமைப்பை ஓரளவு அறிந்து கொள்ளவும், அதைத் திருத்தமாகப் பேசவும் எழுதவும் துணைசெய்கின்றது. மொழியியல் அறிவுக்கு இலக்கணமே இன்றியமையாத அடிப்படையாகும். பேச்சு வழக்கில் காணப்படும் மொழிமரபுகளைத் தெற்றென எடுத்துக் காட்டுவதற்கும் பேச்சிலும் எழுத்திலும் நேரிடும் பிழைகளை எளிதில் திருத்திக் கொள்வதற்கும் இலக்கண அறிவே துணையாக உள்ளது. ஆயினும் இலக்கணத்தை மாணவர்களும் ஆசியர்களும் கற்கும் நோக்கங்கள் வேறுபட்டது என்கின்றார் ந.சுப்புரெட்டியார். **“ஆசிரியர், மொழியினை நன்கு அறிந்துகொண்ட பிறகு இலக்கணத்தை அறிந்து கொள்வதற்கென்றே கற்கின்றனர். மாணாக்கள் மொழியைக் கற்கும் நிலையில் சொற்றொடர் அமைப்பு, சொல்லாட்சி முறை, வழக்கு இயல்புகள் முதலியனவற்றை அறிந்து கொண்டு மொழிகற்றலில் துணையாக இருப்பதற்கென்றே இலக்கணத்தைக் கற்கின்றனர். எனவே,**

**இலக்கணம் கற்பதில் ஆசிரியரின் நோக்கம் அறிவியல் போக்கை ஒட்டியது. மாணாக்கரின் நோக்கம் பயனை அடிப்படையாகக் கொண்டது. ஆசிரியருக்கு இலக்கண அறிவு, கற்பித்தல் துறையில் புதிதான கருத்தோற்றங்களைத் தரும். மாணாக்கர்கட்கு மொழியின் அமைப்பை நன்கு அறிந்துகொள்ள வாய்ப்புக்களை நல்கும்"[15].**

ந.சுப்புரெட்டியார் 'இலக்கணம்' என்னும் பகுதியில் வழக்கு மொழி (Spoken Language), வழக்கிறந்த மொழி (Dead Language), தமிழில் தோன்றியுள்ள இலக்கண நூல்கள், இலக்கணத்தின் இன்றியமையாமை, இலக்கணம் பயிற்றுவதன் நோக்கங்கள், இலக்கணம் பயிற்றுவதில் கருத்து வேற்றுமைகள், தொடக்க நிலைப்பள்ளிகளில் இலக்கணம், பள்ளிகளில் இலக்கணம் வெறுக்கப்படுவதற்குரிய காரணங்கள், இலக்கணத்தைத் தொடங்கும் பருவமும் பயிற்றும் பொருளும், பயிற்றும் முறைகள், சில இலக்கணப் பயிற்சிகள், நடுநிலைப்பள்ளி வகுப்புகளில் இலக்கணப்பாடம், அப்பள்ளிகளில் பயிற்றுவிக்கும் முறை, நோக்கங்கள், மேல்நிலை உயர்நிலைப் பள்ளி வகுப்புக்களில் இலக்கணப்பாடம், அப்பள்ளிகளில் பயிற்றுவிக்கும் முறை, அதன் நோக்கங்கள், விதிவருவித்தல் முறை, விதிவிளக்கமுறை, மொழி வளர்ச்சியில் இலக்கணத்தின் பங்களிப்பு, சொற்களைக் கடன் வாங்குதல், அதற்கான வாணிக, அரசியல், சமயக் காரணங்கள், தன்மதிப்பு, புதிய சொற்களும் சொற்றொடர்களும், தொடர்மொழிகளும் மரபுத்தொடர்களும், தொடர்மொழிகள், மரபுச்சொற்கள், தொடர்மொழிகளைக் கற்பித்தல், இலக்கணத்தை மொழிப்பாடத்தோடும் கட்டுரையோடும் பொருத்துதல் என்னும் நிலைகளில்[16] இலக்கணத்தைக் கற்றல் - கற்பித்தலில் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் உள்ள தொடர்புகளையும், மொழிப் பயன்பாட்டினையும் தக்க சான்றுகளுடன் விரிவாகவும், விளக்கமாகவும் எடுத்துரைத்துள்ளார்.

## ஆசிரியரின் செயல்திட்டங்கள்

பள்ளிகளில் தாய்மொழியைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் தாம் செய்யும் வேலைகளைக் குறித்து விரிவான திட்டங்களை வகுத்துக்கொள்ள வேண்டும். பள்ளி வாழ்க்கை முழுவதிலும் மாணவர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய மொழிப்பகுதி, இலக்கியப்பகுதி, இலக்கணம் ஆகியனபற்றி மொழியாசிரியர்கள் முன்னதாகவே சிந்தித்து அவற்றை ஒழுங்காக முறைப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். மொழித்திறன்களைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் கல்வி ஏற்பாட்டையும் மொழிப்பாடத்திட்டத்தையும் நன்கு அறிந்து அவற்றை நன்முறையில் செயல்படுத்த வேண்டும். அவற்றை ஆண்டின் பருவங்களுக்குரியவை, ஒவ்வொரு மாதத்திற்கும் உரியவை, ஒவ்வொரு வாரத்திலும் கற்பிக்க வேண்டியவை அன்றாடப் பணிகள் எனத் தெளிவான செயல்திட்டங்களை வகுத்துக் கொள்ள வேண்டும். பாடத்தைப்

பற்றிய குறிப்பு எழுதும். முறையை அவர்கள் நன்கு அறிந்திருந்தல் வேண்டும். அவர்கள் கற்பிக்கும் முறையை ஒட்டியே இக்குறிப்புகள் அமைந்திருத்தல் வேண்டும். மொழி ஆசிரியர்களுக்குப் பாடநூல்கள், பொதுப்பாட நூல்கள் (பொதுப்படிப்பிற்குரியவை), துணைப்பாட நூல்கள் ஆகியன மிகவும் இன்றியமையாதவை. விதிமுறைகளுக்கு உட்பட்டும் பாடநூல்களில் பாடங்களைச் சேர்த்தல் வேண்டும். பள்ளி நூலகங்களில் படிப்பிற்குரிய நூல்கள், தகவல் நூல்கள், அகராதிகள், கலைக்களஞ்சியம் போன்ற மேற்கோள் நூல்கள் இருத்தல் வேண்டும். இந்நூல்களின் துணைகொண்டே மொழியாசிரியர்கள் மாணவர்களிடம் பல்வேறு மொழித்திறன்களை வளர்த்தல் வேண்டும். கல்வித்துறையில் பணியாற்றும் ஆசிரியர்கள் தம் பணியில் பயன்களை அடிக்கடி சுயமதிப்பீடு செய்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு மொழியாசிரியர்களின் செயல்திட்டங்களை விளக்கும் ந.சுப்புரெட்டியார் இப்பகுதியில் திட்டமிடுதலின் இன்றியமையாமை, பலதுறைக் கல்வி ஏற்பாடுகள், மாணவர்கள் கற்க வேண்டிய மொழிகள். தமிழ்ப் பாடத்திட்டங்கள், தொடக்க நிலைப் பள்ளிகளின் தமிழ்ப்பாடத்திட்டம், நடுநிலைப் பள்ளிகளின் தமிழ்ப் பாடத்திட்டம், உயர்நிலைப் பள்ளிகளின் தமிழ்ப்பாடத்திட்டம், தமிழாசிரியர்கள் அமைத்துக் கொள்ள வேண்டிய வேலைத்திட்டங்களில் முக்கியமானதான பாடத்திட்ட ஆராய்ச்சி, ஆண்டின் பருவங்களுக்குரிய பாடப்பகுதிகள் பற்றிய ஆராய்ச்சி, பாடங்களை முறைப்படுத்துவது பற்றிய ஆராய்ச்சி, அன்றாட வேலைக்குரிய பாடக்குறிப்புகள் பற்றிய ஆராய்ச்சி, மாதிரிப் பாடக்குறிப்பு அமைப்பின் சட்டகம்[17] ஆகியன குறித்து விரிவான செயல்முறை விளக்கங்களுடன் தெளிவான கருத்துக்களைத் தொகுத்துத் தந்துள்ளார். இவை தமிழ் கற்பிக்கும் ஆசிரியர்களுக்கும், தமிழைக் கற்கும் மாணவர்களுக்கும் பெரிதும் பயன்பாடுடையவை.

### பள்ளிக்குரிய நூல்கள்

இன்று பள்ளிகளில் பயிற்றுவிக்கப்படும் தமிழ் நூல்களை ஆழ்ந்த படிப்புக்கு உரியவை. அகன்ற படிப்புக்கு உரியவை, மேற்கோளுக்கு உரியவை, மொழிப்பயிற்சிக்கு உரியவை என நான்கு வகையாகப் பிரிக்கலாம். மாணவர்களுக்கு வழங்கப்பெறும் பாடநூல்கள் ஆழ்ந்த படிப்புக்கு உரியவை. துணைப்பாட நூல்களும், நூலகப் படிப்புக்குரிய நூல்களும், நாடகம், சிறுகதை, புதினம் முதலான மறுமலர்ச்சி இலக்கிய வகைகளும் அகன்றபடிப்புக்கு உரியவை. அகராதிகள், கலைக்களஞ்சியம், தகவல் தரும் நூல்கள் ஆகியன மேற்கோளுக்குரியவை. இவற்றைத் தவிர மாணவர்களின் மொழிப்பயிற்சிக்குப் பயன்படும் வேறுசில நூல்களும் பள்ளிகளில் உள்ளன.

ந.சுப்புரெட்டியார் **'பள்ளிக்குரிய நூல்கள்'** என்னும் பகுதியில் பாடநூல்கள், பாடநூல்களின் புறத்தோற்றம், அகத்தோற்றம், பொருள் அமைப்பு, நூலாசிரியர்கள், கவிதைப்பாடப் பகுதிகள், உரைநடைப் பாடப்பகுதிகள், நடையும் பயிற்சிகளும், சமயம், ஒழுக்கம் முதலியன பற்றிய பகுதிகள், துணைப்பாட நூல்கள், நல்ல துணைப்பாட நூல்களின் பண்புகள், துணைப்பாட நூல்களைப் பயிற்றுவிக்கும் முறை, பொதுப்படிப்புக்குரிய நூல்கள், புதினங்கள், சிறுகதைகள், கட்டுரைகள் ஆகியனவற்றின் பயன்மதிப்புக்கள், நாடகங்கள், திறனாய்வு நூல்களின் கல்விப் பயன்பாடு, தகவல் நூல்கள், பயிற்சிக் குறிப்பேடுகள், நூலகமும் படிப்பகமும், நூலகம் - வகைகள் வகுப்பு நூலகத்தில் இருக்க வேண்டிய நூல்கள், நூல்களை வாங்குவதில் ஆசிரியரின் பொறுப்பு, மாணவர்களுக்குப் படிப்பில் ஆர்வத்தை ஊட்டும் முறை, நூலகப் படிப்பை மேற்கொள்ளும் முறை, படிப்பகம்[18] ஆகியன குறித்த செய்திகளை விரிவாகவும் கல்விப் பயன்பாட்டியல் நோக்கிலும் விளக்கிக் கூறியுள்ளார்.

## கல்வித்துறைச் சோதனைகள்

குழந்தைகள் பள்ளிகளிலும் பள்ளிகளுக்கு வெளியிலும் கற்றனவற்றை அளந்தறியப் பயன்படுத்தும் சோதனைகளே கல்வித்துறைச் சோதனைகளாகும். ஆசிரியர்கள் கற்பித்தலால் குழந்தைகள் அறிந்து கொண்டனவற்றையும், வகுப்பறை மற்றும் பள்ளி அனுபவங்களால் அறிந்து கொண்டனவற்றையும் பள்ளிக்கு வெளியில் பெறும் அனுபவங்களில் அறிந்து கொண்டனவற்றையும் தனித்தனியாகப் பிரித்து அறிவதும், ஒவ்வொரு வகையிலும் அறிந்து கொண்டது எவ்வளவு என்பதைக் கணக்கிட்டு அறிவதும் இயலாத செயலே. ஆதலால் எல்லாத்துறைகளிலும் குழந்தைகள் கற்றனவற்றை ஒட்டுமொத்தமாகத்தான் அறிந்து கொள்ள இயலும். ந.சுப்புரெட்டியார் கல்வித்துறையில் சாதாரணமாக நடைமுறையிலுள்ள வாய்மொழிச் சோதனைகள், கட்டுரைச் சோதனைகள், புறவயத்தேர்வுகள் (Objective Tests) ஆகிய மூன்றினை மட்டும் இப்பகுதியில் விளக்கியுள்ளார்.

தரப்படுத்திய சோதனைகளைப் பற்றி ந.சுப்புரெட்டியார் விரிவாக விளக்கியுள்ளார். தரப்படுத்திய சோதனைகள் என்பவை அடிப்படையில் தேடவேண்டிய பொருள் சார்ந்தே இருக்கும். இவற்றிற்குப் பொதுநிலை அளவைகள் அறுதியிடப் பெற்றுள்ளன. இவை போதுமான அளவு ஏராளமான பேர்களுக்குக் கொடுக்கப்பெற்று அவர்கள் பெறும் மதிப்பெண்களைக் கொண்டு அறுதியிடப் பெற்றுள்ளன. இதனை ஒத்த வயது அல்லது அதே அறிவுடையவர்களிடம் பயன்படுத்தலாம். இதனை ந.சுப்புரெட்டியார், **"அறிதிறன் சோதனைகள், நாட்டச் சோதனைகள், அக்கறையறி சோதனைகள், முன்னறி சோதனைகள், அடைவுச் சோதனைகள், குறையறி**

**சோதனைகள்”**[19] என்னும் பகுப்பு நிலைகளில் விரிவாக ஆராய்ந்து விளக்கியுள்ளார். தரப்படுத்திய சோதனைகளின் இயக்கம் செல்வாக்குப் பெற்றவுடன் அதே முறையில் பள்ளி ஆசிரியர்களால் ஆயத்தம் செய்யப்பெறும் புதுமுறைச் சோதனைகளும் செல்வாக்குப் பெறத் தொடங்கின. புதுமுறைச் சோதனைகளில் கிட்டத்தட்ட முப்பத்தைந்துக்கு மேற்பட்ட சோதனைகள் உள்ளன. எந்தச் சோதனையாயினும் அவற்றைக் கையாளுவதற்கு முன்னர் அச்சோதனைகளின் நற்பண்புகளைக் கண்டறிதல் வேண்டும். ஏற்புடைமை, நம்பகத்தன்மை, இயலுமை (செயல்படுத்தும் திறன்), புறவயத் தன்மை, கையாளுவதில் எளிமை, திருத்துவது, ஒப்பிடத்தகும் பண்பு, பயன்பாடு ஆகியன கல்வித்துறையில் பயன்படுத்தப்படும் நல்ல சோதனைகளின் பண்புகள் என்பது ந.சுப்புரெட்டியாரின் கருத்தாகும்.

## தாய்மொழி ஆசிரியர்கள்

உயர்நிலைப்பள்ளி மற்றும் மேல்நிலைப்பள்ளி வாழ்க்கையில் ஆசிரியர்களே மிகவும் செல்வாக்குள்ள கூறுகளாக விளங்குகின்றனர். நல்லாசிரியரின் இயல்புகளை நன்னூல்,

> **“குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை**
> **கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
> **நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**
> **உலகியல் அறிவோடு உயர்குணம் இணையவும்**
> **அமைபவன் நூலுரை யாசிரியன்னே”**[20]

எனக்குறிப்பிடுகின்றது. நன்னூலார் நல்லாசிரியரை நிலம், மலை, துலாக்கோல், மலர் ஆகியனவற்றுடன் ஒப்பிட்டு அதன் காரணத்தையும் விளக்கியுள்ளார். கற்பிக்கும் முறைகளைக் கூறும் மேனாட்டு நூல்களும் நல்லாசிரியர்களின் நல்லியல்புகளை இவ்வாறே விளக்கி கூறுகின்றன.[21] இக்கருத்துக்களை மொழியாசிரியர்கள் சிந்தித்து உணர வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இத்துடன் அவர் மொழியாசிரியர்களின் பணிசிறப்பதற்கு அவர்தம் கல்வியறிவு, பயிற்சியறிவு, மொழியறிவு, அவர்களிடம் அமைய வேண்டிய திறன்கள் அவர்கள் ஆயத்தம் செய்ய வேண்டிய முறைகள் ஆகியனவற்றைக் கூறி ந.சுப்புரெட்டியார் **‘தமிழ் பயிற்றும் முறை’** என்ற நூலை நிறைவு செய்துள்ளார்.

## கவிதை பயிற்றும் முறை

ந.சுப்புரெட்டியார் கல்வி ஏற்பாடு மற்றும் பாடத்திட்டத்தில் குறிக்கோள் நிலை வேண்டும் என்கின்றார். அவர் கவிதை கற்பித்தலில் சிறந்ததொரு குறிக்கோள் நிலையை வகுத்துக் கொள்ள வேண்டியது தாய்மொழியாசிரியர்களின் தலையாய கடமை என்கின்றார். கவிதையைப் பயிற்றுவித்தலே தாய்மொழிப் பாடத்தில் **உயர்நிலைப்** பகுதி இதில் ஆசிரியர்கள் தாம் வகுத்துக்கொண்ட குறிக்கோள் நிலையை அடைய வேண்டும்

என்று முயல்வதே தமிழ்க் கவிதைகளைத் தக்க முறையில் பயிற்றுவித்தலாகும். வாழ்க்கையைப் பற்றிய திறனாய்வே கவிதையாதலின், அது வாழ்க்கை உண்மைகளையும் வெளிப்படுத்துகின்றது. இத்தகைய கவிதையைப் பயிற்றுவிக்கும் முறையை ந.சுப்புரெட்டியார், **“தாய்மொழியாசிரியரின் வேலையைச் சோதிக்க வேண்டுமாயின் கவிதை கற்பித்தலில் அவருடைய வேலையைச் சோதிப்பதே சாலச்சிறந்தது. தாய்மொழி பயிற்றலில் இப்பகுதியே மிக உயர்ந்தது. அவருடைய பெரும்பான்மையான காலத்தையும் ஆற்றலையும் இப்பகுதியே விழுங்குகின்றது. கவிதை கற்பிப்பதில் வெற்றிபெறும் தாய்மொழியாசிரியர் தம்முடைய துறையின் ஏனைய பகுதிகளிலும் வெற்றியடைவார் என்பது ஒருதலை. ஆனால் ஒன்று ஏனைய பகுதியில் வெற்றியுடன் பணியாற்றிக் கவிதையைப் பயிற்றுவிப்பதில் வெற்றியடையாது போகவும் கூடும், கவிதை பயிற்றுவித்தல் கடினமானதுறை. தம்முடைய உணர்ச்சிகளையும் ஆற்றல்களையும் ஒருங்கு திரட்டிக் கொட்ட வேண்டிய துறை...... கவிதை ஒரு கலை. கல்வி நிலையங்களில் மாணாக்கர்களிடம் முருகுணர்ச்சியை வளர்ப்பதற்காகவும், தாம் காண்பனவற்றில் அழகைக் கண்டு இன்புறும் பயிற்சி பெறுவதற்காகவும் கவிதைப் பகுதி பாடத்திட்டத்தில் சேர்க்கப்படுகின்றது”**[22] என்கின்றார். சீரிய சிந்தனைகளையும் மனத்தூய்மையையும் உட்பொருளாகக் கொண்ட கவிதைகளே பாடத்திட்டத்தில் சோக்கப்பட வேண்டும் என்பதே ரெட்டியாரின் கருத்து.

## கவிதையைக் கற்பிப்பவர் தகுதி

கவிதைகளைத் தேர்வுகள் எழுதி உணர முடியாது. கவிதைகள் அனைத்தும் அவற்றைப் படைத்த கவிஞனின் உணர்ச்சிப் பெருக்கை காட்டுபவை. ஆதலால் கற்பிக்கும் ஆசிரியர்கள் தாம் கற்பிக்கும் கவிதைகளை உணர்ந்து பயின்றிருத்தல் வேண்டும்: பயின்று கொண்டே இருக்கவும் வேண்டும். அப்போதுதான் கவிதையைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் புதிய உணர்ச்சிப் பெருக்கைப் பெற முடியும். கவிஞன் பாத்திரங்களின் மீது ஏற்றிக்கூறும் உணர்ச்சிகளையும், கவிக்கூற்றாக வெளிப்படுத்தும் உணர்ச்சிகளையும் தம் மாணவர்களிடமும் எழச் செய்துவிட்டால் கவிதையைக் கற்பிக்கும் ஆசிரியன் வெற்றி பெற்றவன் ஆகின்றான். இதற்கு முதலில் ஆசிரியர் உணர்ச்சி வயப்பட வேண்டும். பின்னர் அந்த உணர்ச்சியைத் தம் மாணவர்களிடம் தோன்றச் செய்தல் வேண்டும். கவிதைப்பாடம் உணர்ச்சிக்குரிய பாடமாகும். அதை ஆசிரியர்கள் அறிவுக்குரிய பாடமாகக் கற்பிக்கக் கூடாது. கவிதையைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் வரலாற்று விவரங்கள், புவியியல் குறிப்புகள், சொல்லிலக்கணக் குறிப்புகள், அணிவகைகள் ஆகியனவற்றில் மிகுந்த கவனம் செலுத்திக் கற்பிக்கின்றனர். இம்முறையில் கற்கும் மாணவர்கள் கவிதையைத் தவிர ஏனைய அனைத்தையும் பெறுகின்றனர்.

இதனை விளக்கும் ந.சுப்புரெட்டியார், **“கவிதை அவர்களிடம் இல்லை. கவிதை உள்ளமும் இல்லை. அதனால் தான் அவர்கள் கவிதையை உயிரியல் ஆய்வுப் பொருளை ஆய்வகத்தில் சிதைத்துக் கூறுபடுத்தி ஆராய்வதுபோல் கவிதை ஆராய்ச்சி நடத்துகின்றனர்.... அவற்றை மாணவர்களுக்குக் கற்பிக்கும் இடம் வேறு. சந்தர்ப்பம் (சூழ்நிலை) வேறு. கவிதைச் சுவையில் மாணாக்கர்களை ஈடுபடுத்தும்போது அவை கூடா”**[23] என்கின்றார். ஆசிரியர்களுக்குக் கவிதை படித்தலில் நிறுத்தமே கூடாது. வாழ்க்கையில் துலக்கமும் மாற்றமும் காணப்பெறுவது இயல்பே. ஆனால் படித்தலில் ஓய்வு பெறுவது என்பது மரணத்தின் தொடக்கமாகும். அழிவின் அறிகுறியாகும்.

## ஆசிரியத்துறையின் சிறப்பு

அனைத்துத் துறைகளையும் விட ஆசிரியத்துறையே சிறந்தது என்கின்றார் ந.சுப்புரெட்டியார். எல்லா நிலையிலும் இத்துறை மாணவர்களின் அஞ்ஞான இருளை அகற்றும் பணியைச் செய்து வருகின்றது. கல்வியின் முக்கிய நோக்கங்களுள் ஒன்று நற்பண்பினை (சால்பு – Character) வளர்ப்பதாகும். இப்பொறுப்பு ஆசிரியருக்கே உரியது. ஆசிரியர்கள், மாணவர்களின் வீரவழிபாட்டிற்கு உரியவர்கள் ஆவர். தம்முடைய ஆற்றலையெல்லாம் திரட்டி ஒரு பாடத்தை நடத்தி முடித்த பின்னர் ஆசிரியர் அடையும் பெருமிதத்திற்கு ஈடுஇணை ஏதுமில்லை. ஆசிரியப் பணியின் பொறுப்பினை, **“ஆசிரியர் பணி என்பது நாம் சிறப்பாகப் பெறும் உரிமை, அது கீதை ஆசிரியரின் பணியைப் போன்றது. இப்பணியுடன் ஒரு பெரிய பொறுப்பும் இணைந்தே வருகின்றது. நாம் என்றும் அப்பணிக்குப் நம்மைப் பொருத்தப்பட அமைத்துக் கொள்வதே அது. எப்பொழுதும் கவிதையனுபவத்துடன் வாழ்வது என்பது எளிதான செயல் அன்று. பிறவியிலேயே ஆசிரியர் கூறு சிறிதளவாவது அமையப் பெற்றவர்களுக்கே இது இயலும்”**[24] எனக்குறிப்பிடுகின்றார் ந.சுப்புரெட்டியார். இத்தகைய சிறப்புமிக்க ஆசிரியப்பணியில் பொறுப்பறிந்து பணியாற்றுவது ஆசிரியரின் தலையாய கடமையாகும். இதில் நற்பணியாற்றுவதற்கு மாணவர்களின் அறிவுத் திறனுக்கேற்ற கவிதைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

## கவிதையைத் தேர்ந்தெடுத்தல்

ஆசிரியர் பாடம் கற்பிப்பதற்கெனத் தேர்ந்தெடுக்கும் கவிதை வகுப்பிற்கு ஏற்றதாக இருக்க வேண்டும். அத்துடன் ஆசிரியர் நன்கு அறிந்த கவிதையாக இருந்தால் அவர் கற்பிக்கும் பாடம் சிறப்படையும்; வகுப்பில் வெற்றியையும் பெறலாம். இதில் அல்லல்படும் இளம் ஆசிரியர்களுக்கு ந.சுப்புரெட்டியார், **“நாம் ஒரு கவிதையைக் கற்பிக்க வேண்டுமாயின் நாம் வேண்டுவது கவிதையேயன்றி நம்முடைய வினா விடுக்கும் திறன் அன்று. நம்முடைய கவிதைப் பாடத்தின்**

**வெற்றியை அப்பாடத்தில் மாணாக்கர் பெறும் களிப்பை அளவாகக் கொண்டு மதிப்பிட வேண்டுமேயன்றி நம்முடைய வினா விடுக்கும் ஆற்றலைக் கொண்டு அளத்தல் கூடாது. கவிதைப் பாடத்தில் வினா விடுக்கும் முறை மாணாக்கரின் மகிழ்ச்சிக்குத் துணை செய்தாலன்றி, வேறு நோக்கத்திற்கென அதனை மேற்கொள்வது சரியன்று. அதற்கு இங்கு இடமும் இல்லை. கவிதைகள் அறிதிறன் ஆய்வுகளுமன்று** (Intelligence Test)"[25] என அறிவுறுத்துகின்றார். கவிதையைப் பயிற்றுவிக்க கவிதை போதும் என்பதே அவர் கருத்தாக உள்ளது. கவிதை கற்பிப்போர் தேர்விற்காகவே கற்பிக்கும் சடங்கினைச் செய்கின்றனர். ஆயினும் கவிதை கற்பிப்பதன் நோக்கம் முருகுணர்ச்சியை வளர்ப்பதும், அழகினைக் கண்டு இன்புறுவதுமே என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## கவிதை அறிமுகம்

**'அறிமுகம்'** செய்து வைப்பதே ஒரு கலையாகும். படித்தவர்களும் பட்டம் பெற்றவர்களும் கூட நாகரிகமாகப் பிறரை அறிமுகம் செய்து வைக்க முடியாமல் திணறுகின்றனர். ஆயினும் இலக்கிய உலகில் அறிமுகம் செய்து வைப்பதே ஓர் அரிய கலையாகும். கம்பனின் காப்பியத்தில் பரதன் குகனுக்குத் தன் தாயாரை அறிமுகம் செய்து வைத்தல் அற்புதமாகப் படைக்கப் பெற்றுள்ளது. நாகரிக உலகை அறியாத கங்கை வேடனுக்குப் பரதன் கோசலை, சுமித்திரை, கைகேயி ஆகியோரை அறிமுகம் செய்வதாகக் கம்பன் படைத்துள்ள சொல்லோவியங்களை ஒவ்வொருவரும் படித்து இன்புற வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். அந்த முறையில் **'சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்'** என்னும் நெறிமுறையில் கவிதைகளை ஆசிரியர்கள் மாணவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தால் மாணவர்கள் தம் பாடப்பகுதியிலுள்ள கவிதைகளை நன்கு சுவைப்பர் என்பது அவரது கருத்து. கவிதையைக் கற்பிப்பதற்கு ந.சுப்புரெட்டியார் கவிஞர் வரலாறு கூறும் முறை, **விளக்கமுறை**, சூழ்நிலை காட்டும் முறை, தொகுத்தறி முறை[26] என்னும் நான்கு முறைகளை அவர் தக்க கவிதைகளைச் சான்றுகாட்டி, மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் எளிமையாகவும் தெளிவாகவும் புரியுமாறு கூறியுள்ளார்.

சிலர் கவிதைகளை இயற்றிய கவிஞர்களின் வரலாற்றைக் கூறிப்பாடத்தைக் கற்பிக்கத் தொடங்குகின்றனர். பாடப்பகுதியாக அமைந்த கவிதைகளைப் படைப்பதற்குக் கவிஞனுக்கு ஏற்பட்ட சூழ்நிலையைக் கூறி கவிதையைக் கற்பித்தல் இம்முறையின் நோக்கமாகும். ஆயினும் கவிஞனின் வரலாற்றைக் கூறுவது கவிதையைக் கற்பித்தல் ஆகாது. கவிதைகளின் திரண்ட கருத்தை முன்னதாகவே மாணவர்களுக்கு கூறிப் பின்னர் கவிதையைப் பயிற்றுவிக்கத் தொடங்கும் முறையே விளக்கமுறையாகும். சங்கப் பாடல்கள், சிலேடைச் செய்யுட்கள்,

பிள்ளைத் தமிழ்ப் பாட்டுக்கள் போன்றவற்றை இம்முறையில் அறிமுகப்படுத்தியே பயிற்றுவித்தல் வேண்டும்.

கவிஞன் எந்தச் சூழ்நிலையில் கவிதையை இயற்றினானோ அந்தச் சூழ்நிலையை மாணவர்களுக்குச் சுட்டிக்காட்டிக் கவிதையின் உயிர்நாடியை அவர்கள் உணருமாறு கற்பிப்பதே **சூழ்நிலை காட்டும் முறையாகும்**. இம்முறையின் நோக்கம் மிகச் சிறந்தது. நல்லாசிரியர்களில் பெரும்பாலோர் இம்முறையை பின்பற்றுகின்றனர். ஆசிரியர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்ற வினாக்களைக் கொண்டு மாணவர்களிடமிருந்து கவிதையை வருவிப்பதே **தொகுத்தறி முறையாகும்**.

கவிதையைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் முருகுணர்ச்சியை மாணவர்களிடம் வளர்க்க, மாணவர்களாகவே கவிதைகளிலுள்ள நயத்தைக் காணும் ஆற்றலை அவர்களிடம் வளர்த்தெடுக்க வேண்டும். உள்ளங்கவர் கவிதைகளை மாணவர்களின் உள்ளம் கவருமாறு கற்பிப்பதே ஆசிரியர்களின் தலையாய கடமையாகும். கவிதையை உணரச் செய்வதே ஆசிரியரின் நோக்கம் அறியச் செய்வது அன்று.

## கவிதையைப் படித்தல்

**'பாட்டு'** என்பது **'பாடி'** இன்புற வேண்டிய கலையாகும். பாட்டை அனுபவிப்பதற்குச் செவிப்புலன் வேண்டும். பாட்டின் ஒலி நயமே படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் உள்ளத்தை கொள்ளைகொள்ளும் பொருளாகும். கவிதையைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் இந்த உண்மையை உணர்ந்து ஓசை நயத்துடன் கவிதையை வகுப்பில் படிக்க வேண்டும். வாய்விட்டுப் படித்தலே கவிதையைப் படிக்கும் சிறந்த முறை என்றும், செவியின் நுண்ணுணர்வால் கேட்டு இன்புறத்தக்கதே கவிதை என்றும், ஒலிநயத்தின் சிறப்பே கவிதையின் சிறப்பு என்றும் ந.சுப்புரெட்டியார் வலியுறுத்திக் கூறுகின்றார்.

## கவிதை விளக்கம்

கவிதைக்கென்று திட்டவட்டமான விளக்கம் கூறமுடியாது. ந.சுப்புரெட்டியாரைப் பொறுத்தவரையில் கவிதைக்குத் தக்க விளக்கமுறையொன்றும் இல்லை. அவர் கருத்துப்படி **''கவிதை கற்பித்தலும் கவிதைக்கு விளக்கம் கூறுதலும் காதல் புரிதலை ஒத்தது''**[27] ஆயினும் அவர் கவிதையை அதற்கேற்ற இசையுடன் சொற்களைப் பிரிக்காமல் சீர் பிரித்துப் படித்துக் காட்ட வேண்டும். பாட்டின் பொதுக்கருத்தை மாணவர்கள் உணரும் வரை பலமுறை படித்துக் காட்ட வேண்டும். மாணவர்கள் கவிதையின் கருத்தை உய்த்து உணர்வதுடன் கவிதை இன்பத்தையும் சொல் நயம் பொருள் நயம் ஆகியனவற்றையும் துய்க்க வேண்டும். பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் எக்காரணத்தைக்

கொண்டும் கவிதையைப் பற்றிய தமது கருத்தை மாணவர்கள் மனத்தில் வலிந்து திணிக்கக் கூடாது என்கின்றார்.

கவிதைகளை ஒரு முழுப்பொருளாகவே கருதுதல் வேண்டும். கவிதைகளைப் பகுதிகளாகப் பிரித்துப் பார்க்கக் கூடாது. கவிதைகளைப் படித்து அவற்றின் உயர்நிலைக் கருத்துக்களையும் உணர்ச்சிக் கூறுகளையும் முருகியல் சார்ந்த அழகியல் வெளிப்பாடுகளையும் அறிதல் வேண்டும்.பின்னர் விளங்காத அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறலாம். மாணவர்களைக் கவிதைகளின் முருகுணர்ச்சியில் திளைக்க வைத்தலே கவிதையைக் கற்பிக்கும் ஆசிரியர்களின் முதன்மையான நோக்கமாக இருத்தல் வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். அவர், **“பாடிய கவிஞன் உணர்ந்த அனுபவத்தைக் கற்பனைத்திறன் கொண்டு மாணாக்கர்கள் உணர்வதே கவிதையைக் கற்பிப்போரின் முதன்மையான நோக்கமாக இருத்தல் வேண்டும் *பாநலம் வியத்தல் திறனே* மாணாக்கரிடம் நிலையாக அமையவேண்டியது என்பதே ஆசிரியர்கள் என்றும் நினைவில் இருத்துதல் வேண்டும். இம்முறைதான் மாணாக்கர்கட்கு உவட்டாமல் இனிக்கும் கவிதையை வாய்விட்டுப் படித்தால் தான் கவிதையனுபவம் ஏற்படும்”**[28] என வலியுறுத்திக் கூறுவதும் சிந்தனைக்குரியதாகும்.

**கவிதையும் வாழ்க்கையும்**

கவிதைகளில் முருகுணர்ச்சி உள்ளது. ஆயினும் கவிதைகளில் வாழ்க்கை உண்மைகளும் பொதிந்து காணப்படுகின்றன. கவிதை அழகையும் இன்பத்தையும் தரவல்லது. இதைவிடச் சிறப்பு அது வாழ்க்கையின் உண்மைகளை வெளிப்படுத்துவதே ஆகும். **“கவிதை வாழ்விலிருந்து மலர்ந்தது. வாழ்விற்கே உரியது. வாழ்விற்காகவே நிலைபெற்றுள்ளது. [Poetry is made out of life; Belongs to life; exists for life]”**[29] என்று டபிள்யூ.எச்.ஹட்சன் என்ற திறனாய்வாளர் கூறியுள்ளார். வாழ்க்கை எப்படியிருக்க வேண்டுமெனக் கூறுவதே கவிதையாகும். கவிதைப் படைப்புகள் மெய்ம்மையானவை அல்ல; ஆயினும் உயர்ந்த உண்மைத் தத்துவங்களைக் கொண்டவை. வாழ்க்கை என்பது நிலை பேறுடையது. இந்த உலகம் உள்ளவரையில் மனித இனம் தொடர்ந்து வாழ்ந்து கொண்டே இருக்கும். வாழ்க்கையில் இன்பங்களும் இன்னல்களும் நிறைந்திருக்கின்றன. புற்றுநோய்போல ஆன்மாவைக் கொல்லும் பாவங்களும் உண்டு. துணிச்சலும் தன்னம்பிக்கையும் உண்டு. ஆயினும் என்றுமே வாழ்க்கை நமக்கு மனநிறைவைத் தருவதில்லை. இத்தகைய வாழ்க்கை உண்மைகளை வெளிப்படுத்துவதே கவிதைப் படைப்புகள் ஆகும். ஆதலால் கவிதைகளைக் கற்பிக்கும் தமிழாசிரியர்கள் கவிதைகளிலுள்ள முருகியல் உணர்வுகளை எடுத்துக்காட்டி, அதன் வாயிலாகக் கவிதைகள் வெளிப்படுத்தும்

வாழ்வியல் உண்மைகளை உணரச் செய்ய வேண்டும் என்பதே ந.சுப்புரெட்டியாரின் உறுதியான எண்ணம்.

## கவிதைகளை மனப்பாடம் செய்தல்

மனப்பாடம் செய்தலை ந.சுப்புரெட்டியார் **'நெட்டுருச் செய்தல்'** என்கின்றார். அவர் கவிதை பயிற்றலில் மனப்பாடம் செய்தல் ஒரு கூறு என்கின்றார். **'காரிகை கற்றுக் கவிபாடுதலிலும் பேரிகை கொட்டிப் பிழைப்பது மேல்'** என்பர். பல புதிய சொற்களையும் சொல் தொடர்களையும் அருங்கருத்துக்களையும் அறிந்துகொள்ளவும், அவற்றை மனத்தில் நிலைநிறுத்திக் கொள்ளவும் கவிதைகளை மனப்பாடம் செய்தல் உதவுகின்றது. கவிதைகளின் சந்தப்பொலிவும் ஓசைநயமும் உள்ளத்தில் பதிந்து மனக்காதில் ஒலித்துக் கொண்டிருப்பதால் அத்தகைய கவிதைகளை மேலும் கற்க ஆர்வம் தோன்றும். மனப்பாடம் செய்தல் புதிய கவிதைகளைப் படைப்போர்க்குப் பெருந்துணையாக அமையும். கட்டளைக் கலித்துறை, வெண்பா, கலிப்பா முதலான கவிதைகளை மனப்பாடம் செய்வதும், இசையோடு படித்தும் பழகிய ஒருவர்க்கு அவற்றை இயற்றுதல் எளிது. ந.சுப்புரெட்டியார் மனப்பாடம் செய்தலின் உளவியல் உண்மையை, **"மனப்பாடம் செய்வதில் நினைவுச் செயல் பங்கு கொள்கின்றது. கற்றலின் பயன் நிலைக்க வேண்டுமாயின் கற்றது நினைவிற்கு வரவேண்டும். முன்னர் நடந்தேறிய நிகழ்ச்சிகள் பற்றிய அனுபவத்தைப் பின்னர் வேண்டுமிடத்து அறிவதே நினைவு என்பது. நினைவின்றேல் கற்றலால் யாதொரு பயனும் இல்லை. கற்றலைத் தூண்டலின் துலங்கல் என்பர் உளவியலார். துலங்கல்கள் மூளையில் சுவடுகளை விடுகின்றன. இவையே நினைவின் அடிப்படை. நம் அனுபவம் ஒன்றும் மனத்தில் சுவடுகளை விடாமல் மறைவதில்லை. இதனால்தான் ஒருமுறை நிகழ்ந்ததைப் பல நாட்கள் கழித்தும் நினைவிற் கொண்டு வரமுடிகின்றது. நினைவுச் செயலில் கற்றல் அல்லது மனனம் செய்தல், இருத்தல், நினைவு கூர்தல், மீட்டறிதல் என்ற நான்கு பிரிவுகள் உள்ளன. இவற்றை நன்கு அறிந்தால்தான் நினைவுச்செயலை அறிந்தவர்களாவோம்"**[30] எனக் குறிப்பிடுகின்றார்.

ஒரு கவிதையை மனப்பாடம் செய்வதற்கு முதலில் மாணவர்களிடம் கற்றலில் ஆர்வம் வேண்டும். கவிதைகளில் பொருள் விளக்கம் தெளிவாக இருந்தால் அவற்றை எளிதாக மனப்பாடம் செய்து விடலாம். கவிதைகளைக் கால இடையீடு விட்டுப் படித்தால் எளிதில் மனப்பாடம் ஆகிவிடும். மனப்பாடம் செய்தலை இளமையிலிருந்தே தக்க முறையில் வளர்த்தால் சிறுவர்களிடம் மொழிவளம் பெருகும். இலக்கியத்தில் ஆர்வம் தோன்றும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## நான்கு யோசனைகள்

கவிதையைப் படித்துத் துய்க்க விரும்புபவர்கட்கும், மாணவர்களுக்கும், கவிதைகளைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்களுக்கும் ந.சுப்புரெட்டியார் **செய்யுளிலக்கணம், கவிஞர்களின் வரலாறு, திறனாய்தல், தொகை நூல்கள் பற்றிய அறிவு**[31] என்னும் நான்கினையும் தேவையென வலியுறுத்துகின்றார். செய்யுளின் அமைப்பை விளக்கும் யாப்பிலக்கணத்தை (செய்யுளிலக்கணம்) நன்கு தெரிந்திருந்தால் தான் கவிதையை நன்கு சுவைத்து அனுபவிக்க முடியும். கீழ்வகுப்பு மாணவர்களும் கவிதையைத் துய்ப்பதில் தொடக்க நிலையில் உள்ளவர்களும், கவிதையின் ஒவ்வொரு வழியின் ஒலிப்பையும் நன்கு அறிந்திருந்தல் வேண்டும். ந.சுப்புரெட்டியார் கவிதையைப் பயில்வோர்க்குக் கவிஞர்களின் வரலாற்றை அறிந்துகொள்ளத் தேவையில்லை என்கின்றார். சில மேனாட்டு திறனாய்வாளர்களும் இக்கருத்தினையே கொண்டுள்ளனர். சில கவிதைகளைப் புரிந்துகொள்வதற்குச் சில நிகழ்ச்சிகளைக் கட்டாயம் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும் என்ற நிலையிருப்பின் அவற்றை மட்டும் தெரிந்து கொண்டால் போதுமானது. பள்ளி மாணவர்களுக்கென்று கவிதை நூல்களைத் தொகுப்போர் என்றும் இதை நினைவில் கொள்ள வேண்டும். தாம் தொகுக்கும் பாடல்களின் பொருள் விளக்கத்திற்குப் புறம்பாகவுள்ள கவிஞர்களின் வரலாற்றுக் குறிப்புக்களைத் தம் நூல்களில் தர வேண்டிய அவசியமே இல்லை என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

நாம் எதைப் படித்தாலும் அதனைத் திறனாய்ந்தே அறிகின்றோம். அத்திறனாய்வும் உணர்வு வழிப்பட்டதே. இத்தகைய திறனாய்தல் திறன் மாணவர்களிடமும் தோன்றி வளர வேண்டும். ஆசிரியர்கள் அதற்கேற்ற வாய்ப்புக்களை மாணவர்களுக்கு நல்க வேண்டும். ஆசிரியர், மாணவர்களிடம் கவிதையைத் திறனாய்வோரின் உண்மையான நோக்கம் அவற்றின் முருகியல் உணர்வையும், வாழ்வியல் உண்மைகளையும் காண்பதே என்பதைத் தெளிவுப்படுத்துதல் வேண்டும். திறனாய்வாளன் சுட்டிக்காட்டும் குறைகளை, உண்மைகளின் மீது அவன் கொண்டுள்ள காதலாகக் கொள்ள வேண்டும். கவிதையைத் துய்க்கும் ஆற்றல் பெற்றவர்களே உண்மையான திறனாய்வாளர்கள் ஆவர். அவர்களே கவிதையின் அழகையும் வாழ்வியல் உண்மைகளையும் வெளிப்படுத்தும் வல்லமையுடையவர்கள். தாய்மொழியைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் சிறுவர்களிடம் கவிதைச் சுவையை வளர்ப்பதற்கு, அவர்களிடம் தொகை நூல்களைத் தொகுக்கும் பழக்கத்தை ஏற்படுத்த வேண்டும்.

## இயல் முடிபுகள்

- ந.சுப்புரெட்டியார் தமிழ்ப்பணிகளுள் குறிப்பிடத்தக்கது அவர் ஆசிரியப்பணி குறித்த நூல்களை எழுதியிருப்பதே.

அந்நூல்கள் கல்வியியல் நோக்கில் தமிழாசிரியர்களுக்கும் தமிழ் இலக்கியம் பயிலும் மாணவர்களுக்கும் பெரிதும் பயன்பாடுடையன. இவ்வகையில் **‘தமிழ் பயிற்றும் முறை’, ‘கவிதை பயிற்றும் முறை’** ஆகிய அவருடைய இருநூல்களும் குறிப்பிடத்தக்கவை.

- அவர் அறிவியல் பயிற்றுவிக்கும் முறையை விளக்கித் தமிழில் **‘அறிவியல் பயிற்றும் முறை’** என்னும் நூலினையும் எழுதியுள்ளார். அவருடைய **‘அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்’** என்னும் நூலினை யுனெஸ்கோ நிறுவனம் பதிப்பித்து வெளியிட்டுள்ளது.
- ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டிருந்த அவர் கல்வியியல் மாணவர்களுக்குத் திறம்படக் கற்பித்த அனுபவம் உடையவர். அந்த வகையில் அவருடைய **‘கல்வி உளவியல் கோட்பாடுகள்’** என்ற நூல் மிகச் சிறந்ததாகும்.
- தமிழ் பயிற்றுவித்தலில் இலக்கியநயம் காணல், பள்ளி வாழ்க்கையில் தாய்மொழிக் கல்வியின் அவசியம், கல்வி ஏற்பாடு, பாடத்திட்டங்கள், பயிற்று முறைகள் ஆகியன குறித்துத் **‘தமிழ் பயிற்றும் முறை’** என்ற நூலில் தெளிவாக விளக்கியுள்ளார். அவர் குழந்தையைப் பற்றியவை, வாழ்க்கையில் பயன்தரத்தக்கவை, குறிக்கோள் தன்மையை உடையவை என்னும் மூவகையான கல்வி ஏற்பாடுகளை விளக்கி ஆய்வு செய்துள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் கற்பித்தல் நெறிமுறைகளை ஊக்குவித்தல், செயல்மூலம் கற்றல், கற்பனவற்றை வாழ்க்கையுடன் இணைத்துக்காட்டல், கற்றலில் அக்கரையை உண்டாக்குதல், மனத்தைத் தயாரித்தல், பாடநோக்கம், எழுத்துக்கூறல், ஒப்பிடல், பொதுவிதி காணல் என வகைப்படுத்தி விளக்கியுள்ளார். ஆசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்பிக்கும் முறையைத் தெரிந்தவற்றிலிருந்து தெரியாதவற்றுக்குப் போதல், முழுமையிலிருந்து பகுதிக்கு, காட்சி நிலையிலிருந்து கருத்து நிலைக்கு, சிறப்பிலிருந்து பொதுவிதிக்கு எளிமையிலிருந்து அருமைக்கு, தெளிவிலிருந்து சிக்கலுக்கு, தெளிவற்ற நிலையிலிருந்து தெளிவுக்குச் செல்லல் எனப்படிநிலை வளர்ச்சியாக அமைதல் வேண்டும் என்கின்றார்.
- ந.சுப்புரெட்டியார் கல்வி பயிற்றும் கிண்டர்கார்ட்டன் முறை, விளையாட்டு முறை, செயல்திட்ட முறை, வார்தாக் கல்வி முறை, நடிப்பு முறை என்னும் ஐவகை முறைகளைச் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார். இதனைத் தவிர தனிப்பயிற்சி முறை, டால்ட்டன் திட்டம், மாண்டிச்சோரி

முறை, மேற்பார்வைப்படிப்பு, கண்டறி முறை ஆகிய பயிற்று முறைகளையும் அவர் விளக்கியுள்ளார்.

- வாய்மொழி வினாக்கள், விளக்கம் தருதல், துணைக் கருவிகள், வீட்டு வேலை தருதல் ஆகியனவற்றை அவர் பயிற்றல் உத்திகளாகக் குறிப்பிடுகின்றார்.
- மொழித்திறன்களை வளர்ப்பதற்கு ந.சுப்புரெட்டியார் கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல் ஆகியனவற்றைக் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்கின்றார்.
- கட்டுரைப் பயிற்சி, தமிழ் இலக்கியம், இலக்கணங்களைப் பயிற்றுவித்தல், உரைநடை கற்பித்தல் ஆகியனவற்றை முறையியல் நோக்கில் தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் ஆசிரியரின் செயல் திட்டங்கள், பள்ளிக்குரிய நூல்கள், கல்வித்துறைச் சோதனைகள், தாய்மொழி ஆசிரியர்களின் முக்கியத்துவம், அவர்களது பணிகள் ஆகியன குறித்து தெளிந்த நோக்கில் விளக்கியுள்ளார்.
- கவிதை பயிற்றும் முறை, கவிதையைக் கற்பிப்பவர் தகுதி, ஆசிரியத் துறையின் சிறப்பு, கவிதையைத் தேர்ந்தெடுத்தல், கவிதை அறிமுகம், கவிதையைப் படித்தல், கவிதை விளக்கம், கவிதையும் வாழ்க்கையும், கவிதைகளை மனப்பாடம் செய்தல், கவிதையைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் பின்பற்ற வேண்டிய நான்கு வழிமுறைகள் என்ற நிலைகளில் ந.சுப்புரெட்டியார் கவிதை பயிற்றுவிக்கும் முறைகளை விளக்கியுள்ளார்.

~~~~~

## குறிப்புகள்

1. ந.சுப்புரெட்டியார், தமிழ் பயிற்றும் முறை, ப. 1.
2. தமிழ்விடுதூது, கண்ணி, ப. 151.
3. ந.சுப்புரெட்டியார், பரணிப்பொழிவுகள். ப. 22.
4. George Sampson, English for the English, p. 32.
5. ந.சுப்புரெட்டியார், தமிழ் பயிற்றும் முறை, பக். 32-34.
6. மேலது., பக். 74-107.
7. மேலது., பக். 108-134.
8. மேலது., பக். 135-158.
9. மேலது., பக். 164-165.
10. மேலது., ப. 204.
11. மேலது., பக். 286-312.
12. மேலது., பக். 313-350
13. தனிப்பாடல் திரட்டு, ஔவையார், பகுதி, ப. 119.
14. ந.சுப்புரெட்டியார், தமிழ் பயிற்றும் முறை, பக். 351-352.
~~~~~

15. மேலது., ப. 403.
16. மேலது., பக். 399-432.
17. மேலது., பக். 433-475.
18. மேலது., பக். 472-502.
19. மேலது - பக். 508-514.
20. நன்னூல், நூற். 26.
21. Bossing, Progressive Methods 06 Teaching in Secendary Schools, pp. 18-32.
22. ந.சுப்புரெட்டியார், கவிதை பயிற்றும் முறை, ப. 16.
23. மேலது., ப. 23.
24. மேலது., ப. 29.
25. மேலது., பக். 34-35.
26. மேலது., பக். 45-54.
27. மேலது., ப. 64.
28. மேலது., ப. 79.
29. W.H.Hudson, An Introduction to the study of Literature, p. 92.
30. ந.சுப்புரெட்டியார், கவிதை பயிற்றும் முறை, பக். 116-119.
31. மேலது., பக். 127-143.

## இயல் - 3
# ந.சுப்புரெட்டியாரின் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகளும் இலக்கியப் பணிகளும்

**முன்னுரை**

ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப் பணிகளில் குறிப்பிடத்தக்கது. அவர் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகளைத் தமிழ்ப் பக்தி இலக்கியங்களிலிருந்து எடுத்துக்காட்டி, தமிழ்ச்சூழலில் அதன் சிறப்புக்களையும் தேவைகளையும் சுட்டிக்காட்டியிருப்பதே ஆகும். **“ந.சுப்புரெட்டியாரின் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகள்”** என்னும் இவ்வியல், ந.சுப்புரெட்டியாரின் படைப்புக்களின் வழி வெளிப்படும் சமயச் சிந்தனைகளைத் தத்துவப் பார்வையில் ஆய்வதாக அமைகின்றது.

**சமய தத்துவ நூல்கள்**

ந.சுப்புரெட்டியார் சமய, தத்துவ விளக்கப் பார்வையில் ‘முத்திநெறி’ எனும் நூல் (தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்), சில நோக்கில் நாலாயிரம், வைணவமும் தமிழும், வைணவச் செல்வம் (இரு தொகுதிகள்), வைணவ உரைவனம் (ஐதிகம், இதிகாசம், சம்வாதம்), கலியன்குரல், கீதைக்குறள், கண்ணன் எழில்காட்டும் கவிதைப்பொழில், கண்ணன் ஆதி, இராமர் தோத்திரம், கீதைப் பொழிவுகள், ஆண்டாள் பார்வையும் அழகு தமிழும் முதலான வைணவ சமய, தத்துவம் சார்ந்த நூல்களை ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ளார். சைவ சமய விளக்கு, ஆன்மீகமும் அறிவியலும் ஆகிய அவரது இருநூல்களும் சைவ சமயத் தத்துவ விளக்கம் பற்றியதாகும்.

ந.சுப்புரெட்டியார் வைணவ சமயத் தத்துவங்களில் பெரிதும் ஈடுபாடு உடையவர். அவர் வைணவத் திருத்தலங்களுக்குப் புனிதப்பயணம் மேற்கொண்டவர். அத்திருத்தலங்களின் பெருமைகளை விளக்கியும் பலநூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், சோழ நாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி (தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்), சோழ நாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி (தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்) ஆகிய நூல்கள் வைணவ சமயம் சார்ந்த திருத்தலப் பெருமைகளை விளக்கும் வகையில் அவரால் எழுதப்பெற்றன. நாவுக்கரசர், ஞானசம்பந்தர், தம்பிரான் தோழர், மாணிக்கவாசகர் ஆகிய சைவச்சான்றோர் பெருமைகளை விளக்கியும் அவர் தனித்தனியே நூல்களை எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

## நூற்றியெட்டு வைணவத் திருப்பதிகள்

பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் பாடியுள்ள **'நூற்றியெட்டுத் திருப்பதி அந்தாதி'** என்னும் நூலின் வைணவத் திருப்பதிகள் - வைணவ திவ்விய தேசங்கள் நூற்றியெட்டு எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

**"ஈரிருப தாம்சோழம்;**
**ஈரொன்ப தாம்பாண்டி;**
**ஓர்பதின்மூன் றாம்மலைநாடு;**
**ஓரிண்டாம் சீர்நடுநாடு**
**ஆறோடு ஈரெட்டுத்தொண்டை**
**அவ்வடநாடு ஆறிரண்டு**
**கூறுதிரு நாடாகக்**
**கொள்"**[1]

என்பது அப்பாடலாகும். சோழநாட்டின் எல்லைகளை ஓர் பழம்பாடல்,

**"கடல்கிழக்குத் தெற்குக் கரையொரு வெள்ளாறு**
**குடதிசையிற் கோட்டைக் கரையாம் - வடதிசையி**
**லேணாட்டுப் பெண்ணை இருபத்து நாற்காதம்**
**சோணாட்டுக் கெல்லை யெனச் சொல்"**[2]

எனக் குறிப்பிடுகின்றது. சோழநாட்டுத் திருப்பதிகள் திருவரங்கம் பெரியகோவில், திருவுரையூர், திருவள்ளல், திருக்கரம்பனூர், திருவெள்ளறை, திருப்புள்ளம் பூதங்குடி, திருப்பேர்நகர், திருஆதனூர், திருவழுந்தூர், திருச்சிறுபுலியூர், திருச்சேறை, திருத்தலைச்சங்க நாண்மதியம், திருக்குடந்தை, திருக்கண்டியூர், திருவிண்ணகர், திருக்கண்ணபுரம், திருவாலி, திருநாகை, திருநறையூர், திருநந்திபுர விண்ணகரம், திருக்கூடலூர், திருக்கண்ணங்குடி, திருக்கண்ணமங்கை, திருக்கவித்தலம், திருவெள்ளியங்குடி, திருமணிமாடக்கோயில், திருவைகுந்த விண்ணகரம், திருஅரிமேய விண்ணகரம், திருவெண்புருடோத்தமம், திருச்செம்பொன் செய்கோவில், திருத்தெற்றியம்பலம், திருமணிக்கூடம், திருக்காவனம்பாடி, திருவெள்ளக்குளம், திருப்பார்த்தன்பள்ளி ஆகிய நாற்பது திருப்பதிகளும் சோழநாட்டுத் திருப்பதிகளாகும். இத்திருப்பதிகள் குறித்து ந.சுப்புரெட்டியார் சோழநாட்டுத் திருப்பதிகள் (முதற்பகுதி மற்றும் இரண்டாம் பகுதி) என்ற நூலில் விரிவாகவும் விளக்கமாகவும் ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

## பாண்டி நாட்டுத் திருப்பதிகள் - பதினெட்டு

அக்காலத்துப் பாண்டிய நாட்டின் எல்லையை ஓர் பழம்பாடல் பின்வருமாறு வரையறுத்துக் கூறுகின்றது.

**"வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெரிவழியாம்**
**தெள்ளார் புனற்கன்னி தெற்காகும். உள்ளாரா**
**வாண்ட கடல்கிழக்காம் ஐம்பத்தாறுகாதம்**
**பாண்டிநாட் டெல்லைப்பதி"**[3]

இப்பாண்டிய நாட்டின் எல்லைக்குள் திருமாலிருஞ்சோலைமலை, திருக்கோட்டியூர், திருமெய்யம்மங்கலம், திருப்புல்லாணி, திருத்தண்காலூர், திருமோகூர், திருக்கூடல், ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்குருகூர், திருத்தொலைவில்லி மங்கலம், சிர்வரமங்கை, திருப்பேரை, ஸ்ரீவைகுண்டம், திருப்புளிங்குடி, திருவரகுணமங்கை, திருக்குடந்தை, திருக்குறுங்குடி, திருக்கோவூர் முதலான பதினெட்டு வைணவத் திருப்பதிகள் அமைந்துள்ளன. இத்திருப்பதிகள் குறித்து ந.சுப்புரெட்டியார் பாண்டி நாட்டுத் திருப்பதிகள் என்னும் நூலில் விரிவாகவும் செறிவாகவும் விளக்கியுள்ளார்.

## மலைநாட்டுத் திருப்பதிகள் - பதின்மூன்று

அக்காலத்திய மலைநாட்டின் எல்லைகளைப் பழம் பாடலொன்று பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

**“வடக்குத் திசைப்பழநி வான்கீழ் தென்காசி**
**குடக்குத் திசைகோழிக் கூடாம் - கடற்கரையின்**
**ஓரமோ தெற்காகும் உள்ளெண் பதின்காதம்**
**சேரசாட்டிற் கெல்லையெனச் செப்பு”**[4]

சேர நாட்டுத் திருப்பதிகளையே ந.சுப்புரெட்டியார் மலைநாட்டுத் திருப்பதிகள் என்கின்றார். திருவனந்தபுரம், திருவண்பரிசாரம், திருக்காட்கரை, திருமூழிக்களம், திருப்பலியூர், திருச்செங்குன்றூர், திருநாவாய், திருவல்லவாழ், திருவண்வண்டூர், திருவட்டாறு, திருவித்துவக்கோடு, திருக்கடித்தானம், திருவாறன்விளை ஆகிய இடங்களில் அமைந்துள்ள வைணவத் தலங்களையே ந.சுப்புரெட்டியார் மலை நாட்டுத் திருப்பதிகள் என்கின்றார். அவர் திருவயிந்திபுரம், திருக்கோவிலூர் ஆகிய இரு வைணவத் தலங்களையும் நடுநாட்டுத் திருப்பதிகள் என்கின்றார்.

## தொண்டை நாட்டுத் திருப்பதிகள் - இருபத்தியிரண்டு

அக்காலத்திய தொண்டைநாட்டின் எல்லைகளைப் பழம் பாடலொன்று பின்வருமாறு சுட்டுகின்றது.

**“மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்**
**ஆர்க்கும் உவரி அணிகிழக்குப் பார்க்குளுயர்**
**தெற்குப் பினாகி திகழிருப தின்காதம்**
**நற்றொண்டை நாடெனவே நாட்டு”**[5]

திருக்கச்சி என்ற அத்திகிரி, திருசுட்டடியகரம், திருத்தண்கா, திருவேளுக்கை, திருப்பாடகம், திருநீரகம், திருநிலாத்துண்டம், திருவூரகம், திருவெ.·.கா, திருக்காரகம், திருக்கார்வானம், திருக்கள்வனூர், திருப்பவளவண்ணம், திருபரமேச்சுர விண்ணகரம், திருப்புட்குழி, திருநின்றவூர், திருஎவ்வுளூர், திருநீர்மலை, திருஇடஎந்தை, திருக்கடல்மல்லை, திருவல்லிக்கேணி, திருக்கடிகை ஆகிய இருபத்தியிரண்டு வைணவத் திருத்தலங்களும் தொண்டை நாட்டுத் திருப்பதிகள் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## வடநாட்டுத் திருப்பதிகள் - பன்னிரெண்டு

திருவேங்கடம், திருச்சிங்கவேழ்குன்றம், திருஅயோத்தி, திருநைமிசாரணியம், திருச்சாளக்கிராமம், திருவதரியாச்சிரமம், திருக்கங்கைக் கரைக்கண்டம், திருப்பிரிதி, திருவடமதுரை, திருத்துவாரகை, திருவாய்ப்பாடி, திருப்பாற்கடல் ஆகிய பன்னிரெண்டு வைணவத் திருத்தலங்களும் ந.சுப்புரெட்டியார் பார்வையில் வடநாட்டுத் திருப்பதிகளாக அமைகின்றன. இவை தமிழ்நாட்டின் வடபகுதியில் அமைந்திருப்பதால் இப்பெயரினைப் பெறுகின்றன.

ந.சுப்புரெட்டியார் **'திருநாடு'** என்னும் வைணவத் திருப்பதியைத் திருநாட்டுத் திருப்பதி என்கின்றார். இதுவே **'வைகுந்தம்'** ஆகும். திருமாலின் ஐவகை நிலைகளுள் **பரத்துவம்** விளங்கும் இடமாக இது திகழ்ந்து வருகின்றது.

இந்த நூற்றியெட்டுத் திருப்பதிகளையும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் சேவித்து வணங்கி வழிபட்டு மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், வட நாட்டுத் திருப்பதிகள், சோழ நாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி, சோழ நாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி என்னும் ஆறுநூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். இந்நூல்களில் திருப்பதிகளுக்குச் செல்லும் வழி, திருப்பதிகளில் தங்கும் வசதிகள், ஆழ்வார் பாசுரங்களின் அனுபவம் ஆகியன விளக்கப் பெற்றுள்ளன. இந்நூல்கள் திருத்தலப் பயணிகளுக்கும், ஆழ்வார் பாசுரங்களைச் சுவைத்து அனுபவிப்பார்க்கும் பெரிதும் பயனுள்ளவை என்பதில் ஐயமில்லை.

## நம்மாழ்வாரின் வைணவ நெறி

ந.சுப்புரெட்டியார், நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் நம்மாழ்வார் காட்டும் வைணவத் தத்துவங்களை ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றவர். சைவமரபினரான ந.சுப்புரெட்டியார், வைணவ நெறி குறித்தே எண்ணிக்கையில் மிகுந்த நூல்களை எழுதியுள்ளார். அந்நூல்களுள் முத்தாய்ப்பாகத் திகழ்வது **'சடகோபன் செந்தமிழ்'** என்ற நூலே ஆகும். **'சடகோபன்'** என்னும் பெயர் வைணவத்தில் நம்மாழ்வார்க்கே உரியது. நம்மாழ்வாரின் பாசுரங்களில் இடம்பெற்ற தமிழ் இனிமை ந.சுப்புரெட்டியாரின் அடிமனத்தில் அனுபவமாகப் பலநாட்கள் படிந்து அழுந்திட, அவரின் மனம் முழுவதையும் நிறைத்திருந்தது. சைவ நெறியாளரான ந.சுப்புரெட்டியார், வைணவ நெறியின் தலைவரும் வேதம் தமிழ் செய்த வித்தகருமான நம்மாழ்வாரின் பாசுரங்கள் அள்ளித் தரும் இறையனுபவத்தை அனுபவித்து உணர்ந்தவர். நம்மாழ்வாரின் ஈரத்தமிழில் மனத்தைப் பறிகொடுத்து ஆய்வு செய்ததோடு, '**சடகோபன் செந்தமிழ்**' என்ற அரிய வைணவ இலக்கிய ஆய்வு நூலினையும் தம் தமிழ்ப்பணியாக உலகிற்கு அளித்துள்ளார்.

## திவ்வியப்பிரபந்தங்கள் - தென்புலத்து வைணவ நெறியின் அடிப்படை

வைணவ நெறி நிற்போர் **‘பிரமாணம்’** (ஆதாரம்) **‘பிரமேயம்’** (சொல்லப்படும் பொருள்), **‘பிரமாதா’** (ஆதாரம் கொண்டு பொருளை அளந்தறிபவன்) என்னும் மூன்று நிலைகளில் தம் கொள்கைகளை வகுத்துக்காட்டுவர். இந்த அடிப்படையில் நோக்கும் போது தென்புலத்து வைணவ நெறிக்கு அடிப்படை ஆதாரமாக இருப்பவை தமிழ் வேதங்களான நாலாயிரத்திவ்வியப் பிரபந்தங்களே. அந்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களுக்குத் தமிழ் மரபு சார்ந்த, தென்புலத்து வைணவ நெறியாளர் அளித்துள்ள தமிழ் அங்கீகாரமே **‘அருளிச் செயல்கள்’** என்பதாகும்.

## மணவாள மாமுனிகளின் தொண்டு

ஒரு காலத்தில் செல்வாக்கோடு அனைத்து நிலைகளிலும் பயன்படுத்தப்பட்டு பின்னர், சிலகாலம் தவிர்க்கப்பட்ட தமிழ் மறைகளான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களை மறுபடியும் தம் தகுதிப்பாட்டில் குறையாமல், வடமொழி மறைக்கும் உயர்வாகப் பயன்படும்படிச் செய்த பெருமைக்குரியவர் மணவாள மாமுனிகள் என்ற ஆசாரியர் ஆவார். இந்த வைணவ மாமறைகளான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களை மங்களாசாசனம் செய்த மணவாள மாமுனிகள்,

> **“ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி**
> **தாழ்வதுமில் குரவர் தாம்வாழி – ஏழுயிரும்**
> **உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி!**
> **செய்யமறை தன்னுடனே சேர்ந்து”**

ஆக, அருளிச் செயல்களே அவைதோன்றிய காலத்திலிருந்தே தென்புலத்து வைணவ நெறியின் பிரமாணம் (ஆதாரம்) ஆயிற்று”[6] என்பர்.

## அர்ச்சாவதாரம்

ஆழ்வார்கள் அனைவருமே திருமாலின் அர்ச்சாவதாரத்திலே ஈடுபாடு கொண்டவர்கள். ஈடுபட்டவர்கள்: திருக்கோயில்களில் உறையும் இறைவனது உருவத்திருமேனியே அவர்களுக்கு அனைத்து இறைநிலையையும் காட்டுவதாகும். பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை ஆகிய இறைவனது ஐந்து நிலைகளையும் திவ்வியப்பிரபந்தப் பாடல்கள் சுட்டிக் கூறினும் அவற்றின் சிறப்பான நோக்கம் அர்ச்சாவதாரமே என்று **“ஆசாரிய ஹிருதயம்”** என்ற வைணவத் தத்துவ நூல் அறுதியிட்டுக் கூறுகின்றது. ஆதலால் அர்ச்சாவதாரத்தின் நிலைக்களன்களாக உள்ள திருமால், திருக்கோயில்கள் இடம் பெற்றுள்ள திவ்விய தேசங்களின் பெருமைகளைப் பேசுவதே, அருளிச் செயல்களின் பெருமைகளாக அமைகின்றன. அத்திவ்விய தேசங்கள் அல்லது திருப்பதிகளே வைணவ நெறியின் பிரமேயம் (சொல்லப்படும் பொருள்) ஆகும்.

அருளிச்செயல்களையும் திருக்கோயில்கள் இருக்கும் திவ்விய தேசங்களையும் ஒன்றாகவே பரவிப் போற்றிய ஆசாரியர்கள் **"பொலிக, பொலிக"** என்று திருவாய்மொழியில் நம்மாழ்வார் திருவாக்குக் கூறுவதைப் போல[7] கடல் வண்ணனாகிய திருமால் பூதங்களாகப் பொலிந்து வியாக்கியானங்களை ஆக்கித் தந்து, ஆழ்வார்களுடன் சேர்ந்து **'பிரமாதாக்கள்'** (ஆதாரத்தில் நின்று பொருளை அளந்த ஆய்பவர்கள்) ஆயினர்.

## சடகோபன் செந்தமிழில் ந.சுப்புரெட்டியார்

பிரமாணம், பிரமேயம், பிரமாதா என்னும் மூன்று கூறுகளை உள்ளடக்கிய வைணவ சமய நெறிக்கொள்கைகளை அப்படியே இலக்கியத்தோடு இணைத்து, பக்தி வழியில் கண்ட உறவாக்கிச் **'சடகோபன் செந்தமிழ்'** என்ற நூலில் ந.சுப்புரெட்டியார் விளக்குகின்றார். இந்த விளக்கம் கம்பரின் **'சடகோபரந்தாரி'** என்ற நூலில் பின்வரும் பாசுரத்தின் பொருளை விரிவாக்கியது போலத் திகழ்கின்றது.

**"அந்தமி லாமறை யாயிரத்**
**தாழ்ந்த அரும்பொருளைச்**
**செந்தமி ழாகத் திருத்தில**
**னேல்நிலத் தேவர்களும்**
**தந்தம் விழாவும் அழகும்என்**
**னாம்?தமி ழார் கவியின்**
**பந்தம் விழாஓழு கும்குரு**
**கூர்வந்த பண்ணவனே"**[8]

என்று குறிப்பிடுகிறார். திருக்குருகூர் பண்ணவன், புனிதன், சடகோபன் வேதங்களின் நுட்பமான சாரத்தை மிகச் செம்மையாக்கிச் சீர் செய்து பிரபந்தமாக அருளினான். அதுஇல்லையெனில் வைணவத் திருக்கோயில்களில் ஓதுவதற்குரிய **'நித்தியநைமித்திக'** விழாச் சிறப்பிற்கான பாஞ்சராத்திர சாத்திரம் தொடர்பான அருளிச் செயல்கள் கிடைக்காது என்பது இப்பாடலின் பொருளாகும்.

இந்தக் கம்பரின் சடகோபரந்தாதிப் பாடல் குறிப்பிடுவதைப் போலவே, நம்மாழ்வார் அருளிய அனைத்துப் பாசுரங்களும் வேதசாத்திரத் தகுதியைக் கொண்டவை. இன்றும் வைணவத் திருக்கோயில்களில் குறிப்பாக ஆழ்வார் திருநகரி, திருவரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய ஊர்களில் திவ்வியப் பிரபந்தங்கள் **'நித்திய நைமித்திரங்களில்'** சிறப்பாக இடம்பெறுகின்றன. இவற்றிலுள்ள தோத்திரப் பாடல்கள் ஏனைய காலத்தின் தோத்திரப் பாடல்களிலிருந்து வேறுபட்டு பாடல்களைப் பாடுவோர் – **'சேவிப்போர்'** நிலைகளில் அவர்களது ஆன்மா அனுபவத்தையும் அவற்றில் கலந்துவரும் நிலையில் சாத்திரமாகிவிடும் தகுதியைப் பெறுகின்றன. பக்திப்

பனுவல்களின் ஏற்றமே அவற்றைப் பயில்வோர், அந்தப் பாடல்களில் தோயும் அனுபவமாகும். மேனாட்டுச்சமயத் தத்துவஞானியாகிய நார்மன்கட்லர் இந்தப் பாங்கினையே நுட்பமாக விளக்கி இப்பாடல்கள் தம் ஒலித்தொகுதியினால், இசையின் தன்மையினால், பொருளைத் தவிர்த்தும் கூட பயன்தர வல்லவையென வைணவ உலகு மனமுவந்து பயன்படுத்தும் முறையை[9] நுட்பமாகக் காட்டியிருப்பதும் சிந்திக்கத் தக்கதாகும்.

ஆதலால் **‘சடகோபன்’** என்றழைக்கப்படும் நம்மாழ்வாரின் **‘செந்தமிழ்’** திருந்திய வேதமே எனலாம். குறையறிவு உடையோரால் கலக்கப்பெற்ற **‘சுருதி’** நல்ஞானம் சேர்ந்து தெளிவுற்று ஆழ்பொருளைக் காட்டுகின்றது என **‘ஆசாரிய ஹிருதயம்’** என்னும் வைணவ தத்துவ நூல் எடுத்துக் காட்டுவதும், கம்பரின் ‘சடகோபரந்தாதி’, குருகூர்ப் பண்ணவன் விளைத்த தமிழ் வேதத்தின் திருந்திய செந்தமிழ் எனப்போற்றுவதும் பொருத்தமே என்பதை விளக்குவதாக ந.சுப்புரெட்டியாரின் **‘சடகோபன் செந்தமிழ்’** என்னும் நூல் அமைகின்றது.

### பிரமேயம்

ந.சுப்புரெட்டியாரின் **‘சடகோபன் செந்தமிழ்’** என்னும் நூலில் மொத்தம் பதினைந்து ஆய்வுக்கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் முதல் ஐந்து கட்டுரைகள் நம்மாழ்வார் பிறப்பும் வளர்ப்பும், சோழ நாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், மலைநாட்டுத் திருப்பதிகள், வட நாட்டுத் திருப்பதிகள் ஆகியவனவற்றில் ந.சுப்புரெட்டியார், வைணவ சமயத்தின் பிரமேயக் கொள்கையை விளக்கியுள்ளார். இவ்வியல்களில் சொல்லப்படும் பொருள், திவ்விய தேசப் பெருமைகள் ஆகியன நம்மாழ்வார் பாடல்களைப் போன்று மங்களாசாசனம் பெறும் திருப்பதிகளே முதலில் விளக்கப்பெறுகின்றன. திருவரங்கம் தொடங்கி சோழ, பாண்டிய, மலைநாட்டு, வடநாட்டுத் திருத்தலங்கள் நம்மாழ்வார் மங்களாசாசனம் பெற்ற முப்பத்தாறு திவ்விய தேசங்களைப் பற்றியவை. ந.சுப்புரெட்டியார் சில எடுத்துக் காட்டுப் பாடல்களையே தந்து, நம்மாழ்வார் அந்தந்தத் திருப்பதி பெருமானிடம் கொள்ளும் உறவினையும் ஈடுபாட்டினையும் அவரது பாசுரங்கள் வழி, அவற்றைப் பயில்வோர் அனுபவமாக மாற்றும் அற்புதம் எப்படி நிகழ்கின்றது என்பதை நுட்பமாக விளக்குகின்றார்.

ந.சுப்புரெட்டியாரது இவ்விளக்கத்திற்குத் துணை நிற்பனவாக பெரியவாச்சான்பிள்ளை, நம்பிள்ளை ஆகியோரது வியாக்கியானங்களும், **‘ஆசாரிய ஹிருதயம்’ ‘ஸ்ரீவசனபூஷனம்’, ‘முமுட்சுப்படி’** போன்ற இரகசிய கிரந்தங்கள் என வழங்கப்படும் தத்துவ நூல்களும், வைணவ சமயத்திற்காகப்

பெரும்பணியாற்றிய அண்ணங்கராச்சாரியர் சுவாமிகளது திவ்வியார்த்த தீழிசை உரையும் அமைகின்றன.

இதனைத் தவிர ந.சுப்புரெட்டியார் தமக்கே உரிய ஆழ்ந்த தமிழ்ப் புலமையையும் காட்டி, தொல்காப்பியம், திருக்குறள் ஒரு சில இடங்களில் கம்பராமாயணம் ஆகியனவற்றிலிருந்து சான்றுகள் தந்தும், நம்மாழ்வார் செந்தமிழ் ஆற்றலை எடுத்துக் காட்டியுள்ளார். பாண்டிய நாட்டுத் திருப்பதிகளில் திருப்புளிங்குடி எம்பெருமானிடம் நம்மாழ்வாரின் அனுபவத்தை விளக்கும் போது ந.சுப்புரெட்டியார், **“திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் முதலியன செய்கைக்கு கோயில் சீய்க்கை என்று பெயர். இங்கே ஈட்டில் திருக்கண்ணமங்கையாண்டான் இதிகாசம் ஒன்று உள்ளது. அவரைப் பற்றி ஸ்ரீவசனபூஷணத்தில் திருக்கண்ண மங்கையாண்டான் ஷ்வய வியாபாரத்தை விட்டான் என்று அருளிச் செய்யப்பட்டிக்கின்றதன்றோ? அப்படிப்பட்டவர் அவ்வூரில் ஒரு மகிழ மரத்தடியிலே இருந்த திருவலகிடா நிற்கையில் உண்மையுணர்வற்ற ஒருவன் ‘எம்பெருமானே உபாயம் என்றிருக்கிற அநந்யப் பிரயோஜர் இங்ஙனே கிலேசப்படுவது எதற்காக? என்றானாம். அப்போது திருவலகிட்ட இடத்தையும் இடாத இடத்தையும் காட்டி, ‘இவ்விடமும் அவ்விடமும் இருந்தபடி கண்டாயே; இதற்கொரு பலமில்லை என்று தோற்றி இருந்ததோ? என்று பணித்தாராம் திருக்கண்ணமங்கையாண்டான். ஈண்டு அறியத்தக்க வேண்டுவதாவது – திருஷ்டப் பிரயோஜனம் (நேரில் காணும் நன்மை அதாவது இம்மைப் பயன்) என்றும், அத்ருஷ்ட பிரயோஜநம் (மறுமைப்பயன்) என்றும் இருவகைப்படும். அத்ருஷ்டப் பிரயோஜநத்திற்கொரு சாதநாநுஷ்டானம் பண்ணாமையே அநந்யப்ரயோஜநத்திற்குற்றது. சந்நிதி வாசலை முதலிய திருப்பணிகளை ஒரு ப்ரயோஜநாபேட்சையின்றி செய்வதனால் ஒரு குறையும் இல்லை; இது நிஷ்ப்ரயோஜநம் என்பதே இதன் பொருள்”**[10] தானே என்ன வேண்டா; திருவலகிடாத இடம் கண் கொண்டு காணவொண்ணாத தாயும், கண்ணால் காண இனிதாயிருப்பதே பிரயோஜநம். இஃது அநந்யப் பிரயோஜநத்திற்கு விரோதியன்று என்பதாம். **‘உன்தாமரைக் கண்களால் நேருகாய் என்ற சொல்லில் தோற்றாத பற்றும் நோக்கிலே நோக்கியருள வேண்டும் என்பதே இதன் பொருள்’** என விளக்குவது குறிப்பிடத்தக்கதாகும். **‘உன் தாமரைக் கண்களால் நோக்காய்’** என்னும் சொற்களில் பொருள்தரும் இடம் நுணுக்கமானது. அங்கேயுள்ள அடிக்குறிப்பும் (அடிக்குறிப்பு எண்: 20) ந.சுப்புரெட்டியாரின் வைணவ அனுபவிப்பைக் காட்டுகின்றது. இப்படிப் பல சூழல்களில் இத்தகைய வைணவ வியாக்கியானங்களிலும், பாசுரங்களிலும் ஈடுபட்டு ந.சுப்புரெட்டியார் விளக்கும்போது, வைணவத்திற்கே உரிய கலைச் சொற்களையும் பயன்படுத்திக் கொள்கின்றார். இதனால்

இந்நூலைப் பயில்வோரும் வைணவத்தின் பயனை அனுபவிக்கின்றனர்.

**பிரமாணம்**

ந.சுப்புரெட்டியாரின் **'சடகோபன் செந்தமிழ்'** என்னும் நூலில் இடம் பெற்றுள்ள அருளிச்செயல்கள், அகப்பொருள் தத்துவம், தோழிப் பாசுரங்கள், மகன் பாசுரங்கள் (ஆறு முதல் பத்து வரையுலுள்ள இயல்கள்) என்னும் ஐந்து கட்டுரைகளில் வைணவ நெறியின் **'பிரமாணம்'** என்ற அம்சத்தை நுணுக்கமாக விளக்குகின்றார்.

**'அருளிச் செயல்கள்'** என்னும் இயலில் நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களின் சாரங்களைத் (Essence) தருவதோடு அவை வேதப் பொருளின் உள்ளார்நத சிந்தனைகளே என்று வியாக்கியானங்கள் காட்டும் உண்மையையும் உணரவைக்கின்றார் ந.சுப்புரெட்டியார். நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களும் நான்கு வேதங்கள் (ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள்) என்ற எண்ணிக்கை அளவில் சமமாகக் காட்டப்படுகின்றன. ஆயினும் அந்தந்த வேதக் கருத்துக்கள் எவ்வாறு நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களில் காணக்கிடக்கின்றன என வைணவ சான்றோர்கள் எவரும் தொகுத்துக் கூறவில்லை. இக்குறையைப் போக்கும் வகையில் ந.சுப்புரெட்டியார், வியாக்கியான மேற்கோள்களிலேயே வேதங்களின் மெய்ப்பொருள் இலக்கணங்களும் விளக்கங்களும் பயின்று வருவதைச் சுட்டிக் காட்டுகின்றார். ந.சுப்புரெட்டியார் மெய்ப்பொருள் உறவினைச் சங்ககால அகப்பொருளின் அகத்துறை நுண்பொருள் விளக்கத்தோடு அகப்பொருள் தத்துவம், தாய், தோழி, மகள் என்னும் பாசுரங்களில் எளிமையாக விளக்குகின்றார். இதனால் சமயப்பொருள், சிறப்புமிக்க அகப்பொருள் விளக்கமாகி அவை நம்மாழ்வார் பாசுரங்களில் மனித அனுபவமாகத் தரப்பெறுகின்றன.

ந.சுப்புரெட்டியார் **'சடகோபன் செந்தமிழ்'** என்னும் நூலில் **'இயல்கள்'** என்றே தலைப்பிட்டு விளக்குவது, **'குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்'** என்பதன் எதிரொலியே எனலாம். வடமொழி மறைஞானங்களைப் பெரிதும் கற்றுணர்ந்த சுவாமி தேசிகனார். **'திருவாய்மொழி தெளியவோதி தெளியாத மறைநிலங்கள் தெளியக் கண்டோம்'** என்றே சான்றளிப்பதும் நம்மாழ்வாரின் வைணவ நெறியின் ஆழத்தை உணர்த்துவதே ஆகும். **"ஆழ்வார்கள் தரமான தன்மையை விட்டுப்பெண் பாவனையை (நாயகி மனோபாவம்) ஏற்றுக் கொள்ளுதல் எதற்கு என்ற வினா எழுகின்றது. ஆழ்வார்கள் பெண்தன்மையைத் தாமாக ஏறிட்டுக் கொள்கின்றாரல்லர். இந்த அவஸ்தை நிலை தானே பரவசமாக வந்து சேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானின் பேராண்மைக்கு முன் உலகம் அடங்கப்**

**பெண்தன்மையதாகயிருக்கையாலும், சீவான்மாவுக்குச் சுவாதந்திரிய நாற்றமேயின்றி பாரதந்திரியமே வடிவாயிருப்பதாலும், இவ்வகைகளுக்கேற்பப் பெண் பாவனை வற்தேறியது என்று கொள்ளலாம். ஆழ்வார் பெண்தன்மைச் செய்தியே பல திருக்கோயில் எம்பெருமான்களைப்பாடி அனுபவித்ததை அவர்களுடைய திருப்பாசுரங்களில் கண்டு மகிழலாம்”**[11] எனவும், **“…..இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அனுபவிக்கும் பொழுது, அவர்கள் தோழி, தாய், மகன் என மூவரில் ஒருவரின் தன்மையை தாம் அடைந்து கூற்றுக்கள் நிகழ்த்துவர்”**[12] எனவும், **“இந்தக் கொள்கையினைத் தரும் ஆசாரிய ஹிருதயம் ஆதாரம்; சம்பந்த உபாய பலன்களில் உணர்த்தி துணிவு, பதம், பதற்றம் ஆகிய பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி, தாய், மகள் என்று பேர் (சூரணிகை 133). சுவாமிதேசிகனும் இதையே ‘பக்தி சிருங்கார வித்யா’ என்பர் எனப் பூருவர்கள் எடுத்துக் கொள்வர்”**[13] எனவும் ந.சுப்புரெட்டியார் சுட்டுவார். இந்த ஆதாரத்திலுள்ள சொற்களையும் பொருளையும் விளக்கும் வகையிலும் ‘தோழி, தாய், மகள் பாசுரங்கள்’ குறித்த இயல்களை ந.சுப்புரெட்டியார் இயற்றியுள்ளார் எனலாம். அவற்றின் எளிமையே அவரது மகத்தான வெற்றியாகும். சமயநெறியின் தத்துவப் பொருள்களை விளக்கும் போது பலரும் கருத்தியலாகவே எடுத்துரைத்துப் பேசுவர். ஆனால் ந.சுப்புரெட்டியார் கருப்பொருள்களையே பருப்பொருள்களாகக் காட்டுவதைப் போல வியாக்கியானங்களின் துணையோடு இந்த இயல்களை நுணுக்கமாக எழுதியிருக்கின்றார். இந்தப் பகுதிகளில் பகவத் பக்தியாகின்ற பகவத் கர்மமே பரமபுருஷார்த்தம் என்று ஆழ்வார்களது பாசுரங்கள் மெய்ப்பிப்பதை ந.சுப்புரெட்டியார் எடுத்துக் கொள்கின்றார். இதையே,

**“சொல்லார்தமிழ் ஒருமூன்றும் தகுதிகள்**
**நான்கும் எல்லை**
**இல்லா அறநெறி யாவும்**
**தெளிந்த”**[14]

என்று உடையவராகிய இராமனுசர் அறுதியிட்டார் என்று திருவரங்கத்தமுனார் பாடியுள்ளார் என்பர்.

**“சேமநன் வீடும் பொருளும்**
**தருமமும் சீரியநல்**
**காமமும் என்றுஇவை நான்கு என்பர்**
**நான்கினும் கண்ணனுக்கே**
**ஆம்அது காமம்”**[15]

என்றும் நிலைநாட்டினார் திருவரங்கத்தமுதனார். இதனைத் தவிர பகவத் பக்தியாகும். **‘இன்பம்’** என்னும் பரமபுருஷார்த்தம் ஒன்று தான் வழியாகவும், பயனாகவும் வைணவ நெறியில் இருக்க இயலும். ஏனையப் படிநிலைகளில் புருஷார்த்தங்களைத் தம்தம்

பயன்களாகவே கொள்ள இயலும். ந.சுப்புரெட்டியார், இப்பகுதிகளை விளக்கும் இயல்களில் மிகச் சிறப்பான விளக்கங்களைத் தந்திருக்கின்றார்.

### பிரமாதாக்கள்

ந.சுப்புரெட்டியார் **'சடகோபன் செந்தமிழ்'** என்னும் நூலில் மகள் பாசுரங்கள் தூதுபற்றியவை, இறையனுபவம் அர்த்தபஞ்சகம், தத்துவத்திரயம், மந்திரங்கள் என்னும் இயல்களில் வைணவ ஆழ்வார்களும் ஆசாரியார்களுமே பிரமாதாக்கள் என்னும் தகுதியுடையவர் என்பதை அழுத்தமாகவும் ஆழமாகவும் விளக்கியுள்ளார். **"மணிவல்லிப் பேச்சான் என்னும் திருவிருத்தத்தில் நம்மாழ்வார் விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே"**[16] என்னும் தொடரை நினைவூட்டி ந.சுப்புரெட்டியார் மகள் பாசுரங்களின் தூது பற்றிய செய்திகளை விளக்குகின்றார். அவர் பிரமாதாக்களின் வடிவங்களை மிகவும் பொருத்தமாகவே பேசுகின்றார். இறைநிலையான பரம், வியூகம், விபவம், அந்தர்யம், அர்ச்சை ஆகியவை தூதாக இருப்பதை நம்மாழ்வார் பாசுரங்களில் நடக்கும் நாடகமாகவே காட்டுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

'இறையனுபவம்' பகுதியில் ந.சுப்புரெட்டியார், நம்மாழ்வார் பாசுரங்கள் அனைத்தின் சாரங்களையும் பிழிந்து ஆழ்வாரின் பிரபத்தியையும், இன்ப-துன்பங்கள் மன, உடல் நிலைகளில் பரிமாற்றம் அடைவதன் தன்மைகளையும், உயிரின் கண் தோன்றும் இன்பம் எது என்றும் காட்டுகின்றார். இந்த இடத்தில் அவர் இரண்டு குறள்களைச் சுட்டிக் காட்டி விளக்குகின்றார்.

**"இடுக்கண் வருங்கால் நகுக; அதனை**
**அடுத்தூர்வது அ:.தொப்பது இல்"**[17]
**"இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு"**[18]

என்பன அக்குறட்பாக்கள் இந்த இடத்தில் நம்மாழ்வார் அடைந்த இன்ப, துன்ப நிலைகளைச் சுட்டிக் காட்டுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

### அர்த்த பஞ்சகம்

வைணவ நெறியில் **'அர்த்தபஞ்சகம்'** என்ற தத்துவம் சிறப்பித்துப் பேசப்படும் ஒன்றாகும். இறைநிலை, உயிர்நிலை (பரமாத்மா, ஜீவாத்மா) தந்நெறி, தடையாகும் ஊழ்வினை வாழ்வினையாகிய வீடுபேறு இவையே அர்த்தபஞ்சகம் என்னும் வைணவ நெறியாகும். திருவாய்மொழிப் பாசுரங்களின் பாடலடிகளைக் கொண்டு நம்மாழ்வார் எடுத்துரைப்பதை ந.சுப்புரெட்டியார் சுட்டிக் காட்டுகின்றார். இந்த இயலின் இறுதியில் அவர்தம் விளக்கத்திற்கு அரண்செய்யும் வகையில், **"வேதங்கள், இதிகாச புராணங்கள், மகாத்மாக்கள், முனிவர்கள்**

**இவர்களின் கருத்துக்கள் இவற்றில் அர்த்தபஞ்சகம் அடங்கியுள்ளன என்றும், இவையே திருவாய்மொழிக்கே வியாக்கியார்த்தமாக அமைந்துள்ளன என்றும் பெரியவங்கிபுரத்து நம்பியும் அருளிச்செய்வர்”**[19] என விளக்கம் தருகின்றார் ந.சுப்புரெட்டியார், தத்துவம், இதம், புருஷார்த்தம் என்று குறிக்கப்பெறும் வைணவத் தத்துவத்திரயம் மூன்றினையும் திருவாய்மொழிப் பாசுரங்கள் சிலவற்றைக் கொண்டே நுட்பமான பொருள் விளக்கம் தந்து தெளிவாக்குகின்றார் ந.சுப்புரெட்டியார்.

**“நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு**
**அதன்நுண்நேர்மை அதுஇதுவென்று**
**ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது:**
**உணர்ந்தும் மேலும் காண்பரிது;**
**சென்றுசென்று பரம்பரமாய்**
**யாதும் இன்றித் தேய்ந்து அற்று;**
**நன்றுதீது என்று அறிவு அறிதாய்**
**நன்றாய் ஞானம் கடந்ததே”**[20]

என்னும் நம்மாழ்வார் திருவாய்மொழிப் பாடலில் ஆழ்வாரின் அனுபவத்தைக் காட்டுகின்றார் ந.சுப்புரெட்டியார். அதற்கு இணையான தைத்திரிய உபநிடதப் பொருளையும் நினைவுபடுத்துகின்றார் ந.சுப்புரெட்டியார். **“தைத்தரீய உபநிடதத்தில் முதலில் அன்னமயமும் அதற்கு அடுத்து மனோமயமும் சொல்லப் பெற்று அதற்கு மேல்தான் ஆன்மா கூறப்பெறுகின்றது. ‘சென்று சென்று பரமபரமாய்’ என்ற பகுதியில் இது தெரிவிக்கப் பெறுகின்றது. அதாவது ஒன்றுக்கு மேல் ஒன்றாகச் செல்லுகின்ற வரிசையில் மேம்பட்டதென்பதை உணர்த்துகின்றது. அல்லது மற்றோர் உபநிடதவாக்கியப்படி உடலென்ன, புலன்களென்ன மனம் என்ன, பிராணன் என்ன, புத்தி என்ன இவற்றைக் காட்டிலும் மேம்பட்டிருக்கின்ற நிலைமையைச் சொன்னதாகவும் கொள்ளலாம். இது போலவே ஆன்மாவும் பிரகிருதி சம்பந்தப்பட்ட பொருள்களின் தன்மைகள் ஒன்றும் இல்லாமல் அவற்றோடு அறந்தேய்ந்து அற்று இருக்கும் என்று விளக்குகிறார் ஆழ்வார் இதனை, ‘யாதும் இன்றித் தேய்ந்து அற்ற’ என்ற பாசுரப்பகுதி உணர்த்துகின்றது”**[21]. இவ்வாறு எம்பெருமானாகிய திருமாலின் அருமைப்பாட்டோடு இயங்கும் உயிர் - உடல் உறவினையும், அறிவுமயமான ஆன்மா அறிவுக்கு இருப்பிடமாகும் படிநிலைகளைத் தெளிவதுமான **‘தர்மபூதஞானம்’** என்ற கொள்கையினையும் ந.சுப்புரெட்டியார் **‘சடகோபன் செந்தமிழ்’** என்னும் நூலில் தத்துவப் பார்வையில் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார்.

ந.சுப்புரெட்டியார் **‘மந்திரங்கள்’** என்னும் பகுதியில் நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களுமே வைணவ நெறி மிகவும் உயர்வாகப் போற்றும். அதன் தலையாய மந்திரங்களான திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்ற மூன்றினையும் உள்ளடக்கிக் காண்பிக்கின்றன என்பதைச் சான்றுகளுடன்

சுருக்கமாகவும் விளக்கித் தந்துள்ளார். ஆன்மாவுக்கு இறைவனிடம் உள்ள சம்பந்த ஞானத்தை நவவித சம்பந்தமாகக் கூறும் முறையை நினைவூட்டும் வகையில் எழுதியிருக்கின்றார் ந.சுப்புரெட்டியார். நம்மாழ்வார்,

**"தேனும் பாலும் கன்னதும்**
**அமுதும் ஆகித் தித்திப்ப**
**யானும் எம்பிரானனயே**
**ஏத்தினேன்; யான் உய்வானே"**[22]

என்றும்,

**" ..................................**
**எவையும் எவரும் தன்னுள்ளே**
**ஆகியும் ஆக்கியும் காக்கும்**
**அவையுள் தனிமுதல் எம்மான்"**[23]

என்றும்,

**"............. தான் தோன்றி**
**முனிமாப் பிரம முதல்வித்தாய்**
**உலகம் மூன்றும் முளைப்பித்த**
**தனிமாத் தெய்வம்"**[24]

என்றும் தம் திருவாய்மொழியில் பாடுகின்றார். இந்த தனிமாத் தெய்வமாகிய திருமால் **'என் நெஞ்சு நிறையப் புகுந்து, தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்'** என்.று நம்மாழ்வார் அழுத்தமாகக் கூறுகின்றார். நெஞ்சத்து உள்ளிருந்து இருந்த தமிழ்நூல் இவை மொழிந்தது அவனே என்று நம்மாழ்வார் கூறுவதைப் போன்று ந.சுப்புரெட்டியாரும் நம்மாழ்வாரைத் தம் நெஞ்சத்தில் நிறுத்தி **'ஆவி அகமே தித்திப்பாய்'** அவர் திருமாலைக் குறித்துக் கூறுவதைப் போலவே **'சடகோபன் செந்தமிழ்'** என்னும் இந்நூலினையும் தமிழ் இலக்கிய உலகிற்கு மறக்க இயலாத படைப்பாகத் தந்திருக்கின்றார்.

பன்னிரண்டு ஆழ்வார்களைப். பற்றியும், அவர்களது அருளிச் செயல்கள் குறித்தும் எளிய நடையில் நூல்களை எழுதிப் பொதுமக்களுக்குப் பக்தி விருந்தாகப் படைத்தளிக்க வேண்டும் என்ற நன்னோக்கத்தினால் ந.சுப்புரெட்டியார் 'சடகோபன் செந்தமிழ்' என்னும் தலைப்பில் நம்மாழ்வார் பற்றியும் அவரது அருளிச்செயல்களை விளக்கும் வகையிலும் இந்நூலை எழுதிவெளியிட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## சில நோக்கில் நாலாயிரம்

ந.சுப்புரெட்டியார், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களைப் பலநோக்கு நிலைகளில் விரிவாகச் சிந்தித்து பல

புதிய சிந்தனைகளை வைணவ நெறியின் உட்பொருள் விளக்கத்தோடு வெளிப்படுத்தியவர். தமது வைணவப் புலமைக்குச் சான்றளிப்பதாகச் ‘சில நோக்கில் நாலாயிரம்’ என்னும் இந்நூல் அமைந்துள்ளது. வேதாந்த தேசிகர் அம்ருதாஞ்சனியில்,

**“உயிரும் உடலும் உடலாக ஓங்கித்**
**தயிர் வெண்ணெய் தாரணியோடு உண்டான் - பயிரில்**
**கறைபோல் அசுரரைக் காய்ந்தான் தன் கையில்**
**வளைபோல்எம் ஆசிரியர் வாக்கு”**[25]

எனக் குறிப்பிட்டுள்ளார். எம்பெருமானாகிய திருமால் ஆன்மாக்கள் உய்வுபெற வேண்டும் என்பதற்காக இந்த உலகத்தையும் உயிர்களையும் படைத்தான். அவ்வுலகத்தில் தம்மால் படைக்கப்பெற்ற உயிர்களுக்கு இறைவன் இன்பத்தை வழங்கியும் துன்பத்தைக் கொடுத்தும் பக்குவப்படுத்துகின்றான். இறைவன் திருஉள்ளத்தைப் புரிந்து கொள்ளாதவர் பலபடப் பேசுகின்றனர். இந்த உண்மையை அறிந்து தான் நம்மாழ்வார்

**“காட்டி நீ சுரந்து உமிழும்**
**நிலம்நீர்தீ விசும்புகால்**
**ஈட்டிநீ வைத்து அமைத்த**
**இமையோர்வாழ் தனிமுட்டைக்**
**கோட்டையினில் கழித்து என்னை**
**உன்கொழும் சோதி உயரத்துக்**
**கூட்டு அரிய திருவடிக்கண்**
**எஞ்ஞான்று கூட்டுதியே?”**[26]

என்று திருவாய்மொழியில் திருவாய்மலர்ந்து பாடியருளினார். பெருமாளே, இந்த உலகமே முட்டையாக உள்ளது. அதில் நான் சிறைப்பட்டுத் துன்புறுகின்றேன். நீ உன் கருணை என்னும் சிறகினால் என்னை அடைகாக்கின்றாய். ஆயினும் நான் இன்னும் பக்குவப்படவில்லையா? எனக்கு எப்போது விடுதலை தருவாய்? என்று கேட்கின்றார் நம்மாழ்வார் இவ்வாறு கேட்ட நம்மாழ்வாரின் அவயங்களாக இருப்பவர்களே மற்றைய ஆழ்வார்கள் ஆவர். ஆழ்வார்கள் அனைவரும் எம்பெருமானாகிய திருமாலைப் பலநோக்கில் கண்டு அனுபவித்து இன்புற்றுள்ளனர். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் முதல் ஆழ்வார்கள் மூவரும் திருமாலைப் **பரத்துவத்தில்** கண்டு மகிழ்ந்து பாடியுள்ளனர். பெரியாழ்வார் தன்னைத் திருமாலின் **கிருஷ்ணாவதாரத்தில்** (விபவம்) கரைத்துக் கொண்டே பாடி இன்புற்றுள்ளார். திருமழிசையாழ்வார் வைணவ நெறியின் உச்சநிலையான **அந்தர்யாமித்துவத்தில்** அல்லும் பகலும் ஒட்டி உறவாடி உயர்நலம் பெற்றார். திருமங்கையாழ்வார் **அர்ச்சாவதாரத்தில்** கொண்ட ஈடுபாடு, தமிழ் வைணவ உலகத்தையே அமுதக் கடலாக்கியது. நம்மாழ்வார் எல்லாநிலை எம்பெருமான்களிடமும் ஆழங்கால்பட்டு உபய விபூதிக்கும் வீடுபேற்றிற்கும் ஒளியும் பாதையும் காட்டினார். இத்தகைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ந.சுப்புரெட்டியார் உள்ளங்கை நெல்லிக்கனியாக்கித் தமிழுக்கு வழங்கியுள்ள

வைணவப் பெட்டகமே **‘சிலநோக்கில் நாலாயிரம்’** என்னும் இந்நூலாகும்.

**திருவரங்கம்**

வைணவ சமயத்திற்கும் வைணவ நெறியாளர்களுக்கும் கலங்கரை விளக்கமாகத் திகழ்வது திருவரங்கம் என்னும் திருத்தலமே ஆகும். திருவரங்கத்தில் எம்பெருமானாகிய திருமால் பிரணவ விமானத்தில் எழுந்தருளியுள்ளான். இதனை நம்மனக்கண் முன் நிறுத்தி எளிமையாக வெளிப்படுத்துகின்றார் ந.சுப்புரெட்டியார். **‘அமலனாதி பிரான்’** என்னும் பிரபந்தத்திற்கு விளக்கம் தருவதன் வாயிலராக ந.சுப்புரெட்டியார், வைணவ தத்துவத்தையே எளிமையாகப் புலப்படுத்தி விடுகின்றார்.

**“பாதாதிகேச மாலையாகத் திருவரங்கப் பெருமானைப் பாடியுள்ள இதில் பிரணவத்தின் அகரம் உகரம் மகரம் என்ற மூன்று திருவெழுத்துகளுள் முதல் எழுத்தாகிய உகரத்தை பாசுரத்தின் முதலிலும், இரண்டாம் எழுத்தாகிய உகரத்தை இரண்டாம் பாசுரத்தின் முதலிலும், மூன்றாம் எழுத்தாகிய மகரத்தை மூன்றாம் பாசுரத்தின் முதலிலும் முறையே அமைந்துள்ள சிறப்பு ஈண்டு கருதத்தக்கது. இப்பாசுரங்கள் பத்தும் அன்பாகிய அமுதம் நிரம்பிய பொற்குடங்களாக விளங்குகின்றன. வைணவ சமயத்திற்குப் புத்துயிர் அளித்து இராமநுசரே திருவரங்கக்கோயிலின் நடைமுறைகளை வகுத்தனர் என்று சொல்லப் பெறுகின்றது. இப்பெரியார் பல்லாண்டுகள் வாழ்ந்து வைணவத்தை நாடறியச் செய்தார். வைணவச் சித்தாந்தங்களை நிறுவியவர்களான மத்வர் முதலான ஆச்சாரியர்களும் இந்நகர்போந்து அரங்களை வணங்கி வழிபட்டுப் பெரும்பேறு பெற்றனர். கிருஷ்ண சைதன்யர், துளசிதாசர் முதலிய வடநாட்டுப் பக்தமணிகளும் அழகிய மணவாளனை வணங்கி அருள்பெற்றனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இசைக்கலைக்கும் புத்துயிர் அளித்த தியாகய்யர் முதலானவர்கள் பல கீர்த்தனைகளால் திருவரங்கத்தைச் சிறப்பித்துப் போற்றியுள்ளனர்”**[27] என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இவற்றைப் பயிலும் வைணவர்களுக்கும் பிறர்க்கும் பிரவணத்தை அறிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்புடும் என்பதில் ஐயமில்லை. இந்த ஆர்வத்தை ‘அகப்பொருள் விளக்கம்’ என்ற கட்டுரையில் அவர், **“பிரணவம்” பிரிந்திருக்கும் நிலையில் ‘அ’ ‘உ’ ‘ம’ மூன்று எழுத்துக்களைக் கொண்டது. இம்மூன்று எழுத்துக்களும் இருக்கு, யஜுர், சாமம் என்ற மூன்று வேதங்களின் உயிர்நிலையான எழுத்துக்களாகும். மூன்று எழுத்துக்களும் மூன்று பதங்களாய் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அதாவது ‘அ’ கரம் பகவானையும், அதில் ஏறிமறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும் (அடிமைத் தன்மையையும்), ‘உ’ கரம் அந்த அடிமைத்தன்மையின் அநந்யார்ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தலையும்) ‘ம’**

**கரம் ஞானவானாகிய சீவான்மாவையும் தெரிவிக்கின்றன”**[28] என்றும் தெளிவுப்படுத்திக் கூறியுள்ளார்.

## வைணவ தத்துவத்தின் தொன்மை

வைணவ தத்துவம் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்தில் நிலவி வந்த தத்துவமாகும். திருமுருகாற்றுப்படை, பரிபாடல் ஆகிய சங்க நூல்களில் இதன் பதிவுகளைக் காணலாம். இன்றை சமய உலகில் ஒரு பொருளா? இரு பொருளா? முப்பொருளா? என்ற கருத்துப் போராட்டம் ஆய்வுலகில் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றது. ஆயினும் தமிழ்மக்கள் முப்பொருளையே நம்புபவர்கள். சிவஞானச் செல்வராகிய ஸ்ரீலஸ்ரீ குருநான தேசிக பரமாசாரிய சுவாமிகள்,

> **“என்னை அறிவென்றான் என்அறிவின் ஆநந்தந்**
> **தன்னைச் சிவமென்றான் சாந்தமும் - என்னை உன்னிப்**
> **பாரா மறைத்ததுவே பாசமென்றான்; இம்மூன்றும்**
> **ஆராய்ந் தவர் முத்தராம்”**[29]

என்று தொகையிட்டு வகைப்படுத்திக் காட்டியுள்ளார். இப்பாடலில் அறிவு, அதன் வழித்தோன்றும் ஆனந்தம், இவற்றை மறைக்கும் பாசம் ஆகிய முப்பொருள் நுட்பமாகக் கூறப்பட்டிருக்கின்றது. வேதாந்த தேசிகரும்,

> **“முக்திக்கு அருள்சூட மூன்றைத் தெளிமுன்னம்**
> **இத்திக்கால் ஏற்கும் இதம்”**[30]

என்று இதனைக் கோடிட்டுக் காட்டியுள்ளார். முக்திக்குக் காரணவன் எம்பெருமான் திருமாலே, காரணம் அவனருளே, முக்தி பெறுவதற்கு முதலில் சித்து, அசித்து, ஈசுவரன் என்று சொல்லப்படும் மூன்று தத்துவ நெறிகளையும் நன்கு உணர வேண்டும். இப்பெரிய தத்துவத்தை ந.சுப்புரெட்டியார், **“வைணவ சமயத்தின் நெறிப்படி இறைவனை அடைவதில் இச்சையுடையவனான சேதநனுக்கு மோட்சம் பெறுங் காலத்தில் மூன்று தத்துவங்களைப் பற்றிய அறிவு உண்டாக வேண்டியது இன்றியமையாதது. இம்மூன்று தத்துவங்களும் சித்து, அசித்து, ஈசுவரன் என்று வழங்கப்பெறும். சித்து என்பது உயிர்களின் தொகுதி. மக்கள் விலங்கு எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது, பிரகிருதியை மூலப்பகுதி என்பர். ஈசுவரன் என்பது இறைவன். இவை மூன்றும் தத்துவத்திரயம் (திரயம் மூன்று) என்ற பெயரால் வழங்கி வருகின்றன”**[31] என மிக எளிமையாக விளக்கியுள்ளார்.

## தர்மபூதஞானம்

வைணவத்தில் ஆசாரியர்கள் நீண்ட நாளாகத் தம் சீடர்களுக்கு அன்றிப் பிறர்க்குத் தெரிவிக்காத தத்துவம்

**‘தா்மபூதஞானம்’** என்பதாகும். ந.சுப்புரெட்டியார் குடத்திலிருந்த அந்த விளக்கைத் தூண்டிக் குன்றிலிட்டு வைணவ அறிவை விரிவுபடுத்தியுள்ளார். **“ஞானத்திற்கு இடமான ஆன்மா சித்து என வழங்கப்படுகிறது. இ·து அன்மையம், பிராணமயம், மனோமயங்கட்கு அப்பாலிருப்பது, தேகம், இந்திரியங்கள், மனம் பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறுபட்டது. அறிகின்ற தலைவனும் அறிவும் அறியப்பெறும் பொருளும் தானாகவே இருப்பது. அணுவின் அளவினையுடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவத்தைக் கொண்டது; என்றும் நிலைபெற்றிருப்பது. இது கண் முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது; மனத்தாலும் இதனை நினைக்க முடியாது: இதனைப் பகுதிகளாகப் பிரிக்கவும் முடியாது, அவலமும் அற்றது, வளா்தல், பருத்தல், குறைதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவுமயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கும் இருப்பிடமானது. இந்த அறிவு ‘*தா்மபூதஞானம்*’ என வழங்கப்பெறும். ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது அவனால் தரிக்கப்பெற்று அவனுக்கு அடிமையாக இருப்பது. இரத்தினங்கள், கதிரவன், விளக்கு ஆகிய ஒளியுள்ள பொருள்கள் ஓரிடத்திலிருப்பதும் அவற்றின் ஒளி எங்கும் ஏகப் பரவுவது போல, ஆன்மாவும் இதயத்தில் மாத்திரம் இருப்பினும், அதனுடைய தா்மபூதஞானம் உடல் முழுவதும் பரவுவதனால் தான் உடலில் எப்பகுதியில் உண்டாகும் இன்பத்துன்பங்களையும் அ·து அனுபவிக்கத் தடையேதும் இல்லை”**[32] எனத் தா்மபூதஞானத்தை விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

**விசிட்டாத்வைதம்**

வைணவ சமயத்தின் அடிப்படை சித்தாந்தம் விசிட்டாத்வைதமே. உலகமும் ஆன்மாக்களும் எம்பெருமானாகிய திருமாலுக்கு உடம்பாகும் என்பதுவே விசிட்டாத்வைத தத்துவத்தின் உட்பொருள் விளக்கமாகும். இதனை வேதாந்த தேசிகா் ஸ்ரீமத் ரகஸ்பத் திரய சாரத்தில், பிரதான பிரசிதந்திரம் என்னும் அதிகாரத்தில் நன்கு விளக்கியுள்ளார். ஆனால் அதனைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமான ஒன்றாகும். இதனை ந.சுப்புரெட்டியார், **“சரீரத்தின் எல்லாச் செயல்களும் சரீரியின் நினைவிழையாக உண்டாவதைப் போலவே, ஈசுவரனுக்குச் சரீரபூதமான இவ்வான்மாவினுடைய நினைவிழையாகவே உண்டாகும். வீடு, நிலம், பிள்ளை, மனைவி, தனம், தான்யம், தோட்டம் முதலியன உடையவனுடைய (ஆண்டானுடைச்) செயல்களுக்காகவே நிலைபெற்றிருக்கும். ஆனால், அவனை பொழியவும் தனித்து வேறாகவும் நிலைபெற்றிருக்கும். ஆயினும் ஈசுவரனுக்கு அடிமையாகவுள்ள (சேஷமாகவுள்ள) ஆன்மா, ஆன்மாவை விட்டுப் பிரிந்திராத உடலைப்போல் சேஷியான (ஆண்டவன்) ஈசுவரனை பொழியவும் தான் வேறாகக் காணப்படுதல் இல்லை. இந்த வகையில்**

**ஒவ்வொரு ஆன்மாவும் ஈசுவரனின் உடலாக இருக்கும்"**[33] என விளக்கியிருப்பதிலிருந்து அறிய முடிகின்றது.

**மூலமந்திரம் - ஓம் நமோ நாராயணாய**

**'ஓம் நமோ நாராயணாய'** என்னும் மூலமந்திரம் பரந்த பொருளை உட்கொண்டதாகும். நம்மாழ்வார் இதனை,

> **"அறிகிலேன் தன்னுள் அனைத்துலகும் நிற்க**
> **நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்"**[34]

என்று வலியுறுத்திக் கூறியுள்ளார். கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பன் இன்னும் எளிமைப்படுத்தி,

> **"தன்னுள்ளே உலகங்கள் எவையும் தந்து அவை**
> **தன்னுள்ளே நின்றுதான் அவற்றுள் தங்குவான்"**[35]

என விளக்கிக் கூறியுள்ளான். இப்பெரிய வைணவத்தின் மூலதத்துவத்தை ந.சுப்புரெட்டியார், **"தன்னுள்ளே அனைத்துலகம் நிற்க' என்றது வியாபகத் தன்மையை: 'தானும் அவற்றுள் நிற்கும் பிரான்' என்பது அந்தர்யாமியாம் நிலையை; இவ்வாறு இறைவன் பொருள்களினுள் மறைந்துறைவது எதுபோல் எனின்; உடல்மிசை உயிர் எனக் கரந்துளன்' - உடலினுள் உயிர் எவ்வாறு உளதோ அவ்வாறே அவ்வுயிர் உட்பட்ட எல்லாப் பொருள்களினுள்ளும் இறைவன் உள்ளான்"**[36] என்றும், **"உயிர், அணுஅளவினதாய் உடம்பினுள் ஓரிடத்திலிருந்து தன் ஞானத்தால் (தர்மபூதஞானத்தால்) உடல் முழுவதும் வியாப்பித்து இவ்வுடலைப் பற்றிய நிகழ்ச்சிகளை உணர்த்துகின்றது. இறைவன் அங்ஙனமின்றி ஒவ்வொரு பொருளுள்ளும் தன் சொரூபத்தோடு வியாபித்துள்ளான். அன்றியும் உடலினுள் உயிர் இருப்பதற்கும், உடல்-உயிர் ஆகிய இரண்டினுள் இறைவன் இருப்பதற்கும் மற்றொரு வேறுபாடும் உண்டு. உயிர் உடலினுள் இருக்கும் போது, அவ்வுடலுக்குரிய வளர்ச்சித் தேய்வுகள் (விகாரங்கள்) உயிருக்கு உண்டாவதில்லை. ஆனால் அவ்வுடலைப் பற்றிய இன்ப, துன்ப உணர்ச்சிகள், அறிவின் சுருக்கம், பெருக்கம் ஆகியவை உயிருக்கு உண்டு"**[37] என்றும் எளிமையாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

இதுவே **'ஓம் நமோ நாராயணாய'** என்னும் மூலமந்திரத்தின் அடிப்படைத் தத்துவமாகும். உலக இருப்பிற்கும் இயக்கத்திற்கும் இறைவன் மூன்று காரணமாக உள்ளான்

என்பது வைணவச் சித்தாந்தம் ஆகும். இதன் அடிப்படையை உணராத சிலரே வைணவத்தைக் குறை கூறினர். ந.சுப்புரெட்டியார், இந்த உண்மையை, **“உயிரல்லாத உலகப்பொருள் அனைத்திற்கும் மூலப்பகுதியே பிராகிருதியே காரணமாகும். ஒரு பொருள் உண்டாவதற்கு மூன்று காரணங்கள் கூறுவதுண்டு. மண்குடமாக வனையப் பெறுமிடத்து மண்முதற்காரணம்; அதாவது காரியமாக மாறுவது. அக்குடத்தை வனைபவன் நிமித்தக் காரணம், அவன் குடத்தை வனைவதற்குக் கருவியாகவுள்ள சக்கரம் முதலியவை துணைக்காரணம். உலகத் தோற்றத்திற்கு இறைவன் மூன்று காரணங்களாகவும் உள்ளான் என்பது வைணவ சமயக் கொள்கையாகும். சித்தும் அசித்தும் சூக்குமமாக (நுண்மை) இருக்கும் நிலையில், அஃதாவது உலக உற்பத்திக்கு முன்னர் அவற்றுக்குள் இறைவன் அந்தர்யாமியாக நிற்கும் நிலையே இறைவன் உலகிற்கு முதற்காரணம் என்றும், நுண்ணிய நிலையில் இருக்கும் சித்து அசித்துக்களை வெளிப்படுத்தி உலகப்படைப்பு செய்வோம் என்று எண்ணுகின்ற நிலையே இறைவன் உலகிற்கு நிமித்த காரணம் என்றும், இறைவனுடைய ஞானம், சக்தி முதலியவையே துணைக்காரணம் என்றும், ஆக இம்முறையின் இறைவன் உலகப் படைப்பிற்கு மூன்று காரணங்களாகவும் உள்ளான் என்று மெய்ப்பொருளில்லார் முடிவு செய்துள்ளனர்”**[38] எனத் தெளிவுப்படுத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ந.சுப்புரெட்டியார் **‘சில நோக்கில் நாலாயிரம்’** என்னும் இந்நூலில் ஆழ்வார்கள் கண்ட திருவரங்கம், ஆழ்வார்கள் காட்டும் சமயநெறி, ஆழ்வார்களின் கடவுட்கொள்கை ஆகியனவற்றை அழுத்தமாக எடுத்துக்காட்டியுள்ளார். ஆழ்வார்கள் காட்டும் சமயநெறி என்ற கட்டுரையில் ந.சுப்புரெட்டியார் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற தத்துவ திரயங்கள், இறைவனுடைய பரம், வியூகம் என்னும் ஐந்து நிலைகள், மூன்று மந்திரங்கள், இறைவனை அடையும் வழிகள் ஆகியனவற்றை ஆழ்வார்களுடைய பாசுரங்களைக் கொண்டே நுணுக்கமாக விளக்கியுள்ளார். **‘வைணவம்’** என்னும் கட்டுரையில் தத்துவம், இதம், புருஷார்த்தம் என்னும் பிரிவுகளில் வைணவத் தத்துவங்களை விளக்கியுள்ளார். பரமபதத்தையும் அதனை அடைவதற்குரிய வழிமுறையாகிய அர்ச்சிராதி மார்க்கத்தின் தன்மையையும் ந.சுப்புரெட்டியார் **‘நலம் அந்தம் இல்லதோர் நாடு’** என்னும் கட்டுரையில் விளக்கியுள்ளார். இப்பகுதியில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களும் அவற்றைப் பின்பற்றிய வேதாந்த தேசிகரின் **‘பரமபத சோபானம்’** என்னும் தமிழ்ப் பிரபந்தமும் விளக்கம் பெற்றுள்ளன.

**‘நெடிய்யான் குன்றத்து நீலமுகில்’** என்னும் கட்டுரையில் திருவேங்கடமும் (திருப்பதி), **‘ஆழ்வார்கள் கண்ட திருவரங்கம்’** என்னும் கட்டுரையில் திருவரங்கமும் பன்னிரு ஆழ்வார்களின்

பாசுரங்கள் கொண்டு ந.சுப்புரெட்டியாரால் நன்கு விளக்கப்பெற்றுள்ளன. இத்திருப்பதிகளில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களின் சிறப்பு இப்பெருமான்களிடம் ஆழ்வார்கள் கொண்டிருந்த ஈடுபாடு ஆகியன விளக்கப்பட்டுள்ளன. அர்ச்சாவதாரத்தில் மூழ்கியவர்கள் ஆழ்வார்கள் என்பதற்குச் சான்றுகளாக ந.சுப்புரெட்டியார் இவ்விரு திருப்பதிகளையும் அணுகியுள்ளார். **‘திருமழிசையாழ்வார் திருநெறி’** என்னும் கட்டுரையில் ந.சுப்புரெட்டியார், வைணவத் தத்துவங்களை ஆராய்ச்சி செய்து வைணவநெறியைப் பரப்பிய திருமழிசையாழ்வாரின் நோக்கங்களை வெளிப்படுத்தியுள்ளார். அவர் பிறவியிலே பழுத்த வைணவ ஞானத்தைக் கொண்டிருந்த மாறனின் பெருமைகளை **‘ஞானம் கனிந்த மாறன்’** என்னும் கட்டுரையில் சிறப்பாகச் சொல்லியுள்ளார்.

கவிதையில் மனத்தின் தோன்றும் சிந்தனைகள், அவற்றை வெளியிடும் சொற்கள் என்னும் இருநிலைகள் உள்ளன. மானிடன் முதலில் கல்வி பயின்று கவிதை இயற்றும் நோக்கத்துடன் செய்யுள் நாடகங்களை இயற்றிக் கால வளர்ச்சியில் மனத்தில் தோன்றும் சிந்தனைகளுக்குத் தக்கமுறையில் சொற்களால் வடிவம் கொடுக்கின்றான். இச்சொல், சிந்தனைகளுக்கு ஏற்ப அமைதல் வேண்டும். சொற்களுடன் கூடிய கவிதைகள் மனிதச் சிந்தனைகளை உள்ளபடியே காட்டும் என்றும் கூறவியலாது. முயற்சியால் இயற்றப்படும் இவற்றில் சொல்நயமே முக்கியத்துவம் பெறுகின்றது. ஆயினும் இறைவன்மீது பக்தி மேலீட்டால் கசிந்துருகும் போது அவரது அருளால் சொற்களை ஆளும் கவிஞன் கவிதைகளே அடியார்களிடம் வரவேற்பைப் பெறுகின்றன. இறைவனைப் பாடிய ஆழ்வார்கள் உலக மக்களிடம் நெருங்கிப் பழகாவிடினும், அவர்களுடைய போக்கு மன அமைதியின்மை, குடும்ப வாழ்க்கை ஆகியனவற்றையும் ஆழ்வார்கள் நன்கு அறிந்தவர்கள் என்பதை இவர்களது அருளிச்செயல்களால் அறியமுடிகின்றது. இதனை ந.சுப்புரெட்டியார் **‘கவிதையால் கடவுள் வழிபாடு’** என்னும் பகுதியில் சிறப்பாக விளக்கிக் காட்டியிருப்பது சிந்தனைக்குரியது.

கட்புலன், செவிப்புலன் போன்ற காட்சிகளால் ஆழ்வார்கள் எவ்வகையில் மானிடர்களுக்கு இறைவனுடைய சிறப்புக்களைக் காட்டிச் சிந்திக்க வைக்கின்றனர் என்பதை ந.சுப்புரெட்டியார் **‘பாசுரங்களில் உருக்காட்சிகள்’** என்ற பகுதியில் விளக்கியுள்ளார். கவிதையை நன்கு ஆராய்ந்து தக்க முடிவுகளை வெளியிடும் திறன், உளவியலையும் அதன் நுணுக்கங்களையும் கவிதையில் தக்கவாறு அணுகும் பார்வை ஆகியன பேராசிரியர் ந.சுப்புரெட்டியாருக்கு கைவந்த கலையாகும். இப்பகுதி திறனாய்வாளர்களுக்குப் புதிய ஒளியை காட்டுவதாகும். ஆழ்வார்களிடம் உள்ளத்தைப் பறிகொடுத்துள்ள

ந.சுப்புரெட்டியாரால் தான் இவ்விதம் செயல்பட இயலும் என்பதில் ஐயமில்லை.

அகப்பொருள் ஆராய்ச்சி ந.சுப்புரெட்டியாரின் சொந்தமான சொத்தாகும். **'அகத்திணைக் கொள்கைகள்'**, **'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை'** ஆகிய இவர்தம் நூல்களே இதற்குச் சான்றாகும். **'பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்'**, **'பாசுரங்களில் சில அகத்திணைத்துறைகள்'** என்னும் பகுதிகள், அகப்பொருள் நுணுக்கங்களும் உத்திகளும் பக்தியாகப் பரிணாம வளர்ச்சி அடையும்பொழுது எவ்வளவு உயர்நிலையை அடைகின்றன என்பதை விளக்குகின்றன. ந.சுப்புரெட்டியார் வெறிவிலக்கு, மடலேறுதல், உடன்போக்கு போன்ற துறைகளை ஆழ்வார்களில் அருளிச்செயல்களினின்றும், சங்கப் பாடல்களிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக்காட்டி ந.சுப்புரெட்டியார் விளக்கும் போது ஆழ்வார்பாசுரங்களின் சிறப்புக்களும் பன்மடங்கு உயர்ந்து நிற்கின்றன.

ந.சுப்புரெட்டியார் **'பாசுரங்களில் தூது'** என்னும் பகுதியில் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற இறைவனின் ஐந்து நிலைகட்கும் ஆழ்வார்களின் நாயகிகள் சில பறவைகளைத் திருமாலிடம் தூதனுப்பும் நுணுக்கத்தையும், அத்தூதில் இடம்பெற்றுள்ள சமயத் தத்துவங்களையும் அழுத்தமாக எடுத்துக்காட்டிச் சிந்திக்க வைக்கின்றார். **'ஆழ்வார்களின் சமுதாயக் கண்ணோட்டம்'** என்னும் பகுதியில் ந.சுப்புரெட்டியார் மிக்க சுவையுள்ள பொருட்களை ஆழ்வார்களின் பாசுரங்கள் கொண்டு விசாரிக்கின்றனர். **'பாவை நோன்பு'** குறித்து அவர் மூன்று சான்றுகளைக் காட்டியிருப்பது அவரது ஆராய்ச்சித் திறனுக்குச் சான்றாகும். ந.சுப்புரெட்டியார் **'பிரபந்தங்களின் தொகையும் பாசுரங்களின் தொகையும்'** என்னும் பகுதியில் தக்க சான்றுகளுடன் தடை விடைகளுடனும் தொகைகளை அறுதியிட்டுக் கூறியுள்ளார். ந.சுப்புரெட்டியார் **'திருவள்ளுவரும் ஆழ்வார்களும்'**, **'திருக்குறளும் வைணவ சமயத்து உறுதிப்பொருள்களும்'** என்னும் பகுதிகளில் முறையே திருக்குறளை ஆழ்வார்கள் கையாண்டுள்ள பாங்கு, திருக்குறளில் வைணவ சமயக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளமை ஆகியனவற்றைத் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார். அவர் **'கம்பனும் ஆழ்வார்களும்'** என்னும் பகுதியில் ஆழ்வார் பாசுரங்களில் கம்பன் காட்டிய ஈடுபாட்டினையும், ஆழ்வார்களின் பாசுரங்களின் தாக்கத்தினால் கம்பன் படைத்த இராமாயணக் காப்பியம் புதுமெருகுடன் திகழ்வதையும் தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளார்.

ஆழ்வார்களின் பாசுரங்களில் பரவலாக வேதங்கள் புராணங்கள் இதிகாசங்கள் ஆகியனவற்றில் வட மொழியில்

குறிக்கப்பெற்றுள்ள கருத்துக்கள் பதிவாகியுள்ளன. ஆழ்வார்கள் வடமொழியைக் கற்றவர்கள் என்பதற்கு எவ்விதச் சான்றாதாரங்களும் இல்லாத நிலையில், தமிழ்மொழியிலேயே இவர்கள் இயற்றியுள்ள பாசுரங்களில் இடம்பெற்றிருப்பது வியப்பிற்குரியதே. ஆராய்ச்சி செய்து இவற்றிற்கு விடையும் விளக்கமும் கிடைக்காத நிலையில் வைணவ சமயாசாரியார்களும் ஆச்சாரியார்களும் ஆழ்வார்களை எம்பெருமானாகிய திருமாளின் திருவாழி, திருச்சங்கு போன்ற ஆயுதங்களின் அவதாரமாகவே கருதுகின்றனர். மக்களின் நம்பிக்கை வழிப்பட்ட இந்த ஏற்பு, வைணவ சமய வரலாற்றில் ஏற்றுக் கொள்ளப்பட்டதே. **'பக்தி'** நெறியிலேயே தம் வாழ்க்கை முடித்துக் கொண்ட இவ்வாழ்வார்கள் உலகத்தையும், உலக மக்களையும், வழக்காறுகளையும் மறந்து விடவில்லை. ஆதலால் பக்தியுணர்வுடன் பிறர்க்கு அறிவுறுத்தும் உபதேசங்களையும் ஆங்காங்கே தம் பாசுரங்களில் இடம்பெறச் செய்துள்ளனர். இந்த அறிவுரைகள் மனித வாழ்க்கை, அதன் ஏற்றத்தாழ்வுகள், மதிநுட்பம், குணவியல்புகள் ஆகியன குறித்ததே. **'இறைவனையும் இறையடியார்களையும் பணிந்து வணங்கி வழிபட்டு மக்கள் மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்'** என்பதே வைணவ ஆழ்வார்கள் காட்டும் வாழ்வியல் நெறியாகும். இதனை ந.சுப்புரெட்டியார் இந்நூலில் நன்கு புலப்படுத்தி இருப்பது பயனுடையதாகும்.

### ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் வைணவம்

திருமாலை முழுமுதற்கடவுளாகக் கொண்டு பல உயரிய வாழ்வியல் கொள்கைகளை உள்ளடக்கிய ஒரு பரந்த சமயமே வைணவம் ஆகும். இதனை ந.சுப்புரெட்டியார் தத்துவம், இதம், புருஷார்த்தம் என மூவகையாகப் பகுத்து விளக்குகின்றார்.

### (I) தத்துவம்

தத்துவங்கள் சித்து, அசித்து, ஈசுவரன் என மூவகைப்படும். உயிர்களின் தொகுதியே **'சித்து'** ஆகும். மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பும் உலகப்பொருள்கள் அனைத்திற்கும் காரணமான பிரகிருதியும் அசித்து ஆகும். இறைவன் என்பவனே ஈசுவரன். இவை மூன்றும் **'தத்துவ த்திரயம்'** ஆகும். ஞானத்திற்கு இடமான உயிர் அல்லது ஆன்மாவே **'சித்து'** ஆகும். அது அன்னமயம், பிராணமயம், மனோ மயங்களுக்கு அப்பாற்பட்டது. தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் ஆகியனவற்றுக்கு வேறுபட்டது. அறிகின்ற தலைவனும் அறிவும் அறியப்பெறும் பொருளும் தானாகவே இருப்பது. அணுவின் அளவினைக் கொண்ட இந்த ஆன்மா ஆனந்த வடிவம் கொண்டு என்றும் நிலைத்திருப்பது. ஆன்மா இறைவன் ஏவியபடியே நடந்து இறைவனுக்கு அடிமையாக இருப்பது. சீவான்மாக்கள் ஆகிய சித்து தளைப்பட்டிருப்பவர் ஆகிய **பத்தர்**, இவ்வுலகத் தளைகளை

அறுத்தவர்களான முக்தர், ஒரு நாளும் சம்சார சம்பந்த உணர்வே இல்லாத **நித்தியர்** என மூவகைப்படுவர். இதனையடுத்துவரும் அசித்து என்பதற்கு ந.சுப்புரெட்டியார் அறிவில்லாத பொருள் என்றும், அது சுத்த **சத்துவம்**, மிச்ர தத்துவம், சத்துவ சூனியம் என மூவகைப்படும்[39] என்றும் குறிப்பிடுகின்றார். சுத்த சத்துவம் என்பது ஆக்கமும் அழிவும் இல்லாமல் ஞானத்தையும் ஆனந்தத்தையும் தரக்கூடியது. இது நித்தியர், முக்தர், ஈசுவரன் ஆகியோர்கள் ஞானத்தால் தன்னை அறியவொண்ணாதவாறு ஒளிவிட்டுத் திகழும். இது சம்சாரிகளாகிய பக்தர்களுக்குப் புலப்படாது. சாத்துவிகம், இராஜஸம், தாமஸம் ஆகிய மூன்றும் கூடிய கர்மவான்களாகிய சம்சாரிகளின் ஞான ஆனந்தங்களை மறைப்பதே **மிச்ர தத்துவம்** ஆகும். இது ஈசுவரனுடைய உலகப் படைப்புக்களுக்கு விளையாட்டுக் கருவியாக அமைந்து ஏற்றத்தாழ்வினை ஏற்படுத்தும். மிச்ர தத்துவம் சுவை, ஒளி, ஊது, ஓசை, நாற்றம் முதலான புலன்கள் ஐந்தும், மெய், வாய், கண், செவி, மூக்கு முதலான பொறி ஐந்தும், வாக்கு கால், கை, வாய், **உபத்தம்** ஆகிய கருமேந்திரியங்கள் ஐந்தும், மண், நீர், தீ, கால், ஆகாயம் ஆகிய பூதங்கள் ஐந்தும், இங்குள்ள இந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிரகிருதி ஒன்றும், மகத்(மான்) தத்துவம் ஒன்றும், அகங்கார தத்துவம் ஒன்றும், மனம் ஒன்றும் என இருபத்து நான்கு தத்துவங்களையும் கலந்து தான் ஈசுவரன் தானாகவும், நான்முகன் மூலமாகவும் இந்த உலகத்தைப் படைக்கின்றான் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். காலத்தத்துவமே சத்துவ தத்துவமாகும்.

### ஈசுவர தத்துவம்

சீமந் நாராயணனே சர்வேசுவரன் ஆவான். இவன் எப்பொழுதுமே மாறுபடாத் தன்மை கொண்டவன் ஆவான். சத்தியம், ஞானம், ஆனந்தம், அனந்தம் இவற்றின் மொத்த சொரூபமாக இருப்பவன். இவனை இடத்தாலும் காலத்தாலும் அளவிட முடியாது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பயன்களையும் உயிர்களுக்குத் தந்து அவற்றின் புகலிடமாக இருப்பவனும் ஈசுவரனே ஆவான். இவ்வுலகச் செயற்பாட்டில் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியனவற்றின் காரண பூதனான ஈசுவரனே அனைத்தையும் அடக்கி ஆள்பவன் ஆவான்.

### திருமாலின் திருமேனி நிலைகள்

எம்பெருமானின் திருமேனி பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை[40] என்னும் ஐந்து நிலைகளைக் கொண்டதாகும். **‘பரம்’** என்பது வைருந்தத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாசுதேவனுடைய உருவம் ஆகும். வியூகம் என்பது வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன் ஆகிய உருவங்கள் ஆகும். எண்ணற்ற அவதார மூர்த்திகளே விபவம் ஆவர். இறைவன் அனைவருடைய இதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் நிலையே **அந்தர்யாமி**

நிலையாகும். **‘அர்ச்சை’** என்பது திவ்யதேசங்களில் இறைவன் திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் நிலையையும், பக்தர்களின் வேண்டுகோளின்படியும் அவரவர் விருப்பத்திற்கேற்பவும் இறைவன் திருமேனி கொண்டிருக்கும் நிலையைக் குறிக்கும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இலக்குமியும் ஈசுவர தத்துவத்தைச் சேர்ந்தவளே. பிரபத்தியைப் பின்பற்றுபவர்கள் முதலில் பிராட்டியைத் தகவுரை கூறுபவளாகக் கொண்டு எம்பெருமானைச் சரணடைய வேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## இதம்

மோட்சத்திற்குச் சாதகமாய் பின்பற்றப்பெறும் வழியே இதமாகும். வைணவர்கள் இதற்குப் பக்திநெறியையும் பிரபத்தி நெறியையும் பின்பற்றுகின்றனர். பக்திநெறியில் பலன்களைப்பெற நெடுங்காலம் ஆகலாம். நாதமுனிகள் போன்ற யோகிகளே இதற்குத் தலைவர்கள் ஆவர். பிரபத்தி நெறியைச் **‘சரணாகதி தத்துவம்’** என்றும் கூறலாம். சுக்கிரீவன், வீடணன், காகம் போன்றோர் இந்நெறியைப் பின்பற்றியே உய்தி பெற்றனர்.

## புருஷார்த்தம்

வீடுபேறு அடைவதே **‘புருஷார்த்தம்’** என்று கூறப்படுகின்றது. **‘புருஷன்’** என்பதற்கு **‘ஆன்மா’** என்றும் **‘அர்த்தம்’** என்பதற்குப் **‘பொருள்’** என்றும் பொருளாகும்.

## திருமழிசையாழ்வார் திருநெறி

திருமலாகிய இறைவனின் அனுபவத்தில் ஆழங்கால்பாற்பட்டு நிற்பவர்களே ஆழ்வார்கள் எனப்படுவர். **‘விஷ்ணு’** என்பதற்கு எங்கும் நிறைந்தது என்பது பொருளாகும். ஆழ்வார்களின் தலைவராகப் போற்றப்படுவர் நம்மாழ்வரே ஆவார். அவர் மேற்கொண்ட நெறியையே ஏனைய ஆழ்வார்களும் பின்பற்றினர். பக்திசாரராகிய திருமழிசையாழ்வாரும் இந்நெறியையே பின்பற்றியுள்ள பாங்கினை ந.சுப்புரெட்டியார் **‘திருச்சந்தவிருத்தம்’, ‘நான்முகன் திருவந்தாதி’** என்னும் பிரபந்தங்களின் துணைகொண்டு விளக்கியுள்ளார். திருமழிசை ஆழ்வாரின் இதயம் எம்பெருமானுடைய திருவடி இணைகளையே எல்லாக் காலங்களிலும் அணைந்து அவற்றிலேயே பிடிபட்டும் அடங்கியது. இதனைத் திருமழிசையாழ்வார்,

**“சொல்லினும் தொழிற்கணும்**
**தொடக்கறாத அன்பினும்**
**அல்லுநன் பகலினோடு**
**ஆனமாலை காலையும்**
**அல்லிநாள் மலர்க்கிழத்தி**
**நாதபாத போதினைப்**
**புல்லியுள்ளம் வீள்வு இலாது**

**பூண்டுமீண்ட தில்லையே”**[41]

என்னும் பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளார். இதனை எடுத்துக்காட்டும் ந.சுப்புரெட்டியார், **“சீமந் நாராயணனே முழுமுதற்கடவுள் என்பதும், அவனைப் பக்தி பிரபக்தி என்னும் இரண்டு வழிகளாலும் அடையலாம் என்பதும் திருமழிசையாழ்வார் கண்ட திருநெறி”**[42] என்கின்றார். ந.சுப்புரெட்டியார், **‘திருவள்ளுவரும் ஆழ்வார்களும்’** என்னும் ஒப்பீட்டுக் கட்டுரையில் பன்னிரு ஆழ்வார்களின் பாசுரங்களில் திருக்குறட் சிந்தனைகள் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிவு செய்யப்பட்டிருப்பதை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

**ஞானம் கனிந்த மாறன்**

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரே நம்மாழ்வார் ஆவார். இவரது பெற்றோர்கள் இவருக்குச் **‘சடகோபன்’** என்னும் பெயரினை இட்டனர். திருமால் திருவருளால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற இவருக்கு **‘மாறன்’** என்ற பெயரும் உண்டு. சடகோபன் ஆழ்வார்களில் சிறப்புற்று **‘நம்மவர்’** என்று போற்றத்தக்க பெருமையினைப் பெற்றதால் **‘நம்மாழ்வார்’** ஆனார். இவருடைய தந்தையார் வேளாளர் மரபைச் சேர்ந்த **‘காரியார்’** ஆவார். இப்போது **‘ஆழ்வார் திருநகரி’** என வழங்கப்பெறும் திருக்குருகூரில் பிறந்தவர். இவருடைய தாயின் பெயர் உடையநங்கையார் என்பதாகும்.

உலகியலைப் பற்றிச் சிறிதும் நினையாமல் இறைவன் சிந்தனையிலேயே ஆழங்கால் பட்டிருந்த நம்மாழ்வார் திருமால்மீது திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு பிரபந்தங்களைப் பாடியுள்ளார். திருவிருத்தப் பாசுரங்கள் அகப்பொருள் இலக்கணத்துறைகளைப் பெற்றுள்ளன. **‘அந்யாபதேசம்’** என்னும் உள்ளுறைப்பொருளும் பெற்றவை. உலகியல் வாழ்க்கையையும் அறிவன் நூற்பொருளையும் தரும் மாணிக்கவாசகரின் திருக்கோவையாகும், நம்மாழ்வரின் திருவிருத்தமும் ஒத்து இருக்கின்றன. **‘திருவாசிரியம்’** என்னும் பிரபந்தம், நம்மாழ்வார் எம்பெருமானது சொரூப ரூப விபூதிகளில் ஆழங்கால்பட்டுப் பரமானந்தம் கொண்ட நம்மாழ்வாரின் பெரிய திருவந்தாதி மூன்றாவது பிரபந்தமாகும். இதற்குப் பெருமை பொருந்திய திருவந்தாதி என்பது பொருளாகும். நம்மாழ்வாரின் நான்காவது பிரபந்தம் திருவாய்மொழியாகும். இப்பிரபந்தம் நூறு பதிகங்களாக அமைந்து 1162 பாசுரங்களைக் கொண்டிருப்பது குறிப்பிடத்தத்தக்கது.

நம்மாழ்வார் காலத்திலேயே அவருடைய சீடராயிருந்த மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரையும் அவருடைய நூல்களையும் சிறப்பித்துக் **‘கண்ணிநுண் சிறுதாம்பு’** பத்துப் பாசுரங்கள்

அடங்கிய பிரபந்தத்தைப் பாடியுள்ளார். ஞானம் கனிந்த மாறனாகிய நம்மாழ்வாரின் பிரபந்தங்களைக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார்,

**“நம்மாழ்வார் எப்பொழுதும் திருமால் திருவடியில் விளங்குகின்றார் என்பது வைணவ சமயக் கொள்ளை. அதனால் திருமால் திருக்கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்க செல்வோர் முடிந்து அவர் திருவடியாக வைக்கப்பெறுவதைச் ‘சடகோபன்’, ‘சடாரி’ என்று வழங்குகின்றனர். சடகோபன், சடாரி என்பன நம்மாழ்வாரின் திருப்பெயர்களாகும். அவளவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடபோபனாகிய நம்மாழ்வார் திருவவதரித்தனால் வைகாசி விசாகத்திற்கும் ஏற்றம்; சடகோபர் என்ற அவர்தம் பெயருக்கும் ஏற்றம்; அவர் அருளிய திருவாய்மொழிக்கும் ஏற்றம்; அவர் பிறந்த திருக்குருகூர்க்கும் ஏற்றம்”**[43] என்கின்றார்.

## நெடியோன் குன்றத்து நீலமுகில்

**‘நெடியோன் குன்றம்’** திருவேங்கட மலையைக் குறிக்கும். இது தமிழகத்தின் வடஎல்லையாகும்.

**“நீலத் திரைகடல் ஓரத்திலே – நின்று**
**நித்தம் தவம்செய் குமரி எல்லை – வட**
**மாலவன் குன்றம் இவற்றிடையே – புகழ்**
**மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு”**[44]

என்றார் தேசியக்கவிஞர் பாரதியார். இந்த மாலவன் குன்றமே திருவேங்கடம் ஆகும். சிலப்பதிகாரம் குறிப்பிடும் **‘நெடியோன் குன்றமும்’** இதுவே ஆகும். ஆயினும் தொல்காப்பியப் பாயிரத்திலும் சங்க இலக்கியங்களிலும் குறிப்பிடப் பெற்றுள்ள **‘வடவேங்கடம்’** என்னும் மலைத்தொடர் இதிலிருந்து வேறுபட்டது என்பதை ந.சுப்புரெட்டியார் **‘திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்’** என்ற நூலில் ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். திருவேங்கடம் பற்றிய சமயச்சார்பான குறிப்பு புறப்பொருள் வெண்பாமாலையில்,

**“வெறிகொள் அறையருவி**
**வேங்கடத்து செல்லின்**
**நெறிகொள் படிவத்தோய்**
**நீயும் பொறிகட்கு**
**இருளீயும் ஞாலத்து**
**இடரெல்லாம் நீங்க**
**அருளீயும் ஆழியவன்”**[45]

எனக் காணப்படுகின்றது. ஐயனாரிதனார் **‘வேங்கடம்’** எனக் குறிப்பிடுவதுடன் அங்குள்ள இறைவன் திருவாழியைத் தடுத்துக் கொண்டிருக்கும் **‘ஆழியவன்’** என்றும் குறிப்பிட்டுள்ளார். சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையோன் திருத்தலப் பயணம்

செய்து வருகின்றான். அவன் உறையூரைவிட்டுத் தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருக்கும் கோவலனையும் கண்ணகியையும் சந்திக்கின்றான். அவனைக் கோவலன் நீயார்? என வினவும்போது மாங்காட்டு மறையோன் கூற்றில் திருவேங்கடம் பற்றிய வருணனை வருகின்றது.

**"வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்**
**ஓங்குயர் மலையத்து உச்சி நீமிசை**
**..........................................**
**பகையனிங் காழியும் பால்வெண் சங்கமும்**
**தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி**
**நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு**
**பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய**
**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"**[46]

இன்று பெரும்பாலோர் திருப்பதி மலையைத் '**திருப்பதி**' என்றே வழங்குகின்றனர். கி.பி.6-8 ஆம் நூற்றாண்டுகளில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற நூற்றியெட்டுத் திருப்பதிகளுள் இதுவும் ஒன்றாகும். வடநாட்டுத் திருப்பதிகளான கோயில் என்னும் திருவரங்கம், திருமலை, காஞ்சிப்பெருமாள் கோயில் என்னும் மூன்றனுள் இது நடுநாயகமாக அமைந்துள்ளது. இத்தகைய பெருமை வாய்ந்த திருவேங்கடத்தைப் பற்றி 213 பாசுரங்கள் நாலாயிரத்தில் காணப்படுவதை ந.சுப்புரெட்டியார் எடுத்துரைத்து விளக்குகின்றார். இவற்றைப் பத்து ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள்.

| பாடியவர்கள் | பாசுரங்கள் |
|---|---|
| பொய்கையாழ்வார் | 10 |
| பூதத்தாழ்வார் | 09 |
| பேயாழ்வார் | 19 |
| திருமழிசையாழ்வார் | 15 |
| திருப்பாணாழ்வார் | 02 |
| குலசேகராழ்வார் | 11 |
| பெரியாழ்வார் | 07 |
| ஆண்டாள் | 16 |
| திருமங்கையாழ்வார் | 62 |
| நம்மாழ்வார் | 62 |

| | |
|---|---|
| மொத்தம் | 213 |

இப்பாசுரங்களைத் திருவேங்கடக் கலம்பக ஆசிரியரான முத்தமிழ்கவிவீரராகவ முதலியார் 'பதின்மர் செந்தமிழ்'[47] எனப் போற்றியுள்ளார். இத்தகைய நெடியோன் குன்றத்து நீலமுகில் பற்றிக்குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், **"ஆழ்வார் பெருமக்களாலும் இராமனுசராலும் அவர்பின் வந்த ஆசாரியப் பெருமக்களாலும் திருவேங்கடம் - நெடியோன் குன்றம் பெரும்புகழ் பெற்றது. இதனால் கற்றவர்கள், இல்லாதவர்கள், பக்தர்கள், சுற்றுலாச் செல்வோர் முதலிய எண்ணற்ற மக்கள் நாடொறும் திருமலைக்கு வருவதும் போவதுமாக உள்ளனர். திருவேங்கடமுடையான் மீது, நெடியோன் குன்றத்து நீலமுகிலின் மீது எண்ணற்ற கதைகள், செவிவழிச் செய்திகள் எழுகின்றன. இவை தலபுராணத்திலும் இடம்பெறுகின்றன. சில தனிப்பாடல்களும் திருவேங்கடமலையைப் பற்றிப் புனையப் பெறுகின்றன. அவை மேலும் மேலும் மக்களிடையே பக்திச்சுடர் கிளர்ந்தெழுவதற்குக் காரணமாக அமைகின்றன. சில பாடல்கள் அழியா வாழ்வும் பெறுகின்றன… இத்தனைச் சிறப்புகளுக்கும் காரணம் திருவேங்கடமுடையான் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையே ஆகும்"**[48] என்கின்றார்.

## ஆழ்வார் பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்

ஆழ்வார் பாசுரங்களில் அகப்பொருள் மரபு சார்ந்த தத்துவம் சிறப்பாக இடம்பெற்றிருப்பதை ந.சுப்புரெட்டியார் தமிழ்ச் சமய மரபு மற்றும் சங்க இலக்கிய மரபு சார்ந்து சுட்டியுள்ளார். **"பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் ஒன்பது வகையான தொடர்புகள் ஏற்பட்டுள்ளன என்று வைணவ தத்துவம் கூறும். இவற்றுள் நாயகன் - நாயகி பாவனையும் (தலைவன் - தலைவி உறவு) ஒன்றாகும். இந்த உறவே ஏனையவற்றுள் சிறந்தது, உயிரானது. இந்த முறையில் பரமான்மாவைத் தலைவனாகவும், சீவான்மாவைத் தலைவியாகவும் வைத்து விளங்கும் பாசுரங்களை நாலாயிரத்தில் காணலாம். வைணவப் பெருமக்கள் சங்ககால நெறியையொட்டி ஓர் அகப்பொருள் தத்துவத்தை அமைத்துக்காட்டிய பெருமையினைப் பெற்றனர். புருடோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன்னர், உலகிலுள்ள ஆன்மாக்கள் யாவும் பெண் தன்மையினை அடைந்து நிற்கும் என்பது அவர்கள் கண்ட தத்துவமாகும். எனவே ஆழ்வார்கள் குறிப்பாக நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பெண் தன்மை எய்திய பல திருக்கோயில் மூர்த்திகளை அனுபவத்ததை அவர்களுடைய திருப்பாசுரங்களில் காணலாம்"**[49] என்கின்றார். ந.சுப்புரெட்டியார் நலம் பாராட்டுதல், கழற்றெதில் மறுத்தல், அறத்தோடு நிலை, வெறிவிலக்கு, மடலேறுதல், உடன்போக்கு, நகர் காட்டல், ஊடல் முதலான சங்க இலக்கியத் துறைகளும் நாலாயிர திவ்வியப் பிரபந்தப்

பாடல்களில் பயின்று வந்திருப்பதைத் தக்க சான்றுகளைக் காட்டி விளக்கியுள்ளார்.

## ஆழ்வார் பாசுரங்களில் தூது

ஒருவர் தம்முடைய கருத்தை வேறொவருக்கு இடைநின்ற ஒருவர் வாயிலாகக் கூறி விடுப்பதே தூது ஆகும். அரசர்கள், பகையரசர்களிடமும், புலவர்கள் வள்ளல்களிடமும், தலைவி தலைவனிடமும், தலைவன் திருமணத்தின் பொருட்டுத் தலைவியைச் சார்ந்தோரிடமும், ஊடலை நீக்கும் பொருட்டுத் தலைவியிடமும் தூதர்களை அனுப்புதல் இலக்கிய மரபாகும். பக்தி இலக்கியங்கள் வளர்ந்த காலத்தில் ஆழ்வார்கள் **'தூது'** என்னும் இத்துறையைப் பயன்படுத்தித் தம் பாசுரங்களில் இலக்கியச் சுவையை மிகுவித்துள்ளனர். ஆழ்வார் திருமொழிகளில் அவர்கள் தாமான தன்மையை விட்டுவிட்டு, பெண் நிலையை ஏற்றுக்கொண்டு பல பாசுரங்களைப் பாடியிருப்பதைக் காண முடிகின்றது. ஆழ்வார் பாசுரங்களில் குருகினங்கள், நாரைகள், அன்னங்கள், பூங்குயில்கள், கிளி, மயில், பூவை, அன்றில்கள், வண்டினங்கள் ஆகியனவற்றைத் தூது விடுப்பதைக் காணமுடிகின்றது. இவற்றை நுட்பமாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார். வியூகத்தில் தூது, விபவத்தில் தூது, பரத்துவ, அந்தர்யாமித்துவத்தில் தூது, அர்ச்சையில் தூது என ஆழ்வார் பாசுரங்களில் காணப்பெறும் தூதினைப் பகுத்தாராய்ந்து விளக்கும் ந.சுப்புரெட்டியார், இந்த ஐந்து நிலைகளிலும் உள்ள எம்பெருமான் ஒருவரேயாவார். இடத்தின் வேற்றுமையேயொழியப் பொருளின் வேற்றுமை இல்லை. வைணவ சமயத்தத்துவத்தின்படி ஐந்து நிலைகளிலும் உள்ள இறைவன் ஒருவனேயாவான்[50] என்பதை **'பாசுரங்களில் தூது'** என்னும் இப்பகுதியில் தெளிவுபட விளக்கியிருப்பது சிந்தனைக்குரியதாகும்.

## நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் - பிரபந்தத் தொகையும் பாசுரத் தொகையும்

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், தென்நாட்டில் வைணவப் பெருமக்களால் பெரிதும் போற்றப்பெறும் சிறந்த பக்தி நூலாகும். இது பன்னிரு ஆழ்வார்களால் பாடப்பெற்ற பக்திப் பாசுரங்களைக் கொண்டதாகும். இந்நூலில் அடங்கியுள்ள பிரபந்தங்களின் தொகை குறித்தும், பாசுரங்களின் தொகை குறித்தும் ந.சுப்புரெட்டியார் நுட்பமாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். இப்பாசுரங்களைத் திரட்டித் தொகுத்து நாதமுனிகள் என்பவர் அடைவுபடுத்தியுள்ளார். இதில் நான்கு தொகுதிகள் உள்ளன. பாசுரங்களை அவர் இசைப்பா, இயற்பா என இருவகையாகப் பிரித்து இசைப்பாக்களை மூன்று தொகுதிகளாகவும், இயற்பாக்களை ஒரு தொகுதியாகவும் அடைவுபடுத்தி வெளியிட்டுள்ளார். அவை வருமாறு.

### I. இசைப்பாத் தொகுதிகள்

1. **முதலாயிரம்**

| **பிரபந்தங்கள்** | **பாசுரங்கள் எண்ணிக்கை** |
|---|---|
| பெரியாழ்வார் திருமொழி | 473 |
| திருப்பாவை | 030 |
| நாச்சியார் திருமொழி | 143 |
| பெருமாள் திருமொழி | 105 |
| திருச்சந்த விருத்தம் | 120 |
| திருமாலை | 045 |
| திருப்பள்ளி எழுச்சி | 010 |
| அமலனாதிபிரான் | 010 |
| கண்ணிநுண் சிறுதாம்பு | 011 |
| **ஒன்பது பிரபந்தங்களுக்குப் பாசுரங்களின் எண்ணிக்கை** | **947** |

இப்பிரபந்தங்களைப் பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர்.

**2. பெரிய திருமொழி**

இதிலடங்கியுள்ள பிரபந்தங்களும் பாசுரங்களின் தொகையும் வருமாறு.

| **பிரபந்தம்** | **பாசுரத் தொகை** |
|---|---|
| பெரிய திருமொழி | 1084 |
| திருக்குறுந்தாண்டகம் | 0020 |
| திருநெடுந்தாண்டகம் | 0030 |
| **மொத்தம்** | **1134** |

இம்மூன்று பிரபந்தங்களும் திருமங்கையாழ்வாரால் அருளிச் செய்யப்பெற்றவையாகும்.

**3. திருவாய்மொழி**

இதிலடங்கிய பிரபந்தம் பாசுரத்தொகையும் வருமாறு

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| திருவாய்மொழி | 1102 |
| மொத்தப் பாசுரங்கள் | 1102 |

இப்பிரபந்தம் நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பெற்றதாகும்.

## II. இயற்பாத் தொகுதி

### 4. இயற்பா

இதில் அடங்கியுள்ள பிரபந்தங்களும் பாசுரங்களின் தொகையும் வருமாறு.

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| முதல் திருவந்ததாதி | 100 |
| இரண்டாம் திருவந்ததாதி | 100 |
| மூன்றாம் திருவந்ததாதி | 100 |
| நான்காம் திருவந்ததாதி | 096 |
| திருவிருத்தம் | 100 |
| திருவாசிரியம் | 007 |
| பெரிய திருவந்ததாதி | 087 |
| திருவெழுக் கூற்றிருக்கை | 001 |
| சிறிய திருமடல் | 001 |
| பெரிய திருமடல் | 001 |
| **ஆக மொத்தப் பத்து பிரபந்தகளுக்குப் பாசுரங்கள்** | **593** |

இவற்றை முறையே முதலாழ்வார்கள் மூவர்களான பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோர் அருளிச் செய்துள்ளனர். இசைப்பாடல் தொகுதிகளுக்குப் பண்ணும் தாளங்களும் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன.

### கம்பனும் ஆழ்வார்களும்

தமிழ்நாட்டில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தோன்றி வைணவப் பக்தியை வளர்த்ததன் விளைவே கம்பனது ‘இராம காதை’[51] என்னும் கருத்தினை ந.சுப்புரெட்டியார் தக்க சான்றுகளைச் காட்டி நிறுவ முயன்றுள்ளார். இது அவரது ஆராய்ச்சித் திறனுக்குச் சான்றளிப்பதாக அமைந்துள்ளது. இந்தப் பக்திப் பெருக்கு இராமனுசர் காலத்தில் இராமாயணம் இலக்கிய வாய்க்காலின் வழியே தமிழ்நாட்டில் பாய்ந்தது இதனை,

**“படிகொண்ட கீர்த்தி இராமாயணம்**
**என்னும் பக்திவெள்ளம்**
**குடிகொண்ட கோயில் இராமாநுசன்”**[52]

என்னும் அமுதனார் வாக்கால் தெளியலாம் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். “**முன்னோர் மொழிப்பொருளைப் பொன்னேபோல் போற்றுதல்**” என்னும் தமிழ் இலக்கிய மரபினையொட்டி தமக்கு முன்பிருந்த புலவர்களின் கருத்துக்களைத் தாராளமாக எடுத்தக் கொண்டுள்ளான் என்பதைக் கம்பராமாயணத்தை ஆழ்ந்து கற்று வெளிப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

## ஆழ்வார்களின் சமுதாயப் பார்வை

பக்தி இயக்கக் காலத்தில் கி.பி.ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது நூற்றாண்டுகளில் தமிழகத்தில் சைவ சமயப் பெரியவர்களான நாயன்மார்களும், வைணவ சமயப் பெரியவர்களான ஆழ்வார்களும் பக்திப் பாடல்களை ஊர்ஊராகச் சென்று பாடி தத்தம் சமயக் கொள்ளைகளைப் பரப்பி வந்தனர். இப்பக்திப் பாடல்கள் மொத்த சமண சமயங்களை எதிர்த்து மக்களை ஒன்று திரட்டுவதற்குப் பெரிதும் பயன்பட்டன. அழ்வார்கள் இசைப்பாடல்களைப் பாடி வைணவக் கோயில்கள் தோறும் இறைவனை வழிபட்டனர். ந.சுப்புரெட்டியார் ஆழ்வார்களிடம் காணப்பட்ட சமுதாயப் பார்வையை

**“சமணர்களும் பௌத்தர்களும் புலனடக்கத்தையும் உண்ணாநோன்பு, இன்ப வெறுப்பு முதலியனவற்றையும் மக்களிடையே வற்புறுத்திக் கொண்டிருந்தனர். துறவறத்தையே பெருமையோடு பேசி அதனை மக்களிடையே பேரளவில் பரப்ப முனைந்தனர். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தியையே போற்றினர். அதற்கு இசைவாக இருக்கும் ஆடல்பாடல் முதலான கலைகளைப் போற்றிப் பாராட்டினர். இல்லற நெறியைப் பின்பற்றி அதில் இன்பமுற்றிருந்தாலும், எந்தத்தொழிலை மேற்கொண்டிருப்பினும் உள்ளத்தை இறைவனுக்கே வைத்து வாழ்க்கை நடத்தினால் அதுவே போதும் என்றனர். பலவகைக் கலைகளையும் வளர்க்கும் பண்ணைகளாகத் திகழ்வதற்கு அவர்களுடைய பக்தி இயக்கம் துணையாக அமைந்தது. மக்களிடையே அவர்களின் இயக்கம் பரவுவதற்குத் தமிழ்ப்பாடல்கள் இசையோடு அமைந்து பெருந்துணை**

**புரிந்தன”**[53] என வெளிப்படுத்தியுள்ளார். இவர் ஆழ்வார் பாடிய பாசுரங்களின் எண்ணிக்கையைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்[54].

| | |
|---|---|
| பொய்கையார் | 100 |
| பூதத்தாழ்வார் | 100 |
| பேயாழ்வார் | 100 |
| திருமழிசையாழ்வார் | 216 |
| நம்மாழ்வார் | 1296 |
| மதுரகவியாழ்வார் | 11 |
| குலசேகராழ்வார் | 105 |
| பெரியாழ்வார் | 473 |
| ஆண்டாள் | 173 |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | 55 |
| திருப்பாணாழ்வார் | 10 |
| திருமங்கையாழ்வார் | 1253 |
| திருவரங்கத்தமுதனார் | 108 |
| **ஆக மொத்தம்** | **4000** |

இராமானுசரின் சீடரான திருவரங்கத்தமுதனார் பாடிய இராமாநுச நூற்றந்தாதியின் 108 பாசுரங்களும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தினுள் அடக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஆழ்வார்களின் பாசுரங்கள் உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடம் பக்தி செலுத்தலாம் என்பதைக் தெளிவாக்கின. உண்ணும் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் **“கண்ணன்”** என்றும், அவனருளாலே பெறும் இன்பங்களே நிலையானவை என்றும் நம்மாழ்வார் கூறிய அறிவுரைக்கும் புதிய வேகம் பிறந்தது. இறைவனுக்கு முன்னர் அனைவரும் சமமானவர்கள். **‘இறைவன் ஒருவனே மக்கள் தலைவன்’** என்னும் கருத்தைப் பரப்ப இப்பாசுரங்கள் துணை நின்றன. மன்னர்களையும் செல்வர்களையும் போற்றிப்பாடுவதற்குப் பயன்பட்ட தமிழ், இறைவனைப் பாடுவதற்கு மட்டுமே பயன்பட வேண்டும் என்ற கொள்கை வலுப்பட்டது. அரசர்களின் அரண்மனைகளுக்கு இருந்த சிறப்புக்கள் திருக்கோயில்கள் பக்கம் மடைமாற்றம் செய்யப்பட்டன. மக்கள் கூட்டம்

அரண்மனைகளை விடுத்துக் கோயில்களின் பக்கம் திரும்பின. விண்ணைமுட்டும் கோபுரங்கள் கோயில்களின் வாயில்களில் தோன்றின. அதிகாலையில் அரசன் துயிலெழுவதற்காகப் பாடப்பெற்ற **“துயிலெடை நிலை”** திருப்பள்ளி எழுச்சியாக மாறியது. அரசனும் வைகறையில் எழுந்து மக்களுடன் சேர்ந்து திருப்பள்ளியெழுச்சி வழிபாட்டில் கலந்து கொள்ளும் நிலை ஏற்பட்டது. அரண்மனை விழாக்கள் திருக்கோவில் விழாக்களாக மாறின. மனிதர்களுக்குள் இருந்து வந்த உயர்வு தாழ்வுகளும், சாதிய வேறுபாடுகளும் ஒருவாறு நீங்குவதற்கு ஆழ்வார்களின் பாசுரங்கள் துணை நின்றன என்பதை ஆழமாகவும் அழுத்தமாகவும் ந.சுப்புரெட்டியார் வெளிப்படுத்தியுள்ளார். அவரது தமிழ் இலக்கியப் பணிகளுள் ஆழ்வார்களின் பாசுரங்களைப் பற்றிய இந்த ஆய்வு நூலே முத்தாய்ப்பாக விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும்.

## ந.சுப்புரெட்டியாரின் ‘கலியன் குரல்’

1989 இல் ந.சுப்புரெட்டியார் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் துறையில் நிகழ்த்திய சிறப்புச் சொற்பொழிவின் தொகுப்பே **‘கலியன் குரல்’** என்னும் இந்நூலாகும். **‘கலியன்’** என்னும் பெயர் திருமங்கையாழ்வாரையே குறிக்கும். சோழமண்டலத்திலுள்ள ‘திருவாலி நாடு’ என்றும் **‘மங்கை நாடு’** என்றும் அழைக்கப்பெறும் இன்றைய திருநகரியே திருமங்கையாழ்வார் பிறந்த ஊராகும்.

சோழ மன்னனின் படைத்தலைவனாகத் திகழ்ந்த **நீலன்** என்பவன் கள்ளர் குலத்தைச் சேர்ந்தவன். இந்த நீலனுக்கு நள ஆண்டு கார்த்திகை மாதம் மகனாகப் பிறந்தவர் திருமங்கையாழ்வார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயரே **‘கலியன்’** என்பது. இவரே பின்னர் திருமங்கையாழ்வார் ஆனார். தம் தந்தையாகிய நீலனுக்குப் பின்னர் கலியன் ஆலிநாட்டின் தலைவனாகவும், சோழமன்னனின் படைத்தலைவனாகவும் விளங்கினான். கலியனுக்கு நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாள் ஊதுவான், தோலாவழக்கன் என்னும் நான்கு அமைச்சர்கள் இருந்தனர்.

கலியன் ஊர்ந்து வந்த குதிரைக்கு **ஆடல்மா** என்பது பெயராகும். ஆலிநாட்டைச் சேர்ந்த திருவெள்ளக்குளம் என்னும் ஊரில் மருத்துவத் தொழில் செய்து வந்த ஸ்ரீவைணவர் ஒருவரின் வளர்ப்பு மகளான குமுதவல்லியாரை, கலியன் திருமணம் செய்து கொண்டு இல்லற வாழ்வினை இனிதே மேற்கொண்டார். கலியன் தன்கையில் அகப்பட்ட செல்வத்தையெல்லாம் பாகவதர்களுக்கு அமுது படைப்பதிலேயே (ததியாராதனை) செலவிட்டார். இதனால் அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப்பணமும் செலவாயிற்று. இதனால் அரசன் கலியனை ஒரு

கோயிலில் சிறையிலிட்டான். மூன்று நாள் அமுது செய்யாமல் தனித்திருந்த கலியனுக்கு காஞ்சி வரதராசப் பெருமான் பேரருளால் பெரும் பொருளைக் கச்சியில் பெற்று அரசனுக்குக் கப்பம் கட்டினார் என்றும் கலியன் வரலாற்றை அறிந்து கொள்ள முடிகின்றது.

## கலியன் குரல் நூல் வரலாறும் பகுப்பும்

ந.சுப்புரெட்டியார் **'கலியன் குரல்'** என்னும் இந்நூலினுள் கலியன் வாழ்வும் வழியும், அருளிச்செயல்களில் இலக்கிய இன்பம், அருளிச் செயல்களில் தத்துவக் கருத்துக்கள் என்னும் மூன்று இயல் பகுப்புக்களில் துணைநூற்பட்டியல், பின்னிணைப்புக்கள் உட்பட மொத்தம் 225 பக்கங்களில் இந்நூலின் கருத்துக்களை அமைத்துள்ளார்.

## கலியனின் வடநாட்டுத் திருத்தலப்பயணம்

வாள் வலிமையால் மாயோனிடம் மந்திரம் பெற்ற திருமங்கையாழ்வார் **('ஓம் நமோ நாராயணாய')** மந்திரம் பெற்ற மகிழ்ச்சியால் அர்த்தபஞ்சக ஞானத்தைப் பெறுகின்றார். இதனால் பக்தி வெள்ளப் பெருக்கெடுத்துப் பல பாசுரங்களைப் பாடுகின்றார். **'நான்கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்'** என்னும் தொடரை இறுதியாகக் கொண்டு பத்துப் பாசுரங்களைக் கொண்ட முதல் திருவந்தாதியை அவர் பாடினார். திருமந்திரம் பிறந்த இடமாகிய **பதரிகாச்சிரமத்தைச்** சேவிக்க வேண்டும் என்ற ஆவல் திருமங்கையாழ்வாருக்கு ஏற்படுகின்றது. ந.சுப்புரெட்டியார், கலியனின் வடநாட்டுத் திருத்தலப் பயணத்தை, **"திவ்விய தேசங்களே திருமந்திரப் பொருளுக்கு எல்லை நிலமாக அமைகின்றன. இத்தகைய திவ்யதேசங்களை மற்றுமுள்ள ஆழ்வார்கள் அனுபவித்தார்களெனினும் திவ்யதேச அனுபவமே திருத்தலப் பயணமாகக் கொண்டவர் இவ்வாழ்வார் ஒருவரே ஆவார். வதரியை நோக்கிச் சென்ற ஆழ்வார் முதலில் *திருப்பிரிதி* என்ற திவ்விய தேசத்தை அடைகின்றார். அதனை மங்களாசாசனம் செய்து கொண்டு வடநாட்டுத் திருப்பதிகளாகிய இமயமலையிலுள்ள வசரிகாச்சிரமம், சாளக்கிராமம் ஆகியனவற்றை அனுபவித்து விட்டு நைமிசாரணியம், வடமதுரை, அயோத்தி, பிருந்தாவனம், ஆயர்பாடி, வண்துவராபதி, சிங்கவேல் குன்றம் ஆகியனவற்றை மங்களாசாசனம் செய்கின்றார். இறுதியாக 'ஈரத்தமிழ்' நடையாடுவதற்கு எல்லை நியமான திருவேங்கடத்தைச் சேவிக்கின்றார். திருப்பாற்கடலையும், பரமபதத்தையும் மானசீகமாகக் கொண்டு அனுபவித்து மங்களாசாசனம் செய்த வடநாட்டுத் திருத்தலப் பயணத்தைத் தலைக்கட்டுகின்றார்"**[55] அவர் திருமங்கையாழ்வார் வடநாட்டுத் திருத்தலப் பயணத்தை மேற்கொண்டார் எனவும் கூறப்படும் இருவேறு கருத்துக்களின் உண்மையைச் சீர்தூக்கி ஆராய்ந்து தக்க சான்றுகளின் வாயிலாக கலியன் மேற்கொண்ட வடநாட்டுத் திருத்தலப் பயணத்தில் உறுதி செய்துள்ளார்.

## கலியன் படைத்த பாசுரங்கள்

திருமங்கையாழ்வார் வைணவ இலக்கிய உலகத்திற்குப் பெரிய திருமொழி, திருக்குந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் ஆறு பிரபந்தங்களைப் பாடி அருளியுள்ளார். நம்மாழ்வார் பாடிய நான்கு திருமறைகளின் சாரமாகத் திகழும் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு பிரபந்தங்களும் ஆறு அங்கங்களாகக் கொண்டு இப்பிரபந்தங்கள் அமைந்திருப்பதாகக் கொள்ளலாம்.

## கலியனின் பக்தி ஈடுபாடு

திருமங்கையாழ்வார், திருமால் பக்தியில் ஈடுபட்டு அவனுக்குத் தான் தொண்டு புரிந்த தன்மையையும், திருமால் தன்னை ஆட்கொண்ட பெருமையினையும் பல பாடல்களில் உள்ளமுருகிப் பாடியுள்ளார். அவர் நாகப்பட்டினத்திலுள்ள பௌத்தப் பள்ளியில் இருந்த பொற்சிலையொன்றினைக் களவில் கவர்ந்து அதனை உருக்கி விற்றதனால் கிடைத்த பொருளைக் கொண்டு திருவரங்கத்தில் அழகிய மணவாளனுக்கு விமானம், மண்டபம், கோபுரம், மதில் ஆகியனவற்றை அமைத்தார் என்பது குருபரம்பரையில் காணப்பெறும் செய்தியாகும். அவர் திருவரங்கத்தில் செய்த திருப்பணிகளை ஒப்புக்கொண்ட போதிலும், நாகைச் செய்தி ஏற்குமாறு இல்லை என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். திருக்குடந்தை ஆராவமுதன் மறைந்து போயிருந்த திவ்வியப்பிரபந்தம் வெளிவருவதற்கு திறவுகோலைத் தந்தவன். இதனால் கலியன் அந்த ஆராவமுதனிடம் அளவற்ற ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதை அவரது பாசுரங்களின் மூலம் தெளிய முடிகின்றது. திருமங்கையாழ்வார் குடந்தை எம்பெருமானை **‘குடந்தை உத்தமன்’, ‘தன் குடந்தை நகராளன்’** எனப் போற்றுகின்றார். இவர் பாடிய **‘திருவெழுக் கூற்றிருக்கை’**யும் இதனைத் தெளிவுபடுத்துகின்றது. ஆயினும் திருமங்கையாழ்வார் மிகவும் ஈடுபாடு கொண்ட எம்பெருமான் **திருக்குறுங்குடி நம்பியே**. இந்த நம்பியின் அருளால் தான் காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் மகனாக நம்மாழ்வார் பிறந்தார் என்பதும் கருதத்தக்கதாகும். திருமங்கையாழ்வார் தன் மனைவியாகிய குமுதவல்லியோடு தம் இறுதிக் காலத்தை இங்கேயே கழித்தார்.

## அருளிச் செயல்கள் - இலக்கிய இன்பம்

ந.சுப்புரெட்டியார் திருமங்கையாழ்வாரின் பாசுரங்களில் காணலாகும் கற்பனையாற்றல், ஒலிநயம், யாப்பமைதி, குறிஞ்சி நிலக்காட்சிகள், மருதநிலக்காட்சிகள், சில ஊர்களைப் பற்றிய குறிப்புகள், நாட்டுப்புற இலக்கியக் கூறுகள், படிமங்கள், செவிப்புலப்படிமங்கள், சுவைப்புலப் படிமங்கள், நாற்றப்புலப் படிமங்கள், நொப்புலப் படிமங்கள், இயக்கப்புலப் படிமங்கள், படிமங்களின் கலவை, கவிதை அனுபவம் ஆகிய இலக்கிய இன்பம் தரும் பகுதிகளைத் தக்க சான்றுகளைக் காட்டி

விளக்கியுள்ளார். இப்பகுதி அவருடைய இலக்கியத்தைச் சுவைக்கும் திறனுக்கும் ஆராய்ச்சி செய்யும் திறனுக்கும் சான்றளிப்பன.

## ஒலிநயம்

கவிதையை, உரைநடையிலிருந்து வேறுபடுத்துவது அதன் ஒலிநயங்களே ஆகும். ஒலிநயத்திற்கும் புலன்களை உள்முகமாகத் திருப்பும் ஆற்றல் உண்டு. உள்ளக் கிளர்ச்சியுள்ள கருத்துக்களைக் கூறும் கவிதையும் பேச்சும் நல்ல ஒலிநயத்தைப் பெறுகின்றன. கவிதையின் உச்சரிப்பு அழுத்தங்கள் தெளிவான அடையாளங்களைப் பெறுகின்றன. சொற்றொடர்கள் திடீர் திடீரெனத் தோன்றுகின்றன. அவசியமான இடைநிறுத்தங்கள் அடிக்கடி நிகழும். பாட்டின் ஒலிநயத்தில் மனித உள்ளம் இன்புற்றுத் திளைக்கின்றது. ஒலிநயமே கவிதையனுபவமாகவும் அமைகின்றது. இதனை ந.சுப்புரெட்டியார்,[56]

**“உள்ஊரும் சிந்தைநோய் எனக்கே தந்து, என்**
**ஒளிவளையும் மாநிறமும் கொண்டார் இங்கே**
**தெள்ஊரும் இளந்தெங்கின் தேறல் மாந்திச்**
**சேல்உகளும் திருவரங்கம் நம்ஊர் என்ன,**
**கள்ஊரும் பைந்துழாய் மாலை யானைக்**
**கனவிடத்தில் யான் காண்பென் கண்டபோது**
**புள்ஊரும் கள்வாநீ! போகேல் என்பன்;**
**என்றாலும் இது நமக்கோர் புலவி தானே”**[57]

என்னும் திருமங்கையாழ்வாரின் திருநெடுந்தாண்டகப் பாசுரப்பாடலை சுட்டிக் காட்டி விளக்குகின்றார். இப்பாடலில் பரகால நாயகி பேசுகின்றாள். இது மகள் பாசுரமாக அமைந்துள்ளது. இப்பாடலை இசையூட்டிப் படித்தல் வேண்டும். அவ்வாறு இசையூட்டிப் படிக்கும்போது இப்பாடலின் சொற்களிலுள்ள ஒலிநயத்தால் பரகால நாயகி கொண்ட காதல் படிப்பவர்களிடமும் தோன்றும். நாமும் ஆழ்வார் நாயகி ஆகிவிடலாம்.

## யாப்பமைதி

யாப்பு உறுப்புக்களால் கட்டப்பெறுவதே கவிதையாகும். கவிதையில் இடம்பெறும் சொற்கள் ஒருவித ஒழுங்கில் - யாப்பு முறையில் அமைந்து அவ்வவற்றிற்குரிய இடங்களில் இருக்கும்போது அக்கவிதை புதிய ஆற்றலையும் அழகினையும் பெறுகின்றது. கவிதையைச் சிறந்த சொற்களைச் சிறந்த முறையில் அமைக்கும் கலையென்றும், மானிட உணர்ச்சிகளைச் சரியான வடிவத்துடனும், ஒலிநயத்துடனும் அமைக்கும் வெளியீடே என்றும் திறனாய்வாளர்கள் கூறுகின்றனர். கற்பனையைப் பற்றிக் கூறும்போது **‘விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்’** என்பர். விருத்தயாப்பின் பல்வேறு வகையின்

மா்மங்களையும் இதயத்துடிப்புக்களையும் நன்றாக உணா்ந்தவன் கம்பன். இவ்வாறே **‘நாறுகவிப் பெருமாள்’** என்னும் விருதுபெற்ற திருமங்கையாழ்வாரும் விருத்தப்பாவினை நன்கு ஆண்டுள்ளாா். இதனைத் திருமங்கையாழ்வாரின் பின்வரும் பாசுரத்தைச் சுட்டிக்காட்டி விளக்கி உள்ளாா் ந.சுப்புரெட்டியாா்,

**“கலையும் கரியும் பரிமாவும்**
**திரியும் கானம் கடந்து போய்**
**சிலையும் கணையும் துணையாகச்**
**சென்றான் வென்றிச் செருக்களத்து”**[58]

என்பது விருத்தப்பாவின் ஒருவகையாகும்.

**“மல்லரை அட்டு மாள**
**கஞ்சனை மலைந்து சென்று**
**பல்லரசு அவிழ்ந்து வீழப்**
**பாரதப் போா்மு டித்தாய்”**[59]

இது விருத்தப்பாவின் பிறிதொரு வகையாகும்.

**“பகலும் இரவும் தானேயாய்**
**பாரும் விண்ணும் தானேயாய்**
**நிகரில் சுடராய் இருளாகி**
**நின்றாா் நின்ற ஊா்போலும்”**[60]

இது விருத்தப்பாவின் மூன்றாவது வகையாகும்.

**“வானோா் அளவும் முதுமுந்நீா்**
**வளா்ந்த காலம் வலியுருவின்**
**மீனாய் வந்து வியந்துய்யக்**
**கொண்டதன் தாமரைக் கண்ணன்”**[61]

என்பது விருத்தப்பாவின் நான்காவது வகையாகும். இங்ஙனம் திருமங்கையாழ்வாரின் அறுசீா் விருத்தத்தில் மட்டும் பல வகைகள் காணப்படுவதை ந.சுப்புரெட்டியாா் சுட்டியுள்ளாா். இத்தகைய இலக்கிய இன்பம் தரும் சுவையான பகுதிகளே ஆழ்வாா்களின் பாசுரங்களை அழகுபடுத்துவதாக அவா் கருதுகின்றாா்.

## கட்புலப் படிமம்

திருமங்கையாழ்வாரின் பாசுரங்களில் பல்வேறு வகையான படிமங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் கட்புலப் படிமமே மிகுதி. இப்படிமங்கள் படிப்போரின் மனத்தில் நிலையான பதிவினை ஏற்படுத்துகின்றன. இதனை ந.சுப்புரெட்டியாா், திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியில் வரும்.

**"பவ்வநீர் உடை ஆடை ஆகச் சுற்றி**
**பார் அகலம் திருவடியா பவனம் மெய்யா**
**செவ்விமா திரம்எட்டும் தோளா அண்டம்**
**திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்"[62]**

என்னும் பாடல்வரிகளைக் கொண்டு விளக்கியுள்ளார். இப்பாசுரத்தில் எம்பெருமானின் உலக உருவமாயிருக்கும் நிலையை அனுபவித்து மகிழ்கின்றார். எங்கும் பரவியுள்ள விபுவான எம்பெருமானுக்குக் கடல்நீரே ஆடையாகும். பூமிப்பரப்பெல்லாம் திருவடியாகும். வாயு மண்டலமே திருமேனியாகும். திசைகள் எட்டும் திருத்தோள்கள் ஆகும். அண்ட கடாட்சம் திருஅபிடேகம் ஆகும். இப்பாசுரத்தில் இப்பேருருவம் கட்புலப் படிவமாக அமைவது குறிப்பிடத்தக்கது.

## அருளிச் செயல்களில் தத்துவக் கருத்துக்கள்

பன்னிரு ஆழ்வார்களில் சடகோபர், **'நம்மவர்'** எனப்போற்றும் பெருமைபெற்ற **'நம்மாழ்வார்'** என்ற சிறப்புப்பெயரால் அழைக்கப்பெறுகின்றார். ஏனைய ஆழ்வார்களை நம்மாழ்வாரின் ஒவ்வொரு அவயமாகவும், நம்மாழ்வாரை அவயவியாகவும் வழங்குவது வைணவ மரபாகும். ஆழ்வாரின் திருமுடியே நம்பெருமாள் ஆவார். பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பொய்கை, பேயாழ்வார்களைத் திருக்கரங்களாவும், பெரியாழ்வாரைத் திருமுக மண்டலமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும், திருப்பாணாழ்வாரையும் திருக்கைகளாகவும், தொண்டரடிப் பொடியாழ்வாரைத் திருமார்பாகவும், திருமங்கயைாழ்வாரைத் திருநாபியாகவும், மதுரகவியையும் எம்பெருமானாரையும் திருவடிகளாகவும் பெரியோர் அருளிச் செய்துள்ளார்.

நம்மாழ்வார் திருமாலின் திருவடியில் எப்போதும் விளங்குகின்றார் என்பது வைணவ சமயக் கொள்கையாகும். அதனால் தான் திருமால் திருக்கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்கச் செல்வோரின் முடிமீது அவருடைய திருவடியாக வைக்கப்பெறுவதைச் **'சடகோபன்', 'சடாரி'** என்று வழங்குகின்றனர். இப்பெயர்கள் நம்மாழ்வாரின் திருப்பெயர்களாகும். இதனால் நம்மாழ்வாரின் தத்துவமே ஏனைய ஆழ்வார்களின் - வைணவத்தின் தத்துவமாகும்.

சாத்திர நூல்கள் தத்துவங்களை விளக்குவதற்காக எழுந்தவை. ஆதலால் அவற்றில் தத்துவங்கள் அளவை முறையில் கோவையாக எடுத்துரைக்கப்படுகின்றன. ஆனால் தோத்திர நூல்கள் எம்பெருமானின் புகழ்பாடுபவை. இவற்றுள் தத்துவக் கருத்துக்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகவே காணப்பெறும். இதனைத் திருமங்கையாழ்வாரின் பாசுரங்களில் காணலாம். வைணவ சமயக் கொள்கைகளைத் தத்துவம், இதம், புருஷார்த்தம் என மூவகைப்படுத்தி விளக்கலாம்.

### சரீர சரீரி பாவனை

வைணவத்தில் ஞானத்திற்கு இ.டமான ஆன்மா அல்லது உயிரே சித்து என வழங்கப்பெறும். அசித்து என்பது அறிவில்லாத பொருளாகும். அசித்தை சுத்த சத்துவம், மிச்ர தத்துவம், சத்துவ சூனியம் என மூவகைப்படுத்தி விளக்குவர். அசித்தின் இந்த மூன்று பகுதிகளும் ஒவ்வொரு ஆன்மாவும் இறைவனின் திருமேனியாக உள்ளன என்பது வைணவத் தத்துவமாகும்.

திருமங்கையாழ்வார்,

**"திடவிசும்பு ஏரிநீர் திங்களும் சுடரும்**
**செழுநிலத்து உயிர்களும் மற்றும்**
**படர்பொருள் களுமாய் நின்றவன்"**[63]

என்ற பாசுரத்தில் ஆன்மா - இறைவனின் திருமேனி என்ற இரண்டையும் சேர்த்துக் கூறியுள்ளார். அவர்,

**"பவ்வநீர் உடையாடை ஆகச் சுற்றி**
**பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா**
**செவ்விமா திரம்எட்டும் தோளா அண்டம்**
**திருவடியா நின்றான்"**[64]

என்னும் பாசுரத்தில் அசித்தை மட்டுமே இறைவனது உடலாகக் காட்டுகின்றார். ந.சுப்புரெட்டியார், திருமங்கையாழ்வாரின் அருளிச் செயல்களான பாசுரங்களில் காணலாகும் தத்துவக் கருத்துக்களை உண்டு உமிழ்தல், இறைவனின் ஐந்துநிலைகள் - அதற்கான தத்துவ விளக்கங்கள், கிளை வியூகங்கள், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம், திவ்வியதேச அனுபவம், பிறருக்கு உபதேசம், மனத்தை ஆற்றுப்படுத்துதல், எம்பெருமானின் வடிவழகை வருணித்து அனுபவித்தல், திவ்விய தேசங்களின் வளங்களைப்பாடுதல், திருமாலின் வீரச்செயல்களையும் வெற்றிச் செயல்களையும் வெளிப்படுத்துதல், திருமங்கையாழ்வாரின் இலக்கிய மரபின் தத்துவம், 'ஓம் நமோ நாராயணாய' என்னும் திருமந்திரத்தின் பெருமை, திருமால் அடியவர்களின் பெருமை என்னும் நிலைகளில் தக்க சான்றுப் பாடல்களைக் காட்டி, அதன் உட்பொருள் தத்துவங்களை நுணுக்கமாக வெளிப்படுத்தியுள்ளார். இவ்விடங்களில் எல்லாம் திருமங்கையாழ்வார் தாமான தன்மையில் திருமாலை அனுபவித்து அதன் அனுபவங்களைத் தத்துவமாக வெளிப்படுத்தி உள்ளார்.

### நாயக – நாயகி பாவனை மரபு

திருமங்கையாழ்வார் தாமான தன்மையை விடுத்து இறைவியின் தன்மையை ஏற்றுத் தன்னைப் பெண்ணாகவும்

(நாயகி), இறைவனைத் தலைவனாகவும் (நாயகன்) கொண்டு சில பாசுரங்களைப் பாடி அனுபவித்துள்ளார். இந்த உறவே வைணவ தத்துவத்தில் நாயகன் நாயகி உறவு எனப் பேசப்படுகின்றது. இந்த முறையில் பரமான்மாவைத் தலைவனாகவும், சீவான்மாவைத் தலைவியாகவும் கொண்டு பாகவத அனுபவம் நடைபெறும். ஆழ்வார்கள் சங்கப் புலவர்கள் பின்பற்றிய அகப்பொருள் தத்துவநெறிக்குப் புதுவிளக்கம் கண்டனர். பெண்கள் மீது வைத்துப் பேசப்பெற்ற **'விஷயாந்திர காமம்'** மாதவன் மீது வைத்துப் பேசப்பெறும் **'பகவத் விஷய காமமாக'** வளர்த்தெடுத்த பெருமை ஆழ்வார்களுக்கே உண்டு. நாயகன் - நாயகி பாவனை மரபினைக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், **"தம் அகப்பொருள் பாசுரங்களில் விஷயாந்திர காமத்திற்குரிய துறைகள் யாவும் பகவத் விஷய காமத்திற்கும் வழங்கிய சிறப்பு ஆழ்வார்களுக்கு உண்டு. சிற்றின்ப அனுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாயிருப்பது போல, பகவத் விஷயானுபவத்திற்கும் பரபக்தி, பரஞானம், பரமபக்தி இவை இன்றியமையாதவையாக இருப்பதால் அவையே கொள்ளை முதலான சொற்களால் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் கூறப்பெறுகின்றன என்று சமயச்சான்றோர் கொள்வர். 'பரபக்தி' என்பது எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்ற ஆவல், 'பரஞானம்' என்பது எம்பெருமானை நேரில் காணல், 'பரமபக்தி'என்பது மேலும் மேலும் இடையறாது அனுபவிக்க வேண்டுமென்ற தூண்டல்"**[64] என இதனைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

## திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இதம்

வைணவர்கள் வீடுபேற்றுக்குரிய வழிமுறைகளாகப் பின்பற்றும் பக்திநெறியும் பரமபக்தி நெறியுமே இதமாகும். பிரபத்தி நெறியை உபதேசித்து வீடுபேறு அடைந்தவர் நம்மாழ்வார் ஆவார். இவர் அர்ச்சாவதாரத்தில் பிரபத்தி செய்துள்ளார். திருமங்கையாழ்வார் கடைப்பிடித்த நெறியும் இதுவேயாகும். நம்மாழ்வார் திருவேங்கடவனைச் சரணடைந்து **'அகலகில்லேன்'** (திருவாய். 6.10:10) எனத் தொடங்கும் பாசுரமே சரணாகதித் தத்துவத்தை விளக்கும் திருமறை போன்றதாகும்.

## ந.சுப்புரெட்டியாரின் திருத்தலப் பயண விளக்க நூல்கள்

ந.சுப்புரெட்டியார் வைணவத் திருத்தலங்கள் அனைத்திற்கும் புனிதப் பயணங்களை மேற்கொண்டு, எம்பெருமானைத் தரிசித்து இறையனுபவம் பெற்றவர். அவர் தம் புனிதப் பயண அனுபவங்களை விளக்கி அதனைப் படிப்பவரும் உய்த்து உணர்ந்து இன்புறும் வகையில் மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள் - பகுதி I, II முதலான ஆறு புனிதப் பயணநூல்களை எழுதியுள்ளார்.

## சோழ நாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி

**'சௌலப்பியத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்'** என்று முமுட்சுப்படி பேசுகின்றது. ஆழ்வார்கள் இதையே சேதநருக்கு நலம் அளிப்பதெனக் கொண்டனர். இந்த அர்சாவதார எம்பெருமான்களை 108 என்று கணக்கிட்டு கூறுபவர்களின் மீது பாசுரங்களைப் பாடி போற்றியுள்ளனர். இந்த எம்பெருமான்கள் எழுந்தருளியுள்ள சோழநாட்டுத் திவ்விய தேசங்கள் நாற்பது ஆகும். ந.சுப்புரெட்டியார், **'சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி'** என்னும் இந்நூலினுள் அணி அரங்கத்து அரவணைப் பள்ளியான் (திருவரங்கம்), உறையூர் அழகிய மணவாளன், கரம்பனூர் உத்தமன், திருவெள்ளறை அஞ்சன வண்ணன், அன்பில் திருவடி அழகிய நம்பி, திருப்பேர் கிடக்கும் திருநாரணன், திருத்தஞ்சை எம்பெருமான், கண்டியூர் கமலநாதன், திருக்குடந்தை ஆராவமுதம், திருவிண்ணகர் ஒப்பிலியப்பன், நந்திபுர விண்ணகரத்துநாதன், நறையூர் நின்ற நம்பி, திருச்சேறை எம்பெருமான், வெள்ளியங்குடி கோலவில் இராமன், புள்ளம் பூதங்குடிப் புனிதன், ஆதனூர் ஆண்டளக்கும் ஐயன், ஆற்றங்கரைக் கிடக்கும் கண்ணன், திருக்கண்ணங்குடிக் கண்ணன், நாகை அழகியார், கணமங்கைக் கற்பகம் முதலான திருத்தலங்களைப் பற்றி இந்நூலினுள் விளக்கமாக எழுதியுள்ளார். நூற்றி எழுபாத்தைந்து பக்கங்களைக் கொண்ட இந்நூல் வைணவர்களின் வைணவ சமய வழிபாட்டிற்குப் புனித நூலாக விளங்குகின்றது.

## அர்த்த பஞ்சகம்

உறையூர் திருப்பாணாழ்வார் தோன்றிய திருத்தலமாகும். அவர் உறையூர் அழகிய மணவாளனும் அரங்கநாதர் அப்பனாகவும் திகழும் எம்பெருமான் மீது பத்துப் பாசுரங்களாக அமைந்த **'அமலனாதிபிரான்'** என்ற சிறிய பிரபந்தத்தைப் பாடியுள்ளார். யாழையே தெய்வமாகப் போற்றி வந்த பாணர் குலத்தில் தோன்றிய பாணர்விளக்காகிய திருப்பாணாழ்வார் திருவரங்கப் பெருமானை இசைப்பயனாகவும் கண்டு அனுபவித்தவர் ந.சுப்புரெட்டியார், **"இறைவன் இயல்பு, உயிர் இயல்பு, உயிர் இறைவனை அடைவதற்கு உள்ள தடையின் இயல்பு, அத்தடையை நீக்கி உயிர் இறைவனை அடைவதற்குரிய உபாயம் (வழி), இறைவனை அடைந்து பெறும் பயன் என்னும் அர்த்த பஞ்சகங்களை"**[65] ஆழ்ந்த தத்துவப் பார்வையில் இப்பகுதியில் விளக்கி உள்ளார். இந்நூலினுள் ந.சுப்புரெட்டியார் இருபது சோழநாட்டுத் திருப்பதிகளை விளக்குவதுடன் இறைவன் மூன்று காரணங்களாக இருக்கும் நிலை, பெரிய பிராட்டியாரின் புருஷகாரம், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் தொகுக்கப் பெற்ற வரலாறு, வைணவத் தத்துவ விளக்கம், அழகின் தத்துவமே ஆண்டவன் தத்துவம் ஆகியனவற்றைப் பயன்பாட்டு நோக்கிலும், தத்துவப் பார்வையிலும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தியுள்ளார். புனிதப்

பயண நூல்கள் எப்படி எழுதப்பட வேண்டும். ஆன்மீகம் இறைச் செய்திகளை இறையன்பர்களுக்கு எப்படிப் புரிய வைக்க வேண்டும் என்பதை நன்குணர்ந்து அதற்கு இலக்கணமாகவே ந.சுப்புரெட்டியார் இந்நூலைப் படைத்துள்ளார். சைவ சமயத்தவரான இவர், வைணவ சமயத்தில் ஆழங்கால்பட்டு வைணவத்தின் அனைத்துப் போக்குகளையும் பன்முகப்பார்வையில் ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தி இருப்பது இவரது தமிழ் இலக்கியப் பணிக்கும் தமிழ்ச் சமயப் பணிக்கும் சான்றளிப்பனவாக அமைந்துள்ளது.

## சோழநாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி

ந.சுப்புரெட்டியாரின் ஆழ்ந்த ஆராய்ச்சித்திறனின் வெளிப்பாடாக அமைந்திருப்பது **'சோழநாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி'** என்னும் இந்நூலாகும். சுந்தரத் தெலுங்கு பேசும் ஆந்திர நாட்டிலும் செந்தமிழைப் பரப்பிய பெருமைக்குரியவர் ந.சுப்புரெட்டியார். அறிவியல், தமிழ்மொழி, தமிழிலக்கியம், வைணவ சமயம் ஆகியனவற்றில் ஆழ்ந்த அறிவாற்றலும் புலமையும் பெற்றவர். **'சமய நூல்கள்'** செந்தமிழைச் செழிப்புடன் வளர்த்துள்ளமையையே தமிழகத்தின் பாரம்பரியப் பண்பாட்டில் காணமுடிகின்றது. சைவ நெறியும், பௌத்த நெறியும், சமண நெறியும், வைணவ நெறியும் தமிழர்கள் வாழ்வில் ஊடுருவி இன்பத்தமிழ்பாடி எண்குணத்தான் பெருமையினைத் தமிழில் போற்றி மகிழ்ந்திருப்பதைத் தமிழக வரலாறும் தமிழ் இலக்கிய வரலாறும் சான்று காட்டிப் பேசுகின்றன.

## கோதைத்தமிழ்

**'தெளியாத மறை நிலங்கள் தெளிய ஓதிய'** பெருமை வைணவப் பாசுரங்களுக்கே உண்டு. **'வேதம் அனைத்திற்கும் வித்தாகும் கோதைத் தமிழை'** வில்லிபுத்தூராரின் கோதையின் திருப்பாவையில் கண்டு மகிழலாம். திருப்பதிக்கும், தென் மண்டலத்திலே இராமநாதபுரம் மாவட்டத்திற்கு மட்டுமே வைணவம் சொந்தமன்று, சோழநாட்டுத் திருப்பதிகளைக் கண்ணுற்றால்தான் வைணவம் செழித்து வளர்ந்த வரலாறு நன்கு புலப்படும் என்பதை ந.சுப்புரெட்டியார் இந்நூலினுள் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

சித்திரக் கூடத்து செங்கண்மால், காழிச் சீராம விண்ணகரத்தாடாளன், இந்தளூர் அந்தணன், தலைச்சங்க நாண்மதியப்பெருமாள், சிறுபுலியூர் அருமா கடலமுதன், கண்ணபுரத்துக்கருமணி, அணிஅழுந்தூர் நின்ற அஞ்சனக்குன்றம், வெள்ளக்குளத்து அண்ணன், நாங்கூர்ப் புருடோத்தமன், நாங்கூர் வைகுந்தநாதன், நாங்கூர் நந்தாவிளக்கு, திருத்தெற்றியம் பலத்துச் செங்கண்மால், செம்பொன்செய்கோயில் பேரருளாளன், நாங்கூர்க்குடமாடு கூத்தன், வயலாளி மணவாளன்,

திருத்தேவனார்த் தொகை தெய்வநாயகன், திருக்கூடலூர் வையம் காத்த பெருமாள், திருமணிக்கூடத்து நாயகன், காவளம் பாடிக்கண்ணன், பார்த்தன் பள்ளிச் செங்கண்மால் ஆகிய சோழநாட்டுத் திருப்பதிகளை படிப்பவர் கண்முன்னால் எழுத்தோவியமாகச் சித்தரித்துக் காட்டியுள்ளார் ந.சுப்புரெட்டியார். இந்நூலினுள் நுட்பமான உட்பொருள் பொதிந்த வைணவத் தத்துவங்களை எளிமையாகவும், எளிய நடையிலும் அனைவருக்கும் புரியும் வகையில் எழுதியிருப்பது அவரது ஆழமான அறிவினைக் காட்டுகின்றது.

## சம்பந்தர் - திருமங்கையாழ்வார் வாதம்

**'திராவிட சிசு'** என்று ஆதிசங்கரரால் போற்றப்பட்டவர் திருஞானசம்பந்தர். அவருக்கும் திருமங்கையாழ்வாருக்கும் சொற்போர் ஏற்பட்டது. **'ஒருகுறளாய் இருநில மூவடி மண்வேண்டி'** என்ற திருமங்கையாழ்வாரின் திருமொழியைக் கேட்டவுடன், சம்பந்தர் வியந்து தமது வேலாயுதத்தை இவரது திருமுன் காணிக்கையாகச் சமர்ப்பித்தார் என்ற செய்தியை ந.சுப்புரெட்டியார், **"காழிச் சீராம விண்ணகரத்தில் ஆழ்வார் திருத்தலப் பயணமாகப் பரிவாரங்களுடன் எழுந்தருளும்போது அவருடன் வந்த சிலர் 'நாலுகவிப் பெருமாள் வந்தார்' 'பரகாலன் மத்தகஜம் வந்தார்' என்ற குரல் ஒலிகளை எழுப்பி ஆழ்வாரின் பெருமைகளை விதந்து ஓதிச் சென்றதாகவும், இவ்வூரிலிருந்த சில சைவ அடியார்கள் இக்கூட்டத்தின் முன்வந்து எங்கள் ஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இருக்கும் இடத்தில் இங்ஙனம் விருதூதிச் செல்லலாகாது என்று சொல்லித் தடுத்ததாகவும், அது கேட்டு ஆழ்வார் சம்பந்தப்பெருமான் உள்ளவிடத்திற்குச் சென்று அவருடன் வாதப்போர் செய்யத் தொடங்கினதாகவும், அப்போது நாயனார் ஆழ்வாரை நோக்கி 'உம் கவித்திறத்தை யாம்காணுமாறு முந்துற முன்னம் ஒருபாடல் பாடும்' என்று சொன்னதாகவும் உடனே ஆழ்வார் சீராம விண்ணகர் எம்பெருமான் மீது 'ஒரு குறளாயிரு நில மூவடி மண்வேண்டி' என்று தொடங்கி ஒரு திருமொழியைப் பாடியதாகவும், அதனைக் கேட்ட சம்பந்தப்பெருமான் மிகவும் வியந்து 'உமக்கு இவ்விருதுகள் யாவும் தகும்' என்று சொல்லத் தமது வேலாயுதத்தை இவருக்குத் திருமுன் காணிக்கையாகச் சமர்ப்பித்து நன்கு பாராட்டி உபசரித்து வழிபட்டு வழிவிட்டு மீண்டதாகவும்"**[66] கூறும் செய்தியை இந்நூலினுள் குறிப்பிட்டுள்ளார். இந்த அரிய செய்தி வைணவ சமய வரலாற்றில் வேறெங்கும் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## திருப்பதிகளின் பெருமை

ந.சுப்புரெட்டியார் இவ்விரு நூல்களிலும் சோழநாட்டுத் திருப்பதிகளின் பெருமைகளைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளார்.

இறைவனுடைய அபயமுத்திரை குற்றம் செய்தவர்களையும் திருத்தும் தன்மையுடையதாகும். அவர் **‘உங்கள் குற்றங்களை நினைத்து நீங்கள் அஞ்ச வேண்டாம். என்னை வந்தடையுங்கள், யான் உங்களை ஏற்றுக் கொள்வேன்’** என்பது அன்பைக் காட்டும் வாத்சாயத்தின் விளக்கம் என்று ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ளார். இதே கருத்தையே திருநாவுக்கரசரும் **‘பிழைத்தோர் பிழைப்பு அறியவல்ல அடி’** என்று இறைவனுடைய திருவடியைப் புகழ்ந்து பாடியுள்ளார். அவர் திருத்தலப் பயண நூல்களில் வைணவத் திருப்பதிகளின் பெருமைகளை எடுத்து விளக்கியிருக்கும் பாங்கு, இந்நூல்களைப் படிக்கும் நம்மையே அத்திருத்தலங்களுக்குச் சென்று பார்க்க வேண்டுமென்ற அவாவினைத் தோற்றுவிக்கின்றது. பிற்காலத்தில் இதழ்களில் திருத்தல மகிமை, திருத்தப் பெருமை, திருத்தல வருணனை குறித்து கட்டுரைகள் எழுதியோர்க்கு இந்நூல்களே வழிகாட்டியாக அமைந்தன எனக் கொள்ளலாம்.

## ‘தலைச்சங்காடு’ குறித்த ந.சுப்புரெட்டியார் விளக்கம்

ந.சுப்புரெட்டியார் எம்பெருமான் எழுந்தருளியுள்ள ஊர்களாகிய திருப்பதிகளுக்கு உதாரணத்தோடும் தகுந்த ஆதாரங்களோடும் பொருத்தமான விளக்கங்களைத் தந்துள்ளார். அவர் தலைச்சங்காடு என்ற திருப்பதிக்குத் தரும் விளக்கம் வருமாறு **“இங்கிருந்து காவிரிப்பூம்பட்டினம் ஏழு கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. பழங்காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து சிறந்த சங்குகள் இங்கு விற்பனை செய்யப் பெற்றதால் இவ்விடத்தைத் ‘தலைச்சங்கம்’ என்று வழங்கினர். இவ்விடத்தைச் சுற்றிலும் பிரச (பலாச) மரக்காடாக இருந்தமையால் இவ்விடத்தைக் ‘காடு’ என்றும் வழங்கினர். நாளடைவில் இவ்விரண்டு பெயர்களும் சேர்த்து ‘தலைச்சங்கக் காடு’ என்ற திருப்பெயராக வழங்கலாயிற்று. காலப்போக்கில் மக்கள் வழக்கில் இத்திருப்பெயர் மருவி ‘தலைச்சங்காடு’ என்ற பெருவழக்குப் பெறலாயிற்று. இவ்வூருக்கு அருகில் ‘திருவெண்காடு’ என்ற ஊரும் இருப்பதால் ‘காடு’ என்ற முடிவு பொருந்துவதாகக் கொள்ளலாம். திருமங்கையாழ்வாரும் ‘தலைச்சங்கம்’ என தம் திருப்பாசுரத்தில் குறிப்பிடுகின்றார்”**[67]. இத்தகைய நுட்பமான விளக்க உரைகள் எம்பெருமான் எழில் உருவத்தின் தத்துவங்களையும், அவர் எழுந்தருளியுள்ள திருப்பதிகளின் பெருமைகளையும் எடுத்துரைக்கின்றன. ந.சுப்புரெட்டியார் ஊர்ப்பெயர் ஆராய்ச்சியிலும் ரா.பி.சேதுப்பிள்ளையைப் போலவே முனைந்து ஈடுபட்டுள்ளார் என்பதையும் இதனால் அறிய முடிகின்றது. ந.சுப்புரெட்டியார் தேர்ந்த தமிழறிஞர். **‘அறிவு’** எப்போதுமே ஓய்வதில்லை. உள்ளத்தில் இளமையும் அதன் காரணமாக ஆழ்ந்து சிந்திக்கும் திறமையும், ஆழ்ந்தகன்ற அவரது நூல்வாசிப்பும் அவர்தம் தமிழ்ப்பணியையும் ஆராய்ச்சியையும் தொடர்ந்து செய்யத் தூண்டியுள்ளது எனலாம்.

ந.சுப்புரெட்டியார் சிதம்பரத்தில் தங்கித் தில்லைச் திருச்சித்திரக் கூடத்தையும், மயிலாடுதுறையில் தங்கிக் காழிச் சீராம விண்ணகரத்தையும், திருஇருந்தவூர், தலைச்சங்க நாண்மதியம், சிறுபுலியூர், திருக்கண்ணபுரம், திருவழுந்தூர், திருவெள்ளக்குளம், திருவெண்புருடோத்தமம், வைகுந்த விண்ணகரம், மணிமாடக்கோயில், அரிமேய விண்ணகரம், திருத்தெற்றியம்பலம், செம்பொன்செய் கோயில், திருஆலி – திருநகரி, திருத்தேவனார்த்தொகை, திருக்கூடலூர், திருமணிக்கூடம், காவளம்பாடி, பார்த்தன் பள்ளி ஆகிய வைணவத் திருத்தலங்களைச் சேவித்து வழிபட்டு இந்நூலிலுள்ள கட்டுரைகளை எழுதியுள்ளார்.

## வைணவச் செல்வம்

ந.சுப்புரெட்டியார் சைவ சமணத்தைச் சார்ந்தவராயினும் வைணவ சமயத்தில் ஆழங்கால்பட்டு, வைணவத்தின் பெருமைகளை உலகறியச் செய்வதற்காக முத்திநெறி, சில நோக்கில் நாலாயிரம், வைணவமும் தமிழும், வைணவ உரைவளம், கலியன் குரல், சீதைக்குறள், கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில், ஆண்டாள் பாவையும் அழகு தமிழும், சீதைப் பொழிவுகள், கண்ணன் துதி, இராமர் தோத்திரம், திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள் - ஓர் ஆய்வு, திருப்பாவை விளக்கம் - இரண்டு தொகுதிகள், ஐந்து இரகசியங்கள், வைணவத் திருப்பதிகளின் பெருமைகள் ஆகியன குறித்த பல நூல்களை எழுதியுள்ளார். இந்நூல்கள் வைணவ சமயத்திற்கும், வைணவ சமயம் சார்ந்த தத்துவங்களுக்கும் நல்ல தமிழில் கிடைத்த அரிய பொக்கிசங்கள் ஆகும்.

ந.சுப்புரெட்டியாரின் வைணவ இலக்கியப் பணியைச் சிறப்பிக்கும் வகையிலும் அதன் மணிமகுடமாகவும் 23-27-06-2010 ஆகிய ஐந்து நாட்களிலும் கோவையில் நடைபெற்ற தமிழ்ச் செம்மொழி மாநாடு அமைந்தது. இம்மாநாட்டின் ஆய்வரங்க நிகழ்ச்சிகளை ஒருங்கிணைத்து நடத்தும் பொறுப்பு தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு வழங்கப்பட்டது. இம்மாநாட்டையொட்டித் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் தமிழ்மொழி, இலக்கணம், இலக்கியம், வரலாறு, நாகரீகம், பண்பாடு, கலை, அறிவியல், மொழிபெயர்ப்பு எனப் பல்வேறு துறைகள் சார்ந்த நூல்களைச் சிறப்பு வெளியீடுகளாக வெளியிட்டது. இதன் சீரிய முயற்சியால் தமிழில் வைணவ சமயம் - வைணவத் தத்துவம் என்னும் பண்பாட்டுத் துறையில் சாதனை படைத்தவரும், திருப்பதி, திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் முன்னைத் தமிழ்த்துறை தலைவருமான ந.சுப்புரெட்டியாரின் **‘வைணவச் செல்வம் - தொகுதி 1, 2’** என்னும் நூல் இரு தொகுதிகளாக வெளிவந்துள்ளது. (முதற்பதிப்பு, சூன். 2010) இந்நூலின் முதல் தொகுதியில் ஏழு கட்டுரைகளும், இரண்டாம் தொகுதியில் எட்டுக் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் இரண்டாம் தொகுதியில் இடம்

பெற்றுள்ள கட்டுரைகளே, வைணவத்தின் வழிகாட்டியாகவும், வைணவத்தின் உட்பொருள் விளக்கங்களை உயிர் நாடியாகவும் கொண்டிருக்கின்றன.

## வைணவச் சீலர்கள்

ந.சுப்புரெட்டியார் வைணவச் சீலர்கள் என்னும் இக்கட்டுரையில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், குலசேகராழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், எம்பெருமானார் ஆகிய ஆழ்வார்களைப் பற்றிய சுருக்கமான ஆய்வுக்குறிப்புக்களைத் தந்து அவர்களை அறிமுகப்படுத்தியுள்ளாார். அடுத்து ந.சுப்புரெட்டியார் ஆசாரியர்களுக்கு பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், விஷ்வக்சேநர், நாதமுனிகள், உய்யக்கொண்டார், யமுனைத்துறைவர், பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருவரங்கப் பெருமாளரையர், திருக்கச்சி நம்பி, எம்பெருமானார், கூரத்தாழ்வான், அனந்தாழ்வான், கூரநாராயண சீயர், ஏட்டூர் சிங்காரசாரியர், வடுக நம்பி, பட்டர், நஞ்சீயர், திருவாய்மொழிப்பிள்ளை, நாலூர் பிள்ளை, சீமந் நாராயண சீயர், நாடாதூர் அம்மாள், நம்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளப் பெருமாள் சீயர், பெரியவாச்சான் பிள்ளை, ஆதிவன் சடகோப சுவாமி, ஈயுண்ணி மாதவப் பெருமாள், கந்தாடையண்ணன், பிரிதிவரிதி பயங்கரம் அண்ணன், களமூர் வரதமுனி, சின்னத் திருவேங்கடசாமி, சுந்தரத்தோளுடையார், திருமலை நம்பி, திருக்கோவூர் பெண் பிள்ளை, பிள்ளையாழ்வான், பராங்குச நம்பி, பிள்ளைப்பெருமாள் அய்யங்கார், மணவாள மாமுனிகள், வேதவியாச பட்டர், வேதாந்த தேசிகர், நயினாராச்சான் பிள்ளை உள்ளிட்ட நூற்றிப்பதின் மூன்று பேர்களையும், ஆசாரியர்களுள் சிம்மாசனாபதிகளாக விளங்கும் (இவர்கள்) உடையவரால் நியமிக்கப் பெற்றவர்கள்) பிள்ளையப்பன், புண்டரீகர், திருநகரிப்பிள்ளான், மருதூர் நம்பி, சொட்டையம்மாள், முடும்பையம்மாள், கோமாண்டூர் பிள்ளை, இடாம்பிப்பெருமாள், ஆர்க்காட்டுப்பிள்ளான் உள்ளிட்ட எழுபத்து நான்கு பேர்களையும், மணவாள மாமுனிகளால் நியமிக்கப்பெற்ற அஷ்டதிக்களுங்களான வானமாமலை சீயர், திருவேங்கடராமாநுச சீயர், பட்டர்பிரான் சீயர், கோயில் கந்தாடையண்ணன், எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளார், பிரதிவாதி பயங்கரம் ஆகிய எட்டுப்பேர்களையும், ஆசாரியபரம்பரையைச் சேர்ந்த திரு அரங்க நாராயணசீயர் சுவாமிகள் பரம்பரை, ஆழ்வார் திருகரி எம்பெருமானார் ஜீயர்சுவாமிகள் பரம்பரை, வானமாமலை மடத்து ஆசாரிய (சீயர்) பரம்பரை, திருக்குறுங்குடி மடத்து ஆசாரிய பரம்பரை, ஸ்ரீபெரும்புதூர் ஸ்ரீயதிராச சீயர் மடக்குரு பரம்பரை, அகோபில மடத்து ஆசாரிய புருடர்கள் ஆகியோர்களையும், அடியார்களுள் அகளங்கநாட்டாழ்வான், அகளங்கபிரம்மராயன், அக்ரூரர், அண்ணா, அத்துழாய், அநசூயை, அகந்தன்,

அம்பரீஷன், அம்முனி ஆழ்வான், அரச நம்பி, அம்மங்கி அம்மை, அழகிய மணவாளப்பட்டர், அழகிய மணவாளதாசர், ஆய்ச்சி, ஆய்ச்சி மகன், ஆண்டாள், ஆப்பன், ஆலிக்குறும்பன், உலகப்பெருமாள் நங்கை, எச்சான், ஐம்பத்திருவர், கண்டாகருணன், குமாண்டூர் அப்பை, குலசேகரதாசர், சடகோபக் கொற்றி, சியாண்டன், சிறுபிள்ளை உடையார், சீயர் நாயனார், திரிபுரர் தேவியார், திருமாலை நந்தபெருமாள், திருவாளன், தேவராசபட்டர், நடாதூராழ்வான், பெரிய கோயில் வள்ளலார், பெற்றி, பொன்னாச்சியார், மாறனேர் நம்பி, வண்டர், வல்லப்ப தேவன், வில்லிபுத்தூர்தாசர், வீரராகவ பிரம்மராயர், வேட்டூர் சிங்கராசாரியர் உள்ளிட்ட வேல்வெட்டிப்பிள்ளையும் உட்கொண்டு நூற்று அறுபத்து மூன்று பேர்களையும்,

ஆழ்வார் - ஆசாரியார்களின் 27 திருநட்சத்திரங்களையும் மொத்தம் 79 பக்கங்களில் **‘வைணவச்சீலர்கள்’** என்னும் பகுதியில் சுருக்கமாக அறிமுகப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார். வைணவ சமயத்தை வரலாற்றியல் பார்வையிலும் தத்துவப் பார்வையிலும் தெளிந்து உணர்வதற்கு இத்தகவல்கள் பெரிதும் பயனள்ளதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

## திவ்வியப் பிரபந்தப்பெருவிழா

முயன்று தொகுக்கப்பெற்ற திவ்வியப்பிரபந்த பாசுரங்கள் மீண்டும் அழிந்து போகாமல் பாதுகாப்பதற்காகவே வைணவத் திருப்பதிகளில் திவ்வியப்பிரபந்தப் பெருவிழா ஆண்டுதோறும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இது திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்கு எடுக்கப்பெறும் பெருவிழா ஆகும். இதனைப் பற்றிக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், **“தமிழுக்கு ஏற்றம் அளித்த பெருமை வைணவர்கட்கு உண்டு. திவ்வியப் பிரபந்த சேவையின்றித் திருமால் திருக்கோயில்களில் வழிபாடு இல்லை. இது தவிர திவ்வியப் பிரபந்ததத்திற்குத் திருக்கோயில்களில் விழா எடுத்த பெருமையும் இவர்கட்கு உண்டு. ஆண்டுதோறும் மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில் ஏகாதசிக்கு முன்பும் பின்பும் வைணவத் திருக்கோயில்களில் ‘*அத்யயன உற்சவம்*’ என்னும் இலக்கியப் பெருவிழா நடைபெற்று வருகின்றது. விழா நாட்களில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பகுதிகளையும் ஆசாரியர்கள் அருளிச்செய்த உரைகளையும் நாடோறும் அநுசரித்தும், சில பாசுரங்களுக்கு அபிநயம் பிடித்தும், பாசுரங்களில் கூறப்பெற்ற சில செய்திகளை நாடகமாக நடித்தும் ‘அரையர்’ தாம் உருகுவதுடன் கூடியிருக்கும் மக்களையும் உருக்குவர். இன்று திருவரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி ஆகிய திருத்தலங்களில் இப்பெரிய திருநாள் சீருடனும் சிறப்புடனும் நடைபெற்று வருகின்றது. இத்திருவிழாவில் ‘அரையர் சேவை’ தான் உயிர் நிகழ்ச்சியாகும். இந்த விழா மார்கழி மாதம் வளர்பிறையின் முதல் நாளாகிய பிரதமையன்று தொடங்கும். திருவரங்கத்தில்**

**மட்டும் அதற்கு முந்திய நாளாகிய அமாவாசையன்று இரவில் திருநெடுந்தாண்டகப் பாசுரங்களுடன் தொடங்கும்”**[68] எனக் குறிப்பிட்டுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

ந.சுப்புரெட்டியார் திவ்வியப்பிரபந்தப் பெருவிழாவின் முன்னைய வரலாறு, வரலாற்று நடைமுறையில் பின்பற்றப்பெறும் சில சம்பிரதாயங்கள், பெரிய வைணவக்கோயில்களில் விழா நடைபெறும் முறை, பகல்பத்து, இராப்பத்து முறையில் பத்துப்பத்து நாட்கள் விழாக் கொண்டாடும் முறை, அப்போது பாடப்பெறும் திவ்வியப் பிரபந்தப்பாசுரங்கள், அதற்கான காரணங்கள், கொண்டாட்டம், பாசுரம் பாடுதல், அபிநயம் செய்தல், உரை கூறுதல், நடனமாடுதல் முதலான அரைசன் சேவைகள், முத்துக்குறி, சேவைப் பாசுரங்களில் மாற்றம் ஆகியன குறித்துச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கிக் கூறியுள்ளார்.

ஆழ்வார் திருநகரியில் அரையர் குடும்பத்தில் தந்தையும் மகனும் இணைந்து பணியாற்றுகின்றனர். அரையர் சேவையைச் செய்வதற்காக திருவரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய இரண்டு இடங்களிலும் இரண்டு அரையர் குடும்பங்கள் உள்ளன. அரையர் சேவையை நிகழ்த்தும் திருப்பணியை ஏற்பதற்கு முன்னர் பன்னிரண்டு முதல் பதினெட்டு ஆண்டுகள் வரை பயிற்சி பெறுகின்றனர்.

## வைணவத் திருத்தலங்கள்

ஆழ்வார் பெருமக்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திவ்வியதேசங்கள் 108 ஆகும். இத்திருப்பதிகளைப் பற்றி அறிவதற்கு திருவரங்கத்து அமுதனாரின் நூற்றியெட்டுத் திருப்பதிக்கோவை, ஆசிரியர் பெயர் அறியப்படாத நூற்றியெட்டுத் திருப்பதிப் பெருமாள் கோவை, வங்கிபுரத்து ஆச்சியின் நாலாயிர பாசுரப்படி 108 திருப்பதிக்கோவை, பிள்ளைப்பெருமாள் அய்யங்காரின் நூற்றியெட்டுத் திருப்பதி அந்தாதி, குரவை இராமநுசதாசரின் நூற்றியெட்டுத் திருப்பதித் திருப்புகழ், ஆசிரியர் பெயர் அறியப்படாத நூற்றியெட்டுத் திருப்பதி அகவல், கோ.பட்டாபிராம முதலியாரின் விஷ்ணுஸ்தலமஞ்சரி முதலான பதினாறு நூல்கள் நமக்குக் கிடைத்துள்ளன. இந்த நூற்றியெட்டுத் திருப்பதிகள், தலவரலாறு, அங்கு எழுந்தருளியிலுள்ள எம்பெருமானின் பெருமைகள் ஆகியனவற்றை ந.சுப்புரெட்டியார் இப்பகுதியில் விளக்கிக் கூறியுள்ளார். அவர் வைணவத் திருத்தலங்களைத் தலை இருப்பிடங்கள் - கடற்கரைத்தலங்கள் ஏழு, கட்டுமலைத் தளங்கள் ஆறு, காஞ்சியில் உள்ளன. பதினான்கு, காவிரிக் கரையிலுள்ளன. பன்னிரண்டு, திருநாங்கூருக்கு அருகிலுள்ளன. பன்னிரண்டு, மலைமேலும் மலைச் சரிவிலும் உள்ளன. பதின் மூன்று என்றும், திருமுக மண்டலம் நோக்கிய திசைகளை வைத்து வடக்கு நோக்கிய தளங்கள் மூன்று, தெற்கு நோக்கிய

தலங்கள் ஏழு, மேற்கு நோக்கிய தலங்கள் பத்தொன்பது கிழக்கு நோக்கிய தலங்கள் எழுபத்தொன்பது என்றும், சயனத் திருக்கோயில்கள் இருபத்தெழு என்றும், வீற்றிருந்த திருக்கோயில்கள் இருபத்தொன்று என்றும், நின்ற திருக்கோயில்கள் அறுபது என்றும், எம்பெருமானின் இருவகை, மூவகைக் கோலங்கள், ஆழ்வார்கள் சிலரும் பலருமாக மங்களாசாசனம் செய்தவை, தனித்தனி ஆழ்வார் மங்களாசாசனம் செய்த தலங்கள், மங்களாசாசனப் பாசுரங்கள், ஒரு பதிகமே பெற்றவை, பாசுரங்களுடன் பதிகமும் பெற்றவை, தந்தையும் மகளும் மங்களாசாசனம் செய்தவை, பாசுரங்கள் மட்டும் பெற்ற தலங்கள், அபிமானத் தலங்கள் என ஆய்வாளர்களுக்கும் இறை ஆர்வலர்களுக்கும் பயன்படும் வகையில் ந.சுப்புரெட்டியார் வைணவத் திருத்தலங்கள் குறித்த தகவல்களைப் பகுப்பாய்வு செய்து வெளிப்படுத்தியுள்ளார்.

## அபிமான புராணத் திருத்தலங்கள்

ந.சுப்புரெட்டியார் 108 வைணவத் திருத்தலங்களுள் **'அபிமானப் புராணத் திருத்தலங்கள்'** குறித்துக் கூறும் கருத்துக்கள் குறிப்பிடத்தக்கன. **"பன்னிரு அழ்வார்களைத் தொடர்ந்து நாதமுனிகள் காலத்திலே வைணவத் திருப்பதிகள் 108 என அறுதியிடப்பெற்றன. இவையேயன்றி முனிவர் முதலியோரால் பிரதிட்டை செய்யப்பெற்று ஏற்றம் பெற்ற புராணத்தலங்களும், ஆசாரியர்களின் திருவவதாரம் முதலிய சம்பந்தங்களினால் ஏற்றம் பெற்ற திருத்தலங்களும் உள்ளன. இவற்றை 'அபிமான தலங்கள்' என்று வழங்குவர். இவை தமிழ்நாடு, கேரளம், ஆந்திரம், வடநாடு என்று உள்ளனவையாகக் காட்டப்பெற்றுள்ளன. இவற்றுள் திருநாராயணபுரம் (மேலக்கோட்டை), மன்னார்குடி (இராஜ மன்னார்குடி), மதுராந்தகம், திருப்பெரும்புதூர்(பூதபுரி) என்னும் நான்கு தலங்கள் முக்கியமானவை"**[69] எனக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், இத்தலங்களின் புராண வரலாறுகளையும் அவற்றின் சிறப்புக்களையும் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார். மயிலாப்பூர், சிங்கப்பெருமாள் கோவில், நிரவலூர், உத்திரமேரூர், பச்சை வண்ணம், கூரம், மதுரமங்கலம், திருமழிசை, பூவிருந்த மல்லி, புருஷமங்கலம், பள்ளிகொண்டபுரம், காட்டுமன்னார்குடி, செஞ்சி, ஸ்ரீமுட்டம், தில்லைவிளாகம், பாபநாசம், பெரும்புலியூர், வடுவூர், ஆவரணி, குணசேகரம், திருநாராயணபுரம், நாமக்கல், மன்னார் கோயில், தனுஷ்கோடி, இராமேசுவரம், தான்தோன்றிமலை, பெருமாள் மாலை முதலான இருப்பத்தேழு தமிழ்நாட்டு அபிமானத்தலங்களையும், குருவாயூர், வாக்கலை என்னும் இரண்டு கேரளத்து அபிமானத்தலங்களையும், அனந்தவாடி, பத்ராச்சலம், அண்ணாவரம், மங்களகிரி, நெல்லூர், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம், ஏலூரு, கொத்தபேட்டா, வாதகரிகுட்டா முதலான ஆந்திரத்திலுள்ள பத்து அபிமானப் புராணத் தலங்களையும், சிவமுக்திபுரம், நரசிம்மபுரம், தொண்மனூர், சீரங்கப்பட்டினம், உடுப்பி, போளுர் ஆகிய கர்நாடகத்திலுள்ள

அபிமானத் தலங்களையும், பண்டரிபுரம், புஷ்கரம், தாக்கூர் துவாரகை, அவந்தி (உச்சயினி), விரவல், சித்திரகூடம், நாசிக்-பஞ்சவாடி, பூரி–சகந்நாதம், அலகாபாத் (பிரயாகை), வாரணாசி, கயை, ஹரித்துவாரம், பாண்டுகேசவர், விஷ்ணுப்பிரயாசை, ஜோஷியம் வடநாட்டு அபிமான புராணத்தலங்களையும் தலவரலாறு பெருமைகள் என்னும் இருநிலைகளில் சுட்டிக் காட்டி விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

## அன்றாட கடைப்பிடிப்பு விதிகள்

ஒருவைணவன் (பிரபந்தன்) அதிகாலையில் எழுந்ததும் திருப்பள்ளி எழுச்சி, நீராடுதல், திருமண் காப்பணிதல், காலட்சேபம் செய்தல் ஆகியனவற்றை அன்றாடம் பின்பற்றி ஒழுகுதல் வேண்டும். ந.சுப்புரெட்டியார் வைணவ வழிபாட்டு முறையை பூதசுத்தி செய்தல், திருவாராதன நிகழ்ச்சிகள் - மந்திராசனம், ஸ்நானாசனம், அலங்காராசனம், போசனாசனம், புனர்மந்திராசனம், பரியங்காசனம் ஆகியனவற்றை மேற்கொண்டு செய்தல் வேண்டும் எனக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், திருவாராதன முறையில் ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சன்னிரோதனம், தேநுமுத்திரை, பாத்யம், ஆசமனீயம், அர்க்கியம், ஸ்நாபனம், பானீயம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், அவகண்டம், சபசமர்ப்பணம் என்னும் பதினாறு வகையான கிரியைகளைப் பின்பற்ற வேண்டும் என்கின்றார்.

**“வைணவர்கள் நாட்களில் சனிக்கிழமையினையும், நட்சத்திரங்களில் திருவோணம், உரோகிணி ஆகியவற்றையும், திதிகளில் ஏகாதசி, துவாதசி, அட்டமி, நவமிகளையும் விரத, உண்ணா நோன்பு நாட்களாகக் கொள்கின்றனர். ஏகாதசி திதிமாதம் இருமுறை வரினும் வைணவ ஏகாதசி அன்றே உண்ணாநோன்பு இருப்பர். மார்கழித் திங்கள் வளர்பிறை ஏகாதசியை வைகுண்ட ஏகாதசியாகக் கொண்டாடுவர் வைணவர். அன்று துறக்கவாயில் (சொர்க்கவாசல்) திறக்கும் நாள் எனக் கருதுவதால் அந்நாள் வைகுண்ட ஏகாதசி எனப்பெயர் பெற்றது. ஆவணித் திங்கள் தேய்பிறையில் வரும் அட்டமி திதியன்று கண்ணன் பிறந்து கோகுலத்திற்குச் சென்றதால் கோகுலாட்டமி என்றும், இத்துடன் உரோகிணி நட்சத்திரம் இணைந்துவரின் அதனைச் ஸ்ரீஜெயந்தி (கண்ணன் பிறப்பு) என்றும் கொண்டாடுவர். பகவான் அயக்கிரீவன் அவதரித்த ஆவணித் திருவோண நாளையும் வைணவர்கள் சிறப்பாகக் கொண்டாடுவர்”**[70].

## திருக்கோயில் வழிபாட்டு முறைகள்

ந.சுப்புரெட்டியார், வைணவத் திருக்கோயில் வழிபாட்டு முறைகளைப் பாஞ்சாராத்திரம், வைகாசிகல்பசூத்திரம், நித்தியோத் சவங்கள், மாத விழாக்கள் - வழிபாடுகள், பூபதித்திருநாள், திருவேங்கடமுடையான் அருளிச்செயல் கேட்டருளும் முறை, பிரம்மோத்சவம், திருவத்தியயனோத்சவம், யுகாதித் திருநாள், திருப்பதியில் நடைபெறும் அத்தியயன

உற்சவம், பெரிய ஜீயர் சுவாமியின் திருத்தொண்டு, திருமலை-திருப்பதி தலத்தின் சிறப்பான அநுட்டானங்கள், காஞ்சிபுரம், ஆழ்வார் திருநகரி ஆகிய தலங்களில் பின்பற்றப்பெறும் வைணவ வழிபாட்டு முறைகள், அரையர் கைங்கரியம், அருளிச்செயல் அநுசந்தானக் கிரமப் பட்டியல், வானாமாமலையில் பின்பற்றப்பெறும் திருவாராதன முறை, அத்தியயன உற்சவம், பிரபந்த சேவை முறை, திருமடத்தின் நிகழ்ச்சிகள், திருக்குறுங்குடியில் திவ்வியப் பிரபந்தம் சேவிக்கும் முறைகள், நித்யம், பிரம்ம உற்சவம், அத்தியயன உற்சவம், திருமடத்தின் நடைமுறைகள், பெரிய திரு அத்தியயன உற்சவம், எண்ணெய் காப்பு உற்சவம், திருகண்ணபுரத்தில் வழிபாட்டு முறைகள், பிரம்ம உற்சவங்கள், நித்திய உற்சவங்கள், பசபர்வ புறப்பாடுகள், ஆழ்வார் - ஆசாரியர்கள் அவதார உற்சவங்கள், மாதத் திருநட்சத்திரச் சேவை முறை, தீர்த்தக்காரர்களது கைங்கரியங்கள், திவ்விய பிரபந்தம் நாலாயிரம் பாசுரங்களும் சேவிக்கப்பெறும் உற்சவங்கள், ஆண்டாள் நீராடல், மார்கழித் திருப்பாவைச் சேவை முறை, சித்திரைத் திருவிழா ஆகியன குறித்து விரிவாகவும் விளக்கமாகவும் ஆராய்ந்துள்ளார். **“ஆத்திகர்கள் பகவானை உபாசிப்பது மானசம், ஓமம், விக்கரகாராதனம், என்னும் மூன்று விதமாக நடைபெறும். மூன்றாவதான விக்கரகாராதனம் ஆத்மார்த்தம் என்றும் பரமார்த்தம் என்றும் இருபிரிவினையுடையது. ஒருவர்தம் குடும்பநலனைக் கருதித் தம் இல்லத்தில் எம்பெருமானின் திருமேனியை உலோகம் முதலியவற்றால் எழுந்தருளப் பணிணித் தம் ஆற்றலுக்கேற்றவாறு அர்க்கிய பாத்ராதிகளால் ஆராதிப்பது ஆத்மார்த்தமாகும். இல்லத்தில் ஏற்றப்பட்ட விளக்கு எங்ஙனம் இல்லம் முழுதும் ஒளியை உண்டாக்குகின்றதோ அம்மாதிரியே இந்த ஆராதனம் அவர்குலம் முழுவதும் மேம்பாடு அடைவதற்குக் காரணமாக இருக்கும். பரார்த்தம் என்பது உலக நலன்களைக் கருத்தில் கொண்டு திருக்கோயிலில் ஆகமவிதிப்படி வழிபடுவதாகும். அம்புலி, ஆதவர்களின் ஒளி உலகிற்குப் பயன்படுவது போலவே, இந்த வழிபாட்டால் உண்டாகும் பலன் உலகம் முழுவதையும் வாழ்விக்கும்”**[71] என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## நடைமுறைச் சம்பிரதாயங்கள்

வைணவ சமயத்தின் கொள்கைகள், தத்துவம், வழிபாட்டு முறைகள் ஆகியனவற்றில் பின்பற்றப்பெறும் நடைமுறைச் சம்பிரதாயங்களை ந.சுப்புரெட்டியார், பஞ்ச சம்ஸ்காரம், தாபம், புண்டரம், நாமம், மந்திரம், யாகம், திருமண் காப்பு, நெற்றியில் கேசவன், வயிற்றில் நாராயணன், மார்பில் மாதவன், கண்டத்தில் கோவிந்தன், வலப்புற வயிற்றில் விஷ்ணு, வலப்புறத்தில் மதுசூதனன், வலப்புறக்கழுத்தில் திருவிக்கிரமன், இடப்புற வயிற்றில் வாமனன், இடப்புறத்தில் ஸ்ரீதரன், இடப்புறக் கழுத்தில் இருடிகேசன், முதுகடியில் பதுமநாபன், பிடரியில் தாமோதரன் என்றவாறு வைணவர்கள் திருமண் தரிக்கும் முறை, சொல்ல

வேண்டிய மந்திரங்கள், திருச்சூர்ணத்தின் பெருமை, புண்டரத்தின் பெருமை, சம்பந்த ஞானம், நவவித சம்பந்தம், பாகவத அபசாரம், வைணவ அதிகாரிகள், ஸ்ரீவைணவ லட்சணங்கள், பிரபந்தர் பின்பற்றத்தக்க பொருட் சிறப்புக்கள், திருக்கச்சி நம்பி அருளிய ஆறுவார்த்தைகள், வரதராசரின் திருவுள்ளமாக வெளிப்பட்ட வார்த்தைகள், திருக்கோட்டியூர் நம்பிகளின் பதினெட்டு வார்த்தைகள், திருக்கேளுர்ப் பெண்பிள்ளை வெளியிட்ட எண்பத்தொரு இரகசியங்கள் குறித்த நுட்பமான விளக்கங்கள், எம்பெருமனார் அருளிச்செய்த எண்பத்திரண்டு வார்த்தைகள், ஈசுவரனின் திருமேனி, நம்மாழ்வாரின் திருமேனி, இராமானுசரின் திருமேனி ஆகியனவற்றின் வடிவமைப்புக்கள் வெளிப்படுத்தும் தத்துவங்கள், திருநாமங்கள், எம்பெருமானின் திருக்கழல்கள், தமிழின் ஏற்றம், திருவாய்மொழிப் பாசுரங்களின் பிரிவினைகள், சம்பிரதாயப் பெயர்கள், திருவரங்கம், அத்திகிரி, திருக்கோட்டியூர் ஆகிய திருக்கோயில்களின் அமைப்புக்கள் ஆகியனவற்றை வைணவர்களுக்குப் பயன்படும் வகையில் விரிவாகவும் விளக்கமாகவும் ஆராய்ந்து சமய, சமுதாயப் பயன்பாட்டு நோக்கில் வெளிப்படுத்தியுள்ளார்.

## பிற சமய நெறிகளில் இராமனுச நெறியின் தாக்கம்

இராமானுசரின் சமயநெறியை விளக்க வந்த ந.சுப்புரெட்டியார், “விசால மனப்பான்மையும் சகிப்புத் தன்மையுள்ள **‘விசிட்டாத்வைதம்’** என்ற சமய தத்துவம் உண்மையை நுணுகி அறியும் தன்மையது. அத்தகைய ஆன்மீக மாற்றம் எங்கும் ஊடுவிப் பரவும் அன்பாக மாறும் தன்மையது. இது வேதம், கீதை, திருவாய்மொழி போன்ற நூல்களில் காணப்பெறும் பொன்மொழிகளால் தெளிவாகின்றது. **‘ஞானிகள் பலவிதமாக விவரித்தாலும் ‘சத்’ என்பது ஒன்றே’** என்பது இருக்குவேத மொழியாகும். **‘சிரத்தையோடு கூடிய பக்தர்கள் மற்ற தேவதைகளை வணங்குங்கால், விதிவழுவியவர்களாய் என்னையே வணங்குகின்றனர்’** என்பது பரந்தாமன் கூற்று. **‘மழையால் நீர் நிரம்பியோடும் நதிகள் யாவும் கடலில் கலப்பதுபோல்’**, எல்லாத் தேவர்கட்குச் செய்யப்பெறும் வழிபாடு இறுதியில் கேசவனையே அடைகின்றன.

> **“நும்இன் கவிகொண்டு நும்இட்டாத்தெய்வம் ஏத்தினாய**
> **செம்மின் சுடர்முடி என் திருமாலுக்குச் சேருமே”**
> (திருவாய். 3.9.:6)

என்பது நம்மாழ்வாரின் திருவாய்மொழி. இவற்றையெல்லாம் தொகுத்து முடிவுகூறும் இராமனுசர் எல்லாக் கருத்துக்களும் திருநாமங்களும் பிரம்மம் அல்லது நாராயணனையே குறிக்கின்றன. இந்த முடிவையொட்டி ஒளியில் சாங்கியம், வேதம், பாசுபதம் போன்றவற்றின் முக்கியக் கருத்துக்கள் அமைகின்றன. சர்வசரீர, சர்வாக்யம், சர்வரட்சகர் என்பவை

பிரம்மன் அல்லது நாராயணனையே குறிக்கும்'' என்னும் இராமனுசரின் விசிட்டாத்துவைதக் கொள்கையை எடுத்துக்கூறி, இராமாநந்தர், நிம்பார்க்கர், வல்லபர், ஸ்ரீகிருட்டிண சைதன்யர், ஜெயதேவ முனிவர், மராட்டிய மாநிலத்தில் 'பக்தியின் எழுச்சி, சீக்கிய சமயம், பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், பெசண்ட் அம்மையார், இராமகிருட்டிணர், காந்தியடிகள், கிறித்துவ சமயம், இஸ்லாம் ஆகியனவற்றில் ஸ்ரீஇராமனுச நெறியின் தாக்கத்தை ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தியுள்ளார். **'சமயம்'** என்பதற்கு ஓர் எதிர்காலம் உண்டு. இறைவன் அல்லது பகவானை அனுபவத்தால் அறிவதிலும் அந்த அனுபவமான கடவுட் பற்றை மற்றவர்களுக்கு அறிவிப்பதிலுமே எதிர்காலச் சமயம் அடங்கியுள்ளது என்பது ஸ்ரீஇராமனுசர் கொள்கையாகும்.

## II. ந.சுப்புரெட்டியார் சைவ சமய இலக்கியப்பணிகள்

ந.சுப்புரெட்டியார் சைவ சமயத்தைச் சேர்ந்தவர். ஆயினும் அவர் வைணவ சமய இலக்கியப் பணிகளுக்காகவே தம்மை அர்ப்பணம் செய்தவர். **'சமய இலக்கியங்கள்'** குறித்துத் தமிழில் மிகுதியான நூல்களை எழுதிய பெருமைக்குரியவர் ந.சுப்புரெட்டியார். அவர் திருத்தலங்களுக்குப் பயணம் மேற்கொண்டு சமயம் சார்ந்து பல பயண அனுபவ நூல்களையும் எழுதியுள்ளார். அவற்றுள் அவர் சைவ சமயம் சார்ந்து தம்பிரான் தோழர், நாவுக்கரசர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் என்னும் நான்கு நூல்களை எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அவர் சைவ சமயம் சார்ந்து சைவ சமய விளக்கு, சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், முருகன் துதியமுது, மூவர் தேவாரம் புதிய பார்வை முதலான நூல்களையும் எழுதியிருக்கின்றார்.

### மூவர் தேவாரம்

ந.சுப்புரெட்டியாரின் **'மூவர் தேவாரம் - புதிய பார்வை'** என்னும் இந்நூல் நூல்முகம். தோரண வாயில், தேவாரம் மறைந்த நிலையும் தொகுப்பு முறையும், பண்சுமந்த தேவாரப் பாடல்கள் என்னும் உள்ளடக்கச் சிந்தனைகளைக் கொண்ட நூலாகும்.

### தேவாரம் - மறைவும் தொகுப்பும்

திருமுறை கண்ட சோழனாகிய இராசராசசோழன் மூவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களைத் தேடித் தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்டான். திருநாரையூரில் ஆதிசைவ குடும்பத்தில் பிறந்த நம்பியாண்டார் நம்பி, பொல்லாப்பிள்ளையாருக்குப் பூசனை செய்யும் போது, அப்பிள்ளையாரை நிவேதனப் பொருட்களை உண்ணுமாறு செய்து அற்புதம் நிகழ்த்திக் காட்டியவர். பொல்லாப்பிள்ளையாரால் ஆட்கொள்ளப்பட்டமையால் அச்சிறுவன் **'நம்பியாண்டார் நம்பி'** என்று போற்றப்பட்டான். நம்பியாண்டார் நம்பி **'திருவிரட்டை மணிமாலை'** என்னும்

பிரபந்தத்தைப்பாடி தம்மை ஆட்கொண்ட பொல்லாப்பிள்ளையாரை வணங்கி வழிபட்டு வந்தார். இச்செய்தியைக் கேள்விப்பட்ட சோழ மன்னனாகிய இராசராசன், **'வேதியரே, சமயக்குறவர் மூவர் அருளிச்செய்த தேவாரத் திருமுறைகளும் திருத்தொண்டர்களும் பக்தர்கள் வாழும் இந்த நிலவுலகத்தில் விளக்கம் பெறுதல் வேண்டும். பிள்ளைப் பெருமாள் திருமுன் இவற்றை விண்ணப்பித்து ஆவன செய்தருளல் வேண்டும்'** என்று நம்பியாண்டார் நம்பியிடம் வேண்டிக் கொண்டான். நம்பியும் மன்னனின் வேண்டுகோளை ஏற்று தேவாரத் திருமுறைகள் இருக்கும் இடத்தையும், திருத்தொண்டர்களுடைய வரலாறுகளையும் அடியேனுக்கு அருளிச் செய்ய வேண்டுமென பொல்லாப் பிள்ளையாரிடம் இறைஞ்சினார். பொல்லாப் பிள்ளையாரும் அவை தில்லையில் கூத்தப்பெருமான் திருநடனம் புரியும் பொன்னம்பலத்தின் அருகில் இருப்பதாகவும் அவை தேவார மூவரின் கைகளின் அடையாளமுள்ள அறையினுள் பூட்டப்பெற்று இருப்பதாகவும் நம்பிக்கு அருளினார்.

**"நம்பியாண்டார் நம்பியும் சோழமன்னனும் தில்லைக்குச் சென்று கூத்தப் பெருமானை வழிபட்டுவிட்டு, தில்லைச் சிற்றம்பலத்திற்கு மேற்றிசையிலுள்ள அறையில் தேவாரத் திருமுறைகள் இருப்பதைக்கூறி, தில்லைவாழ் அந்தணர்களிடம் அவற்றைத் திறந்து காட்டுமாறு வேண்டினான் சோழமன்னன். தேவார ஆசிரியர்கள் மூவருடைய கைகளின் இலச்சினையுடன் பூட்டப்பெற்ற அந்த அறையினை மூவரும் வந்தால்தான் திறக்க இயலும் என்றனர் தில்லைவாழ் அந்தணர்கள். '*பாம்பின் கால் பாம்பறியும்*' என்பதற்கேற்ப நம்பியாண்டார் நம்பியின் ஆலோசனையின்படி சோழமன்னன் இராசராசசோழன், தில்லைவாழ் அந்தணர்களுக்குச் சிறப்புச் சன்மானம் வழங்கி அம்பலவாணர்க்குச் சிறப்புப் பூசனைகள் வழிபாடு நிகழ்த்தி தேவார ஆசிரியர் மூவர் திருமேனிகளுக்கும் வழிபாடியற்றி திருவீதி வலம் வரச்செய்து திருப்பதிகங்கள் சேமிக்கப் பெற்ற அறைமுன் கொண்டு வந்து நிறுத்தி தில்லைவாழ் அந்தணர்களிடம் '*மூவரும் வந்தனர் அறையினைத் திறக்க ஏற்பாடு செய்யுங்கள்*' என்றான் மன்னன். அரசனது ஆணையால் அறை திறக்கப்பெற்று, அறையினுள் சென்று சோதித்தபொழுது, தேவாரப் பதிகங்கள் எழுதிய ஏடுகள் கரையான் புற்றால் மூடப்பெற்ற நிலையில் இருந்தது"**[73].

**நம்பியாண்டார் நம்பியின் தொகுப்பு**

புற்றுமண்ணால் மூடப்பெற்றிருந்த ஏடுகளின் மேல் எண்ணெய் சொரிந்து அவற்றைப் பார்த்த போது பெரும்பான்மையான ஏடுகள் பழுதுபட்டிருந்தன. இதனைக் கண்டு மன்னன் மிகவும் வருத்தமுற்ற நிலையில் **'தேவாரப் பதிகங்களில் இக்காலத்திற்கு வேண்டுவனவற்றை மாத்திரம்**

**வைத்துவிட்டு, மற்றவற்றைச் செல்லரிக்கச் செய்தோம்'** என்ற அருள்வாக்கு அங்குள்ள அனைவருக்கும் கேட்டது. இதனால் மன்னன் ஆறுதலடைந்து செல்லரிக்காத திருப்பதிகங்களை மட்டும் சிதையாமல் எடுத்துத் தொகுக்குமாறு நம்பியாண்டார் நம்பியை வேண்டினான். நம்பியும் அதனையேற்று சம்பந்தப் பெருமான் பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளாகவும், அப்பர் சுவாமிகள் திருமுறைகளை நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி நாயனார் பதிகத்தை ஏழாந் திருமுறையாகவும் வகுத்துத் தொகுத்தார்.[74] எனும் தேவாரத் தொகுப்பு குறித்த கருத்தைப் பதிவு செய்துள்ளார் ந.சுப்புரெட்டியார்.

## தேவாரப் பாடல்களுக்குப் பண்வகுப்பு

சோழமன்னனும் நம்பியும் தேவாரப் பாடல்களுக்குப் பண்தேர்ந்து இசையமைக்க முற்பட்டனர். அவர்கள் தில்லைக்கு மேற்கிலுள்ள திருநீலகண்ட யாழ்ப்பாணர் பிறந்தருளிய திருவெருக்கத்தம் புலியூர் என்ற திருத்தலத்திற்கு வந்து அங்குள்ள இறைவனை வழிபட்டு இறைஞ்சினர். அந்நிலையில் **'திருநீலகண்டர் பெரும்பாணர் மரபிலே பிறந்த பெண்ணொருத்திக்கு இசைத்திறனை அளித்துள்ளோம்'** என்னும் அருள்வாக்குத் தோன்றியது. இதனைக் கேட்ட மன்னனும் நம்பியும் அந்த அம்மையாரை தில்லையம்பல முன்றிலுக்கு அழைத்து வந்து தேவாரப் பதிகங்களுக்குப் பண்வகுக்கச் செய்தனர். இதுவே தேவாரம் பதிகங்களுக்குத் தெய்வ இசையாகத் தென்னாட்டில் சிறப்புற்று வளர்ந்தது. இப்பகுதியில் ந.சுப்புரெட்டியார் நாலாயிரத் தொகுப்பு வரலாற்றினையும்[75] சுட்டிக்காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## தேவாரப் பதிகங்கள் தொகுக்கப்பட்ட வரிசை முறை

தேவாரப் பாடல்கள் அவ்வாசிரியர்கள் பிறந்த குலம், வயது அடிப்படையில் தொகுக்கப்படவில்லை. அவர்கள் இறைவன் திருவருளில் கலந்து வீடுபேறு அடைந்ததையொட்டித் தொகுக்கப் பெற்றுள்ளன. திருஞானசம்பந்தர், திருநல்லூர்ப் பெருமணத்தில் தம் திருமணத்திற்கு வந்த அடியார் திருக்கூட்டத்தோடு சிவபெருமானின் ஈறில் பெருஞ்சோதியினில் புகுந்தார். அங்கு வந்தவர் அனைவரும் சிவப்பேறு அடைந்தனர். சம்பந்தரின் நெருங்கிய நண்பரான திருநாவுக்கரசரும் நமிநந்தியடிகளும் அங்கு வராதது பெரும் புதிராகவே உள்ளது. தேவாரத் திருமுறைகளுள் முதன்முதல் பாடப்பெற்ற பழைமையுடைய திருப்பதிகம் **'தோடுடைய செவியன்'** (1:1:1) எனத் தொடங்கும் காழிப்பிள்ளையாரின் தேவாரமேயாகும். ஆதலால் சம்பந்தர் தேவாரப் பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாக வகுக்கப் பெற்றன. திருஞான சம்பந்தரை

அடுத்து திருநாவுக்கரசர் திருப்புகலூரில் இறைவன் திருவடியில் கலந்து மறைந்தார். ஆதலால் அவருடைய பதிகங்கள் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாக வரிசைப்படுத்தப் பெற்றன. இந்த இருவருக்கும் காலத்தால் பிற்பட்ட சுந்தரமூர்த்தி பதிகங்கள் ஏழாம் திருமுறையாகத் தொகுக்கப்பெற்றன.

**பாடல்களின் தொகை**

| ***ஆசிரியர்*** | ***திருமுறைகள்*** | ***பதிகங்கள்*** | ***பாடல்கள்*** |
|---|---|---|---|
| திருஞானசம்பந்தர் | 1 | 136 | 1469 |
| | 2 | 122 | 1331 |
| | 3 | 125 + 1 | 1368 |
| | | 384 | 4158 |
| திருநாவுக்கரசர் | 4 | 113 | 1070 |
| | 5 | 100 | 1015 |
| | 6 | 099 | 0981 |
| | | 312 | 3066 |
| சுந்தரமூர்த்தி | 7 | 100 | 1026 |

| | | |
|---|---|---|
| சம்பந்தர் (1 – 3) | 384 | 4158 |
| நாவுக்கரசர் (4 – 6) | 312 | 3066 |
| சுந்தரர் (7) | 100 | 1026 |
| **மொத்தம்** | **796** | **8250** |

**'திருமுறை'** என்னும் இப்பெயர் மூவர் திருப்பதிகளுக்கு மட்டுமே வழங்கப்பெற்றதாகும். நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்குப் பின்னரே திருவாசகம் முதலியனவும் திருமுறைகளாக வழங்கப்பெற்றதை திருமுறை கண்ட புராணத்தின் வாயிலாக அறிய முடிகின்றது.

## 'தேவாரம்' என்னும் பெயர்

மூவர் திருப்பதிகங்களைத் **'தேவாரம்'** என அழைக்கும் வழக்கம் இரட்டையர்கள் பாடிய **'ஏகாம்பர நாதர் உலாவில்'** முதன்முதலாகக் காணமுடிகின்றது.

**"மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்**
**தேவாரஞ் செய்த திருப்பாட்டும்"**[76]

என்பது அந்த உலாவில் இடம்பெறும் தொடராகும். ஆயினும் மூவர் பாடிய திருப்பதிகங்களையும் சைவ எல்லப்ப நாவலர் பாடிய திருவருணைக் கலம்பகத்தில் தான் தெளிவாகக் காணமுடிகின்றது.

## மூவர் அருளிய திருப்பதிகங்கள்

மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் குறித்துச் சில குறிப்புக்களைத் தந்துள்ள ந.சுப்புரெட்டியார், திருஞானசம்பந்தர் தேவாரங்களைப் பற்றிக் குறிப்பிடும் போது ஞானப்பால் உண்டது, சம்பந்தர் இறைவனிடம் பொற்றாளம் பெற்றது. இறைவனிடம் முத்துச்சிவிகை முதலியன பெற்றது. முயலகன் நோய் தீர்ந்தது, பனிநோய் தீர்த்தது, முத்துப்பந்தர் பெற்றது. உலவாக்கிழி பெற்றது, விடந்தீர்த்தது, மறைக்கதவம் அடைத்தது, மறைக்கதவும் அடைத்தலும் திறந்தலும், வாய்மூர் இறைவன் ஆடல் பாடல் காட்டல், வாசிதீரக் காசு பெற்றது, நம்பியாரூரர் சந்திப்பு, மதுரை மாநகர் அற்புதங்கள், மடத்தில் மடையர் இட்டதீயை பாண்டிய மன்னனின் வெப்பு நோயாக மாற்றியது, மன்னனுக்கு அளிக்கப்பெற்ற பல்வேறு சிகிச்சைகள், மந்திர தந்திர வாதம், அனல் வாதம், புனல் வாதம், ஆண்பனை பெண்பனையாதல் எலும்பைப் பெண்ணாக்கியது, சம்பந்தர் ஈறில்சோதியில் கலத்தல்[77] முதலான சம்பந்தர் வாழ்வியல் செய்திகளையும், அவர் நிகழ்த்திய அற்புதங்களையும் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார். இந்நிகழ்வுகளை எளிமையாக ஒவ்வொருவரும் புரிந்து கொள்ளுமாறு அவர் விளக்கிக் கூறியுள்ள திறம் போற்றுதலுக்குரியதாகும். திருநாவுக்கரசர் திருப்பதிகங்களைக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், அவரது வாழ்க்கை வரலாற்றை முதலில் சுருக்கமாகக் கூறிவிட்டு, சூலை நோயால் அவர்பெற்ற மாற்றம், நாவுக்கரசர் அரசன் ஆணையை மறுத்துப் பேசியது, சுண்ணாம்பு நீற்றறையினில் இறைவன் அருளால் துன்புறாமல் இருந்தது. அவர் நஞ்சையும் அமுதமாக மாற்றியது. மதயாணையின் தாக்குதலில் இருந்து தப்பித்தது. கடலில் கல்லைத் தெப்பமாகக் கொண்டு நீந்தியது. சூலக்குறி, இடபக்குறி பொறிக்கப் பெற்றது. திருவடி சூட்டப்பெற்றது. விடந்தீர்த்தது, மறைக்கதவம் திறந்தது, வாய் மூரடிகள் அருளிய காட்சி, உலவாக்கிழி பற்றிய குறிப்பு, பொதிசோறு பெற்றுப் பசி தீர்தல் (விருத்தாசலத்தில்), கயிலாயத் திருப்பயணம், **'தாண்டக வேந்தர்'** என்னும் சிறப்புப் பெறுதல், ஐயாற்றில் கண்ட கயிலைக் காட்சி, உழவாரப்பணி, அண்ணலார் சேவடியில் சேருதல்[78] முதலான திருநாவுக்கரசர் வாழ்வியல் செய்திகளையும், அவருக்காகச் சிவன் நிகழ்த்திய அற்புதங்களையும் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார்.

சுந்தரமூர்த்தி திருப்பதிகங்களை விளக்க முற்படும் ந.சுப்புரெட்டியார், சுந்தரரின் வாழ்க்கை வரலாற்றை முதலில் சுருக்கமாக அறிமுகப்படுத்தியப் பின்னர் சுந்தரர் இறைவனால் தடுத்தாட்கொள்ளப் பெற்றது, சிவபெருமான் திருவடி

சூட்டப்பெற்றது. தம்பிரான் தோழனாதல், இறைவன், பரவையாரை சுந்தரரின் வாழ்க்கைத் துணையாக்குதல், இறைவன் சுந்தரர் திருத்தொண்டத் தொகையைப்பாட அருளுதல், சுந்தரர் இறையருளால் பொற்கட்டிகளைப் பெறுதல், குண்டையூர்க் கிழவர்க்கு நெற்குவியலை அருளியது, பொதிசோறு அளித்த நிகழ்வு, இறைவன் சங்கிலியாரையும் தம்பிரான் தோழருடன் பிணைத்து மற்றொரு துணைவியாக்கல், சுந்தரர் வாழ்க்கையில் ஊழ் செயற்படத் தொடங்குதல், திருமணம் நிகழ்தல், கண்களை இழந்து வருந்துதல், ஊன்றுகோல் பெற்று உதவப் பெறுதல், பின்னர் இடக்கண் பார்வை பெறுதல், உடற்பிணி நீக்கப்பெறுதல், வலக்கண் பார்வையைப் பெறுதல், ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்கு ஏற்பட்ட நோயைப் போக்குதல், பொன்னும் நவமணிகளும் பெறுதல், முதலையுண்ட பாலகனை மீட்டுத் தந்தருளல்[79] முதலான சுந்தரர் வாழ்வியல் செய்திகளையும், அவருக்காக இறைவன் நிகழ்த்திய அற்புதங்களையும் சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார்.

## பண்சுமந்த தேவாரப்பாடல்கள்

இப்பகுதியில் ந.சுப்புரெட்டியார் தேவார ஆசிரியர்கள் மூவரும் பாடிய ஏழுதிருமுறைகளிலும் அமைந்துள்ள பண்கள் இவை என்பதையும், அப்பண்களுக்குரிய திருப்பதிகங்கள் பெற்றுள்ள கட்டளை விகற்பங்களின் தொகைகளையும், தற்போது தேவாரப் பதிகங்களில் தெளிவாகப் புலப்படும் யாப்பமைதிகளையும், ஏடுபடியெடுத்தோரால் பிற்காலத்தில் நிகழ்ந்த மாற்றங்களையும் திருமுறை கண்ட புராணத்தை ஆதாரமாகக் கொண்டு விளக்கியுள்ளார். தேவாரப் பதிகங்களை இசையுடன் பாடியும் கேட்டும் மகிழ்வதற்கு அப்பதிகங்களுக்குரிய பண்ணாகிய இசையமைப்பினையும், பாடலுக்குரிய தாள அமைப்பினையும் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். செய்யுட்களின் தாள அமைதியினை அவற்றில் அமைந்த சீர்நிலைகளால் தெளியலாம். **‘சீர்’** என்னும் சொல்லிற்குத் **‘தாளம்’** என்னும் பொருளும் உண்டு. ஆதலால் பதிகங்களின் பாடல்களின் சீர்நிலைகளாகிய யாப்பமைதியினைப் பகுத்து உணர்ந்தால் தான் அவற்றை நிலைக்களனாகக் கொண்டு நிகழும் தாளக்கூறுபாடும் இனிது விளங்கும் என்னும் கருத்தாக்கத்தில் திருமுறைகண்ட புராண ஆசிரியர் தேவாரத் திருப்பதிகங்களின் பண்முறை பற்றியமைந்த கட்டளைகளைப் பகுத்துக் கூறியுள்ளார்.

திருமுறை கண்ட புராணத்தில் கூறியவாறே தேவாரப் பதிகங்களுக்குரிய பண்களும் கட்டளைகளும் பெரியபுராண ஆசிரியராகிய சேக்கிழார் காலத்திற்கு முன்பிருந்தே வழங்கி வந்துள்ளன. திருமுறை கண்ட புராணம் காலத்தால் பிற்பட்டதாயினும் அந்நூல் விரித்துரைக்கும் திருமுறைப் பகுப்பும் பண்ணடைவும் கட்டளை வகைகளும் திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பி காலத்திலேயே நிலைபெற்ற தொன்மை

பெற்றது என்பதில் ஐயமில்லை. ஆதலால், **“தேவாரத் திருப்பதிகங்களில் சீர்நிலைபற்றியும், எழுத்தனவாகிய மாத்திரை பற்றியும், சீர்களில் முன்னும் பின்னும் உள்ள எழுத்துக்கள் அசையாய் நின்று முன்பின்னுள்ள சீர்களின் ஈற்றிலும் முதலிலும் பிரிந்திணைந்து இசைத்தலால் உளவாம் இசைமுறை பற்றியும், அமைந்த ஓசைக் கூறுபாடுகளே திருமுறை கண்ட புராணம் கூறும் தேவாரப் பதிகங்களின் கட்டளைகளாம் என்பது நன்கு தெளியப்படும். தேவாரப் பதிகங்களாகிய ஏழு திருமுறைகளிலும் பண்கள் தோறும் அமைந்த கட்டளைகளின் தொகையினையும் அவற்றுக்குரிய யாப்பு விகற்பங்களின் தொகையினையும் உற்று நோக்கித் தெளிவு பெறுதல் இசைப்புலவங்களின் இன்றியமையாத கடமையாகும்”**[80] என வலியுறுத்திக் கூறியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

## முருகப்பெருமானின் ஆற்றுப்படை (ஆறு) வீடுகள்

ந.சுப்புரெட்டியார் **‘முருகப்பெருமானின் ஆ(ற்)றுப்படை வீடுகள்’**[81] என்னும் கட்டுரையில் சைவக் கடவுள்களுள் ஒருவனான முருகனைப் பற்றியும், நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையின் சிறப்புக்களையும் விளக்குகின்றார். முதல் முதறிஞர்கள் இயற்கையை உடலாகவும், அதன் உள்ளுறை, உயிராகக் கொண்டு தமிழையும் கண்டு போற்றியுள்ளனர். திரு.வி.க. **‘முருகயுடையவன்’** முருகன் என்றார். **‘முருகு’** என்னும் சொல்லிற்கு மணம், இளமை, கடவுட் தன்மை, அழகு என்னும் நான்கு பொருள்கள் உண்டு என்கின்றார். திரு.வி.க. இயற்கை மணமும் மாறா இளமையும் கடவுட் தன்மையும் அழியா அழகும் கொண்ட ஆண்டவனுக்குரிய இயல்புடைய முருகன் எல்லா நாட்டவர்க்கும் **‘இறைவன்’** ஆகின்றான் என்கின்றார். இறைவனை எந்த மொழியில் எந்தப்பெயர்களில் வழங்கினாலும் அப்பெயர்ப் பொருள்களை ஆராய்ந்து தமிழில் பெயர்த்தெழுதினால் அது முருகனாகவே தோன்றும் என்பது அவர் கண்ட முடிவு. முருகையுணர்ந்து திருமுருகாற்றுப்படையைப் பாடிய நக்கீரர் அழகின் இயல்பை ‘கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு’[81] என்று கூறியுள்ளார்.

மக்கள் வாழ்க்கை முதன்முதலில் மலைநிலத்தில் (குறிஞ்சி நிலம்) தோன்றியதென்றே அறிஞர் கூறுவர். முருகன் தமிழ்க் கடவுளாகவும் குறிஞ்சி நிலக் கடவுளாகவும் இருப்பதிலிருந்து முருக வழிபாட்டின் தொன்மையை அறியலாம். பழந்தமிழ் மக்கள் தம்கடவுளைக் **‘குறிஞ்சி கிழான்’** என்றும், **‘மலைகிழவோன்’** என்றும் பெயரிட்டு அழைத்துள்ளனர். தொல்காப்பியர் குறிஞ்சிக் கடவுளைக் **‘சேயோன் மேய மைவரை உலகமும்’** எனக் குறித்துள்ளார்.

**“பழந்தமிழர் இயற்கை அழகை உயர்ந்த பொருளாக, அதாவது கடவுளாகக் கொண்டு வாழ்ந்தனர். அவர்கள் மலைமீது**

**வாழ்ந்தபோது அவர்கள் உள்ளத்தைக் காலையிலும் மாலையிலும் ஞாயிற்றின் செம்மையும் பிற செம்மைகளும் கவர்ந்தன. அச்செம்மையின் இயற்கை அழகை அவர்கள் 'சேய்' என்று போற்றினர். அம்மக்கள் தங்கள் கண்ணுக்குப் பச்சைப் பசேலெனக் காட்டி வழங்கிய காட்டின் இயற்கை அழகை 'மால்' என்று வாழ்த்தினர். அவர்கள் மருத நிலத்திற்குக் குடிபுகுந்த போது அங்கே பெரிதும் தம் இனமாகிய மக்கள் கூட்டத்துடன் நெருங்கிப் பழக நேர்ந்தமையான் மக்கள் மாட்டொளிரும் இறைமை என்றும் இயற்கையழகைக் கண்டு 'வேந்து' எனக் கொண்டனர். அவர்கள் கடற்கரையை நண்ணியபோது கடலின் இயற்கையழகை வண்ணம் என்றனர். பழந்தமிழ் மக்கள் அவ்வந்நில இயற்கையழகிற்கிட்ட பெயர்கள் சேய், மால், வேந்து, வண்ணம் என்பன"** திருமுருகாற்றுப்படையிலும் நக்கீரர் முருகனை **'விண்பொருநெடுவரை குறிஞ்சிக்கிழவ'**[83] என்றே அழைக்கின்றார். இத்தகைய இயற்கைக் கடவுளாகிய முருகனைத் தமிழர் பாட்டு, ஓவியம், இசை என்னும் முத்திரை வழிபாடுகளால் போற்றியுள்ளனர். இவற்றுள் திருமுருகாற்றுப்படை என்னும் சொற்கோயில் பழம்பெருமை பெற்றதாகும். இத்திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்ச்சோலை ஆகிய ஆறு இடங்களும் முருகவேளுக்கு உகந்த இடங்களாகக் கூறப்பெற்றுள்ளன. முருகனது திருவருளைப் பெற்ற அடியவன் ஒருவன், அவ்வருள்பெற விரும்பிய மற்றொரு முருக பக்தனை முருகனை நாடி அருள்பெற ஆற்றுப்படுத்தும் முறையில் இந்த ஆறுபடை வீடுகள் அமைத்துப் பாடப்பெற்றுள்ளன. இவ்வாறு திருமுருகாற்றுப்படையில் ஆறுபடை வீடுகளின் சிறப்புக்களை விளக்கும் ந.சுப்புரெட்டியார், **"முருகன் இயற்கை முதல்வனாக நின்று இயற்கையை இயக்கி வருகின்றான். அவன் மன்னுயிர்கட்கு நலம் பெய்து வருதலைப் புராணங்கள் பல திருவிளையாடல்களாகப் புகழ்கின்றன. புராணங்களின் உட்கிடக்கையை உணர்ந்து போற்றுதல் வேண்டும். இவ்வாறு ஆய்ந்து உணர்ந்தால் எம்பெருமான் முருகன் இயற்கை முதல்வன் என்பது புலனாகும். இதை உணர்ந்து முருகனை வழிபடுவோர் இயற்கை மணமுடையவராய், மாறாத இளமையுடையவராய், அழியா அழகுடையவராய் பிறப்பு இறப்புச் சூழல்களில் சிக்கித் துன்பத்தை அனுபவியாது இன்பவாழ்வில் திளைத்திருப்பர்"**[84] என்கின்றார்.

## ந.சுப்புரெட்டியார் பார்வையில் சைவமும் வைணவமும்

சைவமும் (சைவ சித்தாந்தம்) வைணவமும் வேதத்தை அடிப்படையாகக் கொண்ட சமயமாதலின் அவை **'வைதிக சமயங்கள்'** எனப் போற்றப் பெறுகின்றன. சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டதைச் சைவம் என்றும், விஷ்ணுவை முழுமுதற்கடவுளாகக் கொண்டதை வைணவம் என்றும் கூறுவர். **'விஷ்ணு'** என்பதற்கு எங்கும் நிறைந்தது

என்பது பொருள். சைவ சித்தாந்தம் சற்காரிய விரதத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். அது இல்லது தோன்றாது. உள்ளது அழியாது என்ற அடிப்படையில் அமைந்ததாகும். வைணவத்திலும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் திருமால்தான் செய்விக்கின்றான் என்ற கொள்கை உள்ளது. இதற்கு ஆழ்வார்களின் பாசுரங்கள் சான்றளிக்கின்றன.

## பெயர்ப்பொருத்தம்

**'சைவம்'** என்பது சைவ சித்தந்தமாகும். **'வைணவம்'** என்பது விசிட்டாத்வைதம் ஆகும். சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடியாக பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களும் கொள்ளப்படுகின்றன. விசிட்டாத்வைதமும் சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் முப்பொருள்களைக் கொண்டுள்ளன. தத்துவ நிலையிலும் இம்மூன்றுமே ஒத்திருக்கின்றன. இவற்றைத் தக்க சான்றுகளின் வழி தேவாரப் பாடல்கள், ஆழ்வார்களின் பாசுரங்கள் ஆகியனவற்றைக் காட்டி விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார். ந.சுப்புரெட்டியார் சைவ சமயத்தைச் சேர்ந்தவராக இருப்பினும் அவர்தம் தமிழ்ப்பணியிலும் சமயப்பணியிலும் வைணவத்திற்கே மிகுந்த முக்கியத்துவம் கொடுத்துள்ளார். அவருடைய ஆய்வுப் போக்கு இலக்கியப்பணியில் வைணவம், திண்வரைசூழ் திருவேங்கடம், வைணவத்தில் தேவி வழிபாடு, மார்கழி நோன்பின் வரலாறு, வைணவ இலக்கியத்தின் உரைவளம், திவ்வியப்பிரபந்த இலக்கியப்பெருவிழா, கம்பனின் இதயப்பாங்கு, நம்மாழ்வாரும் வைணவத் தத்துவமும், கம்பனில் வைணவம் என்று வைணவம் சார்ந்தே அமைந்து பரந்து காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

## ந.சுப்புரெட்டியார் பார்வையில் சைவ சித்தாந்தம்

தமிழர் வாழ்வில் சைவமும் இணைந்தே வளர்ந்து வந்துள்ளது என்பது வரலாற்று உண்மையாகும். பல்லவர் ஆட்சிக் காலத்தில் தமிழொடு சைவமும் மிக உன்னத நிலையினை அடைந்தது. திருஞான சம்பந்தரால் தமிழில் பதிகப்பெருநெறி தோற்றுவிக்கப்பட்டது. அவரது அடியொற்றி வந்த அருளாளர்களின் தொண்டினால் தமிழும் சைவமும் செழித்து வளர்ந்தன. **'பன்னிரு திருமுறைகள்'** தமிழ்ச் சைவ சமயத்தின் அடிப்படை நூல்களாகும். மூவர் முதலிகளையும் மாணிக்கவாசகரையும் சமயத் தலைவர்களாகவும், சிவனை முழுமுதற்பொருளாகவும், மாறா இறை இயல்பு ஒன்றே வீடுபேற்றுக்கு வழி என்பதும், சாதி – மத வேறுபாடின்றி ஆணும் பெண்ணும் இறையின்பத்தைத் துய்த்து வாழலாம். சமய வாழ்க்கை இந்த உலக வாழ்க்கைக்கு எதிரானது அல்ல என்பதும் சைவர்களால் வாழ்வியல் கொள்கைகளாக ஏற்கப்பட்டன. இக்கொள்ளைகள் சமண சமயத்தின் துறவு வாழ்க்கைக்கு எதிராக அமைந்ததோடு, அச்சமயத்தின் நலிவுக்கும் காரணங்களாக இருந்தன. சைவ சமயம்

நாயன்மார்களை முன்னிலைப்படுத்தி ஒரு மக்கள் இயக்கமாகவே வளர்ந்தது.

கி.பி.13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய மெய்கண்டார் பாடிய **‘சிவஞானபோதமே’** சைவ சமயத்தின் தத்துவக் கொள்கைகளை விளக்கும் முதல் அடிப்படை நூலாகும். சிவஞானபோதம் உட்பட சைவ சித்தாந்த நூல்கள் மொத்தம் பதினான்கு ஆகும். சிவஞானபோதத்திற்கு உரைகள் பல இருப்பினும், சிவஞான முனிவரின் சிவஞானபோதம் மாபாடியமே சிறந்த உரைநூலாகச் சைவர்களால் ஏற்றுக் கொள்ளப்பெற்றுள்ளது. இரண்டாயிரம் ஆண்டு வளர்ச்சி வரலாற்றைப் பெற்றுள்ள சைவம் பல்வேறு காலகட்டங்களில் வைதிக சமயம், ஆகமம், அறுவகைத் தரிசனங்கள், சமணம், பௌத்தம், சாருவாகம் ஆகியனவற்றின் கருத்துக்களை உள்வாங்கிக் கொண்டு, தமிழகத்திற்கே உரிய சைவ சித்தாந்தமாக செப்பம் பெற்று விளங்குகின்றது. இன்றளவும் சைவத் திருமடங்களால் பேணப்பட்டும் வளர்க்கப்பட்டும் வருகின்றது. ஏனைய இந்தியத் தத்துவங்களைப் போலவே சைவசித்தாந்தமும் அறிவாராய்ச்சி இயல், மெய்ப்பொருளியல், அறிவியல் என்னும் முப்பிரிவுகளைக் கொண்டதாகும். பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை) என்பன சைவ சித்தாந்தம் நுவலும் உண்மைப் பொருள்களாகும். உயிரின் ஆணவமல நீக்கத்தின் பொருட்டு ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களை இறைவன் செய்து வருகின்றான். ஐந்து தொழில்களைப் புரிவது இறைவனின் சிறப்பிலக்கணம் என்கின்றார் சிவஞான முனிவர். பந்தம், வீடுபேறு ஆகிய இருநிலைகளிலும் அறிபவன் உயிர், அறியப்படுபொருள்கள் இறைவனும் உலகமும் ஆகும். இறை – உயிர் போலவே ஆணவம், கன்மம், மாயை என்னும் முப்பொருள்களும் கற்காரியவாதப்படி நித்தியமான உட்பொருள்களாகக் கொள்ள வேண்டும். உள்பொருளோ அல்லது இல்பொருளோ என உறுதிப்படுத்த இயலாத பொருட்கள் அல்ல அவை.

உயிர் தனது சமய வாழ்வின் வாயிலாக மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதோடு, செல்கதிக்கும் குறைவிலா நிலையினை அடைகின்றது. மற்றைய இந்திய தத்துவங்கள் ஏதோவொரு வகையில் பிறவியை ஒரு வகையில் துன்பமயமானது என்றும், அது வெறுத்து ஒதுக்கப்பட வேண்டியது என்றும், அது அறியாமையின் விளைவு என்றும் கொள்ளும். ஆனால் சைவ சமயம் பிறவி இறைவனால் கொடுக்கப்பட்ட அருட்கொடை என்றும், அறியாமையைப் போக்கி கொள்ளவே அது அமைந்தது என்றும் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### ந.சுப்புரெட்டியாரின் ‘சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்’ என்னும் நூல்

சைவசித்தாந்தத்தின் இக்கோட்பாடுகளை விளக்கி எழுதப்பட்ட இந்நூல் தொல்காப்பியம் முதல் மெய்கண்ட சாத்திரங்கள் ஈறாகவுள்ள பல நூற்களில் காணப்பெறும் சைவசித்தாந்தக் கருத்துக்களைத் தொகுத்து ஆய்வு நோக்கில் எழுதப்பட்ட நூலாகும். சைவ சமய வரலாற்றையும் தத்துவக் கருத்துக்களையும் விளக்கி ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்கள் எழுதப்பெற்றுள்ளன. ஆயினும் சைவ சமயத் தத்துவக் கருத்துக்களை மையப்படுத்தித் தமிழ் நூல்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு வரலாற்று நோக்கில் எழுதப்பட்ட ஆய்வு நூல் இது இந்நூலினுள் சித்தாந்த சாத்திரங்கள், சத்தான சாரியர்கள், தத்துவங்கள் -பதி, தத்துவங்கள் - பசு, தத்துவங்கள் - பாசம், வீடுபேற்றுக்கு வழிகள், வீடுபேறு, வழிபாட்டு முறைகள் என்னும் எட்டு இயல்கள் உள்ளன.

**சைவ சித்தாந்த சாத்திரங்கள்**

மேனாட்டுத் தத்துவங்களில் இருப்பதைப் போன்று இந்தியத் தத்துவங்களில் சமயம் வேறு; தத்துவம் வேறு எனப் பிரித்து பேசும் மரபு இல்லை. சைவசித்தாந்தம், விசிட்டாத்வைதம் ஆகியனவற்றில் சமயமும் தத்துவமும் இணைந்தே காணப்படுகின்றன என்பதை விளக்கியே ந.சுப்புரெட்டியார் இந்நூலினை எழுதியுள்ளார். திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரின் திருவுந்தியார், திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனாரின் திருக்களிற்றுப்படியார், மெய்கண்ட தேவநாயனாரின் சிவஞான போதம், அருணந்தி தேவநாயனாரின் சிவஞான சித்தியார், இருபா இருப.்.து, திருவதிகை மனவாசம் கடந்தாரின் உண்மை விளக்கம், உமாபதி சிவத்தின் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் ப.்.றொடை வெண்பா, உமாபதி சிவத்தின் கொடிக்கவி நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்[85] ஆகிய பதினான்கு சைவசித்தாந்த சாத்திரங்களின், சைவசித்தாந்த கருத்துக்களை இப்பகுதியில் ந.சுப்புரெட்டியார் அறிமுகப்படுத்தி தெளிவுப்படுத்தியுள்ளார்.

**சந்தானாசாரியர்கள்**

சைவசித்தாந்த மரபில் இவர்கள் மெய்கண்ட நூலாசிரியர்கள் என வழங்கப் பெறுவர். இவர்களைச் **'சந்தானாசாரியர்கள்'** என வழங்குவது பெருமரபாகும். இவர்களைச் சந்தான குரவர்கள்' என்றும் குறிப்பிடலாம். திருவியலூர் உய்யவந்த தேவநேயனார், திருக்கடவூர் உய்யவந்த தேவநயனார், மெய்கண்ட தேவர், அருணந்திதேவர், மனவாசம் கடந்தார், உமாபதிதேவ நாயனார் ஆகிய ஏழுபேரும் சந்தானாசாரியர்கள்[86] எனப் போற்றப்படுவர்கள் ஆவர். உமாபதி சிவத்தைப் பற்றிக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், **"ஒருநாள் தில்லையில் திருவிழாவிற்குக் கொடியேற்ற அங்குள்ள அந்தணர்கள் முயன்ற போது கொடியெழாமை கண்டு அவர்கள் கவலையுற்றனர். அப்பொழுது 'உமாபதி வந்தால் கொடியேறும்' என்னும் அருள்வாக்கு விசும்பில் எழுந்தது. உடனே**

**சுவாமிகளிடம் எல்லோரும் சென்று வணங்கிச் செய்தியைத் தெரிவித்தனர். சுவாமிகளும் அப்படியே விரைவில் தில்லைக்கேசி கொடிக்கவி என்னும் சிறுநூலிலுள்ள முதற்பாட்டைப் பாடியவுடன் கொடி தானாக ஏறிற்று. சுவாமிகள் 'சிவப்பிரகாசம்' என்னும் சிவஞானச் சார்பு நூலொன்றும் உண்மைநெறி விளக்கம்,நெஞ்சுவிடு தூது, வினா வெண்பா, திருவருட்பயன், சங்கற்ப நிராகரணம், போற்றிப் ப.்.றொடை வெண்பா பிற ஏழு நூல்களும் இயற்றியருளினார். கோவிற்புராணம், சேக்கிழார்புராணம், திருத்தொண்டர் புராணச்சாரம், திருப்பதிக்கோவை முதலியனவும் இவரால் இயற்றப் பெற்றனவாகக் கருதுவோரும் உண்டு. வடமொழியில் பௌடகம் என்னும் உபாகமத்திற்கு இவர் இயற்றிய விரிவுரை ஒன்றும் உண்டு. சீடர்களுக்கு ஞானநூல் கற்பித்தல், பதிநூல் இயற்றுதல், தக்கவர்களுக்கு முத்திப்பேறு உதவுதல் ஆகிய பேருபகாரங்களைச் செய்து பின்னர் சமாதி நிலையில் சித்திரை அத்த நாளில் சிவபெருமானொடு இரண்டறக்கலந்தார்''**[87] எனக் குறிப்பிடுகின்றார்.

**தத்துவங்கள் - பதி**

சைவ சித்தாந்தத்தில் முடிந்த முடியாகக் கொள்ளப்படுவன பதி, பசு, பாசம் என்னும் மூன்று தத்துவங்களே ஆகும். இவை என்றும் உள்ளவை. இவற்றைத் திருமூலர்,

**“பதிபசு பாசம் எனப்பகர் மூன்றின்**
**பதியினைப் போற்பசு பாசம் அநாதி”**[88]

என்று தெளிவுப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார், சைவ சித்தாந்த நூல்களில் காணப்பெறும் **'பதி'** பற்றிய தத்துவக் கருத்துக்களைப் பதி உண்டு. உலகத் தோற்றத்திற்குக் கருத்தாவாக உள்ள ஒருவனே பதி, சங்காரகாரகனே முதற்கடவுள் - கடவுள் ஒருவனே, பதியின் சிறப்பு இலக்கணமாகிய சொரூப இலக்கணம், பொது இலக்கணமாகிய தடத்த இலக்கணம் ஆதிசக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி முதலான சக்தியின் வகைகள், படைத்தல் - காத்தல் - அழித்தல் என்பதற்கான சிறப்பு விளக்கம், இறைவனுக்கு உலகத்தோடுள்ள தொடர்புகள், இறைவன் உலகத்தைச் செயல்படுத்தி இயக்கும் முறை, இறைவனின் உருவங்கள், இறைவனின் திருமேனி குறித்த தெளிந்த கருத்துக்கள், சம்புபட்ச அணுபட்ச விளக்கங்கள், சிவக்குமாரர்கள் - சிவகணங்கள், சிவன்-சக்தி பற்றிய தத்துவ விளக்கங்கள், பதியை அறியும் முறை, பதிஞானம் குறித்த விளக்கங்கள், பதியே சச்சிதானந்தம் என்பதற்கான காரணங்கள் பதியினது அருட்குணங்கள்[89] ஆகியவற்றைத் தக்க சான்றுப் பாடல்களும் உதாரண விளக்கங்களும் தந்து தெளிவுபடுத்தி உள்ளார்.

**தத்துவங்கள் - பசு**

உயிரைச் சைவ சித்தாந்தம் **'பசு'** எனப் பேசுகின்றது. கருத்துப் புலனாகும் உயிரை நாம் கண்ணால் காணமுடியாது. உயிர் என்பது அறிவுடையது. ஆயினும் அது இறைவனது அறிவு போன்று பேரறிவு உடையதாகாது. அது சிற்றறிவு கொண்டதாகும். உயிரைப் பற்றிப் பிறர் உயிர் சூனியம் ஆகாமை, உடல் உயிராகாமை, ஐம்பொறிகள் உயிர் ஆகாமை நுண்ணுடம்பு உயிராகாமை, கரணங்கள் உயிராகாமை, பிராணன் உயிர் ஆகாமை, கருவிக் கூட்டங்கள் உயிராகாமை, பரப்பிரம்மன் உயிராகாமை என்னும் நிலைகளில் விளக்கும் ந.சுப்புரெட்டியார், இப்பகுதியில், **உயிர் பற்றிய மெய்கண்டாரின் கொள்கைகள், உயிரின் இயல்புகள் குறித்த விளக்கங்கள், உயிர் அறிவுடைய பொருள், பதி – பசு அறிவு வேற்றுமை, உயிர் சார்ந்த வண்ணமாதல், உயிரின் இடைப்பட்ட நிலை, உயிரின் விரிவு, உயிர் அணு ஆகாமை, உயிர் விளக்கு அன்று, உயிர் உடம்பளவு ஆகாமை, உயிர் பற்றிய சித்தாந்தக் கருத்து விளக்கங்கள், ஆணவத்தால் கட்டுண்ட ஆன்மாவின் நிலைகள், கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை, மூவகை ஐந்தவத்தைகள், மூவகை உயிர்கள் (ஆணவம், கன்மம், மாயை) என்னும் நிலைகளில்**[90] சைவ சித்தாந்த சாத்திரங்களில் இருந்து சான்றுப் பாடல்களைக் காட்டி நுட்பமாக விளக்கியுள்ளார்.

**தத்துவங்கள் - பாசம்**

**'பதி'** ஒன்று என்பதும் **'பசுக்கள் பல'** என்பதும் சைவ சித்தாந்தம் கண்ட உண்மையாகும். பசுக்களைப் பிணித்திருப்பதே பாசம். **'பாசம்'** என்பதற்குக் **'கட்டுவது'** என்பது பொருளாகும். பாகங்கள் ஆணவம், கன்மம், மாயை என மூன்று வகைப்படும். இதனை விளக்கும் ந.சுப்புரெட்டியார், **"இவற்றுள் மாயை அனைவராலும் எளிதில் உணரப் பெறுவது. பல்வேறு பிறவிகளில் காணப்பெறும் உடம்புகளும், நிலம், நீர் முதலிய பெரும்பொருட்களும் இயங்குதிணை, நிலைத்திணை ஆகிய உலகத்தொகுதி முழுவதும் மாயையின் செயல்களேயாகும். கண்மத்தை எளிதாகக் காட்சியில் உணரமுடியாது. ஆனால் சிறிது நுனித்து நோக்கினால் உணரக்கூடியது. 'ஆணவம்' என்பதை உணர்தல் மிகவும் அரிது. இது சைவ சித்தாந்தத்தின் சிறப்பான பகுதியாகும். சில சமயங்கள் இதனை ஒப்புக் கொள்வதே இல்லை. பருப்பொருள் (தூலப்பொருள்) எளிதில் உணரமுடியாது. ஆணவம் நுண்பொருள் கன்மம் இரண்டிற்கும் இடைப்பட்ட பொருளாகும். இந்த மூன்றும் 'மும்மலங்கள்' எனப்பெயர் பெறும். மலம் என்பது அழுக்கு. உயிர்களின் தூய்மையைக் கெடுத்து நிற்றலால் இப்பெயர் பெற்றது"**[91] என்கின்றார். அவர் பாசத்தின் தத்துவத்தை விளக்கும் இப்பகுதியில் ஆணவமலம், கன்மமலம், கன்மங்களின் மூவகை

நிலை, மாயமலம், காரணங்களிலிருந்து காரியங்கள், சுத்த மாயையின் தத்துவங்கள், அசுத்த மாயையின் தத்துவங்கள், ஆன்ம தத்துவங்கள், ஐம்பெரும் பூதங்கள் அகியனவற்றை இலக்கியச் சான்றுகளின் அடிப்படையிலும், சைவ சித்தாந்தக் கொள்கைகளின் அடிப்படையிலும் சான்றுப் பாடல்களைக் காட்டி விளக்கமாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

## வீடுபேற்றுக்குரிய வழிகள்

உயிர்கள் பாசத்தினின்றும் நீங்கிப் பதியினை அடையும் வழிமுறைகள் **'சாதனங்கள்'** எனப்பெயர் பெறும். சைவ சித்தாந்தம் இதனை வீடுபேற்றுக்குரிய வழிகளாக வலியுறுத்திக் கூறுகின்றது. இதனை ந.சுப்புரெட்டியார், **"சிவாகமத்தால் பெறப்படுவதாய நெறி சைவ சமயமாகும். இதில் சிவாகமத்தின் வழியமைந்த நெறி நான்கு. இவை சரியை, சிரியை, யோகம், ஞானம் என்று வழங்கப்பெறும். சிவஞானசித்தியார் சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாதுமார்க்கம் எனக்கூறி இவை முறையே ஞானம், யோகம், சரியை, கிரியை என வழங்கப்பெறும் எனக் குறிப்பிடுகிறார். இவற்றையே நற்றமிழில் கூறும்போது சன்மார்க்கத்தை நன்னெறி என்றும், சற்புத்திரமார்க்கத்தை மகன்மைநெறி என்றும், தாத மார்க்கத்தைத் தொண்டு நெறி என்றும் வழங்குவர். இவற்றுக்கு முறையே மாணிக்கவாசகர், சுந்தரமூர்த்தி, ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இவர்களை எடுத்துக்காட்டுக்களாகக் கொள்வர். சைவநெறியாழுகும் பெரியோர்"**[92] எனக்குறிப்பிடுகின்றார். முத்தியாகிய பெரும்பயனுக்கு ஞானம் ஒன்றே வாயிலாகும். ஏனைய பலவும் ஞானத்தை அடைவதற்குரிய வழிகளாகும். வேள்வி, தானம், பிறகருமங்கள், செபம், தீக்கை முதலியன ஞானத்தைத் தந்து அதன் வாதயிலாகவே முத்தியை நல்கும். அவை நேராக முத்தியைத் தருவதில்லை. ஞானமே மும்மலங்களையும் நீக்கும் உயிரைத் தூய்மைப்படுத்தும். பின்னர் தூயவனும் இன்பவடிவினனுமாகிய இறைவனிடம் சேர்க்கும்.

வீடுபேற்றுக்குரிய இந்த வழிவகைகளை விளக்கும் ந.சுப்புரெட்டியார் ஞானம் பெறுவதற்குரிய வழிகள், சிவபுண்ணியங்கள், வீடுபேற்றுக்கு ஞானமே வழியாக அமைதல், அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞானத்தைத் தரும் தீக்கை வகைகள், சிவநெறி ஒழுக்கம், ஆகியனவற்றை சைவ சித்தாந்தக் கருத்துக்களின் அடிப்படையில் இப்பகுதியில் அழுத்தமாகவும் தெளிவாகவும் விளக்கிக் கூறியுள்ளார்.

## வீடுபேறு

உயிர்கள் அனைத்தும் வாழ்க்கை என்னும் பெரும்பயணத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றன. அப்பயணம் இறைவனை அடைந்து நிறைவு பெறுவதே வீடுபேறு ஆகும். இந்த வீடுபேறு குறித்து விளக்கும் ந.சுப்புரெட்டியார், ஆன்மாவின் பெரும்பயணம், முத்தியின் இயல்பு, பல்வேறு

வகையான முத்திகள், சீவன் முத்தி, தசகாரியம், அவத்தைகள், திருந்தடி, அணைந்தோர் தன்மை என்னும் படிநிலைகளில் சைவசித்தாந்த இலக்கியச் சான்றுகளைக் காட்டி விளக்கியுள்ளார்.

## வழிபாட்டு முறைகள்

இந்த உலகங்களையெல்லாம் படைத்தும் காத்தும் அழித்தும் பல்வேறு விளையாட்டுக்களையெல்லாம் செய்பவன் எல்லாம் வல்ல முழுமுதற்கடவுள் ஆவான். சைவசமயம் சங்கார காரணனையே முழுமுதற்கடவுளாகக் கொள்கின்றது. அத்தகைய கடவுளை வழிபடுதல் ஆருயிர்களின் கடமை என்று அச்சமயம் வலியுறுத்துகின்றது. ந.சுப்புரெட்டியார் முழுமுதற்கடவுளாகிய சங்கார கரணனை வழிபடும் முறையை மனிதன் இறைவனை வணங்கும் முறை, ஆலய வழிபாடு, பூசை முறைகள், பூசை விதிமுறைகள், பூசை வகைகள், கடமையும் பலன்களும் எனப்பகுத்து விளக்கியுள்ளார்.

## இயல் முடிபுகள்

- ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளில் குறிப்பிடத்தக்கது அவர் தமிழ் மரபு சார்ந்த சமய தத்துவச் சிந்தனைகளைத் தமிழ்ப்பக்தி இலக்கியங்களிலிருந்து எடுத்துக்காட்டி, தமிழ்ச்சூழலில் அதன் சிறப்புக்களையும் தேவைகளையும் முக்கியத்துவத்தையும் சுட்டிக்காட்டியிருப்பதே ஆகும்.
- ந.சுப்புரெட்டியார் சைவ சமயத்தவர் ஆயினும் அவர் வைணவ சமயத் தத்துவங்களிலேயே மிகுந்த ஈடுபாடுடையவர் என்பதை அவர் வைணவ சமயத் தத்துவங்கள் குறித்து எழுதியுள்ள நூல்களின் வாயிலாக அறியமுடிகின்றது.
- ந.சுப்புரெட்டியார் வைணவத் திருத்தலங்களுப் புனிதப் பயணங்களை மேற்கொண்டு, அத்திருத்தலங்களின் புனிதம் மற்றும் பெருமைகளை விளக்கிச் சமய மற்றும் ஆன்மீகப் பார்வையில் புனிதப் பயணநூல்களையும் எழுதியுள்ளார். அவற்றுள் மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள் ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கவை.
- ந.சுப்புரெட்டியார், நாலாயிரத்திவ்வியப்பிரபந்தத்தில் நம்மாழ்வார் காட்டும் வைணவத் தத்துவங்களை ஆராய்ந்து பிஎச்.டி., பட்டம் பெற்றவர். சைவ நெறியாளரான அவர், வைணவ நெறியின் தலைவரும் வேதம் தமிழ் செய்த வித்தகருமான சடகோபன் பாசுரங்கள் (நம்மாழ்வார் பாசுரங்கள்) அள்ளித் தரும் இறையனுபவத்தை நன்கு உணர்ந்து அனுபவித்தவர். நம்மாழ்வாரின் ஈரத்தமிழில் மனத்தைப் பறிகொடுத்ததோடு **‘சடகோபன் செந்தமிழ்’** என்ற அரிய வைணவ இலக்கிய

ஆய்வு நூலினையும் தம் தமிழ்ப்பணியாக தமிழ் இலக்கிய உலகிற்கு அளித்துள்ளார்.

- **'திவ்வியப்பிரபந்தங்கள்'** தென்புலத்து வைணவ நெறியின் அடிப்படை என்பதை அவர் நிறுவிக்காட்டியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களைப் பன்முகப் பார்வையில் விரிவாகச் சிந்தித்து பல புதிய சிந்தனைகளை வைணவ நெறியின் உட்பொருள் விளக்கத்தோடு தெளிவுபடுத்தி உள்ளார். அவரது இந்த வைணவப் புலமைக்குச் சான்றளிப்பதாக **'சில நோக்கில் நாலாயிரம்'** என்னும் இவரது நூல் அமைந்துள்ளது.
- வைணவ சமய வரலாற்றையும், வைணவத் தத்துவங்களையும் முழுமையாக ஆராய்ந்து வெளிப்படுத்திய பெருமை ந.சுப்புரெட்டியாருக்கு உண்டு.
- திருமாலை முழுமுதற்கடவுளாகக் கொண்டு பல உயரிய வாழ்வியல் கொள்கைகளை உள்ளடக்கிய ஒரு பரந்த சமயமே வைணவம் ஆகும். இந்த வைணவத்தை ந.சுப்புரெட்டியார், தம் நூல்களிலும் ஆய்வுக்கட்டுரைகளிலும் தத்துவம், இதம், புருஷார்த்தம் என மூவகைப்பாகுபாடு செய்து அழுத்தமாகவும் ஆழமாகவும் புலப்படுத்தியுள்ளார்.
- நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் பிரபந்தத் தொகையையும் பாசுரத் தொகையையும் ந.சுப்புரெட்டியார் சரியாகவும் தெளிவாகவும் சுட்டிக்காட்டியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் தம் வைணவ நூல்களில் ஆழ்வார்களின் சமுதாயப்பார்வையைச் சரியாக இனங்கண்டு வெளிப்படுத்தி இருப்பதோடு, தமிழ்நாட்டில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தோன்றி வைணவ இலக்கியத்தையும், திருமால் பக்தியையும் வளர்த்ததன் விளைவே கம்பனது **'இராமகாதை'** என்னும் கருத்தினையும் வலுவான சான்றுகளைக் காட்டி நிறுவியுள்ளார்.
- திருமங்கையாழ்வாரின் வாழ்க்கையையும் வைணவ சமய இலக்கிய வரலாற்றில் அவரது பங்களிப்பினையும் ந.சுப்புரெட்டியார் 'கலியன் குரல்' என்னும் நூலினுள் ஆய்ந்து தெளிவுப்படுத்தி உள்ளார்.
- **'கலியன்'** என்றழைக்கப்பட்ட திருமங்கையாழ்வாரின் வடநாட்டுத் திருத்தலப் பயணங்கள், அவர் படைத்த பாசுரங்கள், வைணவ பக்தி ஈடுபாடு, அவர் பாடிய அருளிச் செயல்களாகிய பாசுரநூல்கள் காணப்பெறும் இலக்கிய நலன்கள், ஒலிநயக்கூறுகள், யாப்பமைதி, கற்பனை வளம், படிமங்கள் ஆகியனவற்றை ந.சுப்புரெட்டியார் **'கலியன் குரல்'** என்னும் இந்நூலினுள் தெளிவுப்படுத்தியுள்ளார்.

- பன்னிரு ஆழ்வார்களில் **‘சடகோபர்’, ‘நம்மவர்’** எனப்போற்றும் பெருமைபெற்றவர் **‘நம்மாழ்வார்’** ஆவார். ஏழைய ஆழ்வார்களை நம்மாழ்வாரின் ஒவ்வொரு அவயமாகவும், நம்மாழ்வாரை அவயவியாகவும் வழங்குவதே வைணவ மரபாகும். நம்மாழ்வார் திருமாலின் திருவடியில் எப்போதும் விளங்குகின்றார் என்பதே வைணவ சமயக் கொள்கையாகும். சாத்திரங்கள் தத்துவங்களை விளக்குவதற்காகத் தோன்றியவை. அவற்றில் தத்துவங்கள் அளவை முறையில் கோவையாக எடுத்துரைக்கப்படுகின்றன. ஆனால் எம்பெருமானின் புகழ் பாடும் தோத்திரப்பாடல்களில் தத்துவங்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பெறுவதை ந.சுப்புரெட்டியார் திருமங்கையாழ்வாரின் பாசுரங்களைக் கொண்டு விளக்கியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் தம் வைணவ சமய நூல்கள் குறித்த ஆய்வுகளில் வைணவ சமயக் கொள்கைகளைத் தத்துவம், இதம், புருஷார்த்தம் என மூவகைப்படுத்தி விளக்கியுள்ளார்.
- அவர் சரீர – சரீரி பாவனையில் சித்து – அசித்து குறித்த வைணவத் தத்துவக் கோட்பாடுகளை விளக்கியுள்ளார்.
- **‘திருமங்கையாழ்வார்’** தாமான தன்மையை விடுத்து இறைவனின் தன்மையை ஏற்றுத் தன்னைப் பெண்ணாகவும் (நாயகி), இறைவனைத் தலைவனாகவும் (நாயகன்) கொண்டு சில பாசுரங்களைப்பாடி அனுபவித்துள்ளார். இந்த உறவே தத்துவத்தில் நாயகன் - நாயகி உறவெனப் போற்றப்படுவதை ந.சுப்புரெட்டியார் தம் ஆய்வுகளில் தெளிவுப்படுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் திருஞான சம்பந்தர் - திருமங்கையாழ்வார் விவாதம் குறித்துத் தந்துள்ள வரலாறு புதுமையானதாகும்.
- ந.சுப்புரெட்டியார் **‘வைணவத் திருத்தலங்கள்’** குறித்து எழுதியுள்ள சமயப் புனிதப் பயண நூல்களில் வைணவத் திருப்பதிகளின் பெருமைகளையும், அத்திருப்பதிகளை வழிபடும் முறைகளையும் குறித்துப் பாமர மக்களுக்குப் பயன்படும் பல அரிய செய்திகளை எளிமையாகத் தந்துள்ளார்.
- **‘வைணவத் திருப்பதிகள்’** குறித்த தம் ஆய்வுகளில் ந.சுப்புரெட்டியார் **‘ஊர்ப்பெயர்’** குறித்த ஆய்வுகளிலும் சிறப்புக் கவனம் செலுத்தி இருப்பது சிந்தனைக்குரியதாகும்.
- ந.சுப்புரெட்டியார் வைணவ இலக்கியச் செல்வங்களைத் திறனாய்ந்து தமிழ் இலக்கிய உலகிற்கு வழங்கியுள்ளார். அவர் முத்தாய்ப்பாக **‘வைணவச் செல்வம்’** என்னும் நூலினை இருதொகுதிகளாக வழங்கி இருப்பது

குறிப்பிடத்தக்கதாகும். அவர் வைணவ சீலர்கள், வைணவ ஆசாரியார், திவ்வியப்பிரபந்தப் பெருவிழா, 108 வைணவத் திருப்பதிகள், அபிமான புராணத் திருத்தலங்கள், வைணவர்கள் அன்றாடம் கடைபிடிக்க வேண்டிய விதிகள், வைணவத் திருக்கோயில் வழிபாட்டு முறைகள், நடைமுறைச் சம்பிரதாயங்கள், பிற சமய நெறிகளின் இராமானுச நெறியின் தாக்கம் எனப் பல நிலைகளில் வைணவ நெறியில் ஆழங்கால்பட்டு வைணவத் தத்துவங்களை விளக்கியுள்ளார்.

- இவ்வாறு வைணவ சமய இலக்கியத்திற்குப் பெருந்தொண்டாற்றிய ந.சுப்புரெட்டியார், சைவ சமயம் சார்ந்து தம்பிரான் தோழர் (சுந்தரர்), திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகியோரின் சைவ சமயத் தொண்டு மற்றும் சைவ சமய இலக்கியப் பணிகளை விளக்கியும் தனித்தனியே நூல்களை எழுதியுள்ளார்.
- அவர் சைவ சமயம் மற்றும் சைவ சமய இலக்கியம் குறித்து சைவ சமய விளக்கு, சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், முருகன் துதியமுது, மூவர் தேவாரம் - புதிய பார்வை முதலான நூல்களையும் எழுதியுள்ளார்.
- தேவாரப் பாடல்கள் மறைந்த நிலையில் அவற்றைத் திருமுறை கண்ட சோழனாகிய இராசராசசோழன், திருநாரையூரில் ஆதிசைவர் குலத்தில் தோன்றிய நம்பியாண்டர் நம்பியின் உதவியுடன் தொகுத்த வரலாற்றை ந.சுப்புரெட்டியார் வரலாற்றுப் பார்வையில் தெளிவுப்புடுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் தேவாரப் பாடல்களுக்குப் பண் வகுக்கப்பட்ட முறை, தேவாரப் பதிகங்கள் தொகுக்கப்பட்ட வரிசைமுறை, மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களின் சிறப்பு, முருகப் பெருமானின் ஆற்றுப்படை வீடுகளின் சிறப்பு ஆகியனவற்றை ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் சைவசித்தாந்த கோட்பாடுகளை சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு, சந்தானாசாரியர்கள், பதி, பசு, பாசம் என்னும் தத்துவ விளக்கங்கள், வீடுபேற்றுக்குரிய வழிமுறைகள், வீடுபேறு, சைவ ஆகம வழிபாட்டு முறைகள் என்னும் நிலைகளில் ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தியுள்ளார். மொத்தத்தில் அவருடைய தமிழ் இலக்கியப் பணிகள் தமிழ் மரபு சார்ந்த வைணவ, சைவ சமயங்களின் சமய, சமுதாய வாழ்வியல் நெறிகளை விளக்கும் நூல்களை எழுதியதே என்பதை அறிய முடிகின்றது.

~ ~ ~ ~ ~

## குறிப்புகள்

1. பிள்ளைப்பெருமாள் ஐயங்கார், நூற்.திருப்.அந்தாதி, பா.எ. 6.
2. பழம்பாடல்
3. பழம்பாடல்
4. பழம்பாடல்
5. பழம்பாடல்
6. தி.வைத்தமாநிதி, ந.சுப்புரெட்டியாரின் சடகோபன் செந்தமிழ், “அணிந்துரை” ப. xvii.
7. நம்மாழ்வார், திருவாய்மொழி, 5:2.
8. கம்பர், சடகோபந்தாதி, பா.எ. 25.
9. Norman Cutter, Songs of Experiences: The poetics of Devotion, pp. 10-11.
10. ந.சுப்புரெட்டியாரின் சடகோபன் செந்தமிழ், பக். 69-71.
11. மேலது., ப. 134.
12. மேலது., ப. 185.
13. மேலது., ப. 187.
14. திருவரங்கத்தமுதனார், இராமநுசர் அந்தாதி. பா.எ. 44
15. மேலது., பா.எ. 40.
16. நம்மாழ்வார், திருவிருத்தம். பா.எ. 54.
17. குறள். 621.
18. குறள். 630.
19. ந.சுப்புரெட்டியாரின் சடகோபன் செந்தமிழ், பக். 359–360.
20. நம்மாழ்வார், திருவாய்மொழி, 8:8:5.
21. ந.சுப்புரெட்டியாரின் சடகோபன் செந்தமிழ், பக். 363-364.
22. நம்மாழ்வார், திருவாய்மொழி, 4:3:0.
23. மேலது., 1:9:1.
24. மேலது., 8:10:7.
25. வேதாந்த தேசிகர். அம்ருதாஞ்சலி. பா.எ. 5.
26. நம்மாழ்வார், திருவாய்மொழி. 4:9:8.
27. ந.சுப்புரெட்டியார் சில நோக்கில் நாலாயிரம். ப. 17
28. மேலது., ப. 200.
29. ஸ்ரீலஸ்ரீ குருஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள், சிவபோக சாகர அநுபூதி. பா.எ. 10.
30. வேதாந்த தேசிகர், அம்ருத ரஞ்சனி, பா.எ. 3.
31. ந.சுப்புரெட்டியார் சில நோக்கில் நாலாயிரம், ப. 21.
32. மேலது., பக். 21-22.
33. மேலது., பக். 22-23.
34. நம்மாழ்வார், திருவாய்மொழி, 9:6:4.
35. கம்பரா., இரணியன்வதைப்படலம், பா.எ. 59.
36. ந.சுப்புரெட்டியார் சில நோக்கில் நாலாயிரம், ப. 33.
37. மேலது., ப. 34.
38. மேலது., பக். 38-39.
39. மேலது., பக். 84-85.
40. மேலது., ப. 87.
41. திருமழிசையாழ்வார், திருச்சந்த விருத்தம், ப.எ. 118.
42. ந.சுப்புரெட்டியார், சில நோக்கில் நாலாயிரம், ப. 99.
43. மேலது., பக். 152-153.

44. பாரதியார் கவிதைகள், தேசிய கீதங்கள், செந்தமிழ்நாடு. பா.எ. 5.
45. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், புலவரலாற்றுப்படைக்கு உதாரணச் செய்யுள், 43.
46. சிலம்பு. காடுகாண். வரி. 41–51.
47. வீரராகவ முதலியார், திருவேங்கடக் கலம்பகம், பா.எ. 24
48. ந.சுப்புரெட்டியார் சில நோக்கில் நாலாயிரம். பக். 174–175.
49. ந மேலது. ப. 195.
50. மேலது., பக். 286–287.
51. மேலது., பக். 317 - 324.
52. அமுதனார், இராமநுச நூற்றந்தாதி, பா.எ. 24.
53. ந.சுப்புரெட்டியார், சில நோக்கில் நாலாயிரம், பக். 336-337.
54. மேலது, ப.338.
55. ந.சுப்புரெட்டியார், கலியன் குரல், பக். 15- 16.
56. மேலது. ப. 64.
57. திருமங்கையாழ்வார், திருநெடுந்தாண்டகம். பா.எ. 23.
58. பெரிய திரு. 1.5:1.
59. மேலது., 4.6:6.
60. மேலது., 7.5:5.
61. மேலது., 8.8:1.
62. மேலது., 6.6:3.
63. மேலது., 4.3:3.
64. ந.சுப்புரெட்டியார், கலியன் குரல், ப. 162.
65. ந.சுப்புரெட்டியார், சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி ப. 31.
66. மேலது., இரண்டாம்பகுதி, ப. 14.
67. மேலது., ப. 30.
68. ந.சுப்புரெட்டியார், வைணவச் செல்வம், தொகுதி 2, பக். 81-82.
69. மேலது., பக். 237-240.
70. மேலது., ப. 287.
71. மேலது., ப. 289.
72. மேலது., பக். 455–456.
73. ந.சுப்புரெட்டியார், மூவர் தேவாரம், புதிய பார்வை, பக். 3-6.
74. மேலது., ப. 7.
75. மேலது., பக். 7–9.
76. மேலது., ப. 14.
77. மேலது., பக். 22–66.
78. மேலது., பக். 67–103.
79. மேலது. பக். 104–136.
80. மேலது. ப. 252.
81. திருமுருகு, அடி. 17.
82. திரு.வி.க. தமிழ் நூல்களில் பௌத்தம், ப. 12.
83. திருமுருகு, அடி 264.
84. ந.சுப்புரெட்டியார், ஆன்மீகமும் அறிவியலும், ப. 168.

85. ந.சுப்புரெட்டியார், சைவசித்தாந்தம், ஓர் அறிமுகம். பக். 12-22.
86. மேலது., பக். 34-35.
87. மேலது., பக் 34-35.
88. மேலது., ப. 37.
89. மேலது., பக். 36–106.
90. மேலது., பக். 108–140.
91. மேலது., ப. 142.
92. மேலது., பக். 229–230.

# இயல் - 4
# ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பணிகள்

## முன்னுரை

ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளுள் தலையானது அவர் திறனாய்வுப் பார்வையில் எழுதிய இருபதுக்கும் மேற்பட்ட தமிழ் இலக்கியப் படைப்புக்கள் குறித்த திறனாய்வு நூல்களே ஆகும். **'கவிதையனுபவம்', 'பாட்டுத்திறன்'** ஆகிய இருநூல்களும் கவிதை இலக்கியக் கொள்கை குறித்த பொதுவான திறனாய்வு நூல்களாகும். அவரது **'அகத்திணைக் கொள்கைகள்'** என்ற நூல் தொல்காப்பியரின் அகத்திணைக் கொள்கைகளை, சங்க அகப்பாடல்களோடு ஒப்பிட்டு திறனாய்ந்து வெளிப்படுத்தும் திறனாய்வு நூலாகும். **'ஆழ்வார்கள் ஆராஅமுது', 'விட்டுசித்தன் விரித்த தமிழ்', 'பரகாலன் பைந்தமிழ்', 'சடகோபன் செந்தமிழ்'** ஆகிய அவரது நூல்கள் ஆழ்வார்களின் தமிழுணர்வையும், தமிழ்மரபு சார்ந்த ஆழ்வார்களின் வைணவ சமய, தத்துவக் கொள்கைகளையும் இலக்கியப் பணிகளையும் நுணுக்கமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்துவன, **'கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்', 'அண்ணல் அனுமன்'** ஆகிய திறனாய்வு நூல்களில் கம்பன் படைத்த சிறுபாத்திரங்களின் காப்பிய முக்கியத்துவத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார். ந.சுப்புரெட்டியாரின் **கண்ணன் பாட்டுத்திறன், பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு, குயில்பாட்டு – ஒரு மதிப்பீடு, பாரதீயம்** ஆகிய திறனாய்வு நூல்களில் பாரதியாரின் கவிதைப் படைப்பாற்றல் திறனையும், அவற்றுள் பொதிந்துள்ள சமூக யதார்த்தங்களையும் நுட்பமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். இவ்வாறே **'பாவேந்தரின் பாட்டுத்திறன்', 'பாண்டியன் பரிசு-மதிப்பீடு'** என்னும் இருநூல்களும் பாரதிதாசனின் கவிதைத்திறனை மதிப்பீடு செய்துள்ளார். **'புதுக்கவிதை–போக்கும் நோக்கும்', 'புதுக்கவிதையில் கவிஞர் வாலியின் அவதார புருஷன் - ஒரு மதிப்பீடு', 'புதுக்கவிதையில் கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி – ஒரு மதிப்பீடு'** ஆகிய புதுக்கவிதைத் திறனாய்வு நூல்களையும் அவர் எழுதியுள்ளார். ந.சுப்புரெட்டியார் திறனாய்வு நோக்கில் எழுதியுள்ள நூல்களை பன்முகநோக்கில் ஆய்வு செய்யும் போக்கில் இவ்வியல் அமைகிறது.

## ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வு நெறி

ந.சுப்புரெட்டியார் இலக்கிய நயம் காணல், இலக்கியச் சுவைகளை எடுத்துக் காட்டுதல், கவிதை நயம் காணல், சொல்லாட்சித் திறனைச் சுட்டிக் காட்டுதல், உட்பொருள் விளக்கம் கூறல், தத்துவச் சிந்தனைகளை வாழ்க்கைக்குப் பயன்படுமாறு பொருத்திக் காட்டுதல், கற்பனை வளத்தைப் பாராட்டுதல் என்னும் முறைகளில் தம் திறனாய்வுப் பார்வையை அமைத்துக் கொண்டுள்ளார். அவரது திறனாய்வுப் பார்வை

விளக்கமுறைத் திறனாய்வு (Descriptine Criticism), பகுப்பு முறைத் திறனாய்வு (Analytical Criticism), பாராட்டு முறைத் திறனாய்வு (Appreciative Criticism) என்னும் திறனாய்வு முறைகளிலேயே பெரிதும் அமைந்திருக்கின்றன. ஆயினும் அவற்றுள் உளவியல் அணுகுமுறை, சமுதாயவியல் அணுகுமுறை, ஒப்பியல் அணுகுமுறை முதலான இலக்கிய ஆராய்ச்சி அணுகுமுறைகளும் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிவாகி உள்ளன.

## கவிதைத் திறனாய்வு

ந.சுப்புரெட்டியார் **'பாட்டுத்திறன்'** என்னும் கவிதைத் திறனாய்வு நூலினை 1988-இல் எழுதியுள்ளார். இந்நூல் பாட்டுத்திறன், உணர்ச்சியின் தத்துவம், கவிதையின் தத்துவம், புதுக்கவிதைத் திறன் என்னும் நான்கு பெரும் பிரிவுகளைக் கொண்டதாகும். **'பாட்டுத்திறன்'** என்னும் பொதுப்பகுதி உணர்ச்சியின் தத்துவம், கவிதையின் தத்துவம், புதுக்கவிதைத்திறன் குறித்த அறிமுகப் பகுதியாகும். ந.சுப்புரெட்டியார் **'உணர்ச்சியின் தத்துவம்'** என்னும் பகுதியில் 1. உடலும் உள்ளமும், 2. அறிதலின் அடிப்படை, 3. உணர்தலின் அடிப்படை, 4. உணர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும், 5. உள்ளக் கிளர்ச்சி பற்றிய சில கொள்கைகள், 6. கவிதை அநுபவமாகும்முறை என்னும் ஆறு இயல்களில் கவிதை உணர்ச்சியின் தத்துவப் பாங்கினைத் திறனாய்ந்து வெளிப்படுத்தி உள்ளார். **'கவிதையின் தத்துவம்'** என்னும் பகுதியில் கவிதையின் இலக்கணம், கற்பனை, சொல்வளம், ஒலிநயம், யாப்புமுறை, அணிகலன்கள், தொடை நயங்கள், குறிப்புப் பொருள், படிமங்கள், சுவைகள், கவிதை உணர்த்தும் உண்மை என்னும் பதினொரு இயல்களில் கவிதையின் உள்ளுறுப்புக்களைப் பகுத்துத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். **'புதுக்கவிதைத்திறன்'** என்னும் பகுதியில் அறிமுகம், உருவம், உத்திகள், உள்ளடக்கம், காதல் உணர்வும் முருகுணர்வும், மார்க்சியக் கொள்கை வழியில், தனிமனிதத் தத்துவ நோக்கில், நகைச்சுவை கிண்டல் எள்ளல், சில இலக்கியக் கொள்கையின் அடிப்படையில் எனப் புதுக்கவிதையின் அமைப்பையும் உள்ளடக்கப் பொருள்களையும் பகுத்து ஆராய்ந்து விளக்கமாகத் தெளிவுப்படுத்தியுள்ளார்.

## கவிதையின் உடலும் உள்ளமும்

கவிதைக்குக் கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகிய நான்கும் மிகவும் இன்றியமையாதவை எனத் திறனாய்வாளர் கூறுவர். இதனையே ந.சுப்புரெட்டியாரும் வலியுறுத்திக் கூறுகின்றார். ஆயினும் உணர்ச்சியே கவிதையின் உள்ளமாகும் ஏனையவை கவிதையின் உடலாகவே அமைகின்றன. இந்த உணர்ச்சி எல்லாக் காலத்தார்க்கும் எல்லா

மனிதர்க்கும் பொதுவானதாகும். வீரம், காதல் வெகுளி, இரக்கம், முதலான உணர்ச்சிகள் வெவ்வேறு காரணங்களினால், வெவ்வேறு சூழ்நிலைகளால் பிறக்கலாம். ஆயினும் அவை உலக மாந்தர் அனைவருக்கும் பொதுவானவை. இந்த உணர்ச்சிகளைக் கவிஞர்கள் சில சமயம் கவிதையின் வடிவத்திலும், சில நேரங்களில் அதன் பொருளிலும் அமைக்கின்றனர். கவிதை ஒலிநயத்திலும் நடையிலும் உணர்ச்சியைப் புலப்படச் செய்து உணர்ச்சியைக் கவிதையின் வடிவத்தில் அமைப்பதாகும். ஆயினும் கவிதையின் சொற்பொருளினும் கருத்திலும் உணர்ச்சியை வடிவமைப்பதே சிறந்தது என மேலைநாட்டுத் திறனாய்வாளர்களும் கவிஞர்களும் கருதுகின்றனர். இதனை ஏற்கும் ந.சுப்புரெட்டியார், கவிதையின் உணர்ச்சியைத் தூண்டல் - துலங்கல் முறையில் புரிந்து கொள்ள வேண்டும் என்கின்றார். மனிதனின் உடலில் நிகழும் செயல்களும், மனத்தால் மேற்கொள்ளப்பெறும் செயல்களும் தூண்டல் - துலங்கல் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டவை. **“திடீரென்று இடி இடிக்கின்றது. அவ்வொலி கேட்டுத் திடுக்கின்றோம். மின்னல் கண்கூச மின்னிப் பொலிகின்றது. அது கண்டு ஒளி பொறுக்கமாட்டாமல் கண்ணை மூடுகின்றோம். மழை பெய்தால் குடை பிடிக்கின்றோம். குளிர் எடுத்தால் மயிர்ப்படாம் போர்த்திக் கொள்கின்றோம். இவ்வாறு இயற்கைப் பரப்பு - சூழ்நிலை நம்மைப் பல்வேறு விதமாகத் தாக்குதலைத் தூண்டுதலைத் தூண்டல் என்றும், அத்தூண்டலுக்கு ஏற்றவாறு நாம் மாறிச் செயல்படுவதைத் துலங்கல் என்றும் உளவியலார் கூறுவர். இடிஇடித்தல், மின்னல் மின்னுதல், மழை பெய்தல் போன்ற சூழ்நிலை தரும் தாக்குதல்கள் தூண்டல்கள் எனப்பெறும்: திடுக்கிட்டிடுதல், குடை பிடித்தல் போன்ற சூழ்நிலைக்கேற்றவாறு செயல்படும் செயல்கள் யாவும் துலங்கல்களாகும். தூண்டல் அகத்தேயுள்ளதாகும். பசியெடுத்தால் உணவை உட்கொள்கின்றோம். பசியெடுத்தல் அகத்தேயுள்ள தூண்டல்: பசித்தல் துலங்கல். இவ்வாறு உள்ளத்தின் செயல்கள் அனைத்தும் அவை இயக்கங்கள் ஆயினும், புலன் உணர்ச்சிகள் ஆயினும், உள்ளக்கிளர்ச்சிகள் ஆயினும் அவை தூண்டலின் துலங்கலே”**[1] எனக்கூறும் ந.சுப்புரெட்டியார், இத்தகைய தூண்டலின் துலங்கலாகச் செயல்படும் உள்ளக் கிளர்ச்சிகளையே கவிதையின் விழுமிய உணர்ச்சி என்றும், அவையே கவிதையின் உயிராகவும் உள்ளமாகவும் செயல்படுவன என்றும் கூறுகின்றார். உடலும் உள்ளமும் ஒன்றிய நிலையில் விழுமிய உணர்ச்சியால் கவிஞர்கள் படைக்கும் கவிதைகளை, உடலும் உள்ளமும் நல்லமுறையில் உறவுகொண்டிருக்கும் இலக்கியச் சுவைஞர்களால் தான் கவிதைகளைச் சிறந்த முறையில் சுவைத்து அனுபவிக்க முடியும் என்பது ந.சுப்புரெட்டியாரின் கவிதைக் கொள்கையாகும்.

## கவிதையின் உணர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும்

கவிஞனின் உணர்ச்சியும் உள்ளக் கிளர்ச்சியுமே கவிதையாக வெளிப்படுகின்றது. கவிதையில் இடம்பெறும் அந்த உணர்ச்சி, அதைப் படிப்பவர்களுக்கு உணர்ச்சியைத் தூண்டி, உள்ளக் கிளர்ச்சியைத் தோற்றுவிக்கின்றன. **'உணர்ச்சி'** என்பது முற்றிலும் உள்ளத்தில் ஏற்படும் நிகழ்ச்சியாகும். மனிதனுக்குக் குறிப்பாகக் கவிஞனுக்கு இன்பமும் துன்பமும் முக்கியமான உணர்ச்சிகள் ஆகும். உணர்ச்சியும் புலனுணர்வும் வேறுவேறானவை. புலனுணர்வு, புற உலகை நமக்கு அறிவிப்பது: உள்ளத்தில் தோன்றும் நுட்பமான உணர்வே உணர்ச்சி: இதைப் போன்றே அறிதலும் உணர்தலும் வெவ்வேறானவை. நீதிநூல்களைப் படித்துப் பல கருத்துக்களை அறிந்து கொள்வது அறிதல் நிலையாகும். தமிழ்க்காப்பியங்களைப் படித்து அதிலுள்ள பல்வேறு சம்பவங்களை உணர்ச்சி வயப்பட்டு உய்த்துணர்தல் உணர்தல் நிலையாகும். உணர்ச்சியையும் உள்ளக் கிளர்ச்சியையும் விளக்க வரும் ந.சுப்புரெட்டியார், **"உணர்ச்சி பல நாட்கள் வரை நீடித்திருக்க முடியும். ஆனால், உள்ளக் கிளர்ச்சியோ புயல்போல் வந்து ஒடுங்கி விடும். உணர்ச்சி உண்டாகும் போது உடலில் எவ்வித மாறுதலும் உண்டாவதில்லை. உள்ளக் கிளர்ச்சி உண்டாகும்பொழுது நெஞ்சு படபடவென்று அடிப்பது, செரிமானம் நின்றுபோவது, வியர்வை கொட்டுவது போன்ற மாறுதல்கள் நிகழும். உணர்ச்சிகளை விட உள்ளக்கிளர்ச்சிகள் பலவாகும். உணர்ச்சி உள்ளே நின்று செயல்களைப் பாதிக்கும். ஆனால், உள்ளக் கிளர்ச்சியோ உடனேயே சில செயல்களை உண்டாக்கி விடும். சினக் கிளர்ச்சி உண்டானால் முட்டியை மடக்குவது, பற்களை நெரிப்பது, நெற்றியைச் சுருக்குவது போன்ற மாறுதல்கள் உண்டாகும். இன்ப துன்ப உணர்ச்சிகள் அவ்விதம் குறிப்பிட்ட மாறுதல்கள் எவற்றையும் உண்டாக்குவதில்லை. ஒரே விதமான நடத்தையையே உண்டாக்கும்."**[2] என உளவியல் அணுகுமுறையில் விளக்குவது குறிப்பிடத்தக்கதாகும். உள்ளக்கிளர்ச்சியை விரிவாகத் திறனாய்வு செய்யும் ந.சுப்புரெட்டியார்,

உளவியல் ஆய்வாளர்கள் உள்ளக்கிளர்ச்சி குறித்து ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ள ஜேம்ஸ் லாங்க் கொள்கை, மேற்பூத்தண்டுக் கொள்கை, ஜே.பி.வாட்சனின் கொள்கை, அவசரக் கொள்கைகள், ஒருபடி வளர்ச்சிக் கொள்கை ஆகியவற்றையும், பண்டைத் தமிழர் கொண்ட உள்ளக்கிளர்ச்சிக் கொள்கையையும் நுட்பமாக விளக்கியுள்ளார். மேல்நாட்டுக் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு, பழந்தமிழர்களின் உள்ளக்கிளர்ச்சிக் கொள்கைகளை ந.சுப்புரெட்டியார் வெளிப்படுத்தும் பாங்கு தனிச்சிறப்புடையதாகும்.

பழந்தமிழர் உள்ளக்கிளர்ச்சிகளால் பாட்டிற்குச் (செய்யுள்) சிறந்தனவற்றை **‘மெய்ப்பாடுகள்’** என வழங்கினர். மெய்ப்பாட்டில் உடல்நிலையும் முக்கியமானதாகும். தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலுக்குப் பேராசிரியர் விளக்கம் கூறும் போது **‘மெய்ப்பாடு’** என்பது பொருட்பாடு: அதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல், அஃது அவரது உடம்பின்கண் தோன்றும் கண்ணீரரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல், வியர்த்தல், நடுக்கம் முதலிய புறக்குறிகளால் காண்பார்க்குப் புலனாகும் என விளக்கம் தருவர். இதனை ந.சுப்புரெட்டியார், **“மக்களது அகவாழ்வும் புறவாழ்வும் ஆகிய உளவியல் வழக்கிலே புலப்பட்டுத் தோன்றும் இம்மெய்ப்பாடுகளைப் புனைந்துரை வகையாகிய நாடக வழக்கிற்கும் புலனெறி வழக்கமாகிய செய்யுள் வழக்கிற்கும் உறுப்பாகக் கொள்ளுதல் தொன்று தொட்டு வரும் தமிழிலக்கண மரபாகும். அம்மரபினை உளங்கொண்ட தொல்காப்பியனார் இம்மெய்ப்பாடுகளைப் புலனெறி வழக்கமாகிய செய்யுளுக்குரிய உறுப்புகளுள் ஒன்றாகக் கொண்டார். ……… ஈண்டுக் குறிப்பிட்ட அச்சம் முதலாக வரும் மெய்ப்பாடுகளையே உளவியலார் ‘உள்ளக் கிளர்ச்சிகள்’ என்பர். ‘விறல்’ என்பதே உடல்நிலை மாறுபாடுகளாகும். சுவைப்பொருள் என்பது தூண்டலை விளைவித்துத் துலங்களை (Object) எழுப்பும் பொருளாகும். பொருளை நுகருங்கால் நம்மிடையே உண்டாகும் பொறியுணர்வையே உளவியலார்புலன்காட்சி (Perception) என்பர். இங்ஙனம் உள்ளக்கிளர்ச்சியினை எழுப்புவதற்குக் காரணமான பொருள், புலன்காட்சி பொது உணர்வாகிய அனுபவம், உடல்நிலை மாறுபாடுகள் என்று உளவியலார் கூறுவனவற்றைப் பண்டைத் தமிழறிஞர்கள் சுவைக்கப்படும் பொருள், பொறியுணர்வு, குறிப்பு, விறல் என்று மிக நுட்பமாக விளக்கியுள்ளனர்”**[3]. இதிலிருந்து தொல்காப்பியர் வலியுறுத்தும் இலக்கிய மரபு சார்ந்த மெய்ப்பாட்டியலில் இடம்பெற்றுள்ள உளவியல் அணுகுமுறை சார்ந்த உள்ளக்கிளர்ச்சிக் கொள்கையையும், தமிழரின் இலக்கிய மரபு சார்ந்த உளவியல் உண்மையையும் அறிய முடிகின்றது.

## கவிதைத் திறனாய்வு

ந.சுப்புரெட்டியார் **“பாட்டுத்திறன்”** என்னும் கவிதை நூலில் **‘கவிதையின் தத்துவம்’** என்னும் இரண்டாம் பகுதியில் கவிதையின் இலக்கணம், கற்பனை, சொல்வளம், ஒலிநயம், யாப்புமுறை, அணிநலன்கள், தொடை நயங்கள், குறிப்புப்பொருள், படிமங்கள், சுவைகள், கவிதை உணர்த்தும் உண்மை (Poetic Truth) ஆகியன குறித்து விரிவாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். இதனை அவரது அரிய தமிழ்ப்பணியாகக் கொள்ளலாம்.

## கவிதை – வரையறை

ந.சுப்புரெட்டியார் மேலை நாட்டுத் திறனாய்வாளர்கள் கவிதைக்கு தந்துள்ள சிறப்பான வரைவிலக்கணங்களை எடுத்துக் காட்டியுள்ளார். அவற்றுள் **"கவிதையென்பது ஒலிநயம் அமைந்த சொற்களின் கட்டுக் கோப்பு: அ∴து இன்பத்தை உண்மையுடன் இணைப்பது: அறிவுக்குத் துணையாகக் கொண்டிருப்பது"** என்னும் ஜான்சன் விளக்கம், **'இசை தழுவிய எண்ணமே கவிதை'** என்னும் கார்லைல் விளக்கம், **'மனிதச் சொற்களால் அடைய முடிந்த மகிழ்வூட்டவல்லதும் செம்மை நிறைந்ததுமான கூற்றே கவிதை'** என்னும் மாத்யூ ஆர்னால்டு விளக்கம்[4] ஆகியன குறிப்பிடத்தக்கன. நன்னூலார் கவிதைக்கு,

**"பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போல், பல**
**சொல்லால் பொருட்டு இடனாக உணர்வினின்**
**வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்"**[5]

என விளக்கம் தந்துள்ளார். இதனை மனங்கொண்டு கம்பரின் கவிதை வரையறையான **'செஞ்சொற்கவியின்பம்'**,

**"உள்ளத்து உள்ளது கவிதை - உண்மை**
**உருவெடுப்பது கவிதை"**
**"தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை**
**தெளிந்து உரைப்பது கவிதை"**[6]

என்னும் கவிமணியின் கவிதை இலக்கணம் ஆகியனவற்றை நுட்பமானவை என எடுத்துரைக்கின்றார் ந.சுப்புரெட்டியார். கவிதையின் பாடுபொருள், கவிஞனின் புலன்காட்சி, முருகியல் உணர்ச்சி ஆகியனவற்றை அவர் சான்றுப் பாடல்களைக் காட்டித் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். கவிதைக்கும் உரைநடைக்கும் உள்ள வேறுபாட்டினை நுட்பமாக வெளிப்படுத்தும் ந.சுப்புரெட்டியார் கவிதை என்பது காணும் பொருள்களை வருணிப்பதில் இல்லை. அப்பொருள்களைக் காணுங்கால் கவிஞனிடம் எழும் மனநிலையில்தான் உள்ளது. கவிஞன் அந்த மனநிலைக்கு வடிவம் கொடுத்து அழகிய சொற்களால் அக்காட்சியை ஓவியம் போன்று வடிப்பதே கவிதை என்கின்றார்.

உணர்ச்சி, கற்பனை, அணிகலன்கள், தொடை நயம், சுவைகள் ஆகியவை அமைய செந்தமிழ்ச் சொற்களால் நல்ல வடிவமைப்புடன் அமைக்கப்படுவதே கவிதையாகும். அணிகலன்கள் பாட்டில் அமையலாம்: அமையாமலும் போகலாம். அனைத்துக் கவிதைக் கூறுகளும் இடம்பெற வேண்டிய அவசியமில்லை. ஆயினும் வாழ்க்கையின் உண்மைகளை மன்பதைக்கு என்றும் தோன்றாத்துணையாக இருக்கும் மெய்ம்மைகளை உட்கிடக்கையாகக் கொண்டிருக்க வேண்டும்.

அவை இலைமறைகாயாகவும், பாவிகமாகவும், கவிஞனின் மனோபாவமாகவும் இடம்பெறல் சிறப்பு என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

கவிதையின் உயிர்நாடியாக அமைவது கற்பனை. அது அறிவுக்கு எட்டாதது. அதனைச் சொற்களால் உணர்த்தவும் முடியாது. கவிஞர்கள் கவிதைகளில் படைப்புக்கற்பனை, இயைபுக்கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை ஆகியனவற்றைத் தம் நோக்கங்களுக்கும் செயல்களுக்கும் ஏற்பப் பின்பற்றுகின்றனர். **'கவிஞன் ஒருவன் தன் அனுபவத்தில் கண்ட பலவிதப் பண்புகளையும் எந்தவிதமான கட்டுப்பாடுமில்லாமல் தானாகத் தேர்ந்தெடுத்து அவற்றினைத் தொடுத்துப் புதியதொரு வடிவினைப் படைப்பதே படைப்புக் கற்பனை'**[7] ஆகும். இத்தகைய படைப்புக்கற்பனையே செய்யுள் படைப்பிற்கு அடிப்படை என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

ஒரு பொருள், கருத்து அல்லது உணர்ச்சி ஆகிய தொடர்புடைய உணர்வால் ஒற்றுமையுள்ள காட்சிகளை இணைத்து நிற்பது இயைபுக் கற்பனையாகும். ஒரு நிகழ்ச்சியிலிருந்தும் ஒரு பொருளிலிருந்தும் அதன் ஆன்மீக மதிப்பை அதன் உட்குறிப்பை மட்டும் கண்டு அவையடங்கிய பகுதிகளையும் அதன் தன்மைகளையும் எடுத்துக்காட்டுவது கருத்து விளக்கக் கற்பனையாகும். பொதுவாகக் கற்பனை என்பது மனத்தின் வெளிப்பாடாகும். கவிதையில் பயின்று வரும் சொற்களைத் தனித்தனியாக எடுத்துப் பார்க்கும்பொழுது அவைதரும் பொருள் வேறாகும். அவை ஏனையச் சொற்களுடன் உறவுகொண்டு மனத்தில்படும் பொழுது அவை தரும் பொருள் வேறு. ஆதலால்தான் கவிதையின் முழுக்கருத்தையும் உட்கொள்ளாமல் சொற்பொருளை மட்டும் ஆராய்தல் பெருந்தவறாக ஆகிவிடுகின்றது. கவிதையில் பயின்று வரும் சொற்களுக்கென்று தனித்த ஓசையும் இல்லை: பொருளும் இல்லை. பல சொற்கள் கவிதையில் உறவு கொள்ளும் போதுதான் அவை பொருட் சிறப்பைப் பெறுகின்றன. பொதுவாகக் கவிதைகளில் உணர்ச்சிக்கேற்ற சொற்கள், சொற்களின் ஒலியால் பொருள் பெறும் சொற்கள், சொல்வோன் குறிப்பால் பொருள்தரும் சொற்கள் ஆகியன பயின்றுவரும். ஆயினும் அவை கவிதை மதிப்புடைய சொற்களாக இருக்க வேண்டும். இதனை உட்கொண்டே ந.சுப்புரெட்டியார், **"இடத்திற்கேற்பச் செய்யுளின் நடைக்கேற்பச் சொற்கள் யாதொரு தங்கு தடையின்றி விரைந்து வந்து உதவும் நிலையையே சொல்வளம் என்பர். இலக்கிய வழக்கிலும் உலக வழக்கிலும் உள்ள எல்லாச் சொற்களுக்கும் உயிர் உண்டு வாழ்க்கை உண்டு வாழ்க்கை வரலாறும் உண்டு, பண்டைய இலக்கியங்களில் நிரம்பப் பயிற்சியும் தம் காலத்து வழங்கும் மொழி பற்றிய மிக ஆழ்ந்த அனுபவமும், தன் ஆன்மாவுடன் ஒன்றிக் கலந்துவிட்ட**

**தமிழுணர்ச்சியும் இருக்கும் கவிஞனுக்குத்தான் சொற்களின் உயிர்தத்துவம் நன்கு புலப்படும்"**[8] எனச் செய்யுட்களின் சொல்லாட்சித் திறனையும் சொல்வளத்தையும் விளக்கி உள்ளார். செய்யுலினைச் சத்தமாகப் படிக்கும்பொழுது பாட்டிலுள்ள ஒலிகள் இயங்குகின்றன. அந்த இயக்கத்தால் ஏற்படும் ஒழுங்கே ஒலிநயமாகும். வண்ணம் என்பதும் சந்தம் என்பதும் இதுவேயாகும். **'இழுமென் மொழியால் விழுமியது நுவலல்'**[9] என்று தொல்காப்பியர் குறிப்பிடுவதும் இதுவேயாகும்.

**யாப்பு முறை**

உணர்ச்சிக்கு வடிவமாக ஒலிநயமும், ஒலிநயத்திற்கு வடிவமாக உணர்ச்சியும் விளங்கியதே கவிதைக்கலையாகும். இத்தகைய ஒலிநயம் அமைந்த பாட்டின் அடியைச் சீர்கள், அசைகள் எனப்பாகுபாடு செய்துள்ளனர். இவற்றை நினைவில் வைத்துக்கொள்ள வாய்ப்பாடுகள் அமைத்தனர். இவ்வாறு வரையறுத்த யாப்பு முறைகளே, வாய்ப்பாடுகளே யாப்பு முறையாகும்.

தொல்காப்பியர் **மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, தூக்கு, தொடை, நோக்கு, பா, அளவியல் முதலான முப்பத்துநான்கைத் தொகுத்துச் செய்யுள் உறுப்புக்களாக்** கூறுகின்றார்[10]. ந.சுப்புரெட்டியார் **'யாப்பு முறை'** என்னும் இயலினுள் செய்யுளின் யாப்புக்கு இன்றியமையாதன எனக் கருதப்படும் எழுத்து, மத்திரை, அசை, சீர், தளை, அடி, தொடை, பா வினம் ஆகியன குறித்து விரிவாகத் திறனாய்ந்துள்ளார். அவர் தமிழில் வளர்ந்து வந்த யாப்பின் இன்றியமையாமையை, **"பண்டையோர் கண்ட வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற பாக்களின் யாப்பு முறைகளும் அவற்றின் ஓசைகளாகிய செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் ஆகியவைகளும் பல்வேறு உணர்ச்சி நிலைகளைப் புலப்படுத்தப் போதுமானவையாக இல்லை. இடைக்காலத்தில் தோன்றிய தாழிசை, துறை, விருத்தம் என்னும் பாவினங்களுள் விருத்தம் ஒலிநயத்தைப் புலப்படுத்துவதில் தனிச்சிறப்புடன் விளங்கியது........ பிற்காலத்தில் தாழிசை, துறை, விருத்தம் என்னும் பாவினங்கள் தோன்றின. இவை ஒவ்வொரு பாவினுடன் சேர்ந்தும் பல்வேறு பாவிகற்பங்களைத் தோற்றுவித்துள்ளன. இவற்றுள் விருத்தம் ஒலிநயத்தைப் புலப்படுத்துவதில் தனிச்சிறப்புடன் விளங்குகின்றது. இதனால் இது பெருஞ்செல்வாக்குப் பெற்று பற்பல வகையான ஒலிவேறுபாடுகளுடன் வளர்ந்தது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் பெரும்பாலும் இவ்விருத்தவகைப் பாக்களை மேற்கொண்டு பக்தி இயக்கத்தை வளர்த்தனர். கலிவிருத்தம் ஒன்றிலேயே சீர்களைச் சில வேறுவகையாக மாற்றியமைத்துப் பல்வேறு ஓசைகளைப் படைத்தல் இயன்றது. கம்பநாடன் நான்கு**

**சீர்களால் அமைந்த இக்கலிவிருத்தத்தில் ஏறக்குறைய அறுபதுவகை ஓசைநயமுள்ள கவிதைகளை யாத்துள்ளான். அசை, சீர்கள் அளவில் இவையாவும் கலிவிருத்தம் என்றே வழங்கப்பெறினும், ஓசையால் வேறுபடுபவை. இங்ஙனமே கலித்துறை, அறுசீர்க்கழிநெடிலடி, ஆசிரிய விருத்தம் முதலியனவற்றில் சீர்களைப் பலவாறு வேறுபடுத்தி அமைத்தும் பல்வேறு ஓசை வேறுபாடுள்ள பாடல்களை ஆக்க முடிந்தது"**[11] என வலியுறுத்திக் கூறியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

ந.சுப்புரெட்டியார் பாட்டுத்திறனில் அணிநலன்களையும் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். உவமை, உவமைத்தொகை, உருவகம், உயர்வு நவிற்சி, வேற்றுப்பொருள்வைப்பு, தற்குறிப்பேற்றம் ஆகிய அணிகளுக்கான இலக்கணங்களை நாலடியார், நளவெண்பா, கம்பராமாயணம், பட்டினப்பாலை, அகநானூறு, புறநானூறு, பாரதியாரின் பாஞ்சாலிசபதம் ஆகிய தமிழ் இலக்கியங்களில் இருந்து சான்றுப்பாடல்களைக் காட்டி விளக்கியுள்ளார். அவர் உருவக அணிக்கு, **"நாளடைவில் உவமப்பொருளையும் உவமிக்கப்பெறும் பொருளையும் வேறுவேறாகக் காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றினைக் காணும் முறை தோன்றியது. 'தாமரை முகம்' என்பதை மாற்றி 'முகத்தாமரை' எனக் கூறத் தொடங்கினர். அங்ஙனம் கூறுவதால் புதிய அழகும் தோன்றுகின்றது. 'தாமரை முகம்' என்று கூறும் பொழுது இரண்டு சொற்களாக விட்டிசைப்பதையும், 'முகத்தாமரை' எனும்பொழுது ஒரு சொல்லாகி இரண்டினைச் சார்ந்த தனித்தனியுணர்ச்சிகளும் ஒருங்கிணைந்து ஆற்றல்மிக்க உணர்ச்சியாய் வளர்வதையும் காணலாம். இதனைத்தான் 'உருவகம்' என்று வழங்குகின்றனர். பால்செறிந்து பனிப்பாலாடை (Ice Cream) ஆவதைப் போல அடங்கிச் செறிந்த உவமையே உருவகம் ஆகின்றது"**[12] எனத்தந்துள்ள விளக்கம் தமிழ் இலக்கண வரலாற்றில் புதுமையானதாகும். இவ்வாறு எளிமையாகக் கருத்தைப் புலப்படுத்தும் ஆற்றல் அவரிடம் உண்டு. ந.சுப்புரெட்டியார், இயல்பாகக் கவிதைகளில் அமையும் அணிகள் அவற்றின் கற்பனை வளத்தைச் சிறக்கச்செய்து கவிதைகளையும் உயர்வுடையதாக்குகின்றன என்கின்றார். அவர் **'தொடை நயங்கள்'** என்னும் பகுதியில் மோனை, இயைபும் எதுகையும், பிறமொழிகளில் எதுகை, மோனையும் எதுகையும் தரும் பயன், சில நூற்றாண்டுகட்கு முன் கவிதைநெறி, இந்நூற்றாண்டில் (இருபதாம் நூற்றாண்டில்) கவிதை நெறி ஆகியனவற்றை தொடை நயம் என்னும் அடிக்கருத்தியல் வழிநின்று விளக்குகின்றார். இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளைக் குறித்து அவர், **"இன்று கற்பனையும் உணர்ச்சியும் சிறந்த இடம்பெற்று உள்ளன. யாப்பும் ஒலிநயமும் கவனம் பெறாதநிலை ஏற்பட்டுள்ளது. இந்நூற்றாண்டில் உரைநடைப்பாட்டு என்னும் வசனகவிதை என்ற**

**ஒருவகைப்பாட்டுத் தோன்றியுள்ளது. இதில் ஒலிநயமும் இல்லை. யாப்பும் இல்லை. உணர்ச்சியும் கற்பனையும் சிறந்திருத்தல் காரணமாகச் சிலர் இயற்றும் 'இப்புதுவகை உரைநடைப்பாட்டுக்கள் பெரிதும் போற்றப்படுகின்றன. பாரதியாரின் வசன கவிதைகள் இவ்வகைக் கவிதைகட்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். இவற்றுள் சில, சிறு நாடகங்களின் உருவமும் பெற்றுத் திகழ்கின்றன"**[13] என்னும் சிந்தனையை முன்வைத்துள்ளார். இத்தகைய உரைநடைக் கவிதையின் தாக்கம் இருபதாம் நூற்றாண்டில் ஒரு புரட்சி என்றவாறு போற்றப்படுகின்றது.

## கவிதைகளில் குறிப்புப்பொருள்

கவிதைகளில் **'குறிப்புப்பொருள்'** என்பது, கவிதையின் சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றுவதாகும். அது கவிதைச் சுவையை மிகுவிக்கும் இலக்கிய நுட்பத்தைக் கொண்டதாகும். குறிப்புப் பொருளை இலக்கண நூல்களின் துணை கொண்டு அறிந்து கொள்ள இயலாது. கவிதைச் சுவையினை அறியும் நல்லுணர்வுடையார் மட்டுமே அதனை அறிந்து கொள்ள இயலும். இதனை விளக்க வந்த ந.சுப்புரெட்டியார், **"வடநூலார் குறிப்புப்பொருளைத் 'தொனி' (த்வந்) என்பர். அவர்கள் தொனியைத் தொனிப்பொருள் தொனி (வஸ்துத்வரி), அணித்தொனி (அலங்காத்வநி), சுவைத்தொனி (ரஸத்வநி), பாவத்தொனி என நான்கு வகையாக வகுத்துப் பலவாறு விரித்துக் கூறியுள்ளனர். அவற்றுள் பின்னைய இரண்டும் சிறப்புடையவை. பேரறிஞராகிய ஆனந்தவர்த்தனாசாரியார் என்பவர் குறிப்புப்பொருளின் சிறப்பினை உணர்ந்து 'த்வந்யா லோகம்' என்ற தனிநூலொன்றினை எழுதியுள்ளார். அதன்பின்னர் வேறுபல நூல்கள் தோன்றியுள்ளன. வடமொழியில் இத்தகைய நூல்கள் தோன்றுவதற்குப் பலநூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் மொழியில் குறிப்புப் பொருள் தொல்காப்பியம் என்ற இலக்கணத்தில் இடம்பெற்றுள்ளது. ஆனால் அது சிறப்பாகவும் விரிவாகவும் கூறப்பெறவில்லை"**[14] என வலியுறுத்திக் கூறியுள்ளார். பிரிதொரு பொருள் தோன்ற உள்ளுறையாகக் கூறுவதைத் தொல்காப்பியர் உடனுறை, உவமம், தட்டு, நசை, சிறப்பு என ஐந்து வகைகளாகக் கூறியுள்ளார். ந.சுப்புரெட்டியார் இவற்றுள் அகநானூறு, ஐங்குறுநூற்றுப் பாடல்களைச் சான்றுகாட்டி (அகம். 2, ஐங்குறு. 68) உள்ளுறை உவமத்தையும், அகநானூறு (அகம். 18) பாடலைச் சான்று காட்டி இறைச்சிப் பொருளையும் விரிவாக விளக்கியுள்ளார். இதனை அவர் மேலும் விரிவாகத் தம் அகத்திணைக் கொள்கைகள்[16] என்னும் நூலில் விளக்கியுள்ளார். தொல்காப்பியரின் அகத்திணைக் கொள்கைகளைத் தமிழ் ஆர்வலர்களும், தமிழ் இலக்கிய மாணவர்களும், ஆய்வாளர்களும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காகவே அவர்

**‘அகத்திணைக் கொள்கைகள்’** என்னும் திறனாய்வு நூலினை எழுதி இருக்கின்றார்.

தொனிப்பொருள்களைப் பற்றிக் கூறும் நூல்கள் வடமொழியில் மிகுதி அவற்றுள் மிகச் சிறந்த நூல்கள் சில உள்ளன. அந்நூல்களைப் பின்பற்றிக் கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளிலும் சில நூல்கள் தோன்றியுள்ளன. தமிழில் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் கூறியுள்ள இருபத்தேழு நூற்பாக்களும் பொருளியியலில் கூறிய இரண்டு நூற்பாக்களும் மட்டுமே சுவையிலக்கணம் பற்றியதாக உள்ளது. பிற்காலத்தவா் அதனை விளக்கி நூல்கள் எழுதவில்லை. இந்நூற்பாக்களுக்கு உண்மைப் பொருள் கூறும் உரைகளும் இல்லை. கவிதையின்பம் துய்த்தற்குத் தொனியாகிய சுவையைப் பற்றி கூறும் நூல்கள் மிகவும் இன்றியமையாதன. இதனைத் தமிழ் அறிஞர்களும் ஆய்வாளர்களும் தம் தமிழ்ப்பணியாகத் தொடர வெண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## படிமங்கள் (Imagery)

**‘படிமங்கள்’** கவிதைகளில் பயின்று வருவதன் நோக்கம், பயன்பாடு, பின்புலம் ஆகியன குறித்து ந.சுப்புரெட்டியார் தந்துள்ள விளக்கம், தமிழ்த்திறனாய்வு உலகிற்குக் கிடைத்த கொடையெனக் கருதலாம். ஒரு கவிதையைப் படிக்கும்போது அக்கவிதையில் இடம்பெறும் சொற்கள் அல்லது சொற்கோவைகள் பல படிமங்களைப் படிப்பவர் மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன. புலன்களின் மட்டத்தில் தூண்டல்கள் செய்வதைப் போலவே படிமங்களும் கருத்துநிலைச் செயலில் மனிதர்களின் புலன்களைத் தூண்டி அவர்களிடம் கவிதையனுபவத்தை எழுப்பித்துய்த்து மகிழ்வதற்குத் துணை செய்கின்றன. கவிதையின் சில சொற்கள் அதை வாசிப்பவர்களிடம் கட்டுண்ட படிமங்களும் விடுதலைப் படிமங்களையும் எழுப்பி விடுகின்றன. இவை கவிதையைத் துய்த்தற்கு முக்கியக் கூறுகளாகும். **‘படிமம்’** என்பதற்கு என்.பாட்டன் என்னும் ஆங்கிலக் கவிதைத் திறனாய்வாளர், **“படிமம் என்பது சொற்களால் கவிஞன் புலன்கட்குக் கவர்ச்சியுடையதாகச் செய்யும் ஒருவகை உத்தியாகும். புலன்களின் மூலம் படிப்போரின் எழுச்சிகளையும் அறிவினையும் கிளர்ந்தெழச் செய்ய முடியும். இதனைக் கருதியே கவிதைகளில் படிமங்கள் கையாளப்படுகின்றன……. புலன்கட்கு முறையீடு செய்வதற்கேற்பப் படிமங்கள் வகை செய்யப்படுகின்றன. செவிப்புலப்படிமங்கள், கட்புலப்படிமங்கள், சுவைப்புலப்படிமங்கள், நாற்றப்புலப்படிமங்கள், தொடுபுலப்படிமங்கள், இயக்கப்படிமங்கள், மரபுவழிப்படிமங்கள் ஆகியவை இவையாகும். எண்ணத்திற்கும்**

**புலன்காட்சிகளுக்கும் குறியீடுகளாக இருப்பவை சொற்கள்”**[17] என விளக்கம் தந்துள்ளார்.

தமிழ்க் கவிதைகளுக்கும் இத்தகைய படிமச் சிந்தனைகள் தேவை என ஏற்றுக் கொள்ளும் ந.சுப்புரெட்டியார் தம் ஆய்வுநூலில் கட்புலப்படிமங்கள், செவிப்புலப்படிமங்கள், சுவைப்புலப்படிமங்கள், நாற்றப்புலப்படிமங்கள், தொடுபுலப்படிமங்கள், இயக்கப்புலப்படிமங்கள், மரபுநிலைப் படிமங்கள், படிமங்களின் கலவை ஆகியனவற்றைத் தக்க தமிழ் இலக்கியக் கவிதைகளைச் சான்று காட்டி விளக்கியுள்ளார். சான்றாக அவர்காட்டும் செவிப் புலப்படிமத்தை விளக்கலாம். காதினால் மட்டும் கேட்டு உள்ளத்தைப் பறிகொடுக்கச் செய்யும் படிமங்களே செவிப்புலப்படிமங்களாகும். ஆழ்வார்களின் பாசுரங்களில் செவிப்புலப்படிமங்கள் பரவலாகப் பயின்று வந்திருக்கின்றன. இதற்குச் சான்றாக,

**“கீசுகீசு என்றெங்கும் ஆனைச்சாத்தன் கலந்துபோய்ப்**
**பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பெண்ணே!**
**காசும் பிறப்பும் கலகலப்பக் கைகோத்து**
**வாச நறுங்குதல் ஆய்ச்சியர் மத்தினால்**
**ஓசைப்படுத்த தயிரரவம் கேட்டிலையோ?**
**நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி**
**கேசவனைப் பாடவும் கேட்டே! இடத்தியோ?**
**தேசம் உடையார்! திருஓலோர் எம்பாவாய்”**[18]

என்னும் ஆண்டாளின் திருப்பாவைப் பாடலைக் குறிப்பிடலாம். இப்பாசுரத்தில் **‘கீசுகீசு’** என்ற ஆனைச்சாத்தனின் பேரரவம், காசும் பிறப்பும் கலகலத்தல், மத்தினால் ஓசைப்படுத்தின தயிரரவம், கேசவனைப் பாடுதல் ஆகியன செவிப்புலப்படிமங்களாகும். இதில் **‘வாசநறுங்குழல்’** என்னும் நாற்றப்புலப்படிவமும், **‘தேகம் உடையார்’** என்ற கட்புலப்படிமமும் கலந்து வந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ்த் திறனாளிகள் உவமை, உருவகம் போன்ற அணிகளைக் கவிதைகளில் கண்டு இன்புறுவதைப் போலவே, மேனாட்டுத் திறனாய்வாளர்கள் **‘படிமங்கள்’** என்னும் உருக்காட்சியைக் கவிதைகளில் கண்டு இன்புறுகின்றனர். அத்திறனாய்வுக் கொள்கையை ந.சுப்புரெட்டியார் எளிமையாகத் தமிழ்த் திறனாய்வு உலகத்திற்கு எடுத்துக் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## கவிதைச் சுவைகள்

கவிதையைக் கனிவித்துப் படிப்போர்க்கு இன்பத்தைக் கொடுப்பது அதிலுள்ள உணர்ச்சியே ஆகும். அந்த

உணர்ச்சியால் உள்ளம் பூரிக்கும் பொழுது எழும் இன்பத்தையே தமிழ் இலக்கண நூலார் **'மெய்ப்பாடு'** என்பர். வடமொழியில் இதனை **'ரஸம்'** என்பர். மெய்ப்பாடு பற்றிய செய்திகளைத் தொல்காப்பியம் பொருளதிகாரம் **'மெய்ப்பாட்டியல்'** விளக்குகின்றது. இந்த மெய்ப்பாடுகள் வடநூலில் காணப்பெறும் ரஸம், பாவம் என்னும் இருவகையுள் அடங்கும். தமிழில் இவற்றை முறையே **'சுவை', 'குறிப்பு'** என்பர்.

ஒரு காவியத்தைப் படிப்பதால் உண்டாகும் இன்ப உணர்ச்சியே இரசமாகும். மனம் உணர்ச்சியால் பூரித்தெழும்போது அதில் ஓர் ஒளி வீசும். அதுவே இன்பமும் ஆன்ம ஒளியுமாகும். ஆன்மா அங்குதான் பிரதிபலிக்கின்றது. அந்நிலையை அடைவதற்கு மனம் சலனமற்றிருத்தல் வேண்டும். வடமொழி நூலாரும் தமிழ் நூலாரும் ஒன்பது சுவைகட்கும் தனித்தனிப் பெயர்கள் இட்டிருப்பதை ந.சுப்புரெட்டியார் எடுத்துக் காட்டியுள்ளார்.

| | **வடமொழி** | | **தமிழ்மொழி** |
|---|---|---|---|
| 1. | சிருங்காரம் | - | உவமை |
| 2. | கருணம் | - | அழுகை |
| 3. | வீரம் | - | பெருமிதம் |
| 4. | ரௌத்திரம் | - | வெகுளி |
| 5. | ஹாஸ்யம் | - | நகை |
| 6. | பயானகம் | - | அச்சம் |
| 7. | பீபத்ஸம் | - | இழிவரல் |
| 8. | அற்புதம் | - | மருட்கை |
| 9. | சாந்தம் | - | (நடுவுநிலை)[19] |

இவற்றுள் சாந்தம் என்னும் நடுவுநிலை உலகியலின் நீங்கினார்க்கு உரியதாகும். அதனையொழித்து ஏனைய எட்டனையும் பரதமுனிவர் தமது நூலில் விளக்கியுள்ளார். தொல்காப்பியரும் அவ்வாறே எண்சுவைகளையே விளக்கியுள்ளார். வடமொழிநூலார் குறிப்பிடும் ரசம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ஸ்தாயி பாவத்தால் அமைவது எனக்குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார் அவற்றைப் பின்வருமாறு தெளிவுபடுத்துகின்றார்.

1. **சிருங்காரத்திற்கு ஸ்தாயிபாவம் ரதி (காதல்)**
2. **கருணத்திற்கு ஸ்தாயிபாவம் சோகம்.**
3. **வீரத்திற்கு ஸ்தாயிபாவம் உற்சாகம்.**
4. **ரௌத்திரத்திற்கு ஸ்தாயிபாவம் குரோதம்.**
5. **ஹாஸ்யத்திற்கு ஸ்தாயிபாவம் ஹாஸம் (நகை)**
6. **பயானகத்திற்கு ஸ்தாயிபாவம் பயம்**
7. **பீபத்ஸத்திற்கு ஸ்தாயிபாவம் ஜுகுப்ஸை (அருவருப்பு)**
8. **அற்புதத்திற்கு ஸ்தாயிபாவம் விஸ்மயம் (ஆச்சரியம்)**

## 9. சாந்தத்திற்கு ஸ்தாயிபாவம் நிர்வேதம் (வியப்பு)[20]

இவ்வாறு நிலைபெற்ற பாவமே இரசமாகும். சான்றாக **'நகை'** என்னும் பாவத்திலிருந்து ஹாஸ்யம் என்னும் சுவைதோன்றும். ஆயினும் தொல்காப்பியர் பாவத்திற்குரிய பெயரையே சுவைக்கும் கூறியுள்ளார். இலக்கியங்களில் சிருங்காரத்தை அனுபவிப்பதற்கு உள்ளத்தூய்மையும் சுவைக்கும் திறனும் வேண்டும். மனத்தில் புதைந்து கிடக்கும் அற்பமான காம உணர்வுடன் காவியங்களைச் சுவைத்தல் அவற்றை இகழ்வதாக அமையும். கற்பனையின் இன்பக் கனவுகளாகிய வருணனைகளை, நடைமுறை யதார்த்தத்துடன் ஒப்பிட்டுப் பார்ப்பது அறிவீனமாகவே முடியும். அம்மையப்பன் திருவிளையாடலே காதல் என்பது ஆன்றோர் கொள்கையாகும். அதையுணர்ந்து தான் கவிஞர்கள் சிருங்காரத்தை உலகத்தின் அடிப்படைத் தத்துவமாகக் கொண்டு தம் கவிதைகளில் பயன்படுத்தியுள்ளனர். உள்ளக் கனிவுடன் இலக்கியங்களைத் துய்த்தால் இந்த உண்மையைத் தெளியலாம். நமது முன்னோர்கள் நாடகங்களிலும் நாட்டியங்களிலும் இலக்கியங்களிலும் சுவைகளைத் திறமையுடன் வளர்த்துக் காட்டியுள்ளனர்.

### கவிதையுணர்த்தும் உண்மை

தமிழ்க்கவிதையைப் பொறுத்தவரையில் கவிதையின் சிறப்புக்கு ஓசையும் சொல்லடுக்கும் இன்றியமையாதன. ஆயினும் கவிதையின் பொருளமைப்பே முக்கியமானதாகக் கொள்ளப்படுகின்றது. நிலைபேறுடைய இன்பத்தைத் தருவது எதுவாயினும் அது உண்மையும் ஆழமும் உடையதாக இருத்தல் வேண்டும் என்பதே தமிழர்கள் **'இன்பம்'** என்பதற்குக் கொண்டுள்ள விளக்கமாகும். **"கவிதையை ஆராயுங்கால், நம்முடைய முதற்கவனம் கவிஞன்பால் செல்லவேண்டும். அவனுடைய ஆளுமையிலும் அவன் உலகைப் பற்றிக் கொண்டுள்ள மனப்பான்மையினும் செல்ல வேண்டும். வாழ்க்கையை எவ்வாறு நோக்கி விளக்கம் தருகின்றான் என்பதைக் கவனித்தல் வேண்டும். இது வெளிப்படையாகவும் இருக்கலாம். குறிப்பாகவும் இதனைப் பெறவைக்கலாம். கலை, வடிவம், வரலாறு போன்ற செய்திகளில் எவ்வளவு ஆழ்ந்திருந்த போதிலும், கவிதையின் முதனிலைக் கூறுகள் எவ்விதத்திலும் நம்பார்வையிலிருந்து நழுவாமால் காத்தல் வேண்டும்"**[21] என்பர். இதனைத் தொடர்ந்து கவிதையை விளக்க வந்த தொல்காப்பியரும்,

**"இழுமென் மொழியால் விழுமியது நுவலல்"**[22]

என்றார். தமிழ்க்கவிதைகளில் பெரும்பாலும் அறங்கூறும் இயல்பும் கவிதை இயல்பும் இணைந்தே காணப்படுகின்றன. இதனை மனத்தில் கொண்டே கவிதையுணர்த்தும் உண்மையை விளக்க வந்த ந.சுப்புரெட்டியார், **"வாழ்க்கையிலும் மனிதப் பண்பிலும் உள்ள பொதுத்தன்மையை எடுத்துக் கூறுவதே கவிதையின் நோக்கமாகும். 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வகையகம்' (திருமந்திரம்) என்ற உயர்ந்த குறிக்கோள் கவிதைத்துறையில் எளிதாக நிறைவேறுகின்றது. கவிஞனின் மனத்தில் தோன்றிய அனுபவமே கவிதையாக முகிழ்க்கின்றது. அது கவிதை வடிவம் கொள்கின்றது. கவிதையைப் படிக்கும் நாமும் அக்கவிஞன் பெற்ற அனுபவத்தையே பெற்று விட்டால், கவிதையும் உணர்த்த வேண்டிய வாழ்வியல் உண்மையை உணர்த்திவிடும் நிலையை அடைந்து விடுகின்றது"**[23] என்கின்றார். இவ்வாறு ந.சுப்புரெட்டியார் கவிதையநுபவம், பாட்டுத்திறன் ஆகிய இரு திறனாய்வு நூல்களிலும் கவிதையின் உடலும் உள்ளமும், கவிதையின் உணர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும், கவிதை-வரையறை, யாப்புமுறை, கவிதைகளில் குறிப்புப்பொருள், படிமங்கள், கவிதைச் சுவைகள், கவிதையுணர்த்தும் உண்மை ஆகியன குறித்த செய்திகளை நுட்பமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். ந.சுப்புரெட்டியாரின் **'பாட்டுத்திறன்'** என்ற நூலின் சுருக்கமாகவே அவரது கவிதையனுபவம் என்ற நூலும் அமைந்திருக்கின்றது.

## ந.சுப்புரெட்டியாரின் புதுக்கவிதைத்திறன்

ந.சுப்புரெட்டியாரின் **'பாட்டுத்திறன்'** என்ற நூலின் மூன்றாம் பகுதியாகப் **'புதுக்கவிதைத்திறன்'** என்னும் பகுதி அமைந்துள்ளது. அவர் இப்பகுதியில் புதுக்கவிதை அறிமுகம், புதுக்கவிதையின் உருவம், உத்திகள், உள்ளடக்கம், காதலுணர்வும் முருகுணர்வும், மார்க்சியக் கொள்கையில் புதுக்கவிதை, தனிமனிதத்துவ நோக்கில் புதுக்கவிதை, நகைச்சுவை, கிண்டல், எள்ளல், சில இலக்கியக் கொள்கையின் அடிப்படையில் புதுக்கவிதை எனப்பகுத்துத் திறனாய்வு நோக்கில் புதுக்கவிதைகளை அணுகுகின்றார். இதனைச் சற்று விரிவுபடுத்தி அவர் **'புதுக்கவிதை-நோக்கும் போக்கும்'** என்னும் மற்றொரு திறனாய்வு நூலினையும் எழுதியுள்ளார்.

## புதுக்கவிதை அறிமுகம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய புதுமுயற்சியால் தோன்றியதே புதுக்கவிதையாகும். ஆங்கிலத்தில் **'நியூபொயட்ரி'** (New Poetry), **'மாடர்ன் பொயட்ரி'** (Modern Poetry) என்று கூறப்பெறும் கவிதை வடிவத்தையொற்றித் தோன்றியதே புதுக்கவிதையாகும். காலத்திற்குக் காலம் **'புதிய கவிதை வடிவங்கள் பிறக்கின்றன'**

என்ற விதியின்படி, அன்றைக் காலத்திற்குத் தேவையான வடிவமாகப் புதுக்கவிதை பிறந்தது எனலாம். தமிழ்க் கவிதை வடிவம் தன் கூர்தலறக் கோட்பாட்டு வளர்ச்சியில் செய்யுள் நிலையிலிருந்து உரைநடை நிலைக்கு மாறிவிட்டது. இருபதாம் நூற்றாண்டின் இலக்கியத்தளம் **'வசனம்'** என்றாகிவிட்ட நிலையில் பிறந்ததே புதுக்கவிதையாகும்.

அச்சுப்பொறி அறியப்பெறாத பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் தமிழ் இலக்கிய வடிவம், செய்யுள் வடிவமாகவே இருந்தது. வானியல், மருத்துவம், தத்துவம், தருக்கம் ஆகிய நூல்கள் செய்யுள் நடையிலேயே இயற்றப் பெற்றன. இன்றைய அறிவியல் தொழில்நுட்பம் தட்டச்சு, அச்சு, கணினி, இணையம், வலைத்தளம் என வளர்ந்துவிட்ட நிலையில், கவிதையிலும் உரையின் தாக்கம் ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

மேலைநாடுகளில் பழைய யாப்பு வடிவங்களில் நெகிழ்ச்சி ஏற்பட்டன. மொழியைப் புதிய யாப்பு வடிவத்தில் செயல்படச் செய்தால்தான் வளர்ந்து வரும் கருத்துச்செல்வ வெளியீட்டிற்கு ஈடுகொடுக்க இயலும் என மேலைநாட்டுக் கவிஞர்கள் நம்பினர். இவர்கள் முயற்சியால் தான் வசனகவிதை, கட்டற்ற கவிதை (Verse Libre) தோன்றலாயின. புதுக்கவிதையின் உள்ளடக்கத்திலும் புதுமை தோன்றின. ஸ்பானிஷ், ஜெர்மன், உருஷிய மொழிகளின் இலக்கண மரபில் மாற்றமும் நெகிழ்ச்சியும் ஏற்பட்டன. தமிழில் பாரதியார் காலத்தில் வசனகவிதை தோன்றலாயின.

## புதுக்கவிதை – விளக்கம்

புதுக்கவிதை என்பதற்கு விளக்கம் தரவந்த ந.சுப்புரெட்டியார், **"வழிவழியாக மரபுகெடாது யாப்பு இலக்கணத்தோடு பொருந்திவரும் கவிதைகளினின்றும் மாறுபடும் கவிதைப்படைப்புதான் புதுக்கவிதை"**[24] ஆகும் என்கின்றார். புதுக்கவிதைக்கு இலக்கணம் கூறவந்த மு.மேத்தா,

**"இலக்கணச் செங்கோல்**
**யாப்புச் சிம்மாசனம்**
**எதுகைப் பல்லக்கு**
**மோனைத் தேர்கள்**
**தனிமொழிச்சேனை**
**பண்டித பவனி**
**இவை யெதுவும் இல்லாத**
**கருத்துகள் தம்மைத் தாமே**
**ஆளக் கற்றுக் கொண்ட**
**புதிய மக்களாட்சி முறையே**
**புதுக்கவிதை"** [25]

எனப் புதுக்கவிதைக்கு, புதுக்கவிதையிலேயே இலக்கணம் வடித்துள்ளார். சி.மணி என்னும் புதுக்கவிதைப் படைப்பாளி, யாப்பைத் தவிர்க்கும்போது தான், கவிதை தன் அனைத்து ஆற்றல்களோடும் வெளிப்படும் என்கின்றார். அவர் புதுக்கவிதையை உடையையும் ஒப்பனையையும் நீக்கிவிட்ட கன்னியாக அறிமுகம் செய்கின்றார். அக்கவிதை வருமாறு:

**"யாப்புத்த கவிதை**
**அணியுடைத்த காவிரி**
**யாப்பற்ற கவிதை**
**இயற்கையெழில் இருக்க**
**செயற்கையணி எதற்கென்று**
**உடையுடன் ஒப்பனையும்**
**நீக்கிவிட்ட கன்னி"** [26]

என்பது இப்புதுக்கவிதையை உரைப்பா, விடுநிலைப்பா, குறும்பா, பேச்சுநிலைப்பா என்னும் பெயர்களில் பலர் சுட்டியுள்ளனர். சாலை இளந்திரையன் புதுக்கவிதைக்கு **'உரைவீச்சு'** எனப் பெயரிட்டுள்ளார். கண்ணதாசன் இதற்குச் **'சொற்கோலம்'** எனப் பெயரிட்டுள்ளார். சிலர் கிண்டலாகப் புதுக்கவிதையை **'உரைநடை உளரல்'** என அழைத்தனர்.

## புதுக்கவிதையின் தோற்றம்

சி.சுப்பிரமணிய பாரதியார் தம்முடைய அனைத்துக் கவிதைகளுமே பண்டிருந்த கவிதைகளிலிருந்து சிறிதோ முற்றிலுமாகவோ மாறுபட்ட படைப்புக் கவிதைகளாக இருந்தமையால் அவற்றை 'நவகவிதை' என்றே குறிப்பிடுகின்றார்.

**"சுவைபுதிது, பொருள் புதிது, வளம் புதிது**
**சொற் புதிது சோதிமிக்க**
**நவகவிதை"**[27]

மேலும் அவர், **"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான். ஓரெண்டு வருஷ நூற்பழக்கமுள்ள தமிழ் மக்களெல்லார்க்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன் காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் நடத்துதல் வேண்டும்"**[28] என பாஞ்சாலி சபதத்திற்கு எழுதிய முன்னுரையாலும், புதுக்கவிதையில் அவருக்கிருந்த ஈடுபாட்டினை அறியலாம்.

பாரதியாரே, தமிழில் புதுக்கவிதையின் தந்தையாகவும் முன்னோடியாகவும் திகழ்ந்து வருகின்றார். பாரதியாரின் **'வசன**

**கவிதை’** என்னும் பகுதியிலுள்ள **‘காட்சிகள்’** என்ற புதுக்கவிதைத் தொகுப்பு இதற்குச் சான்றாகும் ஆயினும், அக்கவிதைகள் கவிதையின் முழுத்தன்மையைப் பெறாத ஒரு சோதனை முயற்சியாக உள்ளன. ந.சுப்புரெட்டியார், **“படைப்புத்திறம் மிக்க கவிஞனுக்குச் செய்யுளில் கவிதை கிடைக்கும்: வசனத்திலும் கவிதை கிடைக்கும்: இன்று மரபுக்கவிதையாளர்கள் எழுதும் புதுக்கவிதைகளில் இந்த உண்மையைத் தெளிவாகக் காணலாம். ஊன்றி நோக்குவார்க்கே இது தட்டுப்படும்”**[29] என்கின்றார். கவிஞர் வாலி **‘பாரதி ஒரு பிள்ளையார் சுழி’** என்னும் தலைப்பில்,

**“நாடு**
**உடுத்தியிருந்த**
**நாலு வர்ணத் துணிகளை**
**அவன் தான்**
**தன்**
**பாட்டு நெருப்பில்**
**போட்டுப்**
**பொசுக்கினான்”**[30]

என்னும் புதுக்கவிதையை எழுதியுள்ளார். வருணாசிரம தருமத்தை வெறுத்த பாரதியாரின் கருத்தை வாலி இதில் குறித்துள்ளார். வசனம் போன்ற இதில் கவிதை இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### புதுக்கவிதையின் உருவம்

அமெரிக்கக் கவிஞரான எஸ்ரா பவுண்ட் (Ezra Pound) கவிதையின் வடிவம் குறித்துச் சிந்தித்து தெளிவான கருத்துக்களைக் கூறியுள்ளார். அவர் கருத்துப்படி கவிதையில் சொல்ல வேண்டிய பொருளை நேராகச் சொல்ல வேண்டும். மரபு வழியாக வரும் சம்பிரதாயச் சங்கிலிக்குள் மாட்டிக்கொண்டு கவிதை இயற்றுவதைத் தவிர்க்க வேண்டும். கவிதையையும் எளிமையாக்க வேண்டும் என்பது அவர் கருத்தாகும். அவர் கவிதையின் பொருளே, அதன் வடிவமாகவும் இருக்க வேண்டும் என்னும் கருத்துடையவர். அசை, சீர், தளை, அடி, தொடை முதலான யாப்புக் கூறுகள் இல்லாமலேயே புதுக்கவிதை ஒரு வடிவத்தைப் பெறுகின்றது. இது காரணமாகவே அது தன்னையும் தெளிவாக இனம் காட்டுகின்றது. புதுக் கவிதையின் வடிவத்தை விளக்க வந்த ந.சுப்புரெட்டியார், **“புதுக்கவிதையின் உருவம் திருமலை நாயக்கர் மகால் தூணைப்போல தூலமாகத் தெரிவதில்லை. கோலார் தங்கவயல் மண்ணில் மறைந்திருக்கும் பொன்னைப் போல் சூக்குமமாகவும் நுட்பமாகவும் தெரியக் கூடியது. கவிஞனின் உணர்வுக்கேற்பவும் அவன் கையாளும் உள்ளடக்கத்திற்கேற்பவும் புதுக்கவிதையின் உருவங்கள் அமைகின்றன. இவற்றைக் கண்டு கொள்ள நம் மனக் கண்ணாகிய உள்ளுணர்வும் கண்ணும், ஒரு வகையில்**

**உருப்பெருக்கம் ஆடியாக வேண்டும்"** என்றார். அவர் புதுக்கவிதையின் உருவத்திற்குப் பல்வேறு சான்றுக்கவிதைகளைத் தந்துள்ளார். இதற்குச் சான்றாக மு.மேத்தாவின் **'காத்திருந்த காற்று'** என்னும் கவிதையிலிருந்து பின்வரும் புதுக்கவிதை வரிகளைக் காட்டலாம்.

**"இல்லறமா? அன்ன அது?**
**இல்லங்கள் தோறும்**
**இல்லாத அறமே**
**இல்லறம் இப்போது**

**ஆத்திரங்கள் மேலோங்க**
**அடுப்படியில் சண்டைவரப்**
**பாத்திரங்கள் உருளுகின்ற**
**பரிதாபக் காலமிது**
**……………………..**
**வைர அட்டிகையும்**
**வரதட்சிணை பாக்கிகளும்**
**உன்னுடைய,**
**தந்தை வந்து**
**உடனே**
**தராவிட்டால்**
**……..……….**
**தோகையே**
**உன்னைத்**
**தொட மாட்டேன் என்று**
**இளைஞர்கள் சொல்வது**
**இன்றைய இல்லறம்**
**இ.்.து இன்றைய இல்லறம்"**[31]

## புதுக்கவிதை உத்திகள்

பொருளை நேரடியாக அணுகுதல், தேவையற்ற ஒரு சொல்லைக்கூடப் பயன்படுத்தாமை, கடினமான யாப்பு முறைகளை விட்டொழித்து இசையின் எளிமையை மேற்கொள்ளுதல் ஆகிய மூன்றினையும் கவிதையின் சிறப்புக்களாக எஸ்ரா பவுண்ட் என்னும் அமெரிக்கக் கவிஞர் கூறியுள்ளார். டி.எஸ்.எலியட் என்னும் ஆங்கில கவிஞர் உத்திகளை வளர்த்து விரிவாக்குபவர், மற்றவர்களின் உத்திகளைப் பார்த்து அப்படியே நகல் எடுப்போர், புதிய உத்திகளைத் தாமே புனைந்து உருவாக்குவோர் எனக் கவிஞர்களை மூவகையாகப் பிரித்து வகைப்படுத்தியுள்ளார்.[32] இத்தகைய புதுக்கவிதை உத்திகளில் தமிழ்க்கவிதைகளில் படிமம், குறியீடுகள், துல்லியம் - தெளிவு, சுருக்கம்

ஆகியனவற்றை ந.சுப்புரெட்டியார் உத்திகளாகக் கொண்டு, அவற்றைச் சான்றுகள் காட்டி விளக்கியுள்ளார்.

## குறியீட்டு உத்தி

புதுக்கவிதையின் பொருளை அழகுபடச் சொல்லுவதற்கும், எழிலூட்டி அழகுபடஎடுத்து இயம்பவதற்கும் இந்த உத்தி பயன்படுகிறது. அழகும் கவர்ச்சியும் நுண்மையும் கொண்டு இயங்கும் குறியீடு கவிஞனின் உணர்வைப் படிப்போரின் உள்ளத்தில் பாய்ச்சும் ஆற்றல்மிக்கதாக விளங்குகின்றது எனக்கூறும் ந.சுப்புரெட்டியார், கவிஞர் வாலியின் **'பாரதி ஒரு பிள்ளையார் சுழி'** என்ற கவிதையிலிருந்து,

**"பாரதி**
**புதிய தமிழுக்குப்**
**போடப்பட்ட**
**பிள்ளையார் சுழி**
**பண்டிதர்கள்**
**கடத்திச் சென்ற**
**பைந்தமிழ்க் குழந்தையைக்**
**கண்டுபிடித்துக்**
**கொடுத்த**
**காவல்நிலையம்**
**பல கோணங்களில்**
**கண்ணனைப்**
**படம் பிடித்த**
**கேமரா**
**சமதர்மக் காற்று**
**சஞ்சாரம் செய்த**
**அபூர்வ**
**அக்கிரஹாரம்**
**திருவல்லிக்கேணி**
**யானை**
**தின்று விட்ட**
**தமிழ்க்கரும்பு"**[33]

என்னும் கவிதை வரிகளைச் சான்று காட்டி[34] விளக்குகின்றார். இக்கவிதை வரிகளில் பிள்ளையார் சுழி, காவல் நிலையம், கேமரா, அக்கிரஹாரம், தமிழ்க்கரும்பு ஆகியன குறியீடுகளாக நின்று கவிஞரின் உணர்வை வாசிப்போரிடமும் ஏற்படுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.

## புதுக்கவிதையின் உள்ளடக்கம்

இலக்கியத் திறனாய்வில் பல்வேறு போராட்டங்களுக்குப் பின்னர், **'வாழ்க்கையின் திறனாய்வே கவிதை'** என்ற கொள்கை ஏற்கப்பட்டு, இலக்கியம் சமுதாயத்திற்காகவே என்ற முடிவு தெளிவாகி விட்டது. புதுக்கவிதையின் உள்ளடக்கத்தை விளக்க

வரும் ந.சுப்புரெட்டியார், **“பல பக்கங்கள் கொண்ட வைரக்கல் போன்றது புதுக்கவிதை. ஒரு பக்கம் அழகு, புது மாதிரியான அழகு, வியக்கும் அழகு, ஒரு பக்கம் ஏக்கம், மனமுறிவு, பெருமூச்சு, காதல், தத்துவம், கோபம், சந்தேகம், அறைகூவல், சமகால விமர்சனங்கள், தன் மனத்தையே தேர்தெடுத்து ஆராயும் நேர்மை, பாலுணர்ச்சி, பொங்கல், ரேஷன், காந்தியம், கம்யூனிசம், அறச்சீற்றம், ஸ்வதரிசனம், டிவேல்யுவேஷன், காலை, இரவு, நிலா வருணனைகள், கனவு மயக்க நிலைகள், ஞானம், உபதேசம், இறுமாப்பு, மனமாறுதல் இப்படிப்பட்ட பல பக்கங்கள் உண்டு. சுருங்கச் சொன்னால் இன்று நம்மிடையே இருக்கும் உணர்ச்சிகளை அராத்தின் பிரதிபலிப்பை நாம் புதுக்கவிதையில் காண்கின்றோம்”**[35] எனச் சார்வாகன் **‘கசடதபற’** இதழில் புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் குறித்து எழுதிய கட்டுரையின் ஒரு பகுதியைச் சுட்டிக்காட்டி, இதுவே புதுக்கவிதையின் உள்ளடக்கம் என்கின்றார். அவர் புதுக்கவிதையின் உள்ளடக்கங்களைச் சுதந்திரம், ஜனநாயகம், ஜனநாயக சோஷலிசம், அரசியல், உழைப்பவர் உலகம், வறுமை, பல்வகை நோக்கு, தத்துவ தரிசனம், கல்வியின் நிலை, முதுகன்னியர் நிலை எனப்பகுத்து அவற்றுக்குத் தக்க சான்றுகள் தந்து விளக்கியுள்ளார்.

இக்காலத்தில் அனைத்து நாட்டிலும் அரசியல் சாக்கடையாகி விட்டது. அது அழுக்குமயமானது என்பதை சுப்பிரமணியராஜு

**“வாயிலே**
**அழுக்கென்று**
**நீரெடுத்துக் கொப்பளித்தேன்**
**கொப்பளித்துக்**
**கொப்பளித்து**
**வாயும் ஓயாமல்**
**அழுக்கும் போகாமல்**
**உற்றுப்பார்த்தேன்**
**நீரே அழுக்கு”**[36]

என்னும் கவிதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

## புதுக்கவிதையில் காதலுணர்வும் முருகுணர்வும்

காதலுணர்வு உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானதாகும். தொல்காப்பியர் உள்ளிட்ட இலக்கண நூலார் அனைவரும் இவ்உணர்வு கவிதைக்குத் தேவை என வலியுறுத்திக் கூறியுள்ளனர். இதனை ஒருவனுக்கும் ஒருத்திக்கும் ஏற்படும் உணர்வு என்றும், வாழ்வழியில் பாலதானையில் பெறவேண்டிய உணர்வு என்றும் போற்றினர். பக்தி இயக்கக் கவிஞர்கள் இதனை **“நாயக-நாயகி”** பாவனையாக்கினர். சீவாத்மா-பரமாத்மா உணர்வு எனக் கொண்டனர். இந்தக் காதலுணர்வு இன்று

இழிவுப்படுத்தப்பட்ட போதும், புதுக்கவிஞர்கள் சிலர் போற்றியும் வருகின்றனர். **"அழகுணர்ச்சி இல்லாத கவிஞனைக் காண்பது அரிது. அழகு மகிழ்ச்சியைத் தருவதாயினும் அதுமட்டுமே கவிதையின் முடிவாகிவிடமுடியாது. ஆனால் சில கவிஞர்கள் 'தோள் கண்டார்: தோளே கண்டார்' என்பது போல அழகுணர்ச்சிகளில் ஈடுபட்டு அத்துடன் நின்று விடுகின்றனர். வாழ்வோடு ஒன்றிய அழகினைச் சுவைக்கவும் அதனைக் கவிதைப் பொருளாக ஆக்கவும் உரிமைகொண்ட கவிஞன் ஒன்றை மறந்து விடுதல் கூடாது. மக்களை நடைமுறை வாழ்க்கையிலிருந்து திசை திருப்பக் கூடியதும், வெறும் கற்பனையான மயக்கங்களை விளைவிக்கக் கூடியதுமான அழகுணர்ச்சிப் பாடல்கள் முற்போக்கான மாற்றங்களுக்கு முட்டுக்கட்டைகளாகவே அமைந்துவிடும்"**[37] எனக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார் கவிதைக்கு முருகுணர்ச்சியே தேவை என்கின்றார். இதற்குப்பல புதுக்கவிதைகளைச் சான்று காட்டியுள்ளார்.

## மார்க்சியக் கொள்கை வழியில் புதுக்கவிதைகள்

புதுக்கவிதையின் உள்ளடக்கச் செய்திகள் சமுதாய நலநோக்கையே நிலைக்களமாகக் கொண்டவை: மாயகோவ்ஸ்கி போன்ற இரஷ்யக் கவிஞர்களையும் பிற முற்போக்குக் கவிஞர்களையும் முன்னோடியாகக் கொண்டு தமிழ்ப் புதுக்கவிதைகளின் உள்ளடக்கச் செய்திகள் அமைந்திருக்கின்றன. மார்க்சியக் கொள்கை வழியில் தமிழ்ப் புதுக்கவிதைகளை மதிப்பிடும் ந.சுப்புரெட்டியார், **"புதுக்கவிதை என்பது முதலாளித்துவச் சமூகத்தில் சமூக உறவுகளின் மீது மனிதனுக்கு இருக்கும் தொடர்பு அறத் தொடங்கும் போது தோன்றுகிற இலக்கிய வடிவமாகும் என்பார் கிறிஸ்டோபர் கால்டுவெல். காரல் மார்க்ஸ், மனிதர்கள் உற்பத்தியையும் உற்பத்தி உறவுகளையும் அபிவிருத்தி செய்து அதே சமயம், அவற்றிற்குத் தகுந்தவாறு தங்களையும் தங்களது சிந்தனைகளையும், அச்சிந்தனைகளின் விளைவுகளையும் மாற்றிக் கொள்கின்றனர். வாழ்க்கை என்பது மனத்தினால் அறுதியிடப்படுவதன்று: மாறாக உணர்வுதான் வாழ்க்கையால் அறுதியிடப் பெறுகின்றது. சமுதாயத்தின் அடிப்படையில் எழும் பல்வேறு சிக்கல்களைப் பற்றிய கருத்துகள் இக்கவிதைகளில் மிளிர்கின்றன. தமிழில் வானம்பாடிக் கவிஞர்கள் தலையெடுத்த பின்னர்தான் சமதர்ம மெய்ம்மையியல் பின்னணியில் தத்துவ பலத்துடன் புதுக்கவிதைகட்கு வியூகம் அமைந்தது"**[38] எனக் குறிப்பிடுகின்றார். மேலும் அவர் தமிழின் பல புதுக்கவிதைகளைச் சான்று காட்டி, அக்கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகள் இடம் பெற்றுள்ள பாங்கினைத் தெளிவுப்படுத்தியுள்ளார். இன்குலாப்பின் 'சர்வ தேசிய கீதத்துடன் வருவோம்' என்னும் புதுக்கவிதையில்,

**“உழைக்கும் வர்க்கத்தின்**
**பலாத்காரப் புரட்சிக்கு**
**மனிதாபி மானமே**
**ஆதார சுருதி”**[39]

என்று மார்க்சியப் புரட்சியின் தத்துவம் **‘மனிதாபிமானமே’** எனப்பிரகடனம் செய்யப்படுகின்றது.

## தனிமனிதத்துவ நோக்கில் புதுக்கவிதைகள்

**‘தனிமனிதத்துவம்’** என்பது தனிப்பட்டவரின் உரிமை குறித்த ஒரு சமுதாயக் கொள்கையாகும். இது இலக்கியக் கொள்கையாகியுள்ளது. வாழ்ககையில் தனிமனித உரிமை அல்லது தனிமனிதக்கோட்பாடு என்பது மாற்ற முடியாத மனித இயல்பு ஆகும். மனித வாழ்க்கையில் தனியுடைமைத் தோற்றத்தோடு கூடிப்பிறந்ததே இக்கொள்கையாகும். **“தனிமனிதத்துவ அடிப்படையில் இன்றைய மனிதனின் காதல், இழப்பு, இரக்கம், சீற்றம், விரக்தி, இயலாமை, குழப்பம், மலர்ச்சி போன்ற பல்வேறு உணர்வுகளையும் இன்றைய புதுக்கவிஞர்கள் தம் புதுக்கவிதைகளில் வெளிப்படுத்துவதைக் காணலாம். இங்ஙனம் தனிமனிதத்துவத்திற்குக் கைகொடுத்து உதவியவர்கள் எஸ்ரா பவுண்டு, டி.எஸ்.எலியட் ஆகியோர்: இவர்களையே இக்கவிஞர்கள் வழிகாட்டியாக ஏற்கின்றனர்”**[40] எனக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், பல புதுக்கவிதைகளை எடுத்துக் காட்டி இக்கோட்பாட்டைத் தெளிவுப்படுத்தியுள்ளார்.

## புதுக்கவிதைகளில் நகைச்சுவை, கிண்டல், எள்ளல்

இன்றைய புதுக்கவிதைகளில் நகைச்சுவை, கிண்டல், எள்ளல் ஆகியன நிறைந்திருப்பதை ந.சுப்புரெட்டியார், பல்வேறு புதுக்கவிதைகளைச் சான்றுகாட்டி விளக்கியுள்ளார். எல்.வைத்தீஸ்வரன் **‘அரசியல்’** என்னும் தலைப்பில் எழுதியுள்ள கவிதையில்,

**“எம்பிக் குதித்து**
**முறத்தில் விழுந்து**
**முதுகு தேய்க்குது**
**அரிசிமா மணிகள்**
**காற்றின் சூழ்ச்சியால்**
**கணக்காய் மெதுவாய்**
**கல்லை நெல்லை**
**எடையாய்ப் பிரித்து**
**தரைமேல் உருட்டுது**
**தந்திரக் கரங்கள்**
**ஆகும் முறமும் ஓர்**
**அரசியல் பூமியோ?”**[41]

**‘அரிசியல்’, ‘அரசியல்’** என்னும் இருசொற்களை வைத்து நகைச்சுவை விளையாட்டு விளையாடுகின்றனர். மு.மேத்தா **‘இலட்சியம்’** என்னும் தலைப்பில் எழுதியுள்ள புதுக்கவிதையில்,

**“கால்பந்து விளையாடிக்**
**களைத்துப் போனபின்**
**விளையாட்டு வீரர்கள்**
**ஒருவரையொருவர்**
**உதைத்துக் கொண்டனர்**
**பார்வை யாளரும்**
**தமக்குள் உதைகளைப்**
**பரிமாறிக் கொண்டிருந்தனர்**
**மைதானத்தின்**
**எங்கோ ஒரு மூலையில்**
**பார்ப்பாரற்றுக்**
**கிடந்த**
**பந்து**
**பார்த்துச் சிரித்தது”**[42]

எனக் கால்பந்து விளையாட்டுப் போட்டியை ஒரு கவிதை ஏளனக்குரலுடன் வெளிப்படுத்தியுள்ளார். தன்னை விடாது உதைத்தவர்கள், தான் உதைக்கப்படும் போதெல்லாம் பார்த்துச் சிரித்து மகிழ்ந்தவர்கள், தமக்குள் உதைகளைப் பரிமாறிக் கொண்டிருப்பதைக் கண்டு பந்து சிரிக்கின்றது. கவிஞர் வாலி **‘பொய்க்கால் குதிரைகள்’** என்னும் புதுக்கவிதை நூலில் **‘மந்திரியும் மாணவர்களும்’** என்ற கவிதையை எழுதியுள்ளார். இக்கவிதை மத்திய அரசின் இந்தித் திணிப்புக் கொள்கையை எள்ளி நகையாடுகின்றது. மத்திய அரசின் அமைச்சர் ஒருவர் மாணவர்களிடையே மத்திய அரசின் மொழிக்கொள்கை குறித்து அமைதியுரை ஆற்றுகின்றார். அக்கவிதை வருமாறு:

**“இந்தி எதிர்ப்பு**
**இயக்கத்தை**
**இன்றே நிறுத்துங்கள்**
**ஒருமைப் பாட்டிற்கு**
**ஊறு**
**செய்யா தீர்கள்**
**உங்களைவிட**
**எங்களுக்கு**
**இந்தியா முக்கியம்!**

**மாணவர்கள்**
**மந்திரியைப் பார்த்து**
**அந்த வாக்கியத்தை**
**வினாவாக**
**வைத்தார்கள்**
**எங்களைவிட**

**உங்களுக்கு**
**இந்தியா முக்கியம்?”[43]**
சில இலக்கிய இயக்கக்கொள்கைகளின் அடிப்படையில் புதுக்கவிதைகள்

ந.சுப்புரெட்டியார் படிமக்கோட்பாடு, குறியீட்டில், மீ மெய்ம்மையியல், நனவோடை ஆகிய இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளை விளக்கி, இவற்றின் அடிப்படையிலும் புதுக்கவிதைகளைத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

சிக்மண்ட் பிராய்டின் உளவியல் கோட்பாட்டிலிருந்து தோன்றியதே **‘நனவோடை’** என்னும் இலக்கியக் கொள்கையாகும். இது இலக்கிய உத்தி பற்றிய கொள்கையாகும். **“பெரும்பாலும் இவ்வுத்தி புதினங்களில்தான் இடம்பெறுகின்றது. புதினத்தில் இடம்பெறும் ஒரு கதைமாந்தரின் புலனுணர்வுக் காட்சிகளும் எண்ணங்களும் ஒன்றுக்கொன்று தொடர்பின்றித் தோன்றுவதை எழுதிக்காட்டும் ஒருவகை உத்தியே நனவோடை, உறக்கநிலை, விழிப்புநிலை போன்ற வேறுபட்ட உண்மை நிலைகளைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாமல் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் காரணகாரிய இயைபுப் பொருத்தமின்றி வெளிப்படுத்துவதுதான் இவ்வுத்தியின் போக்காகும்”[44]**

1887 இல் டுஜார்டின் (Dujardin) என்பவர் எழுதிய புதினமொன்றில் முதன்முதல் இவ்வுத்தி பயன்படுத்தப் பெற்றுள்ளது. வில்லியம் ஜேம்ஸ் (1842 – 1910) என்பவர் ஒரு கதைமாந்தரின் அடிமனவோட்டங்களை அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் வெறும் தற்செயல் நிகழ்ச்சிப் போக்கில் முன் வைத்து எழுதிய **‘உளவியல் கோட்பாடுகள்’** என்ற நூலில் இச்சொல் காணப்படுகின்றது. மேலைநாட்டில் ஜேம்ஸ் ஜாய்ஸ் (1882 – 1914), வெர்ஜீனியா வுல்ஃப் (1882 – 1941), டோரதிரிகாட்சன், வில்லியம் பாக்னர் போன்றோர் இம்முறையில் சில புதினங்களை எழுதியுள்ளனர்.

## ந.சுப்புரெட்டியாரின் ‘கண்ணன் பாட்டுத்திறன்

மகாகவி சி.சுப்பிரமணிய பாரதியாரின் **‘கண்ணன் பாட்டு’** என்னும் குறுங்காவியத்தை ந.சுப்புரெட்டியார் **‘கண்ணன் பாட்டுத்திறன்’** என்னும் நூலில் விரிவாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தி உள்ளார். இத்திறனாய்வு நூல் இரண்டு பகுதிகளைக் கொண்டது. முதற்பகுதியில் வழிவழிக்கண்ணன், இறைவனுடன் நமது உறவுகள், ரஸத்தைப் பற்றிய ஒருசிறு விளக்கம் என்னும் மூன்று கட்டுரைகள் உள்ளன.

இரண்டாம் பகுதியான கண்ணன் பாட்டில் கண்ணன் பிறப்பு, கண்ணன் என் தோழன், கண்ணன் என் தாய், கண்ணன் என் தந்தை, கண்ணன் என் சேவகன், கண்ணன் என் அரசன், கண்ணன் என் குருவும் சீடனும், கண்ணன் என் குழந்தை, கண்ணன் என் விளையாட்டுப்பிள்ளை, கண்ணன் என் காதலன், கண்ணன் என் காதலி, கண்ணன் என் ஆண்டான், கண்ணன் என் குலதெய்வம், கண்ணனைப் பற்றிய தனிப்பாடல்கள், பாட்டிலமைந்துள்ள படிமங்கள் முதலான பதினாறு சிறு திறனாய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

மதுரை சர்வோதய இலக்கியப்பண்ணை பாரதி நூற்றாண்டு விழா வெளியீடாகப் பாரதியாருக்குச் செலுத்தும் அஞ்சலியாக ந.சுப்புரெட்டியாரின் **‘கண்ணன் பாட்டுத்திறன்’ (1982)** என்னும் இந்நூலினை வெளியிட்டுள்ளது. முல்லை, குழல், கண்ணன் இம்மூன்றும் மனம், இனிமை, அழகு ஆகியவற்றைத் தமிழ்நாட்டில் பரப்பி ஒளிவீசிக் கொண்டிருக்கும் சொற்களாகும். முல்லை நிலத்தில் குழலிசையை மாயோன் பரப்புவதைத் தமிழ்க் கவிஞர்கள் பலரும் உள்ளம் உருகப்பாடித் தம் முத்திரையைப் பதித்துள்ளனர். அந்த வகையில் பாரதியாரின் கண்ணன் பாட்டுத்திறனை சுவைபட ஆராய்வதே இச்சிறு நூலாகும்.

ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகிய மொழிகளில் நிலைத்து வாழ்ந்து வரும் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுத் தெளிந்து அவைகளிலுள்ள கருத்துக்களை கண்ணன் பாட்டுத்திறனை விளக்குவதற்கு ந.சுப்புரெட்டியார் பயன்படுத்தியுள்ளார்.

ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியத்தில் பலதேவனைக் காட்ட, **‘தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில்’ ‘பனை’** என்ற சொல்லுக்கு முன் வரும் சொற்கள் புணரும் முறையை,

**“கொடிமுன் வரினே ஐ அவண் நிற்பக்**
**கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி”**
(தொல். எழுத்து, உயிர்மெய், நூற். 83)

என்றவழி விளக்கும். அதாவது **‘பனை’** என்பதற்கு முன் **‘கொடி’** என்பது வருமொழியாக வருங்கால் ஏனையவைபோல ஐ காரம் கெட்டு அம்முச்சாரியை பெறாது ஐ நிற்ப வல்லெழுத்துப் பெற்றுப் புணரும் என்பதாகும். பனை + கொடி = பனங்கொடி என்று வராது. பனைக்கொடி என்றே வரும். இங்ஙனம் தொல்காப்பியர் பனைக் கொடியைத் தனியாக எடுத்துக்கொண்டு விதிகூறுவதனால் அக்கொடி அக்காலத்து வழக்கு மிகுதி பெற்றிருந்ததை அறியலாம். இப்பனைக்கொடி பலதேவர்க்கு

மட்டிலுமே உரியது. இதனால் சங்கர்ஷண வாசுதேவர்கள் வடபுலத்தைப் போலவே தமிழகத்திலும் தொன்று தொட்டு வழிபடப் பெற்று வந்த அவதார மூர்த்திகள்”[45] என முயன்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். தொல்காப்பியர் அகத்திணையியலில் குறிப்பிடும் **‘மாயோன் மேய காடுறை உலகம்’,** புறத்திணையியலில் குறிப்பிடும் **‘பூவைநிலை’** ஆகியனவற்றைக் காட்டி ந.சுப்புரெட்டியார் தமிழ்நாட்டின் கண்ணன் வழிபாட்டின் தொன்மையைச் சுட்டுகின்றார்.

## இறைவனுடன் சீவான்மா உறவு

இறைவனாகிய பரமாத்மாவுக்கும், அவனை அடைய விரும்பும் அடியார்களாகிய ஜீவாத்மாவிற்கும் உள்ள உறவை விளக்க வரும் ந.சுப்புரெட்டியார், **“எல்லாம் வல்ல எம்பெருமானாகிய சர்வேசுவரனுக்கும் ஆன்ம கோடிகளாகிய – சீவான்மாக்களாகிய நமக்கும் உள்ள உறவை அறிந்து கொள்வதே சம்பந்தஞானம் என்று வழங்கப்பெறுவது. இந்தச் சம்பந்தஞானம் இல்லாத காரணத்தினால் தான் நெடுங்காலமாக எம்பெருமானை விட்டுப் பிரிந்து சம்சாரமாகிய பிறவிக் கடலில் ஆழ்ந்து தத்தளிக்கின்றோம்: துன்புறுகின்றோம். சர்வேசுவரனையும் நம்மையும் பொருத்தி வைப்பது இந்தச் சம்பந்த ஞானமாகும்”**[46] என்பதை திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமூலர், ஆண்டாள், பாரதியாரின் கண்ணன் பாட்டு ஆகியனவற்றிலிருந்து சான்றுப்பாக்களைக் கூறித் தெளிவுப்படுத்தியுள்ளார்.

பாரதியாரின் கண்ணன் பாட்டில் 23 பாடல்கள் உள்ளன. நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் அருளிச் செய்த திருப்பாசுரங்களின் அநுசந்தானம் இப்பாடல்கள் முகிழ்ப்பதற்கு பாரதிக்குக் கைகொடுத்து உதவியுள்ளது என்று வ.வே.சு.ஐயர்[47] கூறியிருப்பது முற்றிலும் பொருந்துவதே.

## ‘ரஸம்’ – பாரதியார் விளக்கம்

ந.சுப்புரெட்டியார் கண்ணன் பாட்டில் காணப்பெறும் **‘ரஸம்’** குறித்து சிறிது விளக்கமாகவே எழுதியுள்ளார். **“பாரதியாரின் கண்ணன் பாட்டின் சிலவற்றில் ரஸங்களைப் பற்றிய குறிப்புகள் தந்துள்ளார். இவர் இக்குறிப்புகளை வடநூலார் கொள்கையினை யொட்டித் தந்துள்ளார் போல் தோன்றுகிறது. அவர் பாடல்கள் அனைத்தையும் ஆழ்ந்து கற்றால் சங்க இலக்கியங்களையோ தொல்காப்பியத்தையோ எங்கும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. காசியில் வாழ்ந்த காலத்துப் பாரதியார் வடமொழியை ஆழ்ந்து கற்றிருத்தல் வேண்டும். ஆகவே ரஸம் பற்றி அவர் தந்துள்ள குறிப்புக்களைச் சரிவரத் தெரிந்து கொள்ள வேண்டுமாயின், ரஸம் பற்றி வடமொழி இலக்கண நூலாரின் கருத்துக்களை ஓரளவு அறிந்து கொள்ள வேண்டும்”**[48] ந.சுப்புரெட்டியார்

சிருங்காரம், கருணம், வீரம், ரௌத்திரம், ஹாஸ்யம், பயானகம், பீபத்ஸம், அற்புதம், சாந்தம் ஆகிய ரஸங்களை தமிழின் எண்வகைச் சுவைகளோடு (சாந்தம் - நடுவு நிலைமையோடு ஒன்பது) ஒப்பிட்டுப் பாட்டுத்திறன் என்ற நூலிலும் விரிவாக எழுதியுள்ளார். அவற்றையே அவர் பாரதியாரின் கண்ணன் பாட்டிற்கும் பொருத்தி தெளிவுபட விளக்கியுள்ளார்.

## ந.சுப்புரெட்டியார் பார்வையில் பாரதியார் காட்டிய புதுநெறி

சங்க இலக்கியங்கள் குறிப்பாக வைணவ இலக்கியங்களில் சீவாத்மாவைத் தலைவியாகவும், பராமாத்மாவைத் தலைவனாகவும் உறவு கொண்டாடும் மரபு உண்டு. இது நாயக – நாயகி உறவாகும். பாரதியாரின் **'கண்ணம்மா – என் காதலி'** என்ற தலைப்பில் காணப்பெறும் ஆறு பாடல்களிலும் இந்த உறவு முறையை மாற்றிப் பேசியுள்ளார் பாரதியார். இக்கவிதைகளில் இறைவனைக் காதலியாகவும், தன்னைக் காதலனாகவும் பாவித்துப் பாடியுள்ளார் பாரதியார். இதனை ந.சுப்புரெட்டியார் **"பண்டைய சங்கப் பாடல்களிலும் பிற்காலத்தில் எழுந்த பக்திப் பாசுரங்களிலும் பிரிவாற்றாமையைத் தாங்க முடியாது நாயகியே தவிப்பதாக நவிலப் பெற்றிருக்கும். இதுவே அகத்திணை நெறி. ஆனால் இங்கு நாயகன் தவிப்பதாக ஒரு புதுநெறியை வகுத்து விடுகின்றார் பாரதியார். ஆனால் சீவான்மா – கவிஞர் - தலைவன் நிலையிலிருப்பதால் இந்தப் புதுநெறி பண்டைய அகத்திணை[49] நெறியினின்றும் விலகிப் போகவில்லை என்பதை உய்த்துணரலாம்".**

## கண்ணன் - தனிப்பாடல்களில்

பாரதியார் கண்ணனைப் பற்றிக் கண்ணன் பாட்டில் இருபத்து மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். இதனைத் தவிர **"தோத்திரப் பாடல்கள்", "வேதாந்தப் பாடல்கள்"** என்ற தலைப்புகளில் பாரதியார் பாடியனவாக பதினான்கு பாடல்கள் காணப்படுகின்றன. **"தருமங்களையெல்லாம் அறவே ஒதுக்கித் தள்ளிவிட்டு என்னைச் சரணடைக: பாவங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே"[50]** என்பது கீதா உபதேசம் ஆகும். பகவத்கீதையின் இச்சாரத்தைப் பாரதியார்,

**''செய்தலுன் கடனே – அறம்**
**செய்தலுன் கடனே – அதில்**
**எய்தூறும் விளைவினில் எண்ணம்வைக் காதே'**

என்று பேசுகின்றார். அந்நிய ஆட்சியில் அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்திய மக்களைக் கிளர்ந்தெழுந்து சுதந்திரப்போரில் குதிக்குமாறு விடுக்கும் கவிஞரின் அறைகூவலே இது என்று கருதலாம். அன்றாடம் வாழ்வேசதம் என்று கருதி மயங்கி நிற்கும் மக்களுக்குப் புதிய வாழ்வில் புகுவதற்கு மக்கள்

யாவரும் சுதந்திரப் போரில் பங்குபெற வேண்டும் என்பதே பாரதியாரின் கீதோபதேசம்''[51] என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

கண்ணன் பாட்டில் அமைந்துள்ள படிமங்களையும் கலவை உருக்காட்சிகளையும் வெளிநாட்டார் இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளில் எடுத்துக்காட்டியுள்ளார் ந.சுப்புரெட்டியார். இது சுவையாகவும் இலக்கிய மாணவர்களுக்குப் பயன்படுமாறும் அமைந்துள்ளது.

## ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் புலமை

கண்ணன் பாட்டுத்திறனில் ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் புலமையையும் நுணுக்கமாகக் காணமுடிகின்றது. இதற்கு, **"கதிரவன் ஒளியிலுள்ள வெண்மை நிறத்தில் ஏழு நிறங்கள் கலந்திருப்பதை இயற்பியல் அறிஞர்கள் (Physicists) எடுத்துக் காட்டியுள்ளனர். ஆதலால் எதனையும் ஆராய்ந்து பார்ப்பவர்க்கு ஒற்றுமையும் தோன்றும்: வேற்றுமையும் புலனாகும். சுவைகட்கு அடிப்படையாகவுள்ள உணர்ச்சிகளைக் கொண்டு ஆராயும் போது ஒற்றுமையும் காணப்பெறும்: வேற்றுமையும் காட்சி அளிக்கும்''**[52] என ரஸத்தைப் பற்றியும் **"'கண்ணன் என் அரசன்' என்ற பாடலில் பாரதியார் இதிகாசக் கண்ணனைக் காட்டி அவன் தனக்குச் செய்த நற்செயல்களை எண்ணிக் களிக்கின்றார். ஆயினும் அவன் நல்லவர்களை 'திராவகச் சோதனைக்கு' (Acid Test) உட்படுத்துவதையும், தெய்வம் இல்லையோ என்று வருந்தி நைந்துபோகும் நிலைக்கு அவர்கள் தள்ளப்படுவதையும் சுட்டிக் காட்டவே செய்கின்றார்''**[53] எனக் 'கண்ணன் என் அரசன்' என்ற பகுதியிலும் **"தாயின் மகிழ்ச்சி பாராமனியில் காற்றழுத்தம் ஏறுவது போல் ஏறிக்கொண்டே போகின்றது''**[54] என்று **'கண்ணம்மா என் குழந்தை'** என்ற பகுதியிலும் அவர் குறிப்பிடுவதைச் சான்றுகளாகக் குறிப்பிடலாம்.

பாரதியாரின் கண்ணன் பாட்டு கவிதை இன்பத்தையும் பக்தி அனுபவத்தையும் வெளிப்படுத்தும் மிகச் சிறந்த குறுங்காப்பியமாகும். இதனை இயற்றிய பாரதியார் ஒரு பெரிய மேதாவி: மகா பண்டிதர்: தெய்வீகப்புலவர்: ஜீவன்முக்தர். தமிழ்நாட்டின் தவப்பயனாகத் தோன்றிய இவரை தமிழ்நாட்டின் ரவீந்திரநாத் தாகூர் எனக் குறிப்பிடலாம். மகாகவி பாரதியாரின் பக்திச் சுவை அவரது சமய வேட்கையிலிருந்து தோன்றியதல்ல. அவருடைய உணர்ச்சி, கவிதை ஆற்றலில் இருந்து கனிந்தது. இஷ்ட தெய்வத்தை, வழிபடு கடவுளைப் பல்வேறு பாவனைகளால் வழிபடலாம் என்று இந்திய நாட்டுப் பக்திப் பனுவல்கள் கூறுகின்றன. ஆழ்வார் பாசுரங்களிலும் எம்பெருமானைத் தாய், தந்தை, குரு, தெய்வம் என்று பேசப்பெற்றுள்ளன. பாரதியாரும் இவற்றையெல்லாம் உள்வாங்கிக் கொண்டே கண்ணனைத் தந்தையாகவும், தாய்,

தோழன், சீடன், அரசன்', காதலியாகவும், காதலனாகவும், சற்குருவாகவும், தெய்வமாகவும் பாவித்துப் பாடியுள்ளார். இதனை ந.சுப்புரெட்டியார் **'கண்ணன் பாட்டுத்திறன்'** என்னும் இந்நூலில் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

## ந.சுப்புரெட்டியாரின் 'பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு'

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்களுள் முதன்மையர் மகாகவி சி.சுப்பிரமணிய பாரதியார் ஆவார். அவர்தம் பாட்டுத்திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட விழைந்தார். அவர் நாட்டுப்பற்றையும் மொழிப்பற்றையும் மானுடத்தையும் மனிதாபிமானத்தையும், உலகப் பார்வையையும் தம் பாடல்களுக்கு உள்ளடக்கமாகக் கொண்டு தமிழுக்கு உலகப்பார்வை வழங்கினார். அவர் பிறந்ததால் தமிழுக்கு ஏற்றம் கிடைத்தது. நவநவமான சோதிமிக்க கவிதைகளும் கிடைத்தன.

மகாகவி பாரதியாரின் நூற்றாண்டு விழாவினையொட்டி மதுரை சர்வோதய இலக்கியப்பண்ணை 1982ஆம் ஆண்டில் ந.சுப்புரெட்டியாரின் **'பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு'** என்னும் நூலினையும் பதிப்பித்து வெளியிட்டுள்ளது.

இந்நூல் அறிமுகம், தமிழில் காவியங்கள், கதைக்கரு, காவியத்தின் ஒருமைப்பாடு, காவியத்தலைவி: திரௌபதி, காவியத்தின் எதிர்நிலைத் தலைவன்: துரியோதனன், பிற காவிய மாந்தர்கள் தெய்வீகக் கூறுகள், காப்பிய நடை, காவியத்தில் உருக்காட்சிகள், காவியம் உணர்த்தும் உண்மை என்னும் பதினொரு இயல்களைக் கொண்டதாகும்.

## 'பாஞ்சாலி சபதம்' – அறிமுகம்

ந.சுப்புரெட்டியார், பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தைப் பின்வருமாறு அறிமுகப்படுத்துகின்றார். **"பாரதியார் பாடல்களில் என்றும் நிலைக்கும் தகுதிபெற்ற ஒரு சிலவற்றில் 'பாஞ்சாலி சபதம்' என்ற இச்சிறு காவியமும் ஒன்று. 'தொடர்நிலைச் செய்யுள்' என வழங்கப்பெறும் காவியப்படைப்பில் தான் ஒருவரின் புலமை வெளிப்படுகின்றது. தமிழிலுள்ள ஐஞ்சிறுகாப்பியங்கட்கொப்ப இச்சிறு காவியத்தை மதிக்கலாம். பாரதியாரின் பெரிய பாடல் இது. பாரதத்தில் வரும் சூதுப்போர்க் சருக்கத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. வில்லி பாரதத்தில் இச்சருக்கம் 283 பாடல்களால் விரித்தோதப் பெறுகின்றது. (வில்லிபாரதம், பகுதி -2, ராஜம் பதிப்பு). பாரதியார் - தம் காவியத்தை 283 பாடல்களால் இயற்றியுள்ளார். இவற்றுள் திரௌபதியை மன்றுக்கு அழைத்து வருமாறு சொல்லியது பற்றிய சருக்கத்தில் உண்டான அதர்மக் குழப்பத்தைக் கூறும் பகுதியும், அவள் துச்சாதனால் மன்றுக்கு இழுத்துவரப் பெறுவதை நுவலும் பகுதியும் நீண்ட பாடல்களால்**

**ஆனவை. பாரதியார் தம் காவியத்தை வியாசபாரதத்தைத் தழுவி எழுதியதாகத் தன் முகவுரையில் அவரே கூறுவதைக் கொண்டு இதனை அறியலாம். இதனால் பாரதியாரின் வடமொழிப் புலமை ஒருவாறு புலனாகின்றது"[55].**

## தமிழில் காப்பியங்கள்

ஒரு மொழியின் வளத்தை அம்மொழியில் தோன்றியுள்ள காப்பியங்களால் தான் அறியலாம். அவ்வகையில் தொன்மைச்சிறப்புடைய தமிழ்மொழியில் எண்ணற்ற காப்பியங்கள் காணப்படுகின்றன. கி.பி.ஏழாம் நூற்றாண்டு வரையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் அகவல் நடையே (Blank Verse) பின்பற்றப் பெற்றன. திருத்தக்கதேவரின் சீவக சிந்தாமணியே விருத்தப்பாவில் தோன்றிய முதல் தமிழ்க்காப்பியமாகும்.

ந.சுப்புரெட்டியார் மேலை நாட்டினர் வகுத்துள்ள காப்பிய இலக்கண வரையறைகளையும் காப்பிய வகைகளையும், தண்டியலங்காரம் கூறும் காப்பிய இலக்கணத்தையும் பொருந்தி ஆய்ந்து, பாஞ்சாலி சபதம் ஒரு காப்பியமே என்பதைத் தெளிவுப்படுத்தியுள்ளார். **"தண்டியார் கூறும் 'மந்திரம், தூது, செலவு, இகல், வென்றி' இவற்றுள் மந்திரம் என்பது, துரியோதனன் சபையில் சகுனியோடு பாண்டவர்கட்குத் தீங்கிழைக்கும் சதி ஆலோசிக்கப் பெறுவதையும், திருதராட்டிரன் அதனைக் கடிவதையும் போன்ற நிகழ்ச்சிகளைக் குறிப்பாகக் கொள்ளலாம். பாண்டவர்கள் அத்தினாபுரத்திற்குப் பயணப்பட்டு வருதல் 'செலவு' என்பதனால் உணர்த்தப்படுகின்றது. பாண்டவர்களை அழைப்பதற்காக விதுரன் இந்திரப்பிரத்தத்திற்கு வருதலைத் 'தூது' என்று குறிப்பிடுவதில் தவறில்லை. பாரதியின் காப்பியம் அழைப்பு, சூதாட்டம், அடிமை, துகிலுரிதல், சபதம் என்னும் ஐந்து சருக்கங்களாக அமைந்திருப்பது. சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி என்னும் தண்டியாசிரியரின் விதியையொட்டித்தான் அமைந்துள்ளது. மேலும் இக்காப்பியத்தில் கருணம், ரௌத்திரம், வீரம் போன்ற சுவைகளையெல்லாம் உணர்ச்சியுடன் படிக்கும்போது உணர்ந்து மகிழலாம். தண்டியார் கூறும் காப்பிய உறுப்புகள் குறைந்துவரினும் குற்றமில்லை என்ற புறனடையும் இஃது ஒரு சிறந்த காப்பியம் என்பதை அரண் செய்கின்றது."**[56] ஆதலால் ந.சுப்புரெட்டியார் பாஞ்சாலி சபதத்தை ஒரு சிறந்த தமிழ்க் காப்பியமாகக் கொண்டு திறனாய்வு செய்துள்ளார் என்பதை அறியலாம்.

## காப்பியத்தின் கதைக்கரு

மகாபாரதத்தில் வரும் சூதுப்போர் சருக்கத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றியதே பாரதியாரின் பாஞ்சாலி சபதம் என்ற இக்காவியமாகும். காப்பியத்தில் இடம் பெறும்

நிகழ்ச்சிகளின் புணர்ப்பே காப்பியத்தைச் சிறக்கச் செய்கின்றது. உயிர்ப்பையும் ஒருமைப்பாட்டையும் ஏற்படுத்துகின்றது. இந்நிகழ்ச்சிகளின் புணர்ப்பே கதைக்கருவாகும் ந.சுப்புரெட்டியார், **“பழைய கதையைப் புதிய காவியமாகப் புனைவது எளிதன்று: அ.்.து உயிர் ஒளியுடன் ஒளிரும் கவிதை புனையும் ஆற்றலைப் பெற்ற மேதைகளாலேயே செய்ய முடியும். இந்த முறையில் நோக்கினால் ‘பாஞ்சாலி சபதம்’ பாரதியாரின் கவித்திறத்தின் தனி வெற்றியாகும். பாண்டவர்கள் இராசசூயப் பெருவேள்வி செய்து பெற்ற பெரும் புகழ் துரியோதனன் மனத்தில் பொறாமைத்தீயை மூட்டுகின்றது. இந்தப் பொறாமைத்தீயே பாரதப்போருக்கு வித்திடுகின்றது”**[57] எனப் பாஞ்சாலி சபதத்தின் கதைக்கருவை விளக்குகின்றார். துரியோதனன் பொறாமையினால் படும் மனவேதனையையும் உள்ளக் குமுறலையும் பாரதியார் இதிகாசத்திற்கேற்ற விரிவுடன் கதைப்பின்னல் ஆக்கி இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## காவியத்தின் ஒருமைப்பாடு

காப்பியத்தில் ஒருமைப்பாடு என்ற குறிக்கோள் (Ideal of Unity) அரிஸ்டாடில் காலத்திலிருந்து சிறப்பாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது. மேலைநாட்டுத் திறனாய்வாளர் இதனை ஒரு சிறந்த கொள்கையாகவே பின்பற்றி வருகின்றனர். துன்பியல் நாடகத்தைப் போலவே காப்பியத்திலும் ஒரே தொடர்ந்த நிகழ்ச்சி (Organic Action) வளர்ச்சி பெறுதல் வேண்டும். அது சாதாரணமான ஒரு சந்தர்ப்பத்தின் விளைவாகத் தோன்றி வளர்ந்து தெளிந்த அமைதியுடன் முடிவடைதல் வேண்டும். அரிஸ்டாடில் கொள்கைப்படி ஒரு காப்பியத்திற்குத் தொடக்கம், நடு, முடிவு, என்ற மூன்றும் இருத்தல் வேண்டும். இவற்றை வடநூலார் உபக்கிரமம், மத்திய பாகம், உபசம்ஹாரம் எனக் குறிப்பிடுவர். பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தில் இத்தகைய காவிய ஒருமைப்பாடு பொருந்தியிருப்பதை **‘காவியத்தின் ஒருமைப்பாடு’** என்னும் பகுதியில் தக்க சான்றுகளோடு தெளிவாக விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார். **“பாஞ்சாலி செய்த சபதம் காவியத்தின் பெயராகவே அமைந்து விடுகின்றது. பெண்மைக்கு – தாய்க்குலத்திற்கு ஏற்றங்காட்டிய தமிழ் இலக்கிய மரபினை நன்கு கருத்தில் கொண்டவர் பாரதி. மணிமேகலை, சிலப்பதிகாரம் என்ற பெண் தொடர்பியல் பெயர் பெற்ற காப்பியங்களை மனத்திற்கொண்டு இதற்குப் ‘பாஞ்சாலி சபதம்’ என்று பெண்ணின் பெயரையே இட்டுள்ளார். அதற்கேற்றவாறு காப்பியப் போக்கையும் அமைத்துள்ளார். ‘பெண்மை வாழ்கவென்று கூத்திடுவோமடா’ என்று பெண்மையைப் போற்றியவர் பெண் பெயரால் காவியத்தை வழங்கினார் என்று கொள்வதும் பொருத்தமாகும்”**[58].

## திரௌபதி

இவளே பாஞ்சாலி சபதத்தில் காப்பியத் தலைவி ஆவாள். பாரதத்திலும் பாஞ்சாலி சபதத்திலும் திரௌபதிக்குக் கோயில் எடுத்த செய்தி கவிஞர்களால் குறிக்கப் பெறவில்லை. ஆயினும் தமிழ்நாட்டில் பலஇடங்களில் திரௌபதியம்மன் கோயில்கள் உள்ளன. திரௌபதி சூதாட்டத்தில் பணப்பொருளாக வைக்கப்படுகின்றாள். ஆந்திரப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்த சி.ஆர்.ரெட்டி, தெலுங்கு மகாபாரதத்தில் தனி ஈடுபாடு உடையவர். அவருக்கு திரௌபதி என்ற பாத்திரத்தின் மீதும் தீராதக்காதல் உண்டு. அவர் 'பஞ்சமி' என்ற தம்முடைய ஐந்து கட்டுரைகளைக் கொண்ட நூலில் சீதையையும் திரௌபதியையும் அறிவுக்கு கூர்மையுடன் ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளார். இந்த நாட்டில் ஊழிக்காலம் முதல் சீதை பெண்ணினத்தின் மிக மூலமாதிரியாகத் திகழ்ந்து வருகின்றாள். ஆயினும் ரெட்டி பற்றுதி, பொறுமை, குடிப்பண்பு, துன்பத்தை அனுபவிக்கும் திறன் போன்ற சீதையின் குணங்களிலேயே தனி ஈடுபாடு கொள்கின்றார். ஆயினும் திரௌபதியே தன்னுடைய துணிவாலும் விரைந்து மாறும் இயல்பாலும் ரெட்டியாரின் இதயத்தைக் கவர்கின்றாள். சிலப்பதிகாரக் கண்ணகியும் திரௌபதியுடன் ஒப்பிடக்கூடியவர் என்கின்றார் ரெட்டி.

பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தில் திருதராட்டினரது அழைப்பைக் கூறுவதற்காக இந்திரப்பிரத்தம் வரும் விதுரனை வரவேற்கும் கட்டத்தில் முதன்முதலாக அறிமுகமாகின்றாள் திரௌபதி. அடுத்துப் பாஞ்சாலியை அர்ச்சுனன் தன் தொடையின் மீது சாய்த்துக் கொண்டு பரிதியின் அழகைக் கண்டு களிக்கின்றாள். வாதம் புரிவதிலும் நீதிகளை எடுத்துக் காட்டுவதிலும் அரச சபையில் துணிவாகப் பேசுவதிலும் இவளையடுத்துக் கண்ணகியைத் தவிர, தமிழ்க்காப்பியங்களில் பிறபெண்களைக் காண்டல் அரிது.

திரௌபதியை மனத்தில்கொண்ட பாரதியார் **'புதுமைப்பெண்'** என்ற கவிதையைப் படைத்தார் எனத் துணியலாம். திரௌபதி கண்ணனைத் தெய்வமாகப் போற்றியவள். தன்னால் துச்சாதனனின் கயமைச்செயல்களிலிருந்து விடுவித்துக் கொள்ள இயலாது என்றும், அவையோர் கையாலாகாதவர் என்றும் தெரிந்ததும் திரௌபதி கண்ணனைச் சரணடைகின்றாள். பாஞ்சாலி சபதத்தில் பாரதியார் திரௌபதியை பராசக்தியாகவே காணுகின்றார். அவர் மனம் சுதந்திரதேவியை எதிர்நோக்குகின்றது.

## துரியோதனன் - எதிர்நிலைத்தலைவன்

பாரதியாரின் **'பாஞ்சாலி சபதம்'** என்னும் குறுங்காவியத்தில் வரும் எதிர்நிலைத் தலைவனே துரியோதனன்

ஆவான். இவன் திருதராட்டினனின் முதல்மகன் ஆவான். அரவக்கொடி உயர்த்தி ஆட்சி செய்த துரியோதனன் தீக்குணங்களின் இருப்பிடமாவான். இவனைப் பாரதியார் **'முடிபணி வறியான்'** என்கின்றார். கயமைப் பண்புகளின் இருப்பிடமான இவனைப் பொறாமைக் குணம் ஆட்டிப் படைக்கின்றது. துரியோதனன் தன் உள்ளக் குமுறலை தன் மாமனாகிய சகுனியிடம்,

**"பேச்சை வளர்த்துப் பயனொன்று**
**மில்லை, என் மாமனே! – அவர்**
**பேற்றை அழிக்க உபாயஞ் சொல்வாய்**
**என்றன் மாமனே!**
**தீச்செயல் நற்செயல் ஏதெனினும்**
**ஒன்று செய்து, தாம் - அவர்**
**செல்வங் கவர்ந்த வரைவிட**
**வேண்டும் தெருவினிலே"**[59]

என்றுதன் உள்ளடக்கிடக்கையை வெளிப்படுத்துகின்றான். பாண்டவர்களை அழித்து அவர்களுடைய செல்வத்தைப் பெறுதலே துரியோதனனின் நோக்கமும் செயலுமாகும். திரௌபதியைத் தன் தம்பியைக் கொண்டு மன்றுக்கு இழுத்துவரச் செய்து அவளை உலகம் கேட்டிராத வகையில் அவமானம் செய்தது கயமையின் கொடுமுடியாகும். தன் சிற்றப்பனாகிய விதுரனைத் துரியோதனன் மரியாதைக் குறைவாக இகழ்ந்து பேசுகின்றான்.

## பிற மாந்தர்கள்

காப்பியக் கதையில் வரும் நிகழ்ச்சிகள், அக்காப்பிய மாந்தர்களின் தகுதிப்பாட்டால்தான் சிறப்படையும். ஆயினும் பாரதி, பாஞ்சாலி சபதத்தில் அம்மாந்தர்களுக்குப் புது மெருகு ஊட்டியுள்ளார். திருதராட்டிரன், தருமன், விதுரன், துச்சாதனன், அருச்சுனன், வீமன், கர்ணன், விகர்ணன், வீடுமன் ஆகிய பாஞ்சாலி சபதக் கதை மாந்தர்களை ந.சுப்புரெட்டியார் தனித்தன்மையோடு ஆராய்ந்து வெளிப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

வில்லி பாரதத்தில் திருதராட்டிரன் ஓர் அயோக்கியனாகவே படைக்கப்பட்டுள்ளான். **'விரகினுக்கோர் வீடு போல்வான்'** என்பது வில்லி, திருதராட்டிரனுக்குப் பயன்படுத்தும் சொல்லோவியமாகும். வில்லி பாரதத்தில் தந்தையைக் கேட்காமலேயே துரியோதனன் அமைத்த மண்டபத்தைக் கண்டு திருதராட்டிரன் மகிழ்ச்சி அடைகின்றான். இங்கு சகுனியின் சூழ்ச்சியையும் திருதராட்டிரன் பாராட்டிப் பேசுகின்றான்.

பாரதியாரின் திருதராட்டிரன் அகக்கண்ணால் சிந்தித்து செயல்படுபவன். இவனின் மற்றொருகண் விதுரனின் அறிவாகும்.

இங்கு திருதராட்டிரன் தன் மைந்தனின் மனக்கருத்தைச் சகுனி மூலம் அறிந்து சினம் கொள்கின்றான். சூழ்ச்சியால் பாண்டவர்களை அழிக்க முடியாது என்பதும் ஆதிப்பரம் பொருளே கண்ணன் வடிவில் தோன்றியுள்ளதும் பாரதியாரின் திருதராட்டிரன் கண்ட உண்மையாகும். ஆயினும் அவன் அறிவுரைகளைத் துரியோதனன் ஏற்கவில்லை..

## தெய்வீகக் கூறுகள்

காப்பியங்களில் தெய்வீகம் தொடர்பான செயல்கள் முக்கியக் கூறுகளாக இடம்பெறும். அந்த வகையில் பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தில் கண்ணன் இத்தெய்வீகச் சக்தியாகக் காட்சி அளிக்கின்றான். கோவிந்த நாமத்தின் மகிமையால் திரௌபதியின் துகில் முடிவின்றி வளர்கின்றது.

**"கண்ண பிரானருளால் - தம்பி**
**கழற்றிடக் கழற்றிடத் துணிபுதிதாய்**
**வண்ணப்பொற் சேலைக ளாம் - அவை**
**வளர்ந்தன வளர்ந்தன வளர்ந்தனவே!"**[60]

பாஞ்சாலி சபதத்தில் கண்ணன் பரம்பொருளின் கூறு என்று எல்லோரும் உணரும்படி மக்களுடன் கலந்து பழகுகின்றான். பாரதியாருக்குப் பாஞ்சாலியே ஒரு தெய்வக்கூறாகத் தான் தென்படுகின்றாள்.

## காப்பிய நடை

பாரதியாரின் காப்பிய நடைக்கு சாதாரண மக்கள் பேச்சில் எடுத்தாளப்பெறும் பழமொழிக்கும் உவமைகளும் சொற்றொடர்களும் உயிர்ப்பூட்டுகின்றன. பாரதியாரின் காப்பிய நடையைக் குறிப்பிட வந்த ந.சுப்புரெட்டியார், **"மிக எளிய சொற்களைக் கையாண்டு எல்லோரும் எளிதாகப் படித்து இலக்கியச் சுவையை நுகரக்கூடிய முறையில் கற்பனை நிறைந்ததாயும், ஓசையின்பமும் ஒலிநயமும் மலிந்ததாயுமுள்ள கவிதையை படைப்பதில் பாரதிக்கு நிகர் பாரதியே என்றுதான் சொல்ல வேண்டும்"**[61] எனக் குறிப்பிட்டுள்ளார். இதற்கு அவர் பாரதியாரின் பாஞ்சாலி சபதத்திலிருந்து பல சான்றுகளை எடுத்துக்காட்டியுள்ளார்.

## உருக்காட்சிகள்

ந.சுப்புரெட்டியார், பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தில் இடம் பெற்றுள்ள கட்புல உருக்காட்சிகள், செவிப்புல உருக்காட்சிகள், சுவைப்புல உருக்காட்சிகள், தொடுபுல உருக்காட்சிகள், நாற்றப்புல உருக்காட்சிகள், இயக்கநிலை உருக்காட்சிகள், மின்வெட்டுப் போன்ற மணிமொழி உருக்காட்சிகள் ஆகியனவற்றைத் தக்க சான்றுகள் காட்டி விளக்கியுள்ளார். பாரதியாரின் பாஞ்சாலி சபதத்தைப் படிக்கும் போது அவருடைய முருகியல் அனுபவத்தை மானசீகமாகக் கண்டு மகிழலாம்.

அவருடைய பாடல்கள் மம்மர் அறுக்கும் மருந்தாகப் பயில்வோரைக் களிப்பூட்டுகின்றன.

**பாஞ்சாலி சபதம் உணர்த்தும் உண்மை**

வடமொழியாளர்கள் தலைவன் ஏவலாளர்க்குக் கூறுதல் போன்றவை அறநூல்கள் என்றும், நண்பர் ஒருவருக்கொருவர் கூறும் முறையில் அமைந்தவை புராணங்கள் என்றும், கணவனுக்கு மனைவி உரைப்பது போன்றவை காவியங்கள் என்றும் ஒருவகைப்பாடு செய்து வடமொழியாளர்கள் கூறுவர். கவிதையில் சொற்களைவிட உள்ளத்து உணர்ச்சிகளே ஆற்றல் மிக்கவை. சொற்களால் உணர்த்துவதை விடக் குறிப்பால் உணர்த்துவதே சிறப்பு. சில வரிகளில் சங்க அகப்பாடல்கள் உணர்ச்சியைக் கொட்டி நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன.

பாஞ்சாலி சபதத்தில் துரியோதனை மையமாக வைத்துப் பொறாமையின் கேடு விளக்கப்பெறுகின்றது. இராசசூயப் பெருவேள்வியினால் பாண்டவர்க்கு வந்த ஏற்றத்தைக் கண்டு துரியோதனன் மனம் புழுங்கிப் பொறாமை கொள்கின்றான். வேள்வியினால் பாண்டவர்கட்குக் கிடைத்த பொருள்களையும் பெருமைகளையும் சிறப்புக்களையும் நினைத்து நினைத்து ஏங்குகின்றான். அவற்றைச் சகுனியிடம் கூறுகின்றான். திரௌபதி தன்னை நோக்கி ஏளனமாகச் சிரித்ததைச் சுட்டிக் காட்டுகின்றான்.

பாண்டவர் வேள்வியில் சமைத்தது போன்று துரியோதனன் இணையற்ற மண்டபத்தைக் கட்டுதல், அதனைப் பார்த்து மகிழப் பாண்டவர்களை மறுவிருந்தாட விதுரன் வாயிலாக அழைத்தல், விருந்திற்குப் பின்னர் சகுனியைத் தருமனுடன் சூதாடச் செய்தல், அதில் பாண்டவர்கள் அனைத்தையும் இழந்து அடிமையாதல், துரியோதனின் தம்பி துச்சாதனன் பாஞ்சாலியை மன்றுக்கு இழுத்து வந்து மானபங்கம் செய்தல் முதலான செயல்கள் சங்கிலித் தொடர்போல் நிகழ்வதைக் காட்டி, பாரதப்போர் - அதில் துரியோதனன் தன் தம்பியருடன் மாண்டுபோதல் இவை **'அழுக்காறு உடையார்க்கு அதுவே சாறும்'**[62] என்பதை நிலைநாட்டுவதும் பாஞ்சாலிசபதம் காவியம் உணர்த்தும் உண்மையாகும்.

சூதின் கொடுமையை உணர்த்துகின்றார் பாரதியார். தருமன் நாட்டைப் பணயமாக வைத்துச் சூதாடி இழந்ததும் பாரதியார் சினம் கொள்கின்றார். தம்மை மறந்து கதை மாந்தருள் ஒருவராகி விடுகின்றார். சூதாடிய தருமன் தன் நாட்டையும் தம்பியரையும் தன்னையும் திரௌபதியையும் இழந்து உலகப்பழிக்கு ஆளாகின்றான். இக்காப்பியத்தில் இடத்திற்கேற்றவாறும் சந்தர்ப்பத்திற்கேற்றவாறும் கதைமாந்தர்

வாயிலாகவும் ஊழின் வலி எடுத்துரைக்கப்படுகின்றது. **‘பெண்பாவம் பொல்லாதது’** என்னும் அடிக்கருத்தும் இக்காவியத்தின் பெருவிசையாகும். தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரை கவிதையின் சிறப்புக்கு ஓசை, சொல்லடுக்கு ஆகியவை இன்றியமையாதவை. ஆயினும் கவிதையின் பொருளமைப்பே முக்கியமானதாகக் கொள்ளப் பெறுகின்றது. கவிதை வாழ்க்கையின் விளக்கமாகும். பாஞ்சாலி சபதம் இந்த வகையில் அறம் கூறும் காவியமாகும்.

## ந.சுப்புரெட்டியாரின் குயில்பாட்டு ஒரு மதிப்பீடு

ந.சுப்புரெட்டியார், சி.சுப்பிரமணிய பாரதியாரின் மற்றொரு குறுங்காப்பியமான குயில் பாட்டினைத் திறனாய்ந்து **‘குயில்பாட்டு – ஒரு மதிப்பீடு’** என்னும் நூலினை எழுதியுள்ளார். இந்நூலினுள் அவர் குயில்பாட்டின் பின்னணி, குயிலின் காதற்கதை, குயிலின் முற்பிறப்பின் வரலாறு, காதலோ காதல், பாட்டில் இயற்கை எழில், பாட்டில் இசைக் கவர்ச்சி, பாட்டின் உள்ளுறை, குயில் பாட்டு ஒரு மதிப்பீடு என்னும் எட்டு இயல்களில் குயில்பாட்டினை நுணுக்கமான முறையில் திறனாய்வு செய்துள்ளார்.

பாரதியாரிடம் முன்னிக்கவிதை வெறிமூண்டு மாலையழகின் மயக்கத்தால் உள்ளத்தே தோன்றிய கற்பனைத் திறத்தினால் பிறப்பெடுத்ததே **‘குயில்பாட்டு’** என்னும் குறுங்காவியமாகும். குயில்பாட்டின் அழகில் தமிழறிஞர்கள் பலர் மயங்கியுள்ளார்கள். **‘குயில் பாட்டிலே காதல் கொப்புளிக்குதடா, செயல் மறந்தேனடா, லாகிரி சிரசில் கொண்டதடா’** என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை குயில்பாட்டினைப் போற்றியுள்ளார். பாரதியாருடைய கவித்துவம் மிக்க குயில்பாட்டில் ந.சுப்புரெட்டியாரும் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தவர்.

## குயில் பாட்டின் பின்னணி

ஒருநாள் காலை நேரத்தில் புதுவையின் மேற்கே அமைந்துள்ள பாரதியாரின் நண்பராகிய கிருட்டியசாமி செட்டியாருக்குச் சொந்தமான ஒரு மாஞ்சோலைக்குச் செல்கின்றார் பாரதியார். அப்போது அந்தச் சோலையில் வேடர்கள் இல்லை. அன்று பேடைக்குயிலொன்று ஒரு மாமரத்தின் வான்கிளையில் வீற்றிருந்து இனிமையாகப் பாடுகின்றது. அந்தப் பாட்டை அந்தச் சோலையிலுள்ள ஆண்குயில்கள் எல்லாம் கேட்கின்றன. அவற்றின் உள்ளங்களில் காதல் அனல் பெருகுகின்றது. அந்த இன்னிசையைச் சோலைப் பறவைகள் தம் காலைக் கடன்களையும் மறந்து பரவசமாக அனுபவிக்கின்றன. அந்தப்பெட்டைக் குயில்பாடும் இன்னிசை மின்னல் சுவை மெல்லியதாகி மிக இனிதாகப் பரவுதல் போன்றும், வானத்து மோகினியால் குயில் உருவங்கொண்டு

ஏற்றம் பெற்று விளங்குதல் போலும் எங்கும் பரவுகின்றது. அப்போது அங்கிருந்த பாரதியார்,

**"முன்னிக் கவிதைநெறி மூண்டே நனவழியப்**
**பட்ட பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம்**
**நெட்டைக் கனவின் நிகழ்ச்சியிலே"**[63]

அச்சோலையில் கண்ட கன்னிக்குயிலின் இன்னிசைப் பாட்டினில் மயங்கி விடுகின்றார். காதற்களிப்பில் ஆழந்து,

**"மனிதவுரு நீங்கிக் குயிலுருவம் வாராதோ?**
**இனிஇக் குயிற்பேட்டை என்றும் பிரியாமல்**
**காதலித்துக் கூடிக் களியுடனே வாழோமோ ?**
**நாதக் கனலிலே நம்முயிரைப் போக்கோமோ?"**[64]

என்று அக்கன்னிக் குயிலின் இசை கவிஞர் செவியில் விழும்போது காதல்வெறி கொள்கின்றார். அதற்கேற்ப அவருக்குக் கவிதை வெறியும் மூண்டெழுகின்றது.[65] இந்தப் பின்னணியில் தோன்றியதே பாரதியாரின் குயில்பாட்டாகும்.

## குயிலின் காதல் கதை

குயிலே பாரதியாருக்குத் தன் வரலாற்றை எடுத்துக்கூறுகின்றது.

1) பொதியமலைச் சாரலில் ஒரு சோலையில் தன்னந்தனியாக இருந்த குயில், ஒரு முனிவரைச் சந்தித்தல்: முனிவர் அக்குயிலிடம் அதன் முற்பிறப்பு வரலாற்றைக் கூறுதல்.
2) குயில் சேரநாட்டின் தென்புறமுள்ள ஒரு மலையில் வீரமுருகன் என்னும் வேடர்குலத் தலைவனுக்குச் சின்னக்குயிலி என்னும் அன்புமகளாகப் பிறந்து வளர்தல்: மாடன் என்னும் பெயருடைய சின்னக்குயிலியின் மாமன் மகன் அவளை மணக்க விரும்புதல், சின்னக் குயிலிக்கு அவன்மேல் காதல் இல்லை.
3) பின்னர் தேன்மலையில் வாழ்ந்த மொட்டைப்புலியன் என்ற செல்வந்தன் மகன் (வேடர்கோன்) நெட்டைக் குரங்கனுக்குச் சின்னக் குயிலியை மணம் பேசி முடித்தல்: திருமணம் நடைபெறுதல்:
4) பின்னர் ஒருநாள் கானகத்தில் தன் கணவனுக்குத் தெரியாமல் சின்னக்குயில் சேர இளவரசனுடன் கந்தர்வநெறியில் கூடுதல்: மாடனும் குரங்கனும் அக்காட்சியைக் காணுதல், இருவரும் சேர இளவரசனைக் கொல்ல முயல, சேர இளவரசன் எதிர்பாராத விதமாக அவ்விருவரையும் கொன்றுவிடுதல்: மாடனும் குரங்கனும் மரணமடைதல்: சேர இளவரசனும் மாண்டுவிடுதல்.

இவையாவும் குயில்பாட்டுக் காப்பியத்தில் பாரதியாரின் கனவுக்காட்சியாகச் சித்தரிக்கப்படுகின்றது. அவர் கண்விழித்து நோக்கும்போது அவரைச் சூழ்ந்து பண்டைச் சுவடி, எழுதுகோல், பத்திரிகைக் கூட்டம், பழம்பாய் ஆகியன காணப்படுகின்றன.

**காதல்கதை**

குயில்பாட்டு பாரதியாரின் அற்புதமான காதல் காப்பியமாகும். **'இக்காலத்தில் எழுதப்பெறும் காதல்பாட்டுகள், சங்க அகத்துறை மரபுகளைப் பின்பற்றாது தற்காலப் பண்புகளுடன் இருக்க வேண்டியது அவசியம்'**[66] என்பர். ஏ.வி.சுப்பிரமணிய அய்யர், பாரதியாரின் குயில்பாட்டு இவ்வாறு அமைந்த காதல் பாட்டு என்றே கருதுகின்றார். இக்குயில் பாட்டில் இரண்டிடங்களில் குயில்,

**''காதலை வேண்டிக் கரைகின்றேன்**
**இல்லையெனில்**
**காதலை வேண்டித் தவிக்கின்றேன்''**[67]

என ஏங்குகின்றது. **'காதல் போயிற் சாதல்'** என்ற தத்துவத்தைப் பறைசாற்றும் குயில்பாட்டு உலகப்பேரிலக்கியங்களுடன் ஒன்றாக வைத்து எண்ணிப்போற்ற வேண்டிய அற்புதப்படைப்பு.[68] இப்பாட்டின் கலைத்திறனாகிய கவிதைத்திறனும் கற்பனையும் பிற கவிஞர்களிடம் காணல் அரிது. குயில்பாட்டில் **'கண்டதும் காதல்'** என்ற முறையைப் பின்பற்றியுள்ளார் பாரதியார். குயிலின் முற்பிறப்பு வரலாற்றில் இதனைக் காணமுடிகின்றது. இராமலிங்க அடிகளார் (வள்ளலார்) பக்தி நிலையில் பின்பற்றிய மரபினைப் பாரதியார் காதல் நிலைக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக் கொண்டுள்ளார்.

## குயில்பாட்டின் உள்ளுறை

குயில்பாட்டில் அடங்கிய கதையைப் பாரதியாரே **'பட்டப்பகலில் தோன்றும் நெட்டைக்கனவு'** நிகழ்ச்சி எனக் கூறுகின்றார். ஆயினும் குயில்பாட்டினைப் படிக்கும் ஒவ்வொருவரும் உண்மையில் இது கற்பனைக் காப்பியமா? அல்லது அதற்கு உள்ளுறை ஏதாவது உண்டா? என்ற வினாக்களைப் போட்டுக் குழப்பிக் கொள்வர். மனிதன், பறவை, விலங்கு இவற்றை மாந்தர்களாகக் கொண்ட நான்கு நாள் காதல் நாடகத்தை விரிவாகப் பேசி முடிக்கும் பாரதியாரே, இறுதியில் தனக்குச் சுயநினைவு வந்ததாகக் கூறிக் காப்பியத்தை முடிக்கின்றார்.

பாரதியார் தம் **'குயிற்பாட்டு'** என்ற கற்பனைக் கதைக் காவியத்திற்கு வேதாந்தப் பொருள் விழைகின்றார் என்பதைப் பாட்டின் இறுதி மூன்றடிகள் குறிக்கின்றன. பாரதியார், குயிலைக் கவிதா சக்தி, கவிதைக் காதலி என்ற குறியீடாகவும் உள்ளுறையாகவும் கொண்டுள்ளார். கவிதா சக்தி, பாரதியாரை நாடுகின்றது. கவிதைக் காதலி பாரதியாரைத் தேடுகின்றாள். பாரதியார் கவிதையிடம் எல்லையில்லாத காதல் கொள்கின்றார். குரங்கன் சித்திரகவி புனையும் வக்கணைப் புலவருக்குக் குறியீடு. மாடன் இலக்கணப் பொதி சுமக்கும் இலக்கணப் புலவனுக்குக் குறியீடு. **''இந்தப்பாட்டில் 'தென்பொதிகை**

**மாமுனிவர்' தோன்றுகின்றார். அவரே குயிலுக்கு அதன் முற்பிறப்பு வரலாற்றை உரைத்தவர். அதன் அன்புக்காதலனை, ஆசை நாயகனை அடைவதை அருளியவரும் அவரே. பொதிய மலையில் வாழ்ந்த முனிவர் அகத்தியர். குறுமுனி என்று தமிழர்களால் புகழப்பெறுபவர். அவர் புராண மரபில் தமிழ்க் கவிதைக்கு மரபுத்தளையில் சிக்கித் தவிக்கும் தமிழ்க் கவிதைக்கு கழுவாய் உரைத்துச் செல்கின்றார். குயில்பாட்டின் உள்ளுறை பொருளுக்குக் குறுமுனி பிறிதொரு சான்றாக அமைந்துவிடுகின்றார்"**[69] எனக் கூறும் ந.சுப்புரெட்டியார் குயில்பாட்டின் நுண்பொருளையும் அதன் கவித்துவத்தையும் உள்ளுறையாகத் தெளிவுப்படுத்தியுள்ளார்.

## குயில்பாட்டு – மதிப்பீடு

பாரதியாரின் குயில்பாட்டு அனைத்து வகையிலும் தனிப்பட்டு நிற்கும் ஓர் அற்புதமான கதைக்காப்பியமாகும். இது பாரதியாருடைய சக்திக்கோட்பாட்டிற்குள் அடக்க முடியாத தனிக்காப்பியமாகும். இதில் பாரதியாரின் கற்பனையாற்றல் தனித்துவத்துடன் வெளிப்பட்டு நிற்கின்றது. குயில்பாட்டின் தொடக்கமே மிகவும் எடுப்பாகவும் கம்பீரத்துடனும் பேரழகுடனும் அமைந்துள்ளது. குயில்பாட்டின் முடிவு, மிகவும் அற்புதமானது. குயிலைக் கவிஞர் முத்தமிடும் போது அது ஒரு சோதிப் பெண்ணாக மாறிவிடுகின்றது. பாரதியார் கதை நிகழ்ச்சியில் அளவான வருணனைகளைப் பயன்படுத்தியுள்ளார். கதைத்தொடர்ச்சி குழப்பமின்றி அமைந்துள்ளது. குயில்பாட்டை ஒரே மூச்சில் படித்து முடித்து விடலாம். அப்படித்தான் படித்து முடிக்க வேண்டும். 714 அடிகளைக் கொண்ட குயில்பாட்டு அகவல் போன்ற ஒரு நடையைக் கொண்டிருக்கின்றது. வெள்ளோசை நிறைந்து காணப்படுகின்றது. சில இடங்களில் கலித்தளையையும் பயன்படுத்தியுள்ளார். சில பாடல்களில் வெண்டளையைப் பயன்படுத்தியுள்ளார். மொத்தத்தில் குயில்பாட்டின் நடை படிப்போரின் சிந்தனையையும் கவருவதாக உள்ளது. பாரதியாரின் சொல்வளமும் சொற்றொடர் வளமும் இப்பாட்டில் மிக அற்புதமாக அமைந்துள்ளன.

## ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் அனுமன்

ந.சுப்புரெட்டியார் கம்பராமாயணத்தில் அறிவுக்கு விருந்தாகவும் ஆன்மீகப்பெட்டகமாகவும், மனித வாழ்க்கையை வழி நடத்திச் செல்லும் வழிகாட்டியாகவும் கம்பராமாயணத்தில் கம்பனால் படைக்கப்பெற்ற அனுமன் என்ற பாத்திரத்தை விளக்கித் திறனாய்வுப் பார்வையில் **"அண்ணல் அனுமன்"** என்னும் திறனாய்வு நூலினை எழதியுள்ளார். தமிழ்ப்பணிக்கு அவர் அளித்துள்ள கொடைகளுள் இந்நூலும் ஒன்றாகும். கம்பனுடைய பார்வையில் **'உய்த்துள காலமெல்லாம் புகழால் ஓங்கி நிற்கும்'** பாத்திரமே அனுமன் ஆவார். ந.சுப்புரெட்டியார்

பார்வையில் அடக்கம், ஒழுக்கம், அறிவு, பணிவு, வீரம், விவேகம் முதலான அருங்குணங்களின் ஒட்டுமொத்த வடிவமாக அனுமன் போற்றப்படுகின்றான்.

## இராம காதையில் அனுமன்

கம்பனின் இராமகாதையில் வரும் கதை மாந்தர்களுள் ஈடும் இணையும் இல்லாதவனாக விளங்குபவன் அனுமனே. அவன் வீடுபேற்றையும் வேண்டாத விறலினன். இராமனின் புகழ்பாடி, இராமநாமத்தையே உச்சரித்து என்றும் சீரஞ்சீவியாக இருப்பவன். இத்தகைய சிறப்புமிக்க அனுமனைப் பற்றிய ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பார்வையே **'அண்ணல் அனுமன்'** என்னும் இந்நூலாகும். இந்நூலினுள் கவிக்கு நாயகன், சொல்லின் செல்வன், சிந்தனைச் செம்மல், விழையும் உருவினன், அஞ்சா நெஞ்சன், இராமதூதன், இராமபக்தன், குணக்குன்றன் என்னும் அனுமனின் குணங்களை ந.சுப்புரெட்டியார் தெளிவாகத் திறனாய்ந்துள்ளார்.

## கவிக்கு நாயகன்

சீதையைத் தேடி இலங்கை நகர் முழுவதும் அலைந்து கும்பகர்ணனின் உறையுள் சென்று அதனைக் கடக்கின்றான் அனுமன். இதனைக் குறிப்பிடும் கவிக்கு நாயகனாகிய கம்பன்,

**"செவிக்குத் தேனென இராகவன்**
**புகழிழைத் திருத்தும்**
**கவிக்கு நாயகன் அனையவன்**
**உறையுளைக் கடந்தான்"**[70]

என்கின்றான். துன்பவியல் முடிவினைப் பெறவிருந்த இராமாயணக் கதையை இன்பியல் முடிவு பெற்று அமையக் காரணமாக இருந்த பாத்திரம் அனுமன் ஆதலால் கம்பன் அனுமனைக் கவிக்கு நாயகன்[71] எனப் பாடியதாக ந.சுப்புரெட்டியார் கூறும் கருத்து விளக்கம் புதுமையானது மட்டுமன்று: ஏற்புடையதுமாகும்.

கம்பராமாயணத்தில் இராம-சுக்கிரீவன் நட்ப ஏற்படுவதற்கு அனுமனே வித்திடுகின்றான். சீதையைத் தேடுவதற்கு இராமனால் அனுமன் இலங்கைக்கு அனுபப்பபடுகின்றான். இராம-இராவணப்போரில் அனுமன் இரண்டுமுறை மருந்து மலையைக் கொண்டு வந்து இராமனின் வீரர்களைக் காப்பாற்றுகின்றான். இவற்றையெல்லாம் எடுத்துக்காட்டி இராமாயணத்தில் இராமனின் அடித்தொண்டனாக விளங்கும் அனுமன் பாத்திரப்படைப்பின் முக்கியத்துவத்தை விளக்கும் ந.சுப்புரெட்டியார்,

**"மாணியாம் வேடம் தாங்கி**
**மலர்அயற்கு அறிவு மாண்டோர்**
**ஆணியாய் உலகுக்கு எல்லாம்**

**அறம்பொருள் நிரப்பும் அண்ணல்”**[72]

என்னும் பாடலைச் சுட்டிக்காட்டி அனுமன் அறத்தின் நாயகன் என்கின்றார்.

## சொல்லின் செல்வன்

வள்ளுவர் சொல்வன்மையின் சிறப்பை மிகவும் நுட்பமாக விளக்குகின்றார். இலக்கிய உலகில் இதற்குச் சிறந்த சான்றாக விளங்குபவன் அனுமன் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். நயமாகவும், விநயமாகவும், நாநயப்படவும் பேசுவதில் வல்லவன் அனுமன். முதல் சந்திப்பிலேயே அனுமனின் பேச்சில் மயங்கிய இராமன், அனுமனின் திறமையை இலக்குவனிடம் அறுதியிட்டுக் கூறுகின்றான்.

**“இல்லாத உலகத்து எங்கும்**
**ஈங்குஇவன் இசைகள்கூறக்**
**கல்லாத கலையும் வெதக்**
**கடலுமே என்னும் காட்சி**
**சொல்லாலே தோன்றிற்று அன்றே**
**யார்கொல்இச் சொல்லின் செல்வன்”**[73]

என்பது இராமனின் வாக்கு. இவ்வாறு அனுமனுக்குச் ‘சொல்லின் செல்வன்’ என்ற பட்டத்தை வழங்கிய இராமன் அவனை நான்முகனோடும் உருத்திரனோடும் ஒப்பிட்டுப் பேசுகின்றான். கிட்கிந்தையில் அனுமப்படலத்தில் (பா.எண்: 24, 25, 26, 27) பேரறிவினனாகிய அனுமன் இராமலக்குமணர் உருவத்தையும் உள்ளத்தையும் நன்கு அறிந்து கொண்டு பேசுகின்றான். இப்பேச்சில் வாலிவதத்திற்கான அடிப்படைகளையும் அமைத்துக் கொள்கின்றான். அனுமன் இராமனிடம் பீடிகை போட்டுப் பேசும்போது மிக எச்சரிக்கையாகவும், நாகரிகமாகவும் விநயமாகவும்,

**“யாரென விளம்பு கேன்நான்**
**எங்குலத் தலைவற்கு உம்மை**
**வீரநீர் பணித்தீர்”**[74]

எனப்பேசுகின்றான். இப்பேச்சு அஞ்சனைச் சிறுவனாகிய அனுமனை சொல்லின் செல்வனாக அறிமுகப்படுத்துகின்றது. அனுமன், சுக்கிரீவனிடம் ஏழு பாடல்களில்[75] தக்க எடுத்துக்காட்டுக்களால் இராமனின் பெருமைகளைக் கூறுகின்றான். சுக்கீரீவன் அளித்த விருந்தில் இராமன் பங்கு கொள்கின்றான். அப்போது அனுமன் இராமனுக்கு வாலியைப் பற்றிக் கூறுகின்றான். இராமனிடமிருந்து **‘வாலியைக் கொல்வேன்’** என்னும் உறுதியைப் பெறுபவனும் அனுமனே. இலங்கையில் சீதையைக் கண்டு வந்த அனுமன் இராமனிடம் இரத்தினச் சுருக்கமாகக் கூறி இராமனை அமைதிப்படுத்துகின்றான்.

இத்தகைய சிறப்புக்களால் அனுமனைச் **‘சொல்லின் செல்வன்’** எனக் கம்பன் போற்றியது தகும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

### சிந்தனைச் செம்மல்

கவிக்கு நாயகனாகிய அனுமனிடம் சிந்திக்கும் ஆற்றலும், நன்றாகச் சிந்தித்து அதனைச் செயற்படுத்தும் ஆற்றலும் நிறைந்திருந்தது என்பதை ந.சுப்புரெட்டியார், இப்பகுதியில் தக்க கம்பராமாயணச் சான்றுப் பாடல்களைக் காட்டி விளக்குகின்றார்.

### விழையும் உருவினன்

இராம தூதனாகிய அனுமன் இராம காதையில் சூழலுக்குத் தக்கவாறும் தேவைக்கு ஏற்றவாறும், கதைப்போக்கிற்கு ஏற்பவும் பன்னிரண்டு பேருருவங்களை எடுக்கின்றான். பன்னிரண்டு ஆழ்வார்களின் எண்ணிக்கையைப் போலவும், துவாதச திருமன் காப்பு எண்ணிக்கையைப் போலவும், இராமகைங்கரியத்தில் ஈடுபட்ட அனுமன் பன்னிருமுறை பேருருவம் எடுத்துச் செயலாற்றுகின்றான். அனுமனது வடிவத்தை மாற்றிக்கொள்ளும் திறமையைக் கம்பன்,

**“அணுவின் மேருவின் ஆழியான்**
**எனச்செலும் அனுமன்”**[76]

என்றும்,

**“புகைபுகா வாயினும் புகுவான்”**[77]

என்றும் பாராட்டிப் போற்றியுள்ளான். இப்போற்றுதலுக்கு உரிய விரிவான காரணத்தை ந.சுப்புரெட்டியார்[78] இப்பகுதியில் திறனாய்வுப் பார்வையில் அழுத்தமாக வெளிப்படுத்தியுள்ளார்.

### அஞ்சாநெஞ்சன்

**“கைவேல் களிற்றோடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும்”** **(குறள். 774)**

என்னும் திருக்குறளுக்கு இலக்கணமாக அஞ்சனையின் மைந்தனாகிய ஆஞ்சநேயனைக் காணுகின்றார் ந.சுப்புரெட்டியார். கிட்கிந்தா காண்டத்தில் அனுமனின் வீரத்தைக் காட்டும் சிறப்பு நிகழ்ச்சி ஏதும் இல்லை. இதற்குரிய காரணங்களை ந.சுப்புரெட்டியார், **“வாலிக்கு அஞ்சி அவன் மதங்க முனிவரின் சாபத்தால் ஏகுதற்கு முடியாத ருசியமுக பர்வதத்தில் வாழும் வானரக்கூட்டத்தில் முக்கியமானவன். இவன் முனிவரின் சாபத்தால் தன் பலம் தெரியாத நிலையில் சுக்கீரீவனுக்காக வாலியுடன் போரிடுவதற்கு வாய்ப்பில்லை. ‘உன்னை எதிர்த்துப் போரிடுபவரின் பலத்தில் பாதி உன்னுடன் சேர்ந்துவிடும்’ வாலிவரம் பெற்றுள்ளபடியால் மதிநலம் வாய்ந்த மாருதி வாலியுடன் மோதக் கனவிலும் கருதவில்லை”**[79] என விளக்குகின்றார்.

ஆயினும் வாலியுடன் மோதாத அனுமனின் அஞ்சாநெஞ்சத்தையும் வீரத்தையம் அவன் கடலைத் தாவிய போது நிகழ்ந்தது, இராமதூதனாய் இலங்கைக்குச் சென்றபோது நிகழ்ந்தது, சிங்கரா் வதையின்போது நிகழ்ந்தது, பஞ்சசேனாதிபதிகள் கதை, அக்ககுமாரன்வதை, இந்திரசித்தன் பிரவேசம், வாலில் தீ கொளுவப்பட்ட போது, இராம - இராவணப் போா் நிகழ்ந்த போது நடந்த சம்பவங்களைக் காட்டி அனுமன் **“அஞ்சாநெஞ்சன்”** என விளக்கி நிறுவிக்காட்டியுள்ளாா் ந.சுப்புரெட்டியாா். அனுமனும் இந்திரசித்தும் இராம - இராவணப் போாில் நேருக்குநோ் மோதிக் கொள்கின்றனா்.

## இராமதூதன்

இராமகாதையில் கம்பன் வாக்காகவோ, இராமன் வாக்காகவோ எந்தத் தூதுச் செய்தியும் பதிவு செய்யப்படவில்லை. சீதையைத் தேடி வருவதற்காக சுக்கிரீவனால் தென்திசையில் அனுப்பப்பட்டவா்களில் அனுமனும் ஒருவன். அறிவில் சிறந்த அனுமனை இராமன் தனிமையில் அழைத்து அவனிடம் சீதையின் அங்க அவயங்களை வருணித்துக் கூறுகின்றான். தன்னுடைய கணையாழியை அவனிடம் கொடுத்தனுப்புகின்றான்[80] பெரியாழ்வாா் திருமொழியில் (பா.எண்.310) அனுமன் சீதைக்குக் கூறிய அங்க அடையாளங்களாக ஒரு பதிகம் உள்ளது. அப்பகுதியே கம்பனுக்கு இப்பகுதியை அமைக்கக் கை கொடுத்துள்ளது.

இலங்கையில் இந்திரசித்து நாகபாசத்தால் அனுமனைப் பிணித்துத் தன் தந்தையாகிய இராவணிடம் நிறுத்துகின்றான். அனுமன் இராவணிடம் தன்னைப் பின்வருமாறு அறிமுகப்படுத்திக் கொள்கின்றான்.

**“அல்லியங் கமலமே**
**அனைய செங்கண்ஓா்**
**வில்லிதன் தூதன்யான்”**[81]

இவ்வாறு அனுமன் கூற்றிலேயே கம்பன் அவனை **‘இராம தூதன்’** என அறிமுகப்படுத்துகின்றான். ஒருநிலையில் இராவணன் சினந்து அனுமனைக் கொல்ல முற்படும்போது அருகிலிருந்த வீடணன் தூதனைக் கொல்லல் அறம் அன்று எனத் தடுத்து நிறுத்துகின்றான். இவ்வாறு ந.சுப்புரெட்டியாா், தூதவன் என்ற முறையில் இராமனுக்காக இலங்கைக்குச் சென்ற அனுமன் ஆற்றிய வீரதீரச் செயல்களை இப்பகுதியில்[82] ஆழமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தி இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**இராமபக்தன்**

நம்மாழ்வார் தாம் இயற்றிய திருவாய்மொழியைப் படிப்பவர்கள் இராமகாதையையே விரும்பிப் படிப்பார்கள் என்பதைப் பின்வருமாறு வலியுறுத்திக் கூறியுள்ளார்.

> **“கற்பார் இராமபிரானை அல்லால்**
> **மற்றும் கற்பரோ?”**[83]

இராமபக்தி ஆழ்வார்கள் காலத்தில் இமயம்போல் உயர்ந்து நின்றது. ஆசாரியர்கள் காலத்தில் இமயத்தின் கொடுமுடியாக நின்றது. **‘இராமனது மெய்யும்’** கிருட்டிணனது பொய்யும் நமக்குத் தஞ்சம், **‘இறை இருந்தவன் ஏற்றம் சொல்லுவது இராமாயணம்’** என்னும் திவ்வியப் பிரபந்த ஆட்சிகள் வைணவர்கள் வாக்கில் தாண்டவமாடுகின்றன. இத்தகைய இராம பக்தியில் சிறந்தவனாகக் கம்பன் அனுமனைத் தம் இராமகாதையில் படைத்துக்காட்டியுள்ளான். கம்பனின் இராமன் அழியாமல் எப்போதும் இராமகாதையைச் செபித்துக் கொண்டிருப்பவன் ஆவான். **‘கண்ணிநுண்சிறுதாம்பு’** என்னும் வைணவப் பாசுரத்தைப் பாடிய மதுரகவியாழ்வார்,

> **“தேவுமற்று அறியேன்: குருகூர் நம்பி**
> **பாவின் இன்னிசை பாடித் திரிவனே”**[84]

எனப்பாடியுள்ளார். அவர் இறைவனாகிய திருமாலைப் பாடாமல் திருமாலின் அடியவர்களை இன்னிசைப் பாடல்களால் பாடி மகிழ்ந்தவர். அவரைப் போன்றே இராமபக்தனான அனுமனும் இராமநாமத்தைச் செபித்துக்கொண்டே இன்றும் சிரஞ்சீவியாக நம்மிடையே அழியாமல் வாழ்ந்து கொண்டிருக்கின்றான். அவன் நம் ஊனக் கண்களுக்குப் புலப்படாமல் மனக்கண்ணுக்கு மட்டுமே புலப்படுபவான். மனித உடலில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் ‘இராமநாம சங்கீர்த்தனம்’ பாடும்போதெல்லாம் குதித்துக் கும்மாளம் போட்டு வாழ்ந்து கொண்டிருப்பவனே அனுமன். இத்தகைய இராமபக்தியில் சிறந்தவனாகிய அனுமனின் இராமபக்தியை **‘இராமபக்தன்’**[85] என்னும் இப்பகுதியில் ஆழமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

**குணக்குன்றன்**

**“குணம் என்னும் குன்றேறி நின்றார்”** என்று திருவள்ளுவர் முனிவர்களைக் குறிப்பிடுகின்றார். இத்தொடரை அனுமனுக்கும் பயன்படுத்துவது சாலப் பொருந்தும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இராமகாதையைப் படிப்போர் அனுமனின் அரும்பெரும்

குணங்களால் ஈர்க்கப்படுவர் என்பது உண்மையே. அனுமன் என்னும் கதை மாந்தனைக் கம்பன் எடுத்த எடுப்பிலேயே,

**“தன்பெருங் குணத்தால் தன்னைத்**
**தானலாது ஒப்பிலாதான்”**[86]

என்று பாராட்டுகின்றான். முதன்முதலில் இராமனும் இலக்குவனும் அனுமனைக் கண்டு பேச்சுக் கொடுத்த சிறிது நேரத்திலேயே இராமன் **“இசைசுமந்து எழுந்த தோளுடைய”**[87] அனுமனைச் சரியாக மதிப்பீடு செய்து விடுகின்றான். அவன் தம்பி இலக்குவனிடம்,

**“ஆற்றலும் நிறைவும் கல்வி**
**அமைதியும் அறிவும் என்னும்**
**வேற்றுமை இவனோடு இல்லை**
**யாம்”**[88]

என்று அனுமனின் வீரம், சற்குண நிறைவு, கல்வி அமைதி, ஞானம் என்ற வேற்றுமை இவனிடம் காணப்பெறவில்லை என்பதைக் குறிப்பாக உறுதி செய்து கூறுகின்றான். இத்தகைய குணக்குன்றனாகிய அனுமனின் பண்புநலன்களை ந.சுப்புரெட்டியார் அடக்கம், சமயோசித புத்தி, பொறாமையுடைமை[89] என்னும் பண்புநிலைகளில் பகுத்து இப்பகுதியில் விளக்குகின்றார்.

## இயல் முடிபுகள்

- ந.சுப்புரெட்டியார் இலக்கிய நயம் காணல், இலக்கியச் சுவைகளை எடுத்துக்காட்டுதல், கவிதை நயம் காணல், சொல்லாட்சித் திறனைச் சுட்டிக்காட்டல், உட்பொருள் விளக்கம் கூறல், தத்துவச் சிந்தனைகளை வாழ்க்கைக்குப் பயன்படுமாறு பொருத்திக் காட்டுதல், கற்பனை வளத்தைப் பாராட்டுதல் என்னும் முறைகளில் தம் திறனாய்வுப் பார்வையை வளர்த்துக் கொண்டுள்ளார்.
- அவரது திறனாய்வு மற்றும் ஆய்வு நூல்களில் விளக்கமுறைத் திறனாய்வு, பகுப்புமுறைத் திறனாய்வு, பாராட்டு முறைத் திறனாய்வு முதலான திறனாய்வு முறைகளே காணப்படுகின்றன.
- அவர்தம் நூல்களில் இலக்கிய ஆராய்ச்சி நெறிகளுக்கேற்ப உளவியல், சமுதாயவியல், ஒப்பியல் ஆய்வு அணுகுமுறைகளையும் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிவு செய்துள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் 1988 இல் **‘பாட்டுத்திறன்’** என்னும் கவிதைத் திறனாய்வு நூலினை எழுதியுள்ளார். இந்நூலில் பாட்டுத்திறன், உணர்ச்சியின் தத்துவம், கவிதையின்

தத்துவம், புதுக்கவிதைத்திறன் என்னும் நான்கு பெரும்பிரிவுகளில் கவிதையை நுணுக்கமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்துகின்றது. இப்போக்கு தமிழ்க் கவிதைகளைப் பன்முகப் பார்வையில் ஆய்வு செய்வதற்கு பயன்பாடு உடையது.

- உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்னும் நான்கு கவிதைக் கூறுகளுள் உணர்ச்சியைக் கவிதையின் உள்ளமாகவும், ஏனையவற்றைக் கவிதையின் உடலாகவும் ந.சுப்புரெட்டியார் வெளிப்படுத்தியுள்ளார்.
- உணர்ச்சிகள் பல நாட்கள் வரையில் நீடித்திருக்கும் என்றும், உள்ளக் கிளர்ச்சிகள் புயல்போல் தோன்றி ஒடுங்கிவிடும் என்றும் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார் இன்ப, துன்ப உணர்ச்சிகள் ஒரே விதமான நடத்தையையே தோற்றுவிக்கும் எனக்கூறி, உளவியல் அணுகுமுறையில் கவிதையை அணுகுவதற்கும் வழியமைத்துள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியர் வலியுறுத்தும் இலக்கிய மரபு சார்ந்த மெய்ப்பாட்டியலில் வெளிப்படும் உளவியல் அணுகுமுறை சார்ந்த உள்ளக் கிளர்ச்சிக் கொள்கைகளையும், தமிழரின் இலக்கிய மரபுசார்ந்த உளவியல் உண்மைகளையும் நுட்பமாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.
- மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள், தமிழ் இலக்கண, இலக்கிய நூல்கள், தமிழ்க்கவிஞர்கள் தரும் கவிதை இலக்கணங்களைச் சுட்டிக்காட்டும் ந.சுப்புரெட்டியார், கவிதையின் பாடுபொருள் கவிஞனின் புலன்காட்சி, முருகியல் உணர்ச்சி ஆகியனவற்றைத் தக்க சான்றுப்பாடல்களைக் காட்டித் திறனாய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். உணர்ச்சி, கற்பனை, அணிநலன்கள், தொடை நயங்கள், சுவைகள் அமைய செந்தமிழ்ச் சொற்களால் நல்ல வடிவ ஒழுங்குடன் அமைக்கப்படுவதே கவிதை என்கின்றார்.
- கற்பனையைக் கவிதையின் உயிர்நாடியாகக் குறிப்பிடும் அவர், செய்யுள் படைப்புக்களுக்குப் புலவர்களின் படைப்புக் கற்பனையே அடிப்படை என்கின்றார். தமிழ்க் கவிதையின் யாப்புமுறைகளை அவர் தெளிவுபடுத்தியுள்ளார். தமிழில் தோன்றிய வசன கவிதையின் வளர்ச்சி, உரைநடைக் கவிதையின் செல்வாக்கு ஆகியனவற்றை ந.சுப்புரெட்டியார் **'இருபதாம் நூற்றாண்டின் இலக்கியப் புரட்சி'** எனப் போற்றுகின்றார்.
- தொல்காப்பியரின் அகத்திணைக் கொள்கைகளைத் தமிழ் ஆர்வலர்களும் ஆய்வாளர்களும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காகவே அவர் **'அகத்திணைக் கொள்கைகள்'** என்னும் திறனாய்வு நூலினை எழுதியுள்ளார்.

வடமொழியில் தொனிப்பொருள் விளக்கங்களைக் கூறும் நூல்கள் மிகுதி. தமிழில் தொல்காப்பியரின் மெய்ப்பாட்டியலில் இருபத்தேழு நூற்பாக்களும், பொருளியலில் இரண்டு நூற்பாக்களும் மட்டுமே சுவையிலக்கணம் பற்றியது.

- தமிழ்த் திறனாளிகள் உவமை, உருவகம் போன்ற அணிகளைக் கவிதைகளில் கண்டு சுவைத்து இன்புறுவதைப் போலவே, மேனாட்டுத் திறனாய்வாளர்கள் **‘படிமங்கள்’** என்னும் உருக்காட்சியைக் கவிதைகளில் கண்டு இன்புறுகின்றனர். இத்திறனாய்வுக் கொள்கையை ந.சுப்புரெட்டியார் தமிழில் மிக எளிமையாகத் திறனாய்வு உலகிற்கு அறிமுகப்படுத்தியுள்ளார். அவர்தம் ஆய்வு நூலில் கட்புலன், செவிப்புலன், சுவைப்புலம், நாற்றப்புலம், தொடுபலம், இயக்கப்புலம், மரபு சார்ந்த படிம வகைகளை தெளிவுப்படுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் வடமொழி – தமிழ்மொழிக் கவிதைச் சுவைகளில் காணலாகும் ஒற்றுமை – வேற்றுமைகளை நுட்பமாக ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் புதுக்கவிதைகளை அறிமுகப்படுத்தும் பாங்கு, **‘வழிவழியாக மரபுகெடாது யாப்பு இலக்கணத்தோடு பொருந்திவரும் கவிதைகளினின்றும் மாறுபடும் கவிதைப் படைப்புத்தான் புதுக்கவிதை’** எனப் புதுக்கவிதைக்குத் தரும் விளக்கம், புதுக்கவிதையின் வரலாறு, உருவம், புதுக்கவிதை உத்திகள், உள்ளடக்கப்பொருள்கள் சில இலக்கிய இயக்கக் கொள்கைகளின் அடிப்படையில் புதுக்கவிதைகள் எனப் புதுக்கவிதைத் திறனாய்வினை மிகவும் எளிமையாகவும், தெளிவாகவும் தந்துள்ளார். **‘புதுக்கவிதைத் திறனாய்வு’** புதியது இல்லை என்றதும் ந.சுப்புரெட்டியார் தரும் விளக்கங்கள் புதுமையானவை.
- ஆங்கிலம், வடமொழி, தமிழ்மொழி ஆகிய மொழிகளில் நிலைத்து வாழ்ந்து வரும் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுக் தெளிந்த ந.சுப்புரெட்டியார், அவைகளிலுள்ள கருத்துக்களை கண்ணன் பாட்டுத்திறனை விளளக்குவதற்குப் பயன்படுத்தியுள்ளார். அவர் தொல்காப்பியம் அகத்திணையியலில் குறிப்பிடும் **‘மாயோன் மேய காடுறை உலகமும்’**, புறத்திணையியலில் குறிப்பிடும் **‘பூவைநிலை’** ஆகியனவற்றைச் சுட்டித் தமிழ்நாட்டில் கண்ணன் வழிபாட்டின் தொன்மையை நிறுவுகின்றார்.
- இறைவனுடன் சீவான்மா உறவு, **‘ரஸம்’** குறித்துப் பாரதியார் தரும் விளக்கம், பாரதியார் கண்ணன் பாட்டில் காட்டிய புதுநெறி, தனிப்பாடல்களில் கண்ணன்,

அறிவியல் புலமை ஆகிய நோக்கு நிலைகளில் ந.சுப்புரெட்டியார் கண்ணன் பாட்டினைத் திறனாய்வு செய்துள்ளார்.

- சூதாட்டத்தின் கொடுமை, பெண்பாவம் பொல்லாதது என்னும் மையக் கருத்து நிலைகளில் ந.சுப்புரெட்டியார் பாஞ்சாலி சபதத்தை அறங்கூறும் காவியமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.
- குயில்பாட்டில் **‘கண்டதும் காதல்’** என்ற முறையைப் பின்பற்றி உள்ளார் பாரதியார். குயிலின் முற்பிறப்பு வரலாற்றில் இதனைக் காணமுடிகின்றது.
- **‘பாரதியார் குயில்பாட்டு’** என்ற தம் கற்பனைக் கதைக் காவியத்திற்கு வேதாந்தப் பொருள் விழைகின்றார். இறுதி மூன்றடிகளில் அவர் குயிலைக் கவிதா சக்தி, கவிதைக் காதலி என்று குறியீடாகவும், உள்ளுறையாகவும் கொண்டிருப்பதை ந.சுப்புரெட்டியார் நுட்பமாக ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் அறிவுக்கு விருந்தாகவும், ஆன்மீகப் பெட்டகமாகவும், மனித வாழ்க்கையை வழி நடத்திச் செல்லும் வழிகாட்டியாகவும் கம்பராமாயணத்தில் கம்பனால் படைக்கப்பெற்ற அனுமன் என்ற பாத்திரத்தை விளக்கித் திறனாய்வுப் பார்வையில் **‘அண்ணல் அனுமன்’** என்னும் நூலினை எழுதியுள்ளார்.
- கவிக்கு நாயகன், சொல்லின் செல்வன், சிந்தனைச் செம்மல், விழையும் உருவினன், அஞ்சா நெஞ்சன், இராமதூதன், இராமபக்தன், குணக்குன்றன் எனப் பன்முகப் பார்வையில் ந.சுப்புரெட்டியார் அனுமனை அணுகியுள்ளார்.

~ ~ ~ ~ ~

## குறிப்புகள்

1. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், பக். 39-40.
2. மேலது., பக். 84-85.
3. மேலது., பக். 117-118.
4. மேலது., ப. 154.
5. நன்னூல், நூற். 268.
6. ந.சுப்புரெட்டியார், மு.நூ, பக். 154-155.
7. C.T.Winchuter, Some Principles of Literary Criticism, p. 145.
8. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், ப. 187.
9. பேராசிரியர் (உ.ஆ.), தொல். பொருள். செய். நூற். 238.
10. மேலது., செய். நூற். 1.
11. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், பக். 227-229.
12. மேலது., பக். 247-248.
13. மேலது., ப. 272.

14. மேலது., ப. 273
15. பேராசிரியர் (உ.ஆ.), தொல். பொருள். செய். நூற். 46
16. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், இயல் 38.
17. N.Button, The Criticism of Poetry, Longmans Greens Company Ltd., London, 1968. p. 97.
18. ஆண்டாள் திருப்பாவை, பா.எ. 7.
19. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், ப. 309.
20. மேலது., பக். 310-311.
21. W.H.Hudson, An Introduction to the Study of the Literature p. 95.
22. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள்., செய். நூற். 230.
23. ந.சுப்புரெட்டியார், கவிதைத்திறன், ப. 321.
24. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், ப. 341.
25. மு.மேத்தா, ஊர்வலம், ப. 170.
26. சி.மணி, வரும் போகும், ப. 82.
27. சி.சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், வெங்கடேச ரெட்டிபூபதி, பா.எ. 5.
28. பாரதியார், பாஞ்சாலி சபதம், முன்னுரை.
29. ந.சுப்புரெட்டியார், கவிதைத்திறன், ப. 340.
30. வாலி, பொய்க்கால் குதிரைகள், பக். 72-73.
31. மு.மேத்தா, காத்திருந்த காற்று, பக். 27-29.
32. T.S. Eliot, Introduction to Ezra Pound – Selected Poems, Preface.
33. வாலி, பொய்க்கால் குதிரைகள், ப. 11.
34. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், பக். 360-361.
35. மேலது., ப. 369.
36. த.பீ.செல்வம் (தொ.ஆ.), விதி.புதுக்கவிதையின் தொகுப்பு, ப. 6.
37. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், ப. 407.
38. மேலது., பக். 409-410.
39. இன்குலாப், வெள்ளை இருட்டு, பக். 70-71.
40. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், ப. 488.
41. என்.வைத்தீஸ்வரன். உதயநிழல். ப. 12.
42. மு.மேத்தா, ஊர்வலம். ப. 57.
43. வாலி, பொய்க்கால் குதிரைகள், ப. 157.
44. ந.சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், பக். 471-472.
45. ந.சுப்புரெட்டியார், கண்ணன் பாட்டுத்திறன், ப. 5.
46. மேலது., ப. 7.
47. கண்ணன் பாட்டு, இரண்டாம் பதிப்பிற்கு வ.வே.சு.ஐயர் முன்னுரை.
48. ந.சுப்புரெட்டியார், கண்ணன் பாட்டுத்திறன், பக். 18-19.
49. மேலது., ப. 178.
50. பகவத்கீதை, 18:66
51. ந.சுப்புரெட்டியார், கண்ணன் பாட்டுத்திறன். ப. 206.
52. மேலது., ப. 29.

53. மேலது., ப. 87.
54. மேலது., ப. 113.
55. ந.சுப்புரெட்டியார், பாஞ்சாலி சபதம், ஒரு நோக்கு, பக். 5, 6
56. மேலது., ப. 19.
57. மேலது., ப. 20.
58. ந.சுப்புரெட்டியார், மு.நூ. ப.39
59. பாரதியார், பாஞ்சாலி சபதம், 1:6:52.
60. மேலது., 5:70:300
61. ந.சுப்புரெட்டியார், பாஞ்சாலி சபதம், ஒரு நோக்கு, ப. 117.
62. குறள். 168.
63. பாரதியார், குயில்பாட்டு, பா.எ. 1:22-24.
64. மேலது., பா.எ. 1:27-30.
65. ந.சுப்புரெட்டியார், குயில்பாட்டு ஒரு மதிப்பீடு, ப. 2.
66. ஏ.வி.சுப்பிரமணிய அய்யர், தற்காலத் தமிழ் இலக்கியம் (1942), ப. 46.
67. பாரதியார், குயில்பாட்டு, குயிலின் காதல் கதை, 13-14, 49-50.
68. ந.சுப்புரெட்டியார், குயில்பாட்டு ஒரு மதிப்பீடு, ப. 24.
69. மேலது., ப. 75.
70. கம்பராமா, சுந்தர, ஊர்தேடு. பா.எ. 132.
71. ந.சுப்புரெட்டியார், அண்ணல் அனுமன், ப.14.
72. கம்பராமா. சுந்தர. கடல்தாவு, பா.எ. 26.
73. கம்பராமா. கிட்கிந்தை. அனுமப், பா.எ. 20.
74. மேலது., பா.எ. 28.
75. மேலது., பா.எ. 6-13.
76. கம்பராமா, சுந்தர, ஊர்தேடு. பா.எ. 134.
77. மேலது., பா.எ. 140
78. ந.சுப்புரெட்டியார், அண்ணல் அனுமன். பக். 63-78.
79. மேலது., ப. 79.
80. கம்பராமா. கிட்கிந்தை, நாடவிட்ட. பா.எ. 5–65:67–73.
81. கம்பராமா. சுந்தர., பிணிவீட்டு, பா.எ. 74.
82. ந.சுப்புரெட்டியார், அண்ணல் அனுமன், பக். 114–130.
83. நம்மாழ்வார், திருவாய்மொழி, 7.3:11.
84. மதுர கவியாழ்வார், கண்ணிநுண் சிறுதாம்பு, பா.எ. 2
85. ந.சுப்புரெட்டியார், அண்ணல் அனுமன், பக். 130–142
86. கிட்கிந்தை, அனுமப். பா.எ. 11.
87. மேலது., பா.எ. 18.
88. மேலது., பா.எ. 19.
89. ந.சுப்புரெட்டியார், அண்ணல் அனுமன், பக். 144–160.

# இயல் - 5
# ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள்

## முன்னுரை

தமிழ்ச் சான்றோர்களது தமிழ்ப்பணிகள், இலக்கியம், இலக்கணம், மொழி, மொழியியல், சமயம், தத்துவம் என்ற நிலைகளிலேயே தொடக்க காலத்தில் இருந்து வந்துள்ளன. சமயத்தில் தத்துவமும் தத்துவத்தில் சமயமும் இணைந்திருப்பதைப் போல சமயச்சான்றோர்கள் தமிழ்ப்பக்தி இலக்கியத்தை அணுகியுள்ளனர். ஆயினும் இலக்கியத்தையும் அறிவியலையும் அறிவியல் பார்வையில் இணைத்து நோக்கும் அறிவியல் அணுகுமுறை இல்லையென்றே கூறலாம். இந்நிலையில் காலந்தோறும் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள அறிவியல் சிந்தனைகளை முதன்முதலில் அறிவியல் பார்வையில் திறனாய்வு செய்த பெருமை ந.சுப்புரெட்டியார் அவர்களையே சாரும். ந.சுப்புரெட்டியார் **'நிமிஷகவி'** கே.சுப்பையா நாயுடு அறக்கட்டளையில் 1996 – 97 ஆம் ஆண்டிற்குரிய நிதியுதவியில் **"அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம் சமயம் தத்துவம்"** என்னும் பொருளில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய சொற்பொழிவுகளின் தொகுப்பாக அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம் என்னும் நூல் வெளிவந்திருக்கிறது.

இந்நூலினுள் ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் சிந்தனைகள் குறித்த கருத்தாக்கங்கள் ஆழமாக பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றை விரிவாகவும் விளக்கமாகவும் ஆராயும் நோக்கில் இவ்வியல் அமைகிறது.

## ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் பார்வை வகைதொகை

பொதுவாக ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் பார்வையை 1. அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம் 2. அறிவியல் நோக்கில் சமயம் தத்துவம் என்ற இருபிரிவுகளில் அடக்கலாம். ஆயினும் தமிழ் இலக்கியங்களில் அறிவியல் பார்வை என்று அணுகும் போது அவரது அறிவியல் பார்வையில்,

அ. வானவியல் அறிவு
ஆ. சோதிடக்கலை
இ. பொறியியல் அறிவு
ஈ. உயிரியல் அறிவு
உ. வானியல் அறிவு
ஊ. மருத்துவச்சிந்தனை
எ. கணிதவியல் அறிவு
ஏ. வானொலியும் தொலைக்காட்சியும்

எனப்பகுத்து ஆராயலாம்.

## அ. வானவியல் அறிவு

ந.சுப்புரெட்டியார் பண்டைத் தமிழர் வானநூல் துறையில் அறிவு மிக்கவராக விளங்கினார் என்பதை புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களை சான்று காட்டி விளக்குவதன் மூலம் அறியலாம். கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பானாற்றுப்படை அவருக்கு அடிப்படை அறிவியல் சான்றாக அமைகிறது. விண்ணில் சந்திரன் செல்லும் வழியாகிய வட்டத்தை இருபத்தேழு பிரிவுகளாகப் பிரித்து அப்பிரிவுகளை அறிந்து கொள்ளும் அடையாளமாக **"எறிகடல் ஏழின் மணல் அளவாக"** இருக்கும் விண்மீன்களுள் இருபத்தேழு விண்மீன் தொகுதிகளைக் குறித்து அமைத்தனர் சங்கத்தமிழர் புறநானூற்றில் **"மதிசேய் நாண்மீன் போல்"**[1] எனவரும் பாடலடிக்கு உரையாசிரியர் திங்களைச் சேர்ந்த நாளாகிய மீனை ஒப்ப எனக்கூறும் உரை விளக்கத்தால் இதனை அறிய முடிகின்றது. **குமணனின்** வள்ளல் தன்மையை விளக்க வந்த போது புலவர் இவ்வாறு குறிப்பிடுகின்றார். தொண்டைமான் இளந்திரையனின் விருந்தோம்பல் பண்பினை குறிப்பிட வந்த கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

> **"மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி**
> **மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து**
> **ஆனா விருப்பிற் றானின் றூட்டி**
> **மங்கும் வானத்துத் திங்கள் எங்கும்"**[2]

எனக் குறிப்பிடும் பாடல் அடிகளில் கோள்களின் இயக்கத்தினால் இயற்கை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்னும் அறிவியல் குறிப்பு இடம் பெற்றுள்ளது. வெள்ளி என்பது ஒரு கலைக்கோளாகும். அக்கலை மக்கள் அது தெற்கே விலகியிருந்தால் மழைபெய்யாது என்றும் நம்பிக்கை கொண்டிருந்தனர். இந்த அறிவியல் வழிப்பட்ட நம்பிக்கையை மள்ளனார் என்ற புலவர் பின்வரும் புறநானூற்று பாடலடிகளில் குறிப்பிடுகின்றார்.

> **"வெள்ளி தென்புலத் துறைய விளைவயல்**
> **பள்ளம் வாடிய பயனில் காலை"**[3]

சிலப்பதிகாரம் நாடுகாண் காதையில்,

> **"கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றியும்**
> **விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"**[4]

எனவரும் அடிகளால் சனி என்னும் கோள் பற்றிய அறிவியல் உண்மையை அறியமுடிகிறது. சனி புகைதல் என்பது இடபம், சிங்கம், மீனம் ஆகிய கோள்களோடு மாறுபடுதலாகும். இவற்றுள் சனி தனக்குப் பகையாகிய சிம்மராசியில் புகுந்தால் உலகிற்கு

பெருந்தீங்கு ஏற்படும் என்ற அறிவியல் உண்மையை இளங்கோவடிகள் இப்பாடல் அடியில் உணர்த்துகின்றார்.

கோள்கள் தம்முள் முரண்பட்ட நிலையில் உலகின் பிறபகுதிகளில் மழையில்லையாயினும் குடகுமலையில் மழைபெய்வதும் காவிரியில் நீர்பெருக்கெடுத்து ஓடுவதும் எப்போதும் நிற்காது என்பதை பின்வரும் புறநானூற்று பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

> **“குளமீ னொடு தாட்புகையினும்**
> **மிக்க வானுள் எரிதோன்றியும்”**[5]

இப்பாடலடிகளில் வரும் **எரி, குளமீன், தாள்** என்பன விண்மீன்களின் சிறப்பியல்புகளாகும். இவை முறையே தோன்றுதலும் புகைதலும் உலக வறுமைக்கு காரணங்கள் என்ற கருத்து இப்பாடல் அடிகளில் வலியுறுத்தப்படுகிறது. மேலே எடுத்துக்காட்டிய சங்க இலக்கியக் குறிப்புகளிலிருந்து சங்கத்தமிழர்களின் கோள்கள் குறித்த அறிவியல் சிந்தனையை ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டியிருப்பது அவரது வானநூல் புலமையைக் காட்டுவதாகும்.

## ஆ. சோதிடக்கலை

பண்டைத் தமிழர்கள் சோதிடர்களை **‘கணியா’** என்று அழைத்தனர். புறப்பொருள் வெண்பாமாலை இதனை,

> **“விளைவெல்லாம், கண்ணியுரைப்பான் கணி”**[6]

எனக் குறிப்பிடுகின்றது. இதிலிருந்து பண்டைத்தமிழகத்தில் சோதிடர்கள் இருந்தனர் என்ற உண்மையை அறிய முடிகின்றத. **புலத்துறை முற்றிய கூடலூர்கிழார்** என்பவர் சங்கப் புலவர்களால் சிறப்பித்து போற்றப்பட்டவர். அவர் ஐங்குறுநூறு என்ற தொகை நூலை தொகுத்தவரும் ஆவார். அவர் ஒரு சோதிடராகவே திகழ்ந்தவர். மலை நாட்டிலுள்ள கூடலூரை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தவர். இவர் ஒருநாள் வானத்தில் ஒரு விண்மீன் தீப்பறக்கக் காற்றால் பிதிர்ந்து கிளர்ந்து கீழே வீழ்ந்ததைக் கண்டார். கார்த்திகை, அனுடம், உத்தரம், மிருகசீரிடம் முதலிய விண்மீன்களின் நிலையினையும் அவர் கணித்தார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் **ஏழாம் நாளில் அரசன் உயிர் நீப்பான்** என்று உணர்ந்தார். அந்த மன்னர் தன்னை ஆதரித்த **கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை** என்பவன் ஆவான். இதனால் அவர் பெரிதும் கலக்கமடைந்தார். அவர் நினைத்தவாறே ஏழாம் நாளில் மன்னன் இறந்து விடுகின்றான். இதற்கு அறிகுறியாக யானைகள் துதிக்கையை நிலத்தில் நீட்டி உறங்கின. முரசும் கண் கிழிந்தன.

வெண்கொற்றக்குடையும் வீழ்ந்தது. குதிரைகள் இயக்கமின்றிக் கிடந்தன. இத்தீய நிமித்தங்கள் மன்னனின் இறுதிமுடிவை உணர்த்தின. இதனை அவர் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் பின்வருமாறு வெளிப்படுத்துகின்றார்.

**“ஆடிய அழல் குட்டத்து**
**ஆரிருள் அரை இரவின்**
**முடப்பனையத்து வேர்முதலாக்**
**கடைக்குளத்துக் கயம்காயப்**
**…………………………………………**
**ஒருமீன் விழுந்தன்றால் விசும்பினானே**
**அநுகண்டு, யாமும் பிறரும் பல்வேறு இரவலர்**
**பறையிசை அருவி நன்னாட்டுப் பொருநன்**
**நோயில னாயின் நன்னுமற் றில்லென**
**அழிந்த நெஞ்சம் அடியுளம் பரப்ப**
**அஞ்சினம், எழுநாள் வந்ததன்று இன்றே**
**மைந்துடை யானை கைவைத்து உறங்கவும்**
**……………………………………………………**
**ஒண்டோடி மகளிர்க்கு உறுதுணை யாகித்**
**தன்துணை ஆயம் மறந்தனன் கொல்லோ**
**பகைவர்ப் பிணிக்கும் ஆற்றல் நயசவர்க்கு**
**அளந்து கொடை அறியா ஈகை**
**மணிவரை அன்ன மாஅ யோனே”**[7]

இப்பாடலில் **அழல்சேர் குட்டம்** என்பது **கார்த்திகை** நாளாகும். அக்கினியை அதிதேவதையாக கொண்டமையால் கார்த்திகைக்கு அழல் என்னும் பெயர் ஏற்பட்டது. ஆடு முதல் மீன் என்பது மேடம் முதல் மீனம் வரையுள்ள பன்னிரெண்டு இராசிகளைக் குறிக்கும். அசுவினி முதல் இரேவதி வரை உள்ள இருப்பத்தேழும் நட்சித்திரங்களாகும். இந்த இருபத்தெழு நட்சத்திரங்களையும் பன்னிரெண்டு இராசிக்கும் வகுத்தளித்தலை இப்பாடல் இக்கால சோதிடப் பார்வையில் அழுத்தமாக வலியுறுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.

## அகிலம் (Universe) குறித்த அறிவியல் பார்வை

ந.சுப்புரெட்டியார் அகிலம் குறித்த அறிவியல் பார்வையை தமிழ் இலக்கியச் சான்றுகள் கொண்டு விளக்குகின்றார். வெட்ட வெளியும் அதனுள் அடங்கியிருக்கும் அண்டங்களும் சேர்ந்து தான் அகிலமாகும். கோடிக்கணக்கான விண்மீன் மண்டலங்களும் அதிலிருந்து விடுபட்ட தனித்தனி மண்டலங்களும் வால்மீன்களும் விண்கற்களும் எண்ணற்றவை. அவை கதிரவன் மண்டலத்தைச் சுற்றி சுழன்று கொண்டுள்ளன. இவற்றின் பிறப்பு, மூப்பு, இறப்புப் பற்றிய செய்திகளை இந்த வானநூல் வல்லுநர்கள் அறிந்து வெளிப்படுத்தியுள்ளனர். மாணிக்கவாசகர் இந்த அகிலத்தைப் பற்றிய விஞ்ஞான அறிவை,

**“அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட்டு விரிந்தன”[8]**

என்னும் பாடல் பகுதியில் வெளிப்படுத்துகின்றார். உருண்டு திரண்ட நெருப்புக்கோளமாக வாயு நிலையில் இருப்பது சூரியன். அதனிலிருந்து சிதறி வந்து குளிர்ந்து இறுகி இருப்பது நிலவு. அவ்வாறே சுத்த சைதன்யமாக இருப்பது சிவம். அந்த சிவனிடத்திலிருந்து தோன்றியதே **சடசக்தி.** அந்த சடசக்தி ஐம்பெரும் பூதங்களைக் கொண்டது. அதிலிருந்து எண்ணற்ற அண்டங்கள் தோன்றின. அவை சிவபெருமானுக்கு உடலாக அமைந்தன. ஆதலால் அவற்றை **திருஅண்டம்** என வழங்குவது பொருந்தும். அண்டம் என்பது உருண்டை அல்லது முட்டை வடிவில் இருப்பது. இந்தப் பேரண்டம் எண்ணற்ற கோளங்களைக் கொண்டது. அவற்றை முழுமையாகத் தெரிந்து கொள்ள இயலாது. இந்தக் கோளக்காட்சியை மாணிக்கவாசகர் பின்வரும் பாடலடிகளில் விளக்கிக் கூறுகின்றார்.

**“இல் நுழை கதிரின் துண்அணுப் புரைய**
**சிறிய ஆகப் பெரியோன் தெரியின்”[9]**

கோளங்கள் வானத்தில் மிதந்து கொண்டிருக்கின்றன. சிறியதாகிய அணுவிற்கும் பெரியதாகிய அண்டத்திற்கும் அமைப்பு ஒன்றேயாகும்.

இல்லத்தினுள் காற்றில் மிதந்து கொண்டிருக்கும் தூசிகளைப் போன்றவை பூமி, சந்திரன், சூரியன் முதலிய கோளங்களாகும். தூசிகள் நமக்கு அற்பமானவையாக தோன்றுவது போல சிவனுக்கு அண்ட கோளங்கள் அற்பமானவை. சிவனைப் பற்றிய பேருணர்வு நமக்கு ஏற்படும்போது நம் உடலைப் பற்றியோ, இந்த நிலவுலகத்தைப் பற்றியோ நமக்கு எவ்வித கவலையும் தோன்றாது. இவ்வாறு திருவாசகத்தைக் கொண்டு அண்டத்தின் இயல்புகளை விளக்கும் ந.சுப்புரெட்டியார் நாலாயிரத்திவ்யபிரபந்தம், தேவராப்பாடல்கள், திருவிளையாடற்புராணம் ஆகியனவற்றை சான்றுகள் காட்டியும் தம் அறிவியல் பார்வையை தெளிவுப்படுத்துகின்றார்.

**ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் பாரதியாரின் அறிவியல் சிந்தனை**

ந.சுப்புரெட்டியாரின் அண்டங்கள் குறித்த தன் அறிவியல் பார்வையை பாரதியாரின் பாடல்களைச் சான்றுகாட்டி நுட்பமாக விளக்கியுள்ளார். இதற்குச் சான்றாக பின்வரும் பகுதியை எடுத்துக்காட்டலாம். “பாரதியாரின் பாடல், கண்ணன்

காண்டீபனுக்குக் காட்டிய விசுவரூப தரிசனம் போல், பரவெளியில் உள்ள அண்டகோளங்களை ஒருங்கே காட்டுகின்றது. இந்த அண்ட கோளங்களின் அமைப்பை,

**" விண்டு ரைக்க அறிய அரியதாய்**
**விரிந்த வான வெளியென நின்றனை:**
**அண்ட கோடிகள் வானில் அமைந்தனை:**
**அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை"**
**"மண்ட லத்தை அணுஅணு ஆக்கினால்**
**வருவ தெத்தனை அத்தனை யோசனை**
**கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை:**
**கோல மே! நினைக் காளியென் றேத்துவேன்"**

என்று விளக்குவதுடன் அவற்றிடையே உள்ள தொலைவுகளையும் கற்பனை மூலம் கணக்கிட்டுக் காட்டுவர். ஒரு மண்டலத்தைப் பொடியாக்கி, அந்தப் பொடிகளையும் அணுக்களாக்கினால் வரும் தொகை எவ்வளவோ அவ்வளவு தூரத்தில் பல்வேறு அண்டங்களையும் இயங்கச் செய்கின்றார். இத்தகைய கோலத்தை அமைத்த இறைவனைக் **'காளிதேவியாகக்'** காண்கின்றார். **'சக்திதாசன்'** என்றும் தன்னைக் கூறிக்கொள்கின்றார். கவிஞர் புறமுக ஆற்றல் (Centrifugal force) என்ற இறைவனது ஆணையால் இக்கோள்கள் - அண்டங்கள் - வழிவிலகாமல் சுற்றி வந்து கொண்டுள்ளன. ஒவ்வொரு கோள்களுக்கு இடையிலும் பல்லாயிரக்கணக்கான மைல் இடைவெளிகள் உள்ளன. இந்த இடைவெளியில் தான் சில சமயம் வால்மீன்களையும் (Comets) வீழ்கொள்ளி அல்லது எரிமீன்களையும் (Meteors) காண்கின்றோம்"[10] என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

இவ்வாறு அண்டங்கள் விண்வெளியில் வெவ்வேறு வேகத்தில் சுழன்று கொண்டும் ஒன்றையொன்று சுழற்றிக் கொண்டும் இருக்கும் உண்மையை பாரதியார் நுட்பமாக எடுத்துக் காட்டியுள்ளார். இதனை அவர் ஆண்டவனின் **'அலகிலா அருள் விளையாட்டாகக்'** கொண்டுள்ளார். திரிகூட இராசப்பக்கவிராயர் சாட்டை இல்லாமல் இத்தனை அண்டங்களையும் இறைவன் பம்பரம் போல ஆட்டிவைக்கின்றான் என உவமை மூலம் விளக்குகிறார்.

**"சாட்டி நிற்கும் அண்ட மெலாம்**
**சாட்டை யிலாப் பம்பரம் போல்**
**ஆட்டு விக்கும் குற்றாலத்து**
**அண்ணலார்"**[11]

என ந.சுப்புரெட்டியார் சோதிடவியல் குறித்த தம் அறிவியல் பார்வையை தமிழ் இலக்கியங்களில் இருந்து சான்றுகளைக்காட்டி வெளிப்படுத்தி இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## இ. பொறியில் அறிவு

இக்காலத்தில் தனித்ததொரு அறிவியல் பிரிவாக வளர்ந்து வரும் பொறியியல் அறிவு குறித்த சிந்தனைகளும் தமிழ் இலக்கியங்களில் பரவலாக பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றை ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டி தம் பொறியியல் சார்ந்த அறிவியல் புலமையையும் எடுத்துக்காட்டுகின்றார். பண்டைத் தமிழர்கள் பொறியில் துறையிலும் வல்லுநர்களாக இருந்துள்ளனர் என்று சிந்திக்க இடம் உள்ளது. சீவக சிந்தாமணியில் விசயை ஏறிச் சென்ற மயிற்பொறியும், பெருங்கதையில் சுட்டப்பெறும் யூகியால் செய்யப்பட்ட எந்திரயானையும், புறநானூற்றுப் பாடலில் இடம்பெறும் **“வலவன் ஏவா வான ஊர்தியும்”**[12] இதற்கு சான்றுகள் என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

கம்ப இராமாயணத்தில் காட்டப்பெறும் புட்பக விமானமும் பொறியியல் அறிவினால் அமைக்கப்பட்டதேயாகும். விமானம் பற்றிய கற்பனையாவது இராமயணததில் பதிவு செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனைத் தவிர பழந்தமிழ் இலக்கியங்களில் பொறியியல் அறிவு குறித்த சான்றுகள் இல்லை என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

பொறியியல் அறிவு இன்றைய கட்டிடக் கலைகளிலும் சிற்பக்கலைகளிலும் சிறப்பாகப் பயன்படுத்துவதைப் போலவே அன்றைய அணை கட்டுதல், கோயில் கட்டுதல் முதலானவற்றிலும் சிறப்பாக பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்று ந.சுப்புரெட்டியார் கருதுகின்றார். இதனை **“திருச்சிக்கு அருகேயுள்ள காவிரி நதியின் குறுக்கே கட்டப்பெற்றுள்ள கல்லணை கரியாற்பெருவளத்தான் காலத்தில் கட்டப்பெற்றதாய்க் கூறுகின்றார். தஞ்சைப் பெரிய கோயிலின் மாபெரும் கோபுரமும், கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள கோபுரமும் முறையே இராசராசன்-II காலத்திலும் அவன் திருக்குமரன் இராசேந்திரன்-II காலத்திலும் கட்டப்பெற்றனவாய் வரலாற்றால் அறிகின்றோம். இவற்றால் பொறியியலும் சிற்பக்கலையும் அற்புதமாய் வளர்ச்சி பெற்றுள்ள நிலைகளைக் காணமுடிகின்றது. அவை சுட்டப்பெற்ற தொழில் நுட்பநூல்கள் நமக்குக் கிடைக்கவில்லை”**[13] என அவர் குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கதாகும். இன்று அமெரிக்கா போன்ற மேலைநாடுகளிலும் மும்பை, கல்கத்தா, சென்னை போன்ற பெரும் நகரங்களிலும் விண்ணைமுட்டும் பல்லடுக்கு மாளிகைகள் கட்டப்படுவதற்கு இவை முன் ஆதாரங்களாக விளங்குகின்றன. கம்ப இராமயணத்தில் இலங்கை மாநகரில் பல்லடுக்கு

மாளிகைகள் இருந்தன என்பதற்கு யுத்தகாண்டத்தில் ஊர்தேடு படலத்தில் ஒரு பாடல் சான்றளிக்கின்றது. அப்பாடல் வருமாறு

**"மெச்சபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியில்என்**
**இச்சையினுள் சென்மா எடுக்கவா – மச்சாகூர்**
**மாகோலா சிங்காவா மாராமா ராமாரரா**
**மாகோபா லாமா லாய்"**[14].

இயற்கையாக பொன்னால் செய்யப்பெற்ற மணிகள் பதிக்கப்பெற்றுள்ள மேகமண்டலத்திலும் மேலாக உயர்ந்து திங்கள் மண்டலத்தையும் எட்டும் மாடமாளிகைகள் இப்பாடலில் குறிக்கப்பெறுகின்றன. அக்காலத்து கட்டடக் கலை பற்றிய பொறியியல் அறிவை இதனால் அறியமுடிகின்றது. இவ்வாறு பொறியியல் அறிவும் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றிருப்பதை ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டி தம் பொறியியல் (சிந்தனையை) அறிவை வெளிப்படுத்தியுள்ளார்.

### ஈ. உயிரியல் அறிவு

உயிரியல் (Biotogy) சிந்தனைகள் தமிழ் இலக்கியங்களில் மிகுதியாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளன. அவற்றை இனங்கண்டு வெளிப்படுத்தும் சிந்தனை தமிழார்வாளர்களிடம் இல்லை. முதன்முதலில் தமிழ் இலக்கியங்களைப் பன்முகப் பார்வையில் அணுகிய ந.சுப்புரெட்டியார் தமிழ் இலக்கிங்களில் காணலாகும் உயிரியல் அறிவையும் எடுத்துக்காட்டிச் சிந்திக்க வைக்கின்றார்.

டார்வினின் **'கூர்தலறக் கோட்பாடு'** (Theory of Evolution) என்னும் உயிரியல் கொள்கை, உயிர்களின் தோற்றம் மற்றும் வளர்ச்சி குறித்ததாகும். இக்கொள்கையில் அறிவியல் அறிஞர்களிடம் ஒருமித்த கருத்து வெளிப்பாடு இல்லை. ஆயினும் இக்கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். மாணிக்கவாசகரின் திருவாசகம் சிவபுராணத்தில் இக்கோட்பாடு குறித்த சிந்தனை பயின்று வருவதை ந.சுப்புரெட்டியார் பின்வருமாறு எடுத்துக்காட்டுகின்றார்.

**"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்னவித் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்:"**[15]

என்பது அப்பாடலடியாகும்.

## அறிவு மரபு அணுக்கள் வாயிலாகப் பரவுதல்

அறிவு மரபு அணுக்கள் வாயிலாகப் பரம்பரை பரம்பரையாகப் பரவும் என்ற உயிர்வேதியில் அறிவை வள்ளுவர் நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளார்.

வள்ளுவர் பெருமான் பல்வேறு நிலையான உண்மைகளை மருந்து மாத்திரை போல் சிறிய குறள் வடிவில் தந்துள்ளார். அவற்றுள் ஒன்று

**"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து"**[16]

என்பது இக்குறளின் கருத்து. பிறப்பியல் உண்மைப்படி பொருந்தாத கூற்றாகின்றது. வள்ளுவர் கூற்றினைப் பொய்யென்று அவ்வளவு எளிதாகவும் கூறிவிட முடியாது.

அறிவு மரபு வழியாய் இறங்கும் என்று ஒப்புக்கொள்ளாமல் சூழ்நிலையால் - அடுத்த தலைமுறைக்கு முந்திய தலைமுறை அளிக்கும் வாய்ப்புகளால் - கடத்தப்பெறுகின்றது என்று கொண்டால் இவ்வுண்மை பொருந்தும். நாம் நம்முடைய குழந்தைகளுக்குக் கடத்துவன நிறக்கோல்களுள் (Chromosomes) நம்மிடம் நேரிடும் மாற்றங்கள் யாவும் நம்முடைய கரு – அணுக்களுடன் (Germ –Cell) சேர்ந்திருக்க வேண்டும்.

## மக்களிடம் பண்புகள் உருவாதல்

**'தாயை தண்ணீர்த் துறையில் பார்த்தால் பெண்ணை வீட்டில் பார்க்க வேண்டியதில்லை'** என்ற பழமொழி, மரபுவழியும் சூழ்நிலையும் இடைவிடாமல் இடைவினை புரிவதனால் மக்களிடம் பண்புகள் உருவாகின்றன என்னும் கருத்தை புலப்படுத்துகிறது. மரபு வழி தவறும் போது அதனை சூழ்நிலை ஈடுசெய்யும். இதனை வள்ளுவர்

**"தக்கார் தகவிலர் என்ப அவரவர்**
**எச்சத்தாந் காணப் படும்"**[17].

எனக்குறிக்கிறார்.

## நிறக்கோல்கள்

வெவ்வேறு இனத்தை சேர்ந்த இரு விலங்குகளுக்கிடையே நிறக்கோல்கள் பொருந்தா நிலை ஏற்படுகின்றது என்பது உயிரியல் உண்மையாகும். இந்த உயிரியல் உண்மையை ந.சுப்புரெட்டியார் கபிலரகவலின் பின்வரும் பாடலைக் கொண்டு வெளிப்படுத்துகின்றார்.

**"பெற்றமும் எருமையும் பிறப்பினிய வேறே**
**அவ்விரு சாதியில் ஆண்பெண் மாறிக்**
**கலந்து கருப்பெறல் கண்ட துண்டோ?**
**ஒருவகைச் சாதியாம் மக்கட் பிறப்பில்**
**இருவகை யாகதிர் இயம்பிய குலத்து**
**ஆண்பெண் மாறி அணைதலும் அணைந்தபின்**
**கருப்பொறை உயிர்ப்பதும் காண்கின் றினீரோ?**
**எந்நிலத் தெத்தவித் திடப்படு கின்றதோ**
**அந்நிலத் தத்தவித் தங்குரித் திடுமலால்**
**மாறிவே றாகும் வழக்கமொன் நிலையே"**[18]

இப்பாடலடிகளில் ஆண்காளை மாடும், பெண் எருதும் இணைவதால் பிறக்கும் மற்றொரு உயிரின் நிறக்கோல்களின் பொருந்தா நிலையை எடுத்துக் காட்டி இருக்கின்றார்.

**மாண்ட இனத்தின் மலடற்ற தன்மை**

கபிலரகவல் மற்றொரு அறிவியல் உண்மையையும் நுட்பமாகப் புலப்படுத்துகின்றது. மனித இனம் அனைத்தும் ஒரே பிரிவினை சார்ந்தது என்பதே அந்த உயிரியல் உண்மையாகும். ஒரு கருநிறப் பெண்ணிற்கும் வெந்நிற ஆணிற்கும் பிறக்கும் குழந்தைகள் மலடற்று காணப்படும். கோழியும் வாத்தும் வெவ்வேறு இனத்தை சாாந்தவையாதலால் அவற்றின் கலவையில் சந்ததியே இல்லாமல் போகக்கூடும். அப்படியே தோன்றினாலும் அந்த சந்ததிகள் மலடாகவே இருக்கும் என்றும் அறிவியல் உண்மையயை பின்வரும் கபிலரகவல் பாடலில் பதிவு செய்யப்பட்டிருப்பதை ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டுகிறார்.

**"பூசுரர் புணர்ந்து புலைச்சியர் ஈன்ற**
**புத்திர ராயினோர் பூசுரர் அல்லரோ?**
**பெற்றமும் எருமையும் பேதமாய்த் தோன்றல்போல்**
**மாந்தரில் பேதமாம் வடிவெவர் கண்டுளார்?**
**வாழ்நாள் உறுப்புமெய் வண்ணமோ டறிவினில்**
**வேற்றுமையாவதும் வெளிப்பட லன்றே"**[19]

இவ்வாறு ந.சுப்புரெட்டியார் பல்வேறு இலக்கிய சான்றுகளை எடுத்துக்காட்டி அவற்றில் பதிவு செய்யப்பட்டுள்ள உயிரியல் கருத்துக்களை நுட்பமாக எடுத்துக் காட்டியிருப்பது அவரது உயிரியல் சார்ந்த அறிவியல் உண்மைக்கு சான்றளிக்கின்றது.

**உ. வானியல் (Meterology) அறிவு**

வானியல் சார்ந்த அறிவியல் சிந்தனைகளும் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன. அக்காலத் தமிழர்கள் வானியல் துறை சார்ந்த அறிவைத் தம் அனுபவங்கள்

வாயிலாகப் பெற்றிருந்தனர் என்பதை ந.சுப்புரெட்டியார் பல்வேறு தமிழ் இலக்கியச் சான்றுகளைச் சுட்டி விளக்குகின்றார்.

மேலே செல்ல செல்ல காற்று எடையற்று எளிதாக இருக்கும் என்பது இன்றை விண்வெளி ஆராய்ச்சியால் பெறப்படும் அறிவியல் உண்மையாகும். கடல்மட்ட அளவில் இருப்பது மைல் உயரத்தில் காற்று (1/1000) ஆயிரத்தில் ஒரு பங்காகிவிடுகின்றது என்பது விண்வெளி ஆராய்ச்சி உண்மையாகும். இந்த உண்மையை கம்ப இராமாயணம் சுட்டுகின்றது. இலங்கையிலுள்ள மாடமாளிகைகள் உயர்ந்து வானுலகை எட்டும்படியாக உள்ளது. மேருமலையையும் வருத்தக்கூடிய பேராற்றல் கொண்ட காற்று அந்த உயரத்தில் தென்றலாக வீசுவதாக கம்பர் பாடுகின்றார். மிக்க வலிமை உடைய காற்றுக் கடவுளும் (வாயு பகவான்) இராவணனிடம் கொண்ட அச்சத்தால் தென்றலாக வீசுவதாக கம்பன் பாடிய கற்பனையில் இந்த வானியல் உண்மை புலப்படுகின்றது. அப்பாடல் வருகின்றது.

**“நாகா லயங்களொடு**
**நாகர்உல கும்தம்**
**பாகார் மருங்குதுயில்**
**என்னஉயர் பண்ப:**
**ஆகாயம் அஞ்சஅகன்**
**மேருவை அணுக்கும்**
**மாகால் வழங்குகிற சிறு**
**தென்றல்வரு கின்ற”**[20]

## ஊ. மருத்துவ இயல் அறிவு

தமிழ் இலக்கியத்தில் ஆங்காங்கே மருத்துவ இயல் பற்றிய செய்திகளையும் மருத்துவ சிகிச்சை முறைகளையும் காண முடிகின்றது. திருக்குறளில் மருந்து என்னும் அதிகாரத்தில் நோய்கள் ஏற்படுவதற்கான காரணங்களையும் அவற்றைத் தடுக்கும் முறைகளையும் அவை வந்தால் தவிர்க்கும் வழிமுறைகளையும் குறித்த அறிவியல் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**“நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்”**[21]

என்பது வள்ளுவம் நோய் வருவதன் காரணத்தையும் நோய் இன்னதென்பதையும் ஐயமறத் துணிந்து மருந்து செய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய முறைகளை மேற்கொண்டு அந்நோயைப் போக்க வேண்டும் என்பது பண்டைய மருத்துவ முறையாகும். இன்றைய மருத்துவ முறையும் இதனை ஒட்டியே உள்ளது.

அங்ஙனமே, நோயற்றவனின் வயது முதலியவற்றையும், அவனுடைய வேதனை, வலி முதலியவற்றையும், காலவேறுபாடுகள் முதலியவற்றையும் நோக்கிச் சிகிச்சை செய்தல் வேண்டும். இதனை

**"உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல்"**[22]

என்று குறிப்பிடுகிறார் வள்ளுவர்.

## காந்தச் சிகிச்சை முறை

கண் போன்ற நுட்பமான உறுப்புகளில் இரும்புத்துாள் புகுந்து கொண்டால் காந்தத்தைக் கொண்டு இக்காலத்தில் சிகிச்சை அளிக்கின்றனர். பண்டைத் தமிழரும் இம்முறையை அறிந்திருந்தனர் என்பதற்கு கம்ப இராமாயணம் சான்றளிக்கின்றது. இராவண வதம் முடிந்த பின்னர் தயரதன் உம்பர் உலகிலிருந்து மீண்டும் நிலவுலகிற்கு வந்து இராமனுடன் உரையாடும் போது,

**"அன்று கேகேசயன் மகள்கொண்ட**
**வரம்எனும் அயில்வேல்**
**இன்று காறும்என் இதயத்தின்**
**இடைநின்ற தன்னைக்**
**கொன்று நீங்கலது இப்பொழுது**
**அகன்றதுஉன் குலப்பூண்**
**மன்றல் ஆகமாம் காந்தமா**
**மணியின்று வாங்க"**[23]

என்று தன் மகிழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார்.

அன்று கைகேயி தன் இதயத்தில் பாய்ச்சிய வரம் என்னும் கூரியவேல் இன்று தசரதன் இராமனை தழுவியதனால் அவன் மார்பாகிய காந்தம் அதனை வாங்கிக் கொண்டது என்று குறிப்பிடுகிறது. இதில் நவீன காந்தச் சிகிச்சை முறை பற்றிய குறிப்பு இடம் பெற்றிருப்பதை அறியலாம். இவ்வாறு ந.சுப்புரெட்டியார் தம் மருத்துவ அறிவியல் சார்ந்த சிந்தனைகளையும் கருத்துக்களையும் தமிழ் இலக்கிய சான்றுகளைக்காட்டி வெளிப்படுத்தியிருப்பது சிந்திக்க தக்கதாகும்.

## எ. கணிதவியல் அறிவு

தமிழ்க் கவிதைகளில் கணிதவியல் சார்ந்த உண்மைகள் அன்றும் இன்றும் அதிகமாக பதிவு செய்யப்படவில்லை என்றே குறிப்பிடலாம். ஆயினும் கணித உண்மையை கற்பனை கலந்த உண்மையாகவும் குறிப்பிடலாம் என்பதற்கு கம்பராமாயணப்

பாடல்கள் சான்றளிக்கின்றன என்கிறார் ந.சுப்புரெட்டியார் கம்பராமாயணத்தில் யுத்த காண்டத்தில் மூல பல படைகள் இலங்கையில் வந்து கூடுகின்றன. அனைத்து திசைகளிலும் எண்ணற்ற அரக்கர்கள் இணைகின்றனர். அந்த சேணையின் அளவை கணக்கிட்டுக் கூறுமாறு கேட்க அதற்குத் தூதுவர் இச்சேனையின் **“ஆயிரம் வெள்ளம்”**[24] என உரைப்பர் பித்தர் கணித நூலிலுள்ள உச்ச எண்ணே இதனை அளவிட்டுக் கூறும் என்கின்றனர். இதில் வெள்ளம் என்ற அளவு குறிக்கப்படுகிறது. இடைக்காலத்தில் வந்த புகுந்த வடமொழி எண்களையும் தமிழ் எண்களையும் பிங்கலந்தை என்ற நூல் (நிகண்டு) பின்வருமாறு குறிப்பிடுகிறது.

**“ஏகம் எண்மடங்கு கொண்டது கோடி”**
**“கோடி எண்மடங்கு கொண்டது சங்கம்”**
**“சங்கம் எண்மடங்கு கொண்டது விந்தம்”**
**“விந்தம் எண்மடங்கு கொண்டது குமுதம்”**
**“குமுதம் எண்மடங்கு கொண்டது பதுமம்”**
**“பதுமம் எண்மடங்கு கொண்டது நாடு”**
**“நாடு எண்மடங்கு கொண்டது சமுத்திரம்”**
**“சமுத்திரம் எண்மடங்கு கொண்டது வெள்ளம்”**[25]

இம்முறைப்படி நோக்கினால் எட்டாம்தானத்தது கோடி, பதினைந்தாம்தானத்தது சங்கம். இருபத்திரண்டாம் தானத்தது விந்தம். இருபத்தொன்பதாம்தானத்தது குமுதம். (ஆம்பல்). முப்பத்தாறாம் தானத்தது பதுமம் (தாமரை). நாற்பத்து மூன்றாம் தானத்தது நாடு (குவனை). ஐம்பதாம் தானத்தது சமுத்திரம் (நெய்தல்). ஐம்பத்தேழாம் தானத்தது வெள்ளம் என்பன புலனாகும். இதனை இக்காலக் கணக்குப்படி $10^6 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 + 7 = 10^{55}$ என்று எழுதலாம் என்கிறார் ந.சுப்புரெட்டியார். இதனை கம்பன்,

**“ஆனை ஆயிரம் தேர்பதி னாயிரம்**
**அடல்பரி ஒருகோடி**
**சேனை காவலர் ஆயிரம் பேர்படின்**
**கவந்தம் ஒன்று எழுந்தாடும்**
**கானம் ஆயிரம் கவந்தம் நின்று ஆடிடின்**
**கவின்மணி கணில் என்னும்**
**ஏனை அம்மணி ஏழரை நாழிகை**
**ஆடியது இனிதன்றே”**[26]

என பாடுவதில் இருந்து அறிய முடிகிறது.

ஆயிரம் யானைகள், பதினாயிரம் தேர்கள், ஒரு கோடி குதிரைகள், ஆயிரம் சேனைக்காவலர்கள் இறந்தால் தலையில்லாத பேய் ஒன்று எழுந்து ஆடும்.

ஆயிரம் கவந்தங்கள் ஆடினால் இராமனது கோதண்டத்தில் கட்டப்பட்டுள்ள அழகிய மணி ஒரு முறை கணில் என்று ஒலிக்கும். ஆனால் இராமனது மூலபலவதைக் கூறி அம்மணி தொடர்ந்து ஏழரை நாழிகை ஒலித்தது என்கின்றான் கம்பன். இதிலிருந்து அழிந்துபட்ட இராவணனது மூலபல படையின் அளவினை ஓரளவு அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு ந.சுப்புரெட்டியார் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள கணிதவியல் சிந்தனைகளையும் தம் அறிவியல் பார்வையின் கூர்மையினால் எடுத்துக் காட்டி விளக்குகின்றார்.

## ஏ. வானொலியும் தொலைக்காட்சியும்

பாரதிதாசன் பாடல்களில் ஒன்றை சான்று காட்டி இன்றைய வானொலி மற்றும் தொலைக்காட்சி பற்றிய தம் அறிவியல் சிந்தனையை வெளிப்படுத்துகின்றார். வானொலி நிலையத்திலுள்ள உள்ளங்கை அளவே உள்ள ஒலிவங்கியின் (Mike) வாய், மண்ணைத்தின்ற கண்ணனின் வாய் போல உலகு அனைத்தையும் உண்டு உமிழும் வாயாய் அமைந்துள்ளது. அவ்வாறே தொலைக்காட்சி நிலையத்திலுள்ள மனிதனின் கண்ணைவிட மிகவும் சிறியதாகிய ஒளி மின்சாரக்கலம் என்னும் மாயக்கண் இந்த உலகம் முழுவதையும் ஊடுருவியார்க்க வல்லதாக உள்ளது என்று பாரதிதாசனின் கவிதையொன்றில் வானொலி, தொலைக்காட்சி பற்றிய அறிவியல் உண்மை பதிவு செய்யப்பட்டிருப்பதை சுட்டிக்காட்டுகின்றார்.

வானொலியும், தொலைக்காட்சியும் மின்னணுவியல் தொடர்பியல் சாதனங்களாகும். வானொலி செவிப்பயன் கொடுப்பதாகவம், தொலைக்காட்சி கண்ணுக்கும் செவிக்கும் விருந்தளிப்பதாகவும் அமைந்திருக்கின்றன. இதனை பாரதிதாசன் தம் சஞ்சீவி பர்வதத்தின் சொல் கொண்டு குப்பனும் வள்ளியும் சஞ்சீவி பர்வதம் என்ற மலையில் சந்திக்கின்றனர் என்கிறார். அந்த மலையில் இருமூலிகைகள் இருப்பதாக கற்பனை செய்கின்றார். அவற்றின் பெருமையை குப்பன் வள்ளிக்கு பின்வருமாறு கூறுகின்றான்.

> **"ஒன்றைத்தின் றால்இவ் உலகமக்கள் பேசுவது**
> **நன்றாகக் கேட்குமற் றொன்றைவா யில்போட்டால்**
> **மண்ணுலகக் காட்சிஎலாம் மற்றிங் இருந்தபடி**
> **கண்ணுக் கெதிரிலே காணலாம்"**[27]

கவிதையின் இந்த வரிகளை படிக்கும் போது நமக்கு வானொலியும், தொலைக்காட்சியும் நினைவிற்கு வருகின்றது. ஒரு மூலிகை வானொலியையும், மற்றொரு மூலிகை தொலைக்காட்சியையும் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

## ந.சுப்புரெட்டியாரின் விண்வெளி ஆய்வுகள்

இயற்கையின் நியதி, இயற்கையின் விதிமுறைகளே **'ஊழ்'** ஆகும். மனித ஆற்றலைக் கடந்து நிற்கும் அதனை எளிதில் மாற்றிவிட இயலாது. **'அறிவியல்'** என்பது வலிமைமிக்க ஊழுடன் போராடி அதனை வெற்றி பெறுவது ஆகும்.

## மனித வாழ்க்கையில் அறிவியல்

இத்தகைய வலிமைமிக்க ஊழுக்கும் அறிவியலுக்குமிடையே தொடர்ந்து நடைபெற்றுவரும் போராட்டமே மனித வாழ்க்கையாகும். இப்போராட்டத்தில் மனிதன் வெற்றிபெறும் அளவைப் பொறுத்தே அவன் வாழ்க்கையில் முன்னேற்றம் அடைய இயலும். இத்தகைய அறிவியல் முன்னேற்றத்தால் தான் மனிதநாகரிகம் வளர்சிதை மாற்றங்களைப் பெறும். இன்று ஐம்பதுகோடி மைல்களுக்கு அப்பாலிருக்கும் செவ்வாய் மண்டலத்தில், ஆளில்லாத விண்கலப்பொறி அதனைச் சுற்றி வருவதும், அங்கிருந்து செய்திகளைப் புகைப்பட விளக்கங்களுடன் பூமிக்கு அனுப்புவதும், அங்குள்ள மண்ணை அகழ்ந்தெடுப்பதுமான செயல்களில் ஈடுபட்டிருப்பதும் ஊழியலுக்கும் அறிவியலுக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தில் அறிவியலின் உச்சமான வெற்றிக்கட்டம் என்றே கூறலாம். இதைத்தான் **'ஊழிற் பெருவலி யாவுல'** எனக்கூறிய திருவள்ளுவர் **'ஊழையும் உப்பக்கம் காண்பர்'** எனக் குறிப்பிட்டார். இங்ஙனம் ஊழை உப்பக்கம் காணும் மனித முயற்சிகளில் தலையாயது தொலை உலகங்களைச் சென்று காணவேண்டும் என்னும் விருப்பமாகும். இந்த விருப்பம் ஒரு காலத்தில் கனவாகவும் கற்பனையாகவும் இருந்தது. இன்று நனவாக மலர்ந்துள்ளது. இதனை விளக்கி ந.சுப்புரெட்டியார் 1976 இல் **'தொலை உலகச் செலவு'** என்னும் நூலினை எழுதியுள்ளார். இந்நூலினைத் திருநெல்வெலி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் வெளியிட்டுள்ளது.

## விண்வெளிப் பயணக் கனவுகள்

விபுவான (எங்கும் நிறைந்த) ஆண்டவன் ஞானவடிவம் கொண்டவன் என்றும், அவ்வாறே அணுவளவான ஆன்மாவும் ஞானவடிவுடையது என்றும் வேதாந்த நூல்கள் கூறுகின்றன. ஆண்டவன் வினைகளுக்கு அப்பாற்பட்டவன் ஆனால் ஆன்மாவோ வினைகளினால் கட்டுண்டு இயங்குவது. ஞானவடிவான இந்த ஆன்மாவிற்கும் ஒரு ஞானம் உண்டு. அதுவே **'தர்மபூத ஞானம்'** ஆகும். ஆண்டவன் அருள் இருந்தால் தியானத்தினால் மனம்

ஒன்றித் தர்மபூத ஞானம் தோன்றி, ஆன்மா ஆண்டவனையே காணும் ஆற்றலைப் பெறும். ஞானிகள் ஆன்மாவின் துணையினால் இந்த ஆற்றலைப் பெற்றுள்ளனர். அவர் கால எல்லையைக் கடந்து (Time Limit) நடந்ததையும் நடக்கப் போவதையும் முற்கூறும் ஆற்றலைப் பெற்றவர்கள். ஞானிகளைப் போன்றே விஞ்ஞானிகளும் தம் ஆய்வுகளால் இடத்தைக் கடந்து (Space Limit) பல உண்மைகளை வெளிப்படுத்தும் ஆற்றலுடையவர்கள். அதனால் தான் இன்று சந்திர மண்டலம், செவ்வாய் மணடலம் போன்ற இடங்களுக்கு மனிதர்கள் இல்லாமல் விண்கலங்களை அனுப்பி, அதன் தன்மைகளை அறியும் ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்று வருகின்றன. சில ஆண்டுகளுக்கு முன்னர் ஆளுள்ள விண்வெளிப் பயணங்களை மேற்கொண்டு அம்புலியாகிய சந்திரனுக்குச் சென்று திரும்பினர். அண்மையில் செவ்வாய்க்கு ஆளில்லா விண்வெளிக் கப்பல்களை அனுப்பி வெற்றி கண்டு வருகின்றனர். செவ்வாய்க்கு உயிர் உண்டா? என்னும் ஆய்வும் நடைபெற்று வருகின்றது. இதனை நோக்கும்போது நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் குறிப்பிடும்,

**“பாலாழி நீகிடக்கும் பண்பையாம் கேட்டேயும்**
**காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் - நீலாழிச்**
**சோதியாய்! ஆதியாய்! தொல்வினையெம் பால்கடியும்**
**நீதியாய்! நிற்சார்ந்து நின்று”**[28]

என்னும் பாடலே நினைவுக்கு வருகின்றது.

இவ்வாறே தமிழ்க்கவிஞர்கள் பலரும் பல சமயங்களில் தம்மை அறியாமல் கற்பனையில் தொலை உலகங்களை மானசீகமாகக் கண்டு மகிழ்ந்துள்ளனர். இந்த நீள்நோக்குப் பார்வையில் பாரதியாரும்,

**“பூமிக் கெனய னுப்பினான் - அந்தப்**
**பூதமண் டலத்திலென் தம்பிக ளுண்டு”**[29]

என்று பூதமண்டலத்தைச் சிந்தித்துப் பாடியுள்ளார். எதிர்காலத்தில் மனிதன் அனைத்துக் கோள்களுக்கும் சென்று வரும் நிலைமைகளை ஆராய்ந்து வருகின்றான். இவ்வாறு மனித மனம் மேற்கொள்ளும் செயல்கள், ஆய்வுகள் ஆகியன பொதுமக்களுக்கும் பள்ளிச் சிறுவர்களுக்கும் அறிந்து கொள்ளும் வாய்ப்பினை அளிப்பது அறிஞர்களின் கடமையாகும். இதற்குப் பல நுட்பமான அறிவியல் உண்மைகளையும் எளியமுறையில் விளக்கும் நூல்கள் வெளிவருதல் வேண்டும் என்னும் நோக்குடையவர் ந.சுப்புரெட்டியார்.

**“நீலவான் முகட்டை முட்டித்**

**தாக்கிடு வோமே - இந்த**
**நீண்டவெளி தன்னைச் சுற்றிக்**
**கொள்ளை கொள்வோமே"[30]**

என்பது கவிஞனின் துணிகரக் கனவாகும். இன்று அறிவியல் துறையில் மின்சார ஊழி, அணுஊழி ஆகியனவற்றைக் கடந்து, விண்வெளி ஊழியே சிறப்புக் கவனத்தைப் பெற்றுள்ளது.

## விண்வெளிப் பயணக் கதைகள்

பறவைகள் வானில் பறப்பதைக் கண்டு மனிதன் கண்ட விண்வெளிப் பயணக் கனவுகள் பல நாடுகளிலும் எழுதப்பெற்ற கதைகளில் மேலோட்டமாக வெளிப்பட்டு நிற்கின்றன.

**ஃபிர்டௌஸி** என்ற நாஜிக் கவிஞர், கைகஸ் என்ற பாரசீக மன்னன் விண்வெளியில் பறக்க முயன்றதைப் பற்றி கதையெழுதியுள்ளார்.

கிரேக்கக் கதையொன்றில் டௌடால்பின் மைந்தன் ஐக்கேரஸ் என்பவன் கவலையே இல்லாத மனிதன் ஆவான். அவன் சிறகுகளால் ஆன இறக்கைகளை அரக்கினால் தன் புயத்தில் ஒட்டிக்கொண்டு விண்வெளியில் பறந்தான். அவன் பதற்றத்துடன் கதிரவன் அருகில் பறந்ததால், கதிரவன் வெப்பத்தால் அரக்கு உருகி இறக்கைகள் கழன்று பூமியில் விழுந்து இறந்தான் எனக் கூறப்பெற்றுள்ளது. இக்கதை கதிரவனின் அருகிலுள்ள புதன் கோளுக்குச் சென்றுவரத் திட்டமிடும் பயணிகளை எச்சரிக்கின்றது. மனிதன் உடல் பறக்கும் தகவமைப்புக் கொண்டதன்று. ஆயினும் அவன் மண்டையிலுள்ள நாற்பத்தொன்பது அவன்சு எடைக்கு சற்று மேற்பட்ட மூளையில் அனைத்து நுணுக்கங்களையும் சிந்திக்கும் ஆற்றல் உள்ளது. அந்த ஆற்றலினால் இயற்கையை வென்ற மனிதன் காணாதது உலகளவு ஆகும்.

மனிதனிடம் இயல்பாக அமைந்துள்ள இயல்பூக்கங்களில் ஆர்வத்தூண்டலும் (Instinct of Curiosity) ஒன்றாகும். அவனிடம் காணப்பட்ட பிற உலகங்களுக்குச் சென்று வர வேண்டும் என்னும் துடிப்பை பல நாடுகளில் வழங்கப்பெறும் கற்பனைக் கதைகளிலும் நூல்களிலும் காணமுடிகின்றது. இந்த அகிலத்தில் (Universe) பூமியைப் போன்ற பிறகோள்களும் இருப்பதை அறிந்து கொண்ட மனிதன் அவற்றைக் காணும் ஆர்வத் தூண்டலில் ஈடுபட்டான். இதனால் விண்வெளிப் பயணம் குறித்த கற்பனைக் கதைகள் கிரேக்க நூல்களில் மிகுதியும் இடம்பெற்றன.

சீனர்கள் திங்களிடமிருந்து வந்ததாகச் சீனநாட்டுக் கதைகள் கூறுகின்றன. இந்திய நாட்டு இதிகாசங்களும் **'சூரிய**

**வம்சத்து அரசர்கள்'**, **'சந்திரவம்சத்து அரசர்கள்'** என்றெல்லாம் பேசுகின்றன. புறநானூறு குறிப்பிடும் **'வலவன் ஏவா வான ஊர்தியும்'** இராமாயணம் கூறும் புட்பக விமானமும், சீவக சிந்தாமணி காட்டும் விசயை ஊர்ந்த மயிற்பொறியும் அறிவியல் வன்மையைக்[31] காட்டுவன.

மேனாட்டு அறிஞர்களின் நூல்களிலும் இத்தகைய கற்பனைக் கதைகள் உள்ளன. பிளேட்டோ, சிசரோ, புளூட்டார்ச் ஆகியோர் விண்வெளிப் பயணக் கதைகளை எழுதியுள்ளனர். சிறந்த வானவியல் சிந்தனையாளரான **'கெப்ளர்'** (Kepler) தம் **'சோமனியம்'** (Somnium) என்ற நூலில் சந்திர மண்டலப் பயணம் குறித்து எழுதியுள்ளார். கெப்ளர் தமது கதைத்தலைவனை மந்திர ஆற்றலால் திங்கள் மண்டலத்தை அடையுமாறு செய்கின்றார். ஆயினும் அவரது கதையில் நுட்பமான அறிவியல் கருத்துக்களும் ஆங்காங்கே வெளிப்பட்டு நிற்கின்றன. கெப்ளருக்குப் பின்னர் காட்வின் பாதிரியார் (Bishop Godwin) **'திங்கள் மண்டலத்து மனிதன்'** என்ற நூலை எழுதியுள்ளார். இந்நூலின் கதைத்தலைவன் அன்னப் பறவைகளைப் பழக்கித் தன்தேரில் பூட்டி விண்வெளியில் பயணிக்கின்றான். காட்வின் பாதிரியார் இப்புதினத்தை கி.பி.1638 இல் எழுதியுள்ளார். இதே ஆண்டில் ஜான்வில்க்சின்ஸ் என்பவர் எழுதிய **'புத்துலகக் கண்டுபிடிப்பு'** என்னும் புதினத்திலும் சந்திர மண்டலப் பயணம் வருணிக்கப்படுகின்றது. மனிதன் பறக்கும் ஊர்தி (Flying Chariot) ஒன்றினை அமைத்து அதில் பயணித்து திங்கள் மண்டலத்தை அடைந்து அதில் குடியேறலாம் என்ற கருத்துக்கு அவர் அரண் அளித்துள்ளார்.

கி.பி.1656 இல் சைரானோ என்னும் பிரெஞ்சு நாவலாசிரியர் படைத்த **'திங்கள் கதிரவ மண்டலங்களின் பயணம்'** என்ற புதினத்தில், அப்பயணங்களுக்கு இராக்கெட்டின் துணை அவசியம் என்று முதன் முதலாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கி.பி.1865 இல் **ஜுல்ஸ் வெர்ன்** (Jules Verne) எழுதிய பல நூல்கள் குறிப்பிடத்தக்கவை. பூமிக்கடியில் புதைக்கப் பெற்றுள்ள பீரங்கியைச் சுட்டதும் அதிலிருந்து கிளம்பும் விண்வெளிக்கலம் திங்களை நோக்கிச் செல்கின்றது. இப்பீரங்கி 270 மீட்டர் நீளமும், 68,000 டன் எடையும் கொண்டது. இவருடைய விண்வெளிக்கலத்தில் பல்வேறு பொறியமைப்புக்கள் பொருத்தப் பெற்றுள்ளன. **"கி.பி.1901 இல் எச்.ஜி.வெல்ஸ் எழுதிய திங்களை 'அடைந்த முதல் மனிதர்கள்' என்ற நூலும் வேறு பல நூல்களும் விண்வெளிச் செலவு பற்றியனவே...... இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புதிய திசையில் ஆராய்ச்சிகள் செல்லலாயின. அறிவியல் அறிஞர்களும்**

**பொறியியல் வல்லுநர்களும் பல அரிய திட்டங்களை வகுத்துச் செயல்படுத்தத் தொடங்கினர். கி.பி.1914 இல் கோடார்டும் (Goddard) அதன் பின்னர் ஓபெர்த்தும் (Oberth) இராக்கெட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டு பல அரிய செய்திகளை விளக்கினர்"**[32] என ந.சுப்புரெட்டியார் விண்வெளிப் பயணத்தின் வளர்ச்சி வரலாற்றினை விளக்கிக் கூறியுள்ளார்.

**வளிமண்டலக் கடல்**

நாம் வாழும் பூமி விண்வெளியில் மிதந்து கொண்டிருக்கின்றது. அது தன் அச்சிலிருந்து திரும்பும்போது அதன் ஒருபகுதி கடும் வெப்பத்தன்மை கொண்ட கதிரவனின் தாக்குதலுக்கு ஆளாகின்றது. அந்த வெப்பம் பூமியில் வாழும் உயிர்களை வாட்டி வதக்கிச் சாம்பலாக்கிவிடும். மற்றொரு பகுதி மிகக் கடுங்குளிரின் தாக்குதலுக்கு ஆட்படுகின்றது. இந்நிலை உயிரினங்களைப் பனிக்கட்டி போல உறையச் செய்துவிடும். ஆயினும் உயிரினங்கள் இவ்விருவிதமான தாக்குதல்களுக்கும் ஆளாகாமல் இருப்பதற்கு நம்மைச் சுற்றியுள்ள வளிமண்டலமே (Atmosphere) முக்கியக் காரணமாகும். இன்று அறிவியலாளர் வளிமண்டலத்தை அடிவளிமண்டலம் (Troposphere), அடுக்குவளி மண்டலம் (Stratosphare), வேதியியல் வளிமண்டலம் (Chemisphere), அயனிமண்டலம் (Ionosphere) புறவளிமண்டலம் (Exosphere) என ஐந்து வகையாகப் பிரித்து ஆய்வு செய்து வருகின்றனர். இந்த அடுக்குகளைத் தக்க கறுப்பு – வெள்ளைப் படங்களுடன் விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

பூமியை ஒட்டியிருக்கும் வளிமண்டல அடுக்கினை அடிவளிமண்டலம் என்பர். இது கடல் மட்டத்திலிருந்து பதினைந்து கிலோமீட்டர் உயரம் வரையுள்ள பகுதியாகும். காற்றின் 4/5 பகுதி இந்த அடுக்கினால் நிரப்பப் பெற்றுள்ளது. இதன் அடிமட்டத்திலேயே மனிதர்கள் வாழ்கின்றனர். இது அமைதியற்ற, கொந்தளிப்பான பூமண்டலத்தைச் சூழ்ந்துள்ள வளிமண்டலப் பகுதி, இங்குதான் காலநிலை, சுழல் காற்றுக்கள், புயல், பனிப்புயல், சூறாவளி, பருவக்காற்று ஆகியன தோன்றுகின்றன. இதற்கேற்பவே ஆதிமனிதன் அடக்கமாக முடங்கிக் கிடப்பதற்கேற்ற வீடுகளை அமைத்தான். கதிரவனிடமிருந்து வரும் புற ஊதாக்கதிர்கள் பூமியில் அதிகமாகச் செல்லாதவாறு தடுக்கின்றது. விண்கற்களைத் தரையில் விழாமல் எரித்து விடுகின்றது. இப்பகுதி அண்டக்கதிர்களையும் சிறிய அளவிலேயே பூமியை அடைய விடுகின்றது. பூமியின் ஈர்ப்பு ஆற்றலால் இந்த அடிவளி மண்டலம் பூமிக்கு அருகிலேயே இருந்து வருகின்றது.

அடிவளி மண்டலத்திற்கு அடுத்துள்ள பகுதியே அடுக்குவளி மண்டலமாகும். இது அடிவளி மண்டலத்தில்

உச்சியில் தொடங்கி சுமார் இருபது மைல் தொலைவுவரை வியாப்பித்துள்ளது. இப்பகுதியின் அடிமட்டத்தில் வேகமாகப் பாய்ந்து செல்லும் இரண்டு காற்றாறுகள் இப்பூமண்டலத்தைச் சுற்றி ஓடியவாறு உள்ளன. இவை பிறீட்டுப் பாயும் காற்றோட்டங்கள் ஆகும். இதன் இருப்பு இரண்டாம் உலகப்போர் நடைபெற்ற காலத்தில் கண்டறியப்பட்டது. அமெரிக்க விமானிகள் தம்குண்டு வீசும் B.29 விமானங்களை அடுக்கு வளி மண்டலத்தில் செலுத்த நேரிட்டபோது இம்மண்டலத்தின் இருப்பினைக் கண்டனர். இங்கு வெப்பநிலை உறைபனி நிலைக்குக் கீழ் $80^0$F வரை இயங்குகின்றது.

வளிமண்டலத்தின் மூன்றாவது அடுக்கு வேதியியல் வளிமண்டலமாகும். இதன் ஒருபகுதி அடுக்குவளி மண்டலத்தின் மீது படிந்துள்ளது. இதன் மெல்லிய அடுக்குகளில் விண்வெளியிலிருந்த இறங்கும் மூலக்கூறுகளில் பெருத்த வேதியியல் மாற்றங்கள் நிகழ்கின்றன. இம்மண்டலம் அடுக்கு வளிமண்டலத்தின் மேல்மட்டத்திலிருந்து சுமார் 48 கி.மீ. வரை பரவியுள்ளது. இம்மண்டலம் அடிமட்டத்திலிருந்து சுமார் 16 கி.மீ. உயரம் வரை ஓஸோன் என்னும் உயிர்க்காற்று பரவியுள்ளது. இந்த வளிமண்டல அடுக்கினால்தான் நம் உடலுக்குப் பல்வேறு தீங்குகள் ஏற்படக்கூடுமென்று அறிவியலறிஞர்கள் கருதுகின்றனர்.

வளிமண்டலத்தின் நான்காவது அடுக்கு அயனிமண்டலம் ஆகும். இதன் பரப்பளவு இன்னும் கண்டறியப்படவில்லை. இந்த அயனி மண்டலத்தில் தான் வடதுருவ விண்ணொளிகள் திடீரென்று பேரொளியுடன் மினுக்கு மினுக்கென்று அதிரும் ஒளியுடன் காணப்பெறுகின்றன. அப்பொழுது வானொலி நிகழ்ச்சிகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. காந்தப் புயல்களின் இருப்பிடமான இந்த அடுக்கு மின்சாரத் தன்மையும் கொண்டதாகும்.

அயனி மண்டலத்திற்கு மேலுள்ள பகுதியைப் புறவளி மண்டலம் என்பர். இங்கு காற்றின் மூலக்கூறுகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக உள்ளன. இவ்வாறு வளிமண்டலக் கடல் குறித்து விளக்கும் ந.சுப்புரெட்டியார், **“அயனி மண்டலத்திற்கும் புறவளி மண்டலத்திற்கும் இடையிலுள்ள பகுதியில் தான் வானவியல் (வானநூல்) அறிஞர்களும் இராக்கெட்டுப் பொறிஞர்களும் சிறப்பாகக் கவனம் செலுத்துகின்றனர். துணைக்கோள் இப்பகுதியைக் கடந்து செல்வதில் தடை இருப்பதாக அவர்கள் கருதுகின்றனர். இப்பகுதிக்கு அப்பால் காற்றின் தடையே முற்றிலும் இல்லாததாகி விடுகின்றது. பூமியினின்றும் மேலே செல்லச் செல்லக் காற்றின் திண்மை குறைந்து வருகின்றது. மூவாயிரம் மீட்டருக்கு மேல் மூச்சு விடுவதற்குக் கடினமாக உள்ளது. ஆறாயிரம் மீட்டருக்கு மேல் பயணம் செய்வோர் உயிரியம் (Oxygen) கொண்ட**

**அமைப்புக்களைக் கொண்டு செல்ல வேண்டும். துணைக்கோள் செல்வதற்கு உயிரியம் தேவைப்படாதாகையால் அது காற்றே இல்லாத விண்வெளியில் செல்கின்றது”**[33] என வளிமண்டலப் பயணம் குறித்து விளக்குகின்றார் தேர்ந்த வானநூல் செய்திகளை எளிய தமிழில் அனைவருக்கும் புரியுமாறு கூறியுள்ளது ஆசிரியரின் தனிச்சிறப்பு.

**அண்டை உலகங்கள்**

ஒரு காலத்தில் மக்கள் பூமியே இந்த அகிலத்தின் மையம் எனக் கருதினர். **கியார்டானோ பிருனோ** போன்ற பேரறிவு படைத்த தனிப்பட்ட அறிவியலறிஞர்கள் மட்டுமே இப்பூமி இப்பெரிய அகிலத்தின் ஒரு புள்ளி எனக் கருத்துரைத்தனர். அவர்கள் இந்த விண்வெளியில் காணப்பெறும் கணக்கற்ற உலகங்களில் உயிர்கள் வாழ்கின்றன. அந்த உலகங்களில் உள்ளவர்கள் சிந்திக்கும் ஆற்றல் படைத்தவர்கள் என்றனர். அறிவியல் இன்று மிகவேகமாக முன்னேறிக்கொண்டு வருகின்றது. மனிதன் இயற்கையைப் பற்றி மிக அதிகமாகவே அறிந்துகொண்டு வருகின்றான். இந்தப் பரந்த விண்வெளியில் கணக்கற்ற உலகங்கள் இயங்கி வருகின்றன. மகாகவி பாரதியார் **‘கோமதி மகிமை’** என்னும் கவிதையில் இந்த எல்லையற்ற விண்வெளி ஒரு மாபெரும் கடலைப் போன்றது என்றார்.

**“இக்கட லதனகத்தே – அங்கங்**
**கிடையிடைத் தோன்றும்புன் குமிழிகள்போல்**
**தொக்கன உலகங்கள் - திசைத்**
**தூவெளி யதனிடை விரைந்தோடும்**
**மிக்கதோர் வியப்புடைத்தாம் - இந்த**
**வியன்பெரு வையத்தின் காட்சி கண்டீர்”**[34]

தம்முடைய அச்சில் சுழன்றுகொண்டும் விண்வெளியில் மிதந்த கொண்டும் உள்ள இந்த உலகங்களுக்கிடையேயுள்ள தூரங்களைக் கற்பனையாலும் காணமுடியாது. ஒவ்வொரு விண்மீன் மண்டலமும் ஒவ்வொரு அகிலமாகும். ஒவ்வொரு விண்மீன் குடும்பத்திலும் ஆயிரமாயிரம் இலட்சம் விண்மீன்கள் அடங்கிக் கிடக்கின்றன. அவற்றிடையே உள்ள தூரங்கள் மிக நீண்டவை. இந்த எல்லையற்ற விண்வெளியில் கதிரவன் ஒரு சாதாரண விண்மீனாகும். எண்ணற்ற விண்மீன்களைப் போலவே கதிரவனும் விண்வெளியில் தனியாக இயங்கவில்லை. அது பல உலகங்கள் அடங்கிய ஒரு மாபெருங்குடும்பமாகும். அக்குடும்பம் சூரியக்குடும்பம் (Sollar System) என வழங்கப்பெறும்.

சூரியக் குடும்பத்தைச் சேர்ந்த உலகங்கள் யாவும் கோள்களே. அவையாவும் வெப்பமுடையன அல்ல அவை திண்ணிய குளிர்ந்த உலகங்களாகும். இக்கோள்களை வானநூல் வல்லுநர்கள், **“முதல் வகுப்பிலுள்ளவை உயிர்நிலைக்கோள்கள்**

**என்று வழங்கப் பெறுகின்றன. இதில் புதன், வெள்ளி, பூமி, செவ்வாய் என்ற நான்கு கோள்களும் அடங்கும். இவை கதிரவனுக்கு அண்மையில் உள்ளன. இவை பூமியைப்போல் குளிர்ந்து கெட்டியாக இருந்தலின் நிலக்கோள்கள் என்றும் வழங்கப் பெறுகின்றன. இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவை இடைநிலைக் கோள்களாகும். சிறுகோளத் திரள்கள் இதிலடங்கும். மூன்றாவது வகுப்பைச் சேர்ந்தவை வெளிநிலைக்கோள்கள், வியாழன், சனி, யுரேனஸ், நெப்டியூன், புளுட்டோ என்பவை இவ்வினத்தைச் சேர்ந்தவை. இவை பூமியை விட எடையிலும் பருமனிலும் மிகப்பெரியன. இவை அதிக வெப்பமாக இருப்பதால் பூமியைப்போல் கெட்டியாக இராமல் நீராகவும் வாயுவாகவும் நெகிழ்ந்துள்ளன. இவை வானக்கோள்கள்”**[35] என வானநூல் செய்திகளை நுட்பமாகவும் தெளிவாகவும் புலப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார். வால்மீன்கள், போர்க்கப்பல் கூட்டம் போன்ற விண்கற்கள் ஆகியன குறித்தும் அவர் பல அரிய தகவல்களை வெளிப்படுத்தியுள்ளார்.

## விண்வெளிப் பயணத்தில் சில அடிப்படை அறிவியல் மெய்ம்மைகள்

விண்வெளிப் பயணத்தில் பங்குபெறும் செயற்கைத் துணைக்கோள்கள், விண்வெளிக்கலங்கள் இவற்றின் இயக்கத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்குப் புவிஈர்ப்பு ஆற்றல், நியூட்டனின் புவிஈர்ப்பு விதிகள், இராக்கெட் பயணத்தில் ஒலித்தடை, வெப்பத்தடை, வட்டவழி இயக்கம், செயற்கைத் துணைக்கோளின் இயக்கம், விடுபடுநேர் வேகம், துணைக்கோள்கள் இயங்கும் வழிகள் ஆகியன குறித்துச் செறிவும் சுருக்கமும் செம்மையும் மிக்க தகவல்களைத் தந்துள்ளார் ந.சுப்புரெட்டியார்.

இதுவரையில் விண்வெளியில் ஏவப்பெற்ற துணைக்கோள்கள் அனைத்தும் பூமியை நீள்வட்ட வழிகளிலேயே சுற்றி வந்துள்ளன. ஆராய்ச்சியின் காரணமாக ஏவப்பெற்ற துணைக்கோள்கள் அனைத்தும் வேண்டுமென்றே நீள்வட்டப் பாதையில் செல்லுமாறு இயக்கப் பெற்றன. வட்டவெளியில் சுற்றும்போது அவை ஒரே உயரத்தில் நிலவும் வளிமண்டலத்தின் எடுகோள்களை (Data) மட்டுமே பதிவு செய்து நமக்குக் கொடுக்கும். ஆனால் அவை நீள்வட்ட வழிகளில் சுற்றி வரும்போதே ஒருசமயம் பூமிக்கு அண்மையிலும், பிறிதொரு சமயம் அதன் தொலைவிலும் வருமாதலால் அவை பல்வேறு உயரங்களில் உள்ள அறிவியல் மெய்ம்மைகளை நமக்கு அறிவிக்கின்றன. இத்தகைய அறிவியல் மெய்ம்மைகளை இந்நூலில் ந.சுப்புரெட்டியார் எளிய நடையில் வெளிப்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## துணைக்கோளினை இயக்கும் முறை

4.10.1957 இல் இரஷ்யர்கள் அறிவியல் - தொழில் நுட்ப வளர்ச்சியின் உச்சத்தைத் தொட்டனர். மனிதனின் கைகளினால் செய்யப்பெற்ற ஸ்புட்னிக்-I (Sputnick – I) என்ற விண்கலம் தனது விண்வெளிப் பயணத்தைத் தொடங்கியது. இத்தகைய அருஞ்செயலுக்குக் காரணமாக இருந்த **பீட்டர் கபீட்சா** என்பவரை அறிவியல் உலகம் வாயார வாழ்த்திப் பாராட்டியது.

இரஷ்யா முதன்முதலாக விண்வெளிக்கு அனுப்பிய ஸ்புட்னிக்-I கோளவடிவம் கொண்டது. இது பல உலோகத் தகடுகளால் செய்யப் பெற்ற மேலுறையைக் கொண்டது. இதன் விட்டம் 58செ.மீ ஆகும். வெப்பநிலை, காற்றின் அழுத்தம், காற்றின் திண்மை, அதன் ஈரநிலை, பூமியின் காந்தச் செறிவு, விண்வெளியில் பாய்ந்து செல்லும் அண்டக் கதிர்களின் அளவு, சூரியனின் ஆற்றல் அளவு மின்னணுக்களின் தாக்குதல் ஆகிய அறிவியல் எடுகோள்களை அளப்பதற்குத் தனித்தனிக் கருவிகள் இதனுள் அமைக்கப் பெற்றிருந்தன.

அண்டக் கதிர்கள், சூரியனின் ஒளி ஆகியன துணைக்கோளின் உள்ளே செல்வதற்கு சாளரங்கள் இருந்தன. இந்த எடுகோள்களைப் பதிவு செய்து, அப்பதிவுகளை வானொலி அலைகளாக மாற்றித் துணைக்கோளுக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் நான்கு உணர்கொம்புகளிலிருந்து அலைகளாகப் பரப்புவதற்கு வானொலி பரப்புகள் உள்ளே பொருத்தப்பட்டிருந்தன. எல்லாக் கருவிகளையும் செவ்வனே இயக்குவதற்குத் தேவையான மின்கலன்கள் உள்ளே இருந்தன. இக்கருவிகளின் அமைப்புடன் இத்துணைக்கோளின் எடை 83.6கிலோ கிராம் ஆகும்.

துணைக்கோளை இயக்குவதற்கு தேவையான வேகத்தைப் பெறுவதற்கு மூன்றடுக்கு இராக்கெட்டினையே பயன்படுத்துகின்றனர். **“மூன்றடுக்கு இராக்கெட்டில்தான் ஸ்புட்னிக்-I பொருத்தப் பெற்றது. மணிக்கு 28,800 கி.மீ. வீதம் சுற்றிவரும் செய்கைத் துணைக்கோள் 96 நிமிடங்களுக்கு ஒருமுறை பூமியைச் சுற்றிக் கொண்டு வருகின்றது. பூமி தனது அச்சில் சுழன்று கொண்டிருப்பதால், ஒவ்வொரு தடவையும் ஸ்புட்னிக் பூமியைச் சுற்றி வருங்கால் பூமியின் மேற்பரப்பில் புதிய புதிய பகுதியைக் கடந்து கொண்டே வந்தது”**[36] என ந.சுப்புரெட்டியார், இரஷ்யாவின் முதல் விண்வெளித் துணைக்கோள் பயணத்தின் வெற்றியை நுட்பமாக விளக்கியுள்ளார்.

## துணைக்கோள்கள்

அமெரிக்காவும் இரஷ்யாவும் விண்வெளிக்கு அடிக்கடி துணைக்கோள்களை அனுப்பி வருகின்றன. 1955 இல் அமெரிக்க

விண்வெளி ஆய்வாளர்கள் **வேன்கார்டு** துணைக்கோள்களைத் திட்டமிட்டு அமைத்தனர். அவர்கள் உருவாக்கிய ஒவ்வொரு துணைக்கோளும் மின்னியல் மூளையையும், காந்த நினைவாற்றலையும், வானொலிக்குரலையும் தன்னகத்தே கொண்டிருந்தன. துணைக்கோள்களின் இந்த அறிவியல் கருவிகள் மிகச்சிறியவை. ஆயினும் மிகுந்த தொழில்நுட்பச் செயல்பாடு உடையவை.

வானொலி அமைப்பு மிகச் சிறியது. அது **'மினிடிராக்'** எனக் குறிக்கப்பெறுகின்றது. பதின்மூன்று அவுன்சு எடைகொண்ட அது 6400கி.மீ எல்லை வரையிலும் செய்திகளைப் பரப்பும் ஆற்றலைப் பெற்றுள்ளது. காந்த நினைவாற்றலைக் கொண்ட மின்னியல் மூளைக் கருவித் தொகுதிகள் வானொலிப் பரப்பியுடன் இணைக்கப்பெற்றுள்ளன. இவையாவும் இணைந்தே தொலைநிகழ்ச்சி அறிகருவி (Telemetering System) அமைப்பாகும்.

துணைக்கோளில் பயன்படும் வெப்பநிலைமானி **'தெர்மிஸ்டர்'** ஆகும். அதன் வழியாகவே மின்னோட்டம் செலுத்தப் பெறுகின்றது. வெப்பநிலை ஏறும்போதும் இறங்கும்போதும் இத்தகட்டின் மின்தடை மாறும். இதற்கேற்ப மின்னோட்டத்தின் வலிமையும் மாறும்.

மழைபோல் பொழியும் விண்கற்களைப் பற்றித் துணைக்கோள் வெளியிடும் தகவலை அறிவதற்கு அறிவியல் ஆய்வாளர்கள் மிக ஆர்வத்துடன் உள்ளனர். துணைக்கோளின் மேலோட்டில் அமைக்கப் பெற்றுள்ள அளவைக்கருவி, கதிரவனிடமிருந்து வரும் ஊதா மேற்கதிர்களின் வலிமையைப் பதிவு செய்கின்றன.

## விண்வெளியைத் துருவி ஆய்தல்

இரஷ்யர்களின் விண்வெளிப் பயண வெற்றியைத் தொடர்ந்து குன்றாத முயற்சியுடன் வேன்கார்டு இராக்கெட்டின் தோல்விக்குப் பின்னர் அமெரிக்கா 31.01.1958 இல் எக்ஸ்புளோர் என்னும் முதல் செயற்கைத் துணைக்கோளை அனுப்பியது. இரஷ்யா ஸ்புட்னிக்-I, ஸ்புட்னிக்-II ஆகிய செயற்கைக் கோள்களை விண்வெளிக்கு அனுப்பி வெற்றி பெற்றது. அமெரிக்கா எக்ஸ்புளோர்-I, பயனியர்-I ஆகிய துணைக்கோள்களை அனுப்பி உலக அறிவியல் வரலாற்றில் சாதனை படைத்தது.

அமெரிக்கா, பயனியர்-I என்னும் துணைக்கோளைச் சந்திரனை நோக்கி இயக்கியது, வான் அல்லென் கதிர்வீச்சு வளைசூழல், காந்த மண்டலச் செலவு, அயனிமண்டலம் எக்ஸ்புளோரர்-**8** ஏரியல் என்னும் துணைக்கோளால் ஆராயப்பெற்றது, பூமியின் வடிவம், செய்திப் பரிமாற்றம்,

செய்தித் தொடர்புக்காக எக்கோ-I என்னும் துணைக்கோளை அமெரிக்கா இயக்கியது. அடுத்து ‘டெல்ஸ்டார்’ என்னும் துணைக்கோளை அனுப்பியது ஆகிய தகவல்களை ந.சுப்புரெட்டியார், பலருக்கும் பயன்படும் வகையில் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார்.

**“07.03.1962 இல் நாசா எனும் விண்வெளி இயக்கத்தின் கீழ் இயக்கப்பெற்ற ஓசோ-I என்னும் துணைக்கோள் கதிரவனை ஆராயும் ஒரு புதியமுறை ஆய்வாகும். இது 11மீ குறுக்களவும், 207.8கிலோ கிராம் எடையும் கொண்டது. அம்புலி, மனிதன் யாதோர் ஆபத்துமின்றி விண்வெளிக்குச் சென்று மீள்வதற்கான எடுகோள்களைத் திரட்டும் நோக்கத்துடன் இயக்கப்பெற்ற இது பூமியை வட்டமாகச் சுற்றி வருகின்றது. இதிலுள்ள 1860 கதிரவ மின்கலன்கள் 27வாட் மின்னாற்றலைத் தருகின்றன. இவ்வாற்றல் இத்துணைக்கோளிலுள்ள கருவிகள் இயங்கப் பயன்படுகின்றது. கதிரவனிடமிருந்து வரும் புதிர்க் கதிர்களை நிறமாலை மானியைக் கொண்டு புகுந்து ஆராய்தல், கதிரவ ஒளிக் குமுறல் காரணமாக புதிர்க்கதிர்களின் செறிவு உயரும் அளவை ஆராய்தல், செறிவு உயருங்கால் ஏற்படும் நிறமாலை வேறுபாட்டை ஆராய்தல், பல்வேறு வகையில் காமா கதிர்களை ஆராய்தல், அண்டக்கதிர்கள் காற்றினைத் தாக்குவதால் உண்டாகும் நியூட்ரான்களை ஆராய்தல், வான் அல்லென் வளைசூழலிலுள்ள புரோட்டான், எலெக்ட்ரான்களை ஆராய்தல் முதலான பதின்மூன்று முக்கிய ஆராய்ச்சிகளில் இது ஈடுபட்டுள்ளது”**[37] இத்தகவல்கள் அனைத்தும் சந்திரமண்டலப் பயணிகளுக்குப் பெரிதும் பயன்படுவன. இவற்றைத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியாளரான ந.சுப்புரெட்டியார் ஆழமாகப் பதிவு செய்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## திங்கள் மண்டல ஆராய்ச்சி

அமெரிக்க திங்கள் மண்டலத்தை ஆராய்வதற்கு பயனியர் என்னும் திட்டத்தைத் தொடங்கி பயனியர் - I, II, III ஆகிய துணைக்கோள்களை விண்வெளிக்கு அனுப்பிப் பல அரிய தகவல்களைக் கண்டறிந்துள்ளது.

இரஷ்யாவும் சந்திர மண்டல ஆராய்ச்சிக்காக ஒரு டன் எடை கொண்ட உருண்டை வடிவ ‘லூனிக்-I’ என்னும் துணைக்கோளை முதன்முதலில் அனுப்பியது. திங்களின் காந்தப்புலம், அண்டக் கதிர்கள், புதிர்க்கதிர்கள், காமாக்கதிர்கள் ஆகியனவற்றைக் கண்டறிய இதில் கருவிகள் பொருத்தப்பட்டிருந்தன. இதனைத் தொடர்ந்து இரஷ்யா லூனிக்-2, லூனிக்-3 என்னும் துணைக்கோள்களைச் சந்திர மண்டலத்திற்கு அனுப்பிப் பல அரிய சோதனைகளை நிகழ்த்தியுள்ளது. இவற்றை விளக்கும் ந.சுப்புரெட்டியார், **“1966 ஆம் ஆண்டு**

**விண்வெளி ஆராய்ச்சியில் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற ஓர் ஆண்டாகக் கருதப்பெறும். இந்த ஆண்டில்தான் முதலாவதாக முதன்மையாகத் திங்களைப் பற்றிய ஆராய்ச்சி தொடங்கப்பெற்றது. இந்த ஆண்டில் இரஷ்ய அறிவியலறிஞர்களும் பொறிஞர்களும் முதல் தடவையாக மிகவும் சிக்கலான இரண்டு அறிவியல் தொழில்நுட்பப் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டனர். ஒன்று 'லூனா-9' என்ற தானியங்கி விண்கலத்தைத் திங்களின் தரையில் மெதுவாக இறங்கச் செய்தனர். இது திங்களின் நிலப்பரப்பின் நுண் அமைப்பை அறிந்து கொள்ள வாய்ப்பளித்தது. இரண்டு 'லூனா-10' என்ற தானியங்கி விண்கலம் திங்களின் துணைக்கோளாக இயங்குமாறு செய்யப் பெற்றது. இதில் பொருத்தப்பட்டிருந்த பல்வேறு கருவிகள் திங்களின் அருகிலுள்ள விண்வெளிப் பொதிகத்தைக் குறித்து முறையான ஆராய்ச்சியைத் தொடங்குவதற்கு வாய்ப்பளித்தது"**[38] எனத் திங்கள் ஆராய்ச்சியின் உச்சகக்கட்ட வரலாற்றையும் வளர்ச்சியையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

திங்களின் தரை விண்வெளிக்கலத்தின் எடையைத் தாங்கும் ஆற்றலுடையது. இது எதிர்காலத்தில் மனிதனின் எடையையும் தாங்கும். மூன்று-நான்கு செ.மீ. ஆழமுள்ள திங்களின் மேலடுக்கு விண்வெளி விமானி கால்வைத்ததும் கீழே புதைந்து சரிவை ஏற்படுத்தும்.

## பிறகோள்கள் மீது சிறப்புக்கவனம்

**'தொலை உலகச் செலவு'** குறித்து விரிவாக விளக்க முயலும் ந.சுப்புரெட்டியார், வெள்ளியைப் பற்றிய ஆராய்ச்சி, செவ்வாயைப் பற்றிய ஆராய்ச்சி, இந்த ஆராய்ச்சிகளில் இரஷ்யாவின் முயற்சிகளும் பங்களிப்புக்களும், அமெரிக்காவின் **'மாரினர்-4'** என்னும் துணைக்கோள் செவ்வாயின் மேற்பரப்புப் பகுதிகளை ஒளிப்படம் பிடித்து அனுப்பியது, செவ்வாயின் வளிமண்டலத்தை ஆராய்வதற்கு மாரினர் கோள்களில் அகச்சிவப்பு நிறமாலை காட்டி, புறஊதா நிறமாலை காட்டி என்னும் இரண்டு கருவிகள் பொருத்தப்பட்டிருப்பது குறித்தும் விரிவான அறிவியல் தகவல்களைத் தந்துள்ளார். விண்வெளியில் நிரந்தரமான சுழலும் விண்வெளி நிலையங்களை அமைத்த பின்னர் விண்வெளிப் பயணம் குறித்த பல தீர்க்க முடியாத சிக்கல்களுக்குத் தீர்வுகாண முடியும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## விண்வெளிப் பயணத் துயரங்கள்

இராக்கெட் விமானத்தில் விண்வெளிப் பயணத்தை மேற்கொள்வது பல துயரங்களைக் கொண்டதாகும். விண்வெளி காற்றில்லாத வெற்றிடமாதலால் சூழ்நிலைப் பாதுகாப்பினைச்

செய்து கொள்ள வேண்டியதன் அவசியம், விண்வெளியில் விண்கற்களால் ஏற்படும் பேரிடர்கள், அதிலிருந்து தப்பிக்கும் உத்திமுறைகள், அண்டக் கதிர்களினால் ஏற்படும் துயரங்கள், அண்டக் கதிர்களில் சிதறுண்டு அயனிகளாகும் பகுதிகளால் ஏற்படும் கேடுகள், இராக்கெட் விமானத்தில் எதிர்பாராமல் ஏற்படும் நெருக்கடிகள், மின்சார அமைப்பு இயங்கத் தவறுதல், தீ விபத்து ஏற்படின் அதற்கான தடுப்புமுறைகள் மற்றும் பாதுகாப்பு, அறைகளில் அழுத்தம் குறையும் போது மேற்கொள்ள வேண்டிய முன்னெரிச்சரிக்கைகள், பொறியமைப்புக்களில் ஏற்படும் கோளாறுகள் அகியன குறித்து ந.சுப்புரெட்டியார் குறித்துள்ள கருத்துக்கள் விண்வெளிப் பயணம் மேற்கொள்வோர்க்குப் பெரிதும் பயன்பாடுடையன.

### விண்வெளியில் உயிர்கள்

இதுவரையில் விண்வெளியில் நூற்றுக்கணக்கான செயற்கைத் துணைக்கோள்களை அனுப்பி அங்குள்ள சூழ்நிலை குறித்த பல்வேறு தகவல்களை அறிந்துள்ளனர். ஆராய்ச்சித் துணைக்கோள்கள், பூமியில் கண்டிராத வியத்தகும் சூழல்களைப் பற்றி ஆராய்ந்து அறிவித்துள்ளன. விண்வெளிப் பயணம் பல்வேறு இடையூறுகளும் சிக்கல்களும் நிறைந்தது. இவற்றையெல்லாம் ஆராய்ந்து நமக்கு அறிவித்த தானியங்கிக் கருவிகள் அறிவியல் முன்னேற்றத்தின் சிறப்பான கருவிகளே. ஆயினும் கருவிகளால் அறிவிக்கப்பெறும் தகவல்களைக் கொண்டு விண்வெளியில் தோன்றும் எதிர்பாராத சூழ்நிலைகளை ஆராய்தல் இயலா. அறிவுபடைத்த மனிதனும் நுட்பமான அறிவியல் கருவிகளும் சேர்ந்தே எதிர்பாராத விண்வெளி மாறுதல்களைக் கண்டறிய முடியும். அப்போதே விண்வெளியை முழுமையாக அறியலாம். **“இரஷ்யாவும் அமெரிக்காவும் இம்முயற்சியில் ஈடுபட்டன. முன்னதாக அந்நாட்டார் நாய், குரங்கு, சுண்டெலி போன்ற உயிர்ப்பிராணிகளையும் பொம்மை மனிதனையும் அனுப்பி விண்வெளியில் நேரிடும் இடையூறுகளும் அபாயங்களும் என்பதைத் திட்டமாக ஆராய விழைந்தனர். இரஷ்யா அனுப்பிய ‘ஸ்புட்னிக்-II’ என்னும் துணைக்கோளில் லைக்கா என்ற நாய் பயணியாக இருந்தது. அது சிறிய எலும்புகளைக் கொண்ட ஓர் எஸ்கிமோ இனத்தைச் சேர்ந்த வலிமை பொருந்திய பிராணி. அடுத்து இரஷ்யா பொம்மை மனிதனைக் கொண்ட ‘ஸ்புட்னிக்-4’ என்ற துணைக்கோளை இயக்கியது. அடுத்து ‘ஸ்புட்னிக்-6’ என்ற துணைக்கோளில் செல்கா, முஸ்க்கா என்ற இரண்டு நாய்கள் பாதுகாப்பான அறையில் வைத்து அனுப்பப்பெற்றன. மனிதனை விண்வெளிக்கு அனுப்புவதில் நோக்கம் கொண்ட நாசா இயக்கத்தினர் மேற்கொண்ட மெர்க்குரித்திட்டம் குறிப்பிடத்தக்கது. 16.8கிலோகிராம் கொண்ட ‘மெர்க்குரி-2’ என்ற துணைக்கோளில் ‘ஹாம்’ என்னும் வாலில்லாக்குரங்கு அனுப்பப்பட்டது.**

**இச்சோதனையில் வெற்றிகண்ட அமெரிக்கா மனிதனை விண்வெளிக்கு அனுப்பும் முயற்சியை மேற்கொண்டது. இரண்டரை ஆண்டு தக்க பயிற்சி பெற்ற ஆலன் செப்பர்டு என்பவரை மெர்க்குரி -3 இல் பாதுகாப்புடன் அமைக்கப்பெற்ற கூண்டினுள் ஏற்றி அனுப்பினர்"[39].** இவ்வாறு விண்வெளிப் பயண ஆராய்ச்சியின் படிநிலை வளர்ச்சிகளை நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.

### விண்வெளி அனுபவங்கள்

ந.சுப்புரெட்டியார் விண்வெளிப் பயணங்கள் குறித்த ஆராய்ச்சிகளை மேற்கொண்டார் அனுபவங்களையும் தெள்ளத் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார். விண்வெளிப் பயணத்தில் இராக்கெட் பொறியமைப்புக்கள் பழுதடைந்து விட்டால், பழுதடையாத பொறியமைப்புக்களை எளிதாகப் பொருத்திவிடலாம். விண்வெளிப் பயணத்தில் மிகுதியான எடை, எடையின்மை, உணவு முறை, சுவாசிக்கும் முறை, உடை வசதிகள், விமானத் தளத்தில் கவனம், பயிற்சி பெறல் முதலான விண்வெளிப் பயண அனுபவங்களையும் அவர் ஆர்வத்தோடு விளக்கிக் கூறியுள்ளார். **"விண்வெளிப் பயணத்திற்குப் பயிற்சி பெறுபவர்கள் வானவியல், இயற்பியல், வேதியியல், பொறியியல், மருத்துவவியல் முதலிய துறைகளைக் கற்றுத் தெளிந்து அறிவு பெறுதல் வேண்டும். ஏறக்குறைய ஆயிரம் பேர் இப்பயிற்சியில் சேர்ந்தால் இறுதியில் ஐந்துபேர் மட்டுமே அனைத்துத் தேர்வுகளிலும் தேர்ச்சி பெறலாம். இவர்கள் விமானப் படையினரைப் போன்று பயிற்சி பெறுதல் வேண்டும். இப்பயிற்சிக்கென்றே பல்வேறு பொறியமைப்புக்கள் கண்டறியப் பெற்றுள்ளன. இப்பயிற்சிக் காலத்தில் இரண்டு மூன்றுபேர் இராக்கெட் விமானத்தைச் செலுத்துவதற்குச் சிறப்பாக பயிற்சி பெறுவர். விண்வெளிக் கூண்டில் அவர்களுக்கு இப்பயிற்சி அளிக்கப்பெறும். வண்ணப்படங்களின் மூலம் விண்மீன்களின் நிலை, கோள்களின் நிலை முதலிய தகவல்களை அறிந்து கொள்கின்றனர். கணிதத்துறையிலும் அவர்கள் நல்ல தேர்ச்சி அடைகின்றனர். கோள்களுக்கிடையேயுள்ள தூரம், பூமிக்கும் சந்திரனுக்கும் இடையேயுள்ள தூரம் முதலியவற்றைக் கணித்துக் கொண்டு இவர்கள் இராக்கெட் விமானத்தைச் செலுத்தும் திறனைப் பெறுதல் வேண்டும். விண்வெளி வீரர்களின் உடல்நிலை எத்தகைய சூழ்நிலைக்கும் ஒத்து வரவேண்டும். பூமியின் தரைநிலையத்திலிருந்து வரும் கட்டளைக்களுக்கேற்பச் செயற்படும் திறன் அவர்களிடம் அமைதல் வேண்டும். எதிர்பாராத நிலைமைகள் ஏற்படும்போது அவற்றைச் சமாளிக்கும் திறன் வேண்டும்"[40].**

### அம்புலிப் (சந்திரன்) பயணத்திட்டம்

விண்வெளிப் பயணத்தில் அம்புலியே முதன்முதலாக மக்கள் கவனத்தை ஈர்த்தது. விண்வெளியில் உலாவரும்

கோளங்களுள் சந்திரனே பூமியின் அருகிலுள்ளது. இதற்குப் பயணிப்பதே எளிது. இது பூமியை ஒரு நீள்வட்டச் சுற்றுவழியில் வலம் வருகிறது. பூமியிலிருந்து சந்திரனின் சேய்மைத்தொலைவு 4,07,000 கிலோ மீட்டர்கள் ஆகும். அண்டவெளி அளவைகளில் கணக்கிட்டால் பூமிக்கும் சந்திரனுக்கும் இடையேயுள்ள தொலைவு மிகச் சிறியது.

மனிதனைச் சந்திரனுக்கு அனுப்ப அமெரிக்க நாசா இயக்கத்தினர் மெர்க்குரித்திட்டம், ஜெமினித் திட்டம் ஆகிய திட்டங்கள் வகுத்துச் செயற்படுத்தப் பெற்றன. ஜெமினித் திட்டத்தில் இரண்டு விண்வெளி வீரர்கள் ஒரு துணைக்கோளில் அனுப்பப் பெற்றனர். முதல் இரண்டு ஜெமினிப் பயணங்கள் மனிதர்களின்றியே நடைபெற்றன. அடுத்து வர்ஜில் கிரிஸம், ஜான் யங் என்னும் இரு இரட்டை வான்வெளி வீரர்கள் **‘ஜெமினி–3’** இல் விண்வெளிக்குச் சென்று மூன்று சுற்றுக்கள் சுற்றிய பின்னர் பூமியை வந்தடைந்தனர். இதன் தொடர்ச்சியாக நீல் ஆர்ம்ஸ்ட்ராங், டேவிட் ஸ்காட் ஆகியோர் **‘ஜெமினி-8’** என்ற விண்கலத்தை அஜெனா என்ற ஊர்தியுடன் விண்வெளியில் இணைத்து அடுத்த முதல் துணிகரச் செயலைச் செய்தனர்.

## அப்போலோ திட்டம்

விண்வெளி அறிவியல் வரலாற்றில் உலகினை வியப்புக் கடலில் ஆழ்த்திய நிகழ்ச்சிகள் அப்போலோ திட்டத்தில் இடம் பெற்றன. மனிதனைச் சந்திர மண்டலத்திற்கு அனுப்பி மீட்கப்பெறுவதற்கு முன்னர் ரேஞ்சர், சர்வேயர், புராஸ்பெக்டர் என்னும் மூன்று நிலைகளில் ஆராய்ச்சி செய்யப் பெற்றதே அப்போலோ திட்டமாகும்.

விண்வெளிப் பயணத்தில் எரிபொருள் தேவைகளைச் சமாளிக்க இரண்டு வேறுபட்ட திட்டங்களில் செயலாற்றி வருகின்றனர். எரிபொருள்களைச் சேமித்து வைக்கக்கூடிய விண்வெளி நிலையம் ஒன்றைப் பூமியைச் சுற்றியுள்ள ஏதோவொரு சுற்றுவழியில் அமைப்பதில் இரஷ்யர்கள் முயன்று வருகின்றனர். அமெரிக்கர்கள், **‘அப்போலோ-8’** வட்டமிட்டதைப் போல முதலில் சந்திரனைச் சுற்றவும், அதன் பின்னர் அம்புலித்தரையில் ஒரு சிறிய விண்வெளிக்கலத்தின் வாயிலாக இறங்க வேண்டுமென்றும் திட்டம் போட்டனர்.

## சந்திரன் பயணம் - மனிதன் மேற்கொண்ட ஆய்வுகள்

விண்வெளிக்கலத்தின் மூலம் மனிதன் சந்திரனை அடைவதற்கு முன்னர்ப் பல படிநிலைகளில் சோதனைகள் மேற்கொள்ளப்பெற்றன. முதலில் ஆளில்லாத கலன்களைக் கொண்டும், பின்னர் ஆளுள்ள கலன்களைக் கொண்டும் இச்சோதனைகள் மேற்கொள்ளப்பெற்றன. **அப்போலோ – 1**

முதல் **அப்போலோ-10** வரையிலான பயணங்களில் இச்சோதனைகள் மேற்கொள்ளப்பெற்றன.

**'அப்போலா–7'** பயணமே முதன்முதலாக மேற்கொள்ளப் பெற்ற ஆளுள்ள பயணமாகும். மூன்று விண்வெளி வீரர்களைக் கொண்ட இப்பயணம் கிட்டத்தட்ட பதினொரு நாட்கள் நீடித்தது. இத்திட்டத்தில் விண்வெளி வீரர்கள் எழுபத்திரண்டு இலட்சம் கிலோமீட்டர் பயணித்துள்ளனர். **'அப்போலோ–8'** பயணத்தில் சந்திர மண்டலத்தை நெருங்கிய மூன்று விண்வெளி வீரர்கள் பத்துத் தடவை சந்திரனைச் சுற்றினர். அப்போது சந்திரனைப் பலமுறை படங்கள் எடுத்தனர். வேறுபல தகவல்களையும் திரட்டினர். இப்பயணத்திற்கு மொத்தம் 147 மணிநேரம் ஆயிற்று.

## விண்வெளி நிலையங்கள்

11.08.1962 இல் விண்வெளி நிலையத்திற்கு அடிகோலும் வகையில் முதன்முதலாகப் பணியாற்றியது இரஷ்யா. இரண்டு துணைக்கோள்களை ஒன்றன்பின் ஒன்றாக ஏறக்குறைய ஒரே சுற்றுவழியில் இயக்கி இம்முறையில் பணியாற்றியது அந்நாடு. முதலில் **'வாஸ்டாக்-3'** என்ற துணைக்கோளில் நிக்கோலோவ் என்ற விண்வெளி வீரரை அனுப்பினர். மறுநாள் **'வாஸ்டாக்-4'** என்ற துணைக்கோளில் பொப்போலிச் என்பவர் அனுப்பப் பெற்றார். இரண்டு கூண்டுகளும் சுற்றிவந்த வழிகள் ஒன்றையொன்று நெருங்கி இருந்தன. அப்போது இருவீரர்களும் வானொலி மூலம் உரையாடினர். எடையற்ற நிலை இருவரையும் பாதிக்கவில்லை. அவர்கள் உண்டு உறங்கி மகிழ்ச்சியுடன் இருந்தனர். நிக்கோலோவ் 64 சுற்றுக்களும், பொப்போலிச் 48 சுற்றுக்களும் சுற்றிய பின்னர் இருவரும் ஆறு நிமிட இடைவெளியில் முன்னரே திட்டமிட்டபடி குறிப்பிட்ட இடத்தில் வந்திறங்கினர்.[41] பிரிட்டீஷ், அமெரிக்க அறிவியல் அறிஞர்கள் இதனை ஓர் ஒப்பற்ற அரிய சாதனை எனப் போற்றிப் புகழ்ந்தனர்.

விண்வெளியில் நிறுவப்பெற்ற விண்நிலையத்தின் இன்றியமையாமை, வான்பிரானின் விண்வெளி நிலையம், நிலையத்தை அமைத்த முறை, விண்வெளி நிலையத்தின் இருபகுதிகளும் ஒன்றாக இணைக்கப்பெற்றமை, எடையின்மையின் இக்கட்டுக்களைச் சமாளித்தல், நிலையத்தின் வெப்பநிலையைக் கட்டுப்படுத்துதல், இரஷ்யர்களின் வெற்றி, விண்வெளி நிலையங்களின் பயன்கள், வானிலை ஆராய்ச்சிக்கு இந்நிலையங்கள் பயன்படும் பாங்கு, விண்வெளி நிலையங்கள் இராக்கெட் தளங்களாக விளங்குதல், கோள்களின் ஆராய்ச்சியை மேற்கொள்ளல், வானொலிப் பொறிஞர்கள் பல்வகை ஆய்வுகளை மேற்கொள்ளுதல், விண்வெளி நிலையங்கள் உயிர்நூல் ஆராய்ச்சிக்கு உதவுதல், கடற்பயணம் மேற்கொள்ளும் மாலுமிகளுக்கு உதவுதல், புதிய தனிமங்களின் இருப்பினைக் காண்பதற்கான ஆய்வகம் அமைக்க உதவுதல் என விண்வெளி

நிலையங்களின் பன்முகப் பயன்பாட்டை ந.சுப்புரெட்டியார் இப்பகுதியில் தெளிவாகவே விளக்கியுள்ளார்.

இதுகாறும் அமெரிக்காவும் இரஷ்யாவும் விண்வெளிக்குத் தேர்ந்தெடுத்தவர்கள் அனைவரும் விமானப்படையைச் சேர்ந்தவர்களே. அமெரிக்காவில் சில பல்கலைக்கழகங்களில் விண்வெளி அறிவியல், விண்வெளிப் பொறியியல் ஆகியன பாடத்திட்டங்களில் சேர்க்கப் பெற்றுள்ளன.

**விண்வெளிப் பயணத்தின் பயன்**

இன்று செல்வம் கொழிக்கும் நாடுகளான அமெரிக்காவும் இரஷ்யாவும் விண்வெளிப் பயணத்திற்கும் ஆய்விற்கும் செலவிடும் தொகை கணக்கற்றது. **'டெல்ஸ்டார்'** என்னும் ஒரு துணைக்கோளினை வடிவமைத்து அதைத் திங்களுக்கு அனுப்பி வெற்றிபெற நூறுவிண்கலன்களை ஆய்வுப் பயிற்சிக்கு அனுப்பி உள்ளனர். 1967 இல் இத்துறையில் ஐக்கிய நாடுகளின் பொதுச்சபையில் ஒருமனதாக நிறைவேற்றப்பெற்ற ஒப்பந்தத்தில் சந்திரனும் பிறகோள்களும் அடங்கிய புறவெளியை ஆராய்வதற்காகவும், பயன்படுத்திக் கொள்வதற்காகவும் அரசுகள் மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு அடிப்படையான கோட்பாடுகளை விளக்கமாகக் கூறியுள்ளது. விண்வெளிப் பயணத்திலும் ஆராய்ச்சியிலும் பணத்தைச் செலவிடுவதைத் தவிர்க்க வேண்டுமெனக் கூறினாலும், மனிதனின் விருப்பார்வத்தைத் தடுத்து நிறுத்த இயலாது. விண்வெளிப் பயணத்தின் பயன்களுள் முக்கியமானது வானிலை முன்னறிவிப்பு, தகவல் - செய்திப் பரிமாற்றம் ஆகியன பெற்றுள்ள முன்னேற்றங்களே. உழவர்கள், மாலுமிகள், விமானிகள் ஆகியோர்க்கு வானிலை முன் அறிவிப்புப் பெரும் பயன் தருவன.

இரஷ்யர்கள் அனுப்பி வரும் **காஸ்மாஸ்** வரிசையைச் சேர்ந்த துணைக்கோள்களும், அமெரிக்கர்கள் அனுப்பிவரும் **டைரோஸ்** வரிசைத் துணைக்கோள்களும் தந்துள்ள எடுகோள்கள் பெரும்பயன் விளைவிப்பவை. கதிரவனின் வெப்பத்தை பூமி உறிஞ்சுவதையும், உறிஞ்சிய வெப்பத்தை உமிழ்வதையும் அவை கணித்துள்ளன.

அமெரிக்கர்களின் டெல்ஸ்டார் வரிசைத் துணைக்கோள்கள் வானொலிக்குப் பெரிதும் பயன்படுகின்றன. வானொலி நிகழ்ச்சிகளுக்குத் தேவையான குற்றலைகளை அயனிமண்டலம் திரும்பச் செய்வதைப் போல, தொலைக்காட்சிகளில் பரப்பத் தேவையான நுண்ணலைகளை அவற்றால் திருப்ப இயலவில்லை. இந்தப் பணியை அமெரிக்கர்களின் **'டெல்ஸ்டார்'** செய்து வருகின்றது. இரஷ்யாவிலும் மோல்னியா வரிசைத் துணைக்கோள் இப்பணியைச் செய்து வருகின்றன. உலகளவில் பேரண்டத்

தகவல் தொடர்பு கொள்வதற்கு இத்துணைக்கோள்கள் வாயிலாக ஏற்பாடு செய்யலாம். **“இன்று மனிதன் செயலாற்றி வரும் பல்வேறு துறைகளுக்கும் விண்வெளி ஆராய்ச்சி அளவற்ற முக்கியத்துவம் வாய்ந்தது. கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், மருத்துவம், உலோக உற்பத்தி, தானியங்கிப் பொறியியல், மின்னணுவியல், இராக்கெட்டு நுட்பவியல், பொறியியலின் பல்வேறு துறைகள் ஆகிய அனைத்திலும் கைகூடியுள்ள மிகச் சிறந்த வெற்றிகளை விண்வெளி ஆராய்ச்சித்துறை பயன்படுத்திக் கொள்கின்றது. அதே சமயத்தில் இந்த ஆய்வுத்துறை புவியைச் சூழ்ந்துள்ள புறவெளியின் நிலைமைகள் பற்றிய புதிய மெய்ம்மைகளைக் கண்டறிந்து கூறிப் பல்வேறு அறிவியல் துறைகளைப் பாங்குற வளர்த்துச் செம்மை செய்து வருகின்றது. புதிய அறிவியல் போக்குகளை உருவாக்கித் தருகின்றது. பல்வேறு அறிவுத் துறைகளையும் முன்னேறச் செய்கின்றது”**[42] என்று விண்வெளி ஆராய்ச்சி மற்றும் விண்வெளிப் பயணத்தின் பயன்களை ந.சுப்புரெட்டியார் விளக்கியுள்ளார்.

## ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள் - மதிப்பீடு

ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளுள் அறிவியல் தமிழ்ப்பணியே ஆக்கப் பூர்வமானதாகும். அவர் அறிவியலின் பல்துறைகள் குறித்த அடிப்படை நூல்களை எளிய தமிழில் எழுதியுள்ளார். அவர் உயிரியல் சார்ந்த சிந்தனைகளை விளக்குவதற்கு **‘மானிட உடல்’** என்னும் நூலினை எழுதியுள்ளார். அந்நூலில் மானிட உடலமைப்புக் கூறுகளை பகுப்பாய்வு செய்து தேர்ந்த மருத்துவ வல்லுநரைப் போன்று மனித உடலமைப்புக் குறித்த செய்திகளை விளக்கிக் கூறியுள்ளார். இந்த நூலின் அடிப்படைக் கருத்துக்களைச் செப்பம் செய்து **‘நமது உடல்’** என்னும் மற்றொரு நூலினை எழுதியுள்ளார். இந்நூல் தமிழ்நாடு அரசின் பரிசுபெற்ற நூலாகும்.

தற்காலத்தில் வளர்ந்து வரும் உலக சமுதாயத்திற்கு இன்றியமையாத் தேவையாக உள்ள அறிவியல் தகவல் தொடர்பின் முக்கியத்துவத்தை விளக்கியும் அவர் எளிய தமிழில் பயனுள்ள நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் **‘இளைஞர் வானொலி’**, **‘இளைஞர் தொலைக்காட்சி’** என்னும் இருநூல்களும் குறிப்பிடத்தக்கவை.

**‘அணு’** குறித்த அறிவியல் சிந்தனைகளையும் அவர் தமிழில் எழுதியுள்ளார். ‘மின்னணு’ உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் இன்றைய மக்களுக்கு அணு அறிவியல் குறித்து அவர் எழுதியுள்ள நூல்கள் தேவையான ஒன்றாகும். **‘அணுவின் ஆக்கம்’**, **‘அதிசய மின்னணு’**, **‘அணுக்குரு பௌதிகம்’** ஆகிய நூல்கள் இவற்றுள் குறிப்பிடத்தக்கவையாகும். விண்வெளிப் பயணம், விண்வெளி

ஆய்வுகள் ஆகியன குறித்துத் தமிழில் விரிவாகவும் ஆழமாகவும் எளிமையாகவும் நூல்களை எழுதிய பெருமைக்குரியவர் ந.சுப்புரெட்டியார். அவர் அளவுக்குத் தமிழில் விண்வெளி ஆய்வு நூல்களை எழுதியவர் இல்லை என்றே குறிப்பிடலாம். அவர் இராக்கெட் குறித்து எழுதிய **'இராக்கெட்டுகள்'** என்னும் நூல் தமிழக அரசின் பரிசுபெற்ற நூலாகும். அவருடைய **'அணுக்கரு பௌதிகம்'** என்னும் நூல் சென்னைப் பல்கலைக்கழகத்தின் பரிசினைப் பெற்ற சிறந்த நூலாகும்.

ந.சுப்புரெட்டியார் சந்திர மண்டலப் பயணம் குறித்து முதன்முதலில் தமிழில் விரிவான நூலினை எழுதியுள்ளார். அவற்றுள் **'அம்புலிப் பயணம்'** என்னும் நூல் சிறப்பானதாகும். 'வானமண்டலக் காட்சி' என்னும் நூல் அவரது வானியல் அறிவுக்குச் சிறந்த சான்றாகத் திகழ்ந்து வருகின்றது. **'விண்வெளிப் பயணம்'** என்னும் நூலில் அவர் இரஷ்யா, அமெரிக்கா ஆகிய நாடுகள் விண்வெளி ஆராய்ச்சியிலும், விண்வெளிப் பயணத்திலும் தடம் பதித்த வரலாறுகளையும் சாதனைகளையும் தெளிவுபட விளக்கியுள்ளார். விண்வெளி ஆராய்ச்சியின் சமூகப் பயன்களையும் அறிவியல் பொருளாதார முக்கியத்துவத்தையும் தெற்றென விளக்கியுள்ளார். ந.சுப்புரெட்டியார் பொதுவான அறிவியல் செய்திகளையும், அறிவியல் தொழில்நுட்ப வரலாற்றையும் **'தமிழில் அறிவியல் அன்றும் இன்றும்'** என்னும் நூலில் விளக்கியுள்ளார். அவருடைய தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் (தஞ்சை) பரிசுபெற்ற நூலே **'அறிவியல் விருந்து'** என்னும் நூலாகும். இந்நூல் வளர்ந்து வரும் அறிவியல் புதுமைகளை எளிமையாக எடுத்துரைப்பது குறிப்பிடத்தக்கது.

ந.சுப்புரெட்டியார், **'இல்லற நெறி'** என்னும் நூலினுள் ஆண் பெண் பாலுறவை இலக்கியமாகவும் காமமாகவும் உடல் தேவையாகவும் பார்க்காமல் ஆண்-பெண் உறவின் அறிவியலை மருத்துவப் பார்வையில் விளக்கியுள்ளார்.

## இயல் முடிபுகள்

- பண்டைத்தமிழர்களிடம் அறிவியல் அறிவு நிறைந்திருந்தது என்பதற்கும் அதனை அவர்கள் போற்றி வளர்த்தனர் என்பதற்கும் தமிழ் இலக்கியங்களில் தனி நூல்கள் சான்றளிக்கவில்லை. ஆங்காங்கே சில குறிப்புக்களே காணப்படுகின்றன. ஆயினும் தமிழர்களின் அறிவியல் கலைகள் பயன்முறைக்கலைகளாக அமைந்திருந்தன என்பதற்கு சான்றுகள் உள்ளன.
- பண்டைத்தமிழர் வானநூல் துறையில் பெற்றிருந்த அறிவிற்கு புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை,

சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களில் சான்றுகள் கிடைத்துள்ளன. உலகம் எது என்பதற்கு மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் குறிப்பு காணப்படுகின்றது. திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார் தாயுமானவர் பாடல்களில் பரம்பொருளின் அறிவியல் தன்மை விளக்கப்படுகின்றது.

- அண்டங்கள் குறித்த கருத்து மாணிக்கவாசகர், பாரதியார் பாடல்களில் காணப்படுகிறது. விஞ்ஞானத்தையும், மெய்ஞானத்தையும் இணைத்து காட்டுவதற்கு மாணிக்கவாசகரும், சேக்கிழாரும் முயன்றுள்ளனர். கதிரவனின் இயக்கத்தை கம்பன் தெளிவாக காட்டியுள்ளான். இராசி மண்டலத்தில் உள்ள இராசிகளைப் பற்றிய குறிப்புளகள் பழந்தமிழ் இலக்கியத்தில் சோதிடக்கலை அறிவோடு பதிவு செய்யப்பட்டுள்ளன.
- பண்டைத்தமிழர்களின் பொறியியல் அறிவு கரிகாலனின் கல்லணை, கம்பன் பாடல் ஆகியவற்றின் வாயிலாக தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.
- பண்டைத்தமிழர்களின் உயிரியல் அறிவையும், உயிரியலின் மரபு வழிப்பண்பையும் திருவாசகம், திருக்குறள், கபிலர்அகவல் ஆகியவற்றின் துணை கொண்டு விளக்கப்பட்டுள்ளன.
- வானியல் துறையில் தமிழர்கள் பெற்றிருந்த அறிவியல் அறிவு கம்பஇராமாயணப்பாடலாலும் மருத்துவ துறையில் தமிழர்கள் பெற்றிருந்த அறிவு திருக்குறள், கம்பஇராமாயணம் ஆகிய நூல்களாலும் கணிதவியல் துறையில் தமிழர்கள் பெற்றிருந்த நுண்மான் நுழைபுலம் கம்பராமாயணம், பிங்கலந்தை நிகண்டு ஆகிய நூல்களாலும் விளக்கப்பட்டுள்ளன.
- வானொலி தொலைக்காட்சி பற்றிய இக்கால அறிவியல் அறிவு பாரதிதாசனின் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு பழந்தமிழ் இலக்கியம் முதல் இக்கால இலக்கியம் வரையில் தமிழ் இலக்கியங்களில் பரவலாக குறிப்புகளாகவும், செய்திகளாகவும், துணுக்குகளாகவும் இடம் பெற்றுள்ள அறிவியல் சிந்தனைகளை ந.சுப்புரெட்டியார் இன்றைய வளர்ந்து வரும் அறிவியலில் பல துறைகளாக வகைதொகைப்படுத்தி வெளிப்படுத்தி இருப்பது அவரது அறிவியல் சிந்தனைக்கு ஒப்புதல் அளிப்பதாக அமைகின்றது.
- ந.சுப்புரெட்டியார் ‘**தொலை உலகச் செலவு**’ என்னும் நூலில் விண்வெளி ஆராய்ச்சி, விண்வெளிப் பயணம், அதன் பயன்கள் ஆகியனவற்றை எளிய தமிழில் தேர்ந்த

விண்ணியல் நிபுணரைப் போல செறிவாகவும் சுருக்கமாகவும் விளக்கியுள்ளார்.

- இந்நூலினுள் அவர் மனித வாழ்க்கையில் அறிவியலின் தேவை தொடக்க கால விண்வெளிப் பயணக் கனவுகள், விண்வெளிப் பயணக் கதைகள் தோற்றுவித்த ஊக்கங்களும் ஆக்கங்களும், வளிமண்டலக்கடல், ஐந்து வகையான வளிமண்டலப்பிரிவுகள், அதன் இயல்புகள், அண்டை உலகங்கள் - அதன் குருப்பும் செயல்பாடுகளும், விண்வெளிப் பயணத்தின் சில அடிப்படை அறிவியல் மெய்ம்மைகள், துணைக்கோள்களை இயக்கும் முறை, துணைக்கோள்களின் வகைகள், விண்வெளியைத் துருவி ஆராய்தல், சந்திர மண்டல ஆராய்ச்சி, பிறகோள்கள் மீது சிறப்புக் கவனம் செலுத்துதல், விண்வெளிப் பயணத் துயரங்கள், விண்வெளியில் செலுத்தப்பட்ட உயிர்கள், விண்வெளிப் பயணத்தின் பயனுள்ள அனுபவங்கள், சந்திரப் பயணத்திட்டம், அப்போலோ திட்டம், சந்திரனில் பயணம் குறித்து மனிதன் மேற்கொண்ட ஆய்வுகள், விண்வெளி நிலையங்கள், விண்வெளிப் பயணத்தின் பயன் ஆகியன குறித்த அறிவியல் செய்திகளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கியுள்ளார்.

~ ~ ~ ~ ~

## குறிப்புகள்

1. புறம். 160:8.
2. பெரும்பாண்., 477–480.
3. புறம். 388 : 1-2.
4. சிலம்பு., 10 : 10–103.
5. புறம். 395 : 34-35.
6. புறப்பொருள் வெண்பாமாலை, 174.
7. புறம். 229.
8. மாணிக்கவாசகர், திருவாசகம், திருவண்டப்பகுதி, 1-4.
9. மேலது., 5–6.
10. ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம் - பக்.20-21.
11. திரிகூட இராசப்பக்கவிராயர், திருக்குற்றாலக் குறவஞ்சி, 107.
12. புறம். 27
13. ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம் - ப. 38.
14. கம்பரா. யுத்த.கா., ஊர்தேடு, ப.எ. 1.
15. மாணிக்கவாசகரின் சிவபுராணம், 26-31.
16. குறள். 398.

17. குறள். 114.
18. கபிலரகவல், பக். 68-77.
19. மேலது., பக். 78-83.
20. கம்பரா. சுந்தர., ஊர்தேடு, பா.எ. 2.
21. குறள். 948.
22. குறள். 946.
23. கம்பரா. யுத்., மீட்சி., பா.எ. 118.
24. கம்பரா. யுத்த., படைகாட்சி, ப.எ. 30.
25. பிங்கல முனிவர், பிங்கலத்தை நிகண்டு.
26. கம்பரா. யுத்த., மூலபலம், ப.எ. 228.
27. பாரதிதாசன், சஞ்சீவி பர்வதத்தின் சாரல், 43–47.
28. பெரிய திருவந்தாதி. பா.எ. 34.
29. பாரதியார், கண்ணன் பாட்டு, கண்ணன் - என் தந்தை, 1-2.
30. கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, மலரும் மாலையும், பா.எ. 18.
31. ந.சுப்புரெட்டியார், தொலை உலகச் செலவு, பக். 3-4.
32. மேலது., பக். 6-7.
33. மேலது., ப. 16.
34. பாரதியார் கவிதைகள், கோமதி மகிமை, பா.எ. 7.
35. ந.சுப்புரெட்டியார், தொலை உலகச் செலவு. பக். 20–21.
36. மேலது., பக். 43-44.
37. மேலது., பக். 66–67.
38. மேலது., ப. 75.
39. மேலது., பக். 95–101.
40. மேலது., பக். 113–114.
41. மேலது., பக். 148–149
42. மேலது., பக். 168

# இயல் - 6

# ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணிகள்

**முன்னுரை**

ந.சுப்புரெட்டியார், தமிழ் இலக்கியப் பணிகளுக்காகவே தம் வாழ்க்கையை அர்ப்பணித்துள்ளார் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களில் இடம் பெற்றுள்ள சமய, தத்துவச் சிந்தனைகளை அவர் நம்மாழ்வார் பாசுரங்களைக் கொண்டு ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். அவருடைய **'கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி'** மிகச் சிறந்த தமிழ் இலக்கியப் பணியாகும். **'வடவேங்கடமும் திருவேங்கடமும்'** குறித்த அவருடைய ஆய்வுப்பணி, தமிழ் இலக்கிய வரலாற்றுக்குக் கிடைத்த அரிய கொடையாகும். **'வள்ளுவர் காட்டும் வாழ்வியல்', 'திருக்குறள் - வாழ்வியல் சிந்தனைகள்', 'திருக்குறள் தெளிவு'** ஆகிய நூல்கள் அவரது தமிழ்ப்பணிக்கு மணிமகுடமாகப் போற்றப்படுகின்றன. 1939 முதல் திருக்குறளில் தோய்ந்த அவர் **'மனத்துக்கண் மாசிலனாதல்'** என்னும் குறள் நெறிப்படி வாழ்ந்து வந்தவர். மனம், வாக்கு, மெய்யால் பிறர்க்குத் தீங்கு செய்யாமல் வாழ்வாங்கு வாழ்ந்தவர் ந.சுப்புரெட்டியார். எதற்கும் கவலைப்படாமல் வாழவேண்டும் என்பதே அவருடைய வாழ்க்கை இலக்காகும். **'செய்வனவற்றைத் திருந்தச் செய்தல்'** வேண்டும் என்னும் கொள்கையினர். இவருடைய தமிழ் இலக்கியப் பணிகளை விவரித்துக் காணும் வகையில் இவ்வியல் அமைகிறது.

**திருக்குறள் பணி**

ஏனையத் தமிழ் சான்றோர்களைப் போலவே ந.சுப்புரெட்டியார் குறள் நெறி வாழ்க்கையைப் போற்றியவர். அவர் மு.வரதராசனைப் போன்று திருக்குறளுக்கு மிக எளிமையான உரையினை எழுதியுள்ளார். **'திருக்குறள் தெளிவு'** என்னும் பெயரில் வெளிவந்துள்ள அந்த உரைநூல் மிக எளிமையான, தெளிவான வாழ்வியல் விளக்கங்களைக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ந.சுப்புரெட்டியார் **'திருக்குறள் தெளிவு'** என்னும் இந்நூலினை எழுதியதன் நோக்கத்தை, **"வள்ளுவர் பெருமான் தமிழன்னை பெற்றெடுத்த தவப்புதல்வர். அவரை உலகுக்குக் கொடுத்துத் தமிழ்நாடு வான்புகழை ஈட்டிக்கொண்டது. மன்பதைக்கு வாழ்வியலை உணர்த்துவதற்காக எழுந்தது அவரது நூல். இதுவே அவரது தலையாய நோக்கம். எனினும் அரசியலை அரிய விரும்புவார்க்கு இது ஓர் அரசியல் நூல் ஞானத்தை விரும்புவார்க்கு ஒரு ஞானக்கருவூலம். கவிச்சுவை விரும்புவார்க்கு ஒரு காவியம். அக இலக்கியச் சுவையை விரும்புவார்க்கு ஓர் அருமைப் பெட்டகம் பேரின்பம் நாடுவோர்க்கு ஒரு பேரின்ப நூல் மக்களின் வயது நிலைகட்கேற்ப, மேற்கொண்ட வாழ்க்கை நிலைகட்கேற்ப**

**ஒளிகாட்டும் கலங்கரை விளக்கு. இம்மைக்கும் இன்பம் நல்கி மறுமைக்கும் வீடுபேற்றினை அளிக்கும் நூல். திருக்குறளுக்குப் பல அரிய உரைகள் உள்ளன. அவை அறிஞர்கட்கே உரியவை. இந்தத் 'திருக்குறள் தெளிவு' இளைஞர் முதல் வளர்ந்தவர் வரை எளிதாக அறியுமாறு அமைக்கப் பெற்றுள்ளது. படிப்போர் ஒரு சில உண்மைகளையாவது கடைப்பிடித்து ஒழுகவேண்டும் என்பது என் விருப்பம்"**[1] எனத் தெளிவுப்படுத்தியுள்ளார். திருக்குறளைப் பரப்பும் நோக்கத்தில் எளிமையாக எழுதப்பெற்றதே இந்த உரைநூலாகும்.

**உரையின் அமைப்பும் சிறப்பும்**

திருக்குறளைப் போலவே, ந.சுப்புரெட்டியாரின் உரையும் சுருக்கமும் திட்பமும் நுட்பமும் கொண்டவை. அவர் எளிய நடையில் இரண்டு வரிமுதல் மூன்று வரிக்குள் தம் உரையைச் சுருக்கமாகவே எழுதியுள்ளார்.

**"பிறவி பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்"**[2]

என்னும் குறளுக்கு, **"இறைவனின் திருவடிகளைச் சேர்ந்தவர்களே பிறவிப் பெருங்கடலைக் கடப்பர்; சேராதவர்களால் கடக்க இயலாது"**[3] என இரண்டு அடிகளில் சுருக்கமாகவும் தெளிவாகவும் ந.சுப்புரெட்டியார் உரையெழுதியுள்ளார்.

**"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்**
**ஆகுல நீர பிற"**[4]

என்னும் குறளுக்கு ந.சுப்புரெட்டியார், **"ஒருவன் தன் மனத்திடத்துக் குற்றமிலனாக இருத்தல் வேண்டும்; அவ்வளவே அறம் எனப்படும். மனத்தூய்மை இல்லாத மற்றவை யாவும் ஆரவாரத் தன்மையுடையவை"**[5] என **'அறம்'** என்பதற்குத் தெளிவான வரையறையைத் தந்துள்ளார்.

**வாழ்வார் - வாழாதவர்**

ந.சுப்புரெட்டியார் எந்த அதிகாரத்திற்கும் விளக்கம் தரவில்லை; நேரடியாகவே உரையை எழுதி வருகின்றார். அவருடைய உரையில் பொருள் மயக்கமோ, கருத்து மயக்கமோ இல்லை; வடசொல் கலப்பும் இல்லை; நற்றமிழில் எளிமையான சொற்களைக் கொண்டு, சிறுசிறு தொடர்களில் தம் உரையை அமைத்துள்ளார். இவரது நடை திரு.வி.க.வின் நடையை ஒத்தது. இதற்குச் சான்றாக,

**"வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய**

**வாழ்வாரே வாழா தவர்”[6]**

என்னும் குறளுக்கு ந.சுப்புரெட்டியார், **“வாழ்க்கையில் பழி உண்டாகமல் வாழ்கின்றவரே முறையாக வாழ்கின்றவர் ஆவர்; புகழின்றி வாழ்கின்றவரோ உயிரோடிருந்தும் உயிர் வாழாதவர் ஆவர்”[7]** என எழுதியுள்ள உரையைக் குறிப்பிடலாம்.

## ந.சுப்புரெட்டியாரின் பகுப்புமுறையில் திருக்குறள் தெளிவுரை

ந.சுப்புரெட்டியார், திருக்குறளுக்குத் தாம் எழுதிய தெளிவுரையில் அதன் வைப்புமுறையில் தனிக்கவனம் செலுத்தியுள்ளார். முதற்கண் அவர் **‘அதிகார அகராதி’**யை அகர வரிசை முறையில் அமைத்து அந்தந்த அதிகாரங்கள் இடம்பெறும் பக்கங்களைக் குறித்துள்ளார். அறத்துப்பாலின் முப்பத்தெட்டு அதிகாரங்களையும் பாயிரவியல், இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என்னும் நான்கு இயல்களாகப் பகுத்து உரையெழுதியுள்ளார். அவர் பொருட்பாலின் எழுபது அதிகாரங்களையும் அரசியல், அமைச்சியல், அரணியல், ஊழியல், படையியல், நட்பியல், குடியியல் என்னும் ஏழு இயல்களாகப் பகுத்து உரையெழுதியுள்ளார். இன்பத்துப்பாலின் இருபத்தைந்து அதிகாரங்களையும் களவியல், கற்பியல் என்னும் இரு இயல்களாகப் பகுத்து உரையெழுதியுள்ளார்.

இயல்கள் மற்றும் அதிகாரங்களின் வைப்புமுறைகளில் முரண்பாடுகள் இல்லை. அவர் அறத்துப்பாலின் இறுதியில் கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனார் ஆகியோர் பாடிய **‘திருவள்ளுவமாலை’**ப் பாடல்களைப் பொருக்கு மணிகளாகத் தந்து உள்ளார். பொருட்பாலின் இறுதியில் அரிசிற்கிழார், நத்தத்தனார், மாங்குடி மருதனார், மதுரைத் தமிழ் நாகனார், உருத்திரசன்ம கண்ணா ஆகியோர் பாடிய திருவள்ளுவமாலைப் பாடல்களைப் பொருக்கு மணிகளாகத் தந்துள்ளார். இன்பத்துப்பாலின் இறுதியில் கவிசாகரப் பெருந்தேவனார், உறையூர் முதுகூற்றனார், கொடிஞாழன் மாணிபூதனார், ஆலங்குடிவங்கனார், இடைக்காடர், ஔவையார் ஆகியோர் பாடிய திருவள்ளுவமாலைப் பாடல்களைப் பொருக்குமணிகளாகத் தந்துள்ளார். இறுதியில் செய்யுள் முதற்குறிப்புக்களை அகர வரிசையிலும், அக்குறள்கள் இடம்பெறும் அதிகார எண்களையும் எளிதில் இனம்காண்பதற்கு வசதியாகக் குறித்துள்ளார்.

## சொற்பொருள் விளக்கம்

ந.சுப்புரெட்டியார் திருக்குறளுக்கு எழுதிய உரையைத் **‘தெளிவுரை’, ‘சுருக்கவுரை’, ‘நுட்பவுரை’, ‘அரிய விளக்கவுரை’** என்றே குறிப்பிடலாம். அவர் தம் உரையில் தந்துள்ள சொற்பொருள் விளக்கங்கள் சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன. ந.சுப்புரெட்டியார்,

**“மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**

**பழித்தது ஒழித்து விடின்”**[8]

என்னும் குறளுக்கு, **“உலகம் பழிக்கும் தீச்செயல்களைத் தவிர்த்துவிட்டால் மொட்டையடித்துக் கொள்ளதும் சடையைச் செயற்கை முறையில் வளர்த்துக் கொள்ளலும் வேண்டா”**[9] எனத் திட்பவுரை எழுதியுள்ளார். அவர் **‘உலகம் பழித்தது’** என்பதற்கு ‘உலகம் பழிக்கும் தீச்செயல்கள்’ எனச் சொற்பொருள் விளக்கம் தந்துள்ளார்.

**“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும்”**[10]

என்னும் குறளுக்கு ந.சுப்புரெட்டியார், **“முறைமையோடு ஆட்சிபுரிந்து மக்களைக் காப்பாற்றும் மன்னவன், அம்மக்களுக்குத் தெய்வம் என்று மதிக்கப்படும் உயர் நிலையில் வைத்துப் போற்றப்படுவான்”**[11] என உரையெழுதியுள்ளார். இக்குறளில் அவர் ‘இறை’ என்னும் சொல்லாட்சிக்கு ‘தெய்வம்’ அல்ல; ‘தெய்வமென்று மதிக்கப்படும் உயர்நிலை’ எனப்பொருள் கொண்டுள்ளார்.

**“இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பா ரிலானுங் கெடும்”**[12]

என்னும் குறளுக்கு ந.சுப்புரெட்டியார், **“கடிந்து அறிவுரை கூறும் பெரியோரின் துணையில்லாத பாதுகாப்பற்ற மன்னன் தன்னைக் கெடுக்கும் பகைவர் எவரும் இல்லாதபோது தானாகவே கெட்டழிவான்”**[13] என உரையெழுதியுள்ளார். அவர் இக்குறளில் **‘இடிப்பார்’** என்னும் சொல்லிற்கு **‘படிந்து அறிவுரை கூறும் பெரியோர்’** எனப்பொருள் கொண்டுள்ளார். மன்னன் செங்கோலாட்சிக்கு **‘விமர்சனம்’** தேவை என்னும் சிந்தனையை ந.சுப்புரெட்டியார் இக்குறளில் முன்வைத்துள்ளார்.

## அனுபவ மொழிகள்

ந.சுப்புரெட்டியார் திருக்குறளுக்குத் தாம் எழுதிய உரையில் தம் அனுபவ மொழிகளைப் பரவலாக எடுத்துக் கூறி உள்ளார். இதற்குச் சான்றாக,

**“கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை**
**உள்ளினும் உள்ளம் சுடும்”**[14]

என்னும் குறளுக்கு, **“கேடு வருங்காலத்தில் கைவிட்டு ஒதுங்கிப் போகின்றவரின் நட்பு, ஒருவன் சாகின்ற காலத்தில் நினைத்தாலும் உள்ள வேதனையால் எரியும்”**[15] எனவும்,

**“பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்**
**கழகத்துக் காலை புகின்”**[16]

என்னும் குறளுக்கு, **“நல்லது செய்வதற்கென்று அமைந்த காலம் சூதாடும் களத்தில் கழியுமானால், அ∴து அவனுக்குத் தொன்றுதொட்டு வந்த செல்வத்தையும் இயல்பான நற்பண்புகளையும் கெடுத்து ஒழித்துவிடும்”**[17] எனவும் ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ள உரைகள் சான்றளிக்கின்றன. நட்பின் தன்மை குறித்தும், சூதாட்டத்தின் தீங்கு குறித்தும் அவர் குறித்துள்ள இவ்விளக்கங்கள், அவர்தம் அனுபவ மொழிகள் மட்டுமன்று; ஒவ்வொருவரும் வாழ்க்கையில் சிந்திக்க வேண்டிய பொன்மொழிகள் ஆகும்.

## வடவேங்கடமும் திருவேங்கடமும்

ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணி மற்றும் தமிழாராய்ச்சிப் பணிகளில் முத்தாய்ப்பாக அமைந்திருப்பது அவரெழுதிய **‘வடவேங்கடமும் திருவேங்கடமும்’** என்னும் அரிய ஆராய்ச்சி நூலேயாகும். அறுபத்தைந்து பக்கங்களைக் கொண்ட இச்சிறிய நூலில் அவர் சங்க கால வேங்கடத்தைக் குறித்து விரிவான ஆய்வுச் செய்திகளைத் தொகுத்துத் தந்துள்ளார். இந்த வடவேங்கடத்தை ஆண்ட மன்னர்களைப் பற்றிய தெளிந்த வரலாற்றுக் குறிப்புகளைத் தொகுத்து ஆராய்ந்துள்ளார். இன்றைய திருவேங்கடம் குறித்தும் அவர் தந்துள்ள தகவல்கள் தமிழ் இலக்கிய வரலாற்றுக்கும், தமிழக வரலாற்றுக்கும், தமிழ் இலக்கிய ஆய்வுக்கும் பெரிதும் பயனுள்ளவை.

தொல்காப்பியத்திற்குச் சிறப்புப்பாயிரம் வகுத்த பனம்பாரனார்,

**‘வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்**
**தமிழ் கூறும் நல்லுகம்’**

எனக் குறித்துள்ளார். இதில் **‘தென்குமரி’** என்பது குமரியாறு கடல் கோள் கொண்டது என நச்சினார்க்கினியர் விளக்கம் தந்துள்ளார்.

## சங்க இலக்கியத்தில் வடவேங்கடம்

பட்டினப்பாலை, சிறுபாணாற்றுப்படை ஆகிய பத்துப்பாட்டு நூல்களிலும், அகநானூறு, குறுந்தொகை ஆகிய எட்டுத்தொகை நூல்களிலும் வடவேங்கடம் பற்றிய குறிப்புக்கள் வருணனைகளாகக் காணப்படுகின்றன. இவை இன்றைய வேங்கடத்தில் காணலாகும் காட்சிகளுக்கு முற்றிலும் வேறுபட்டவை. இதனைத் தவிர புறப்பொருள் வெண்பாமாலையிலும் சிலப்பதிகாரத்திலும் வேங்கடம் பற்றிய பல குறிப்புக்கள் காணப்படுகின்றன. இக்குறிப்புக்களைக்

கொண்டு ந.சுப்புரெட்டியார், வடவேங்கடத்தைப் பற்றிய ஆய்வினை மேற்கொண்டு தம் கருத்தினைத் தெளிவுபடுத்தி உள்ளார்.

## அகநானூற்றில் வேங்கடம்

கண்ணனார் என்னும் சங்கப்புலவர் பாடியுள்ள அகநானூற்றுப் பாடலில், **'வேங்கட நெடுவரை'** என்ற தொடர் காணப்படுகின்றது.

**"…………..……………………. சாரல்**
**ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி**
**கன்றுபசி களைஇய பைங்கண் யானை**
**முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்**
**வெவ்வேல் திரையன் வேங்கட நெடுவரை**
**நன்னாட் பூத்த நாகிள வேங்கை"**[18]

**'வேங்கட நெடுவரை'** என்ற தொடர் இப்பாடலில் **'நீண்ட மலைத்தொடர்'** என்னும் பொருளில் வந்துள்ளது ஈன்றணிமை கழிந்த மெல்லிய நடையைக் கொண்ட பெண்யானையும் அதன் கன்றும் பசியால் வாடுகின்றன. இப்பசியைப் போக்குவதற்குப் பசிய கண்ணினையுடைய ஆண்யானை மூங்கிலின் முற்றாத முளையினைக் கொண்டு உண்பிக்கும் மலைச்சாரலைக் கொண்டது திரையனது நீண்ட வேங்கடமலை என்பது இப்பாடலின் குறிப்பாகும்.

நக்கீரர் அகநானூற்றில் வேங்கடத்தை 'வேங்கட வைப்பு' என்று குறிப்பிட்டுள்ளார்.

**"……………….. கல்சேர் வேங்கைத்**
**தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய**
**வேங்கட வைப்பிற் சுரன் இறந்தோரே"**[19]

பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. பொருள்வயிற் பிரிந்த தலைவன் சுரநெறியைக் கடந்து சென்றதைக் குறிப்பிடும்போது வேங்கடமலை பற்றிய இக்குறிப்பு வருகின்றது. வேங்கை மரத்தின் பூக்கள் பல புள்ளிகளைக் கொண்ட புலியின் நிறத்தையொத்துக் கீழே உதிர்ந்து கிடக்கின்றன. வேங்கை மரங்களின் இடையே நாரத்தை மரங்களும் காணப்பெறுகின்றன. இவற்றின் இடையே முசுக்கலைகள் பாய்ந்து தாவுவதால் நாரத்தையின் புதிய மலர்கள் உதிர்கின்றன. இத்தகைய சிறப்புடையது, தேன் நாறும் இடங்களைக் கொண்டது வேங்கட வைப்பு எனப்பாடியுள்ளார் நக்கீரர். மாமூலனார் என்னும் சங்கப்புலவர் பாடியுள்ள அகநானூற்றுப் பாடலில்,

**“நிரைபல குழீஇங் நெடுமொழிப் புல்லி**
**தேன்தூங்கு உயர்வரை நன்னாட்டு உம்பர்**
**வேங்கடம் இறந்தன ராயினும் ஆண்டவர்**
**நீடலர் ………………………………..”[20]**

என வேங்கடம் குறிக்கப்பெற்றுள்ளது. மிக நீண்ட வருணனைகளைக் கொண்ட இப்பாடலில் பொருள்தேடும் பொருட்டுச் சென்ற தலைவன் புல்லி என்பானது நாட்டைக் கடந்து சென்றான் எனக் குறிப்பிடும் மாமூலனார் புல்லி என்பான் ஆண்டுவந்த உம்பர் வேங்கடத்தைச் சுட்டியுள்ளார். தலைவனது பிரிவினால் வருந்தும் தலைவியைத் தோழி ஆற்றுவிப்பதாக அமைந்துள்ள இப்பாடலில் தலைவன் உம்பர் வேங்கடத்தைக் கடந்து சென்றானாயினும் அங்கிருந்து திரும்புவதில் காலம் தாழ்த்தமாட்டாள் என்கின்றாள் தோழி. தலைவன் பிரிவினால் வேறுபட்ட தலைவியைத் தோழி ஆற்றுவிப்பதாகக் கல்லாடனார் பாடிய அகநானூற்றுப் பாடலில் வேங்கடமலை **‘காம்புடை நெடுவரை’** எனக் குறிக்கப்பெற்றுள்ளது.

**“………………..……………… அவரே**
**மாஅல் யானை மறப்போர்ப் புல்லி**
**காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்**
**அறையிறந் தகன்றன ராயினும் நிறையிறந்து**
**உள்ளா ராதலோ அரிதே”[21]**

கண்ணனார், நக்கீரர், மாமூலனார், கல்லாடனார் ஆகிய நான்கு சங்கப்புலவர்களும் வேங்கடமலை குறித்துப் பாடியுள்ளனர். **‘வரை’** என்பதற்கு **‘கோடு’** அல்லது **‘வரம்பு’** என்று பொருளாகும். இச்சொல்லிற்கு **‘மலை’** என்னும் பொதுப்பொருளும் உண்டு. **‘நெடுவரை’** என்று கூறுவது **‘குன்று’, ‘குன்றம்’** என்பதிலிருந்து வேறுபட்டது. இன்று ஒன்றோடொன்று ஒழுங்கற்று நெருங்கிய நிலையில் காணப்பெறும் திருப்பதிமலையைக் குன்று அல்லது குன்றம் எனக் கூறலாம். மகாகவி பாரதியார் இதனை **‘மாலவன் குன்றம்’** என்றார். தொல்காப்பியத்தில் தமிழகத்தின் வடஎல்லையாக வேங்கடமும், தென் எல்லையாகக் குமரியும் கூறப்பெற்றுள்ளன. வேங்கடத்தைப் பற்றிய இலக்கியக் குறிப்புக்களை உற்றுநோக்கும் போது ஒருவர் வடக்கிலுள்ள வேங்கடத்தைக் கடந்து சென்றார். அப்பகுதிகளில் வாழும் மக்கள் பேசும்மொழி முற்றிலும் வேறுபட்டிருக்கும் என்பதையே இலக்கியக் குறிப்புக்கள் தெரிவிக்கின்றன. **‘மொழிபெயர் தேஎம்’[22]** என்னும் தொடர் சங்க இலக்கியங்களில் பெருவழக்குப் பெற்றுள்ளதைக் காணலாம். ஆதலால் அக்காலத்தில் தமிழர்களுக்கு நன்கு பழக்கப்பட்ட திருப்பதி மலையையே **‘வேங்கடம்’** எனக் குறித்ததாகக் கருதலாம். இது நாளடைவில் ஒரு எல்லைக் குறியாகவே (landmark)

அமைந்துவிட்டது. இதனைக் கடந்து அப்பால் சென்றால் அங்குள்ள மக்களிடம் தமிழ், பேச்சு வழக்கில் இல்லாததை அறியலாம்”[23] என்பார் எஸ்.கிருஷ்ணசாமி அய்யங்கார். அவர்,

**“மழபுலம் வணக்கிய மாவண் புல்லி**
**விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்”[24]**

என்னும் அகநானூற்றுப் பாடலின் **‘விழவுடை விழுச்சீர் வேங்கடம்’** என்னும் தொடரை அடிப்படையாகக் கொண்டு ஆண்டு முழுவதும் சமயம் தொடர்பான விழாக்கள் மலிந்தது வேங்கடம் என்கின்றார். இதனால் அங்கு திருக்கோயில் இருந்ததை அறிய முடிகின்றது. ஆயினும் இது ஊகமே என்பார் ந.சுப்புரெட்டியார்.

### சங்கப் பாடல்களில் ‘விழவு’

சங்க இலக்கியத்தில் விழவினைக் குறித்துப் பல பாடல்கள் உள்ளன. அக்காலத்தில் தமிழகத்திலுள்ள அனைத்துச் சிற்றூர்களிலும் விழவு மலிந்து காணப்பெற்றன. ஆண்டுதோறும், பருவந்தோறும் சமூகம், சமயம், தொழில், அரசியல் குறித்துப் பல்வேறு விழாக்கள் நிகழ்த்தப் பெற்றன. **“வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்”[25]** என்னும் புறநானூற்றுப் பாடல்வரியில் திருமணவிழாவும், **“முந்நீர் விழவின் நெடியோன்”[26]** என்னும் புறநானூற்றுப் பாடல்வரியில் கடல்தெய்வத்திற்கு எடுக்கப்பட்ட விழா குறிக்கப்பெற்றுள்ளது. ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து வரும்போது மக்கள் அதில் நீராடிப் புதுப்புனல் விழவு கொண்டாடியது பரிபாடலில்[27] குறிக்கப்பெற்றுள்ளது.

**“போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே**
**கல்லென் பேரூர் விழவுடை யாங்கண்”[28]**

என்னும் புறநானூற்றுப் பாடலடிகளில் போர்விழா குறிப்பிடப்பட்டுள்ளது.

குறுந்தொகையில் **‘விழவு முதலாட்டி’[29]** என்னும் தொடரில் தலைவி இல்லறம் ஏற்ற பின்னரே தலைவனுக்குச் செல்வம் கூடிற்று எனக் கூறுகின்றது. தலைவி வந்த பின்னரே தலைவனுக்குச் செல்வம் அயர்தற்குரிய செல்வநிலை ஏற்பட்டதை,

**“பெருநிலக் குறுமகள் வந்தென**
**இனிவிழ வாயிற் றென்னும்இவ் வூரே”[30]**

என்னும் குறுந்தொகைப் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

**"அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்"**[31]

என்னும் அகநானூற்றுப் பாடலடியும்,

**"மடியா விழவின் யாணர் நன்னாட்டு"**[32]

என்னும் புறநானூற்றுத் தொடரும் ஆண்டு முழுவதும் விழாக்கள் நிறைந்த ஊர்களைக் குறிப்பிடுகின்றன. இவ்வாறு சங்க இலக்கியப் பாடல்களில் விழாக்கள் பற்றிய குறிப்புக்கள் பரவலாகக் காணப்படுகின்றன.

## 'வேங்கடம்' என்னும் பெயர்க்காரணம்

**'வடவேங்கடம்'** குறித்து அறிந்து கொள்வதற்கு **'வேங்கடம்'** என்னும் சொல்லாட்சி பெரிதும் துணைசெய்கின்றது. **'வேம் + கடம்'** என்னும் இருசொற்களின் சேர்க்கையே வேங்கடமாகும். இதில் **'கடம்'** என்பது பாலை நிலத்தைக் குறிக்கும் சொல்லாகும்.

**"பெயல் மழை துறந்த புலம்புறு கடத்துக்**
**கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி"**[33]

என்னும் குறுந்தொகைப் பாடலடிகளில் **'கடம்'** என்னும் சொல் பாலை நிலத்தைக் குறிக்கின்றது.

**"கடம்பல கிடந்த காடுடன் கழிந்து"**[34]

என்னும் சிலப்பதிகாரத் தொடரில் **'கடம்'** என்னும் சொல்லாட்சி பாலைநிலத்து வழியினைக் குறிக்கின்றது.

**"புறவணி கொண்ட பூநாறு கடத்திடை"**[35]

என்னும் நற்றிணைப் பாடலடியில் **'கடம்'** என்பது புதர்கள் அடர்ந்த காட்டினைக் குறிக்கின்றது. **'வேம்'** என்பதற்கு **'எரிதல்'** என்பது பொருளாகும். ஆதலால் 'வேங்கடம்' என்பது கொதிக்கின்ற நீரற்ற சுரம் அல்லது பாலை நிலத்தைக் குறிக்கும்.

**"வெவ்விடைச் செலன்மாலை**
**ஒழுக்கத்தீர்! இவ்விடை**
**.....................................**
**அன்னார் இருவரைக்**
**காணீரோ? பெரும**
**காணேம் அல்லேம்**
**கண்டனம் கடத்திடை;**

**ஆணெழில் அண்ணலோடு**
**அருஞ்சுரம் முன்னிய”**[36]

என்னும் கலித்தொகைப்பாடலில் **‘கடம்’** என்னும் சொல்லாட்சி பாலை நிலத்தையே குறிக்கின்றது. இந்திய நாட்டின் விடுதலைக்குப் பின்னரே **‘திருவேங்கடம்’** (வடவேங்கடம்) நல்ல முன்னேற்றத்தைப் பெற்று வளமுடன் திகழ்வது குறிப்பிடத்தக்கதாகும்.

**வடவேங்கடத்தின் வறட்சி**

அகநானூற்றுப் பாடல்களில் சங்ககால வேங்கடம் நீரற்ற வறட்சிப்பகுதியாகவே குறிக்கப்பெற்றுள்ளன. வன்மையான நிலத்தை அகன்று தோண்டப்பெற்ற கிணறுகளில் வழிப்போக்கர்களின் தண்ணீர் தாகத்தைத் தீர்க்கும் அளவுகூட நீர் ஊறுவதில்லை. குன்றுகளையுடைய இத்தகைய புல்லிநாட்டில் மக்கள் செல்லுதற்கே அஞ்சுவர் என்பதை,

**“அகலிடம் களித்த அகல்வாய்க் கூவல்**
**ஆறுசெல் அசைவிட ஊறும்**
**புடையலங் கழற்கால் புல்லி”**[37]

எனவும்,

தொண்டையர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதியும், புல்லி ஆண்ட வேங்கடத்தைப் போன்ற வறண்ட பகுதியே,

**“நிழற்கவின் இழந்த நீரில் நீளிடை**
**அழலவிர் அருஞ்சுரம் நெடிய வென்னாது”**[38]

எனவும் அகநானூற்றுப் பாடல்கள் குறித்துள்ளன. **‘கோடுகொள் அருஞ்சுரம்’**[39], **‘அருஞ்சுரக் கவலை’**[40] என்றவாறு அகநானூற்றுப்பாடல்களில் வேங்கடத்தின் வறட்சி கூறப்பெற்றுள்ளன. வெப்பம் மிகுந்த வேங்கடத்தின் ஒரு பகுதியாக திருப்பதி மலை இருந்த காரணத்தினால் தான் முதலாழ்வார் மூவரும் இம்மலையை வேங்கடம் எனக் குறித்துள்ளனர். சோணாட்டின் வடஎல்லையில் கிழக்குப் பகுதியில் தொடங்குகின்றது இத்திருப்பதிமலை. இதிலிருந்து வேங்கடம் என்ற பகுதி பாண்டி நாட்டின் வட எல்லையாக நீண்டு மேற்கு கடற்கரை எட்டுவதை,

**“………..…………..…………… வடவயின்**
**வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை**
**மறப்போர் பாண்டியர் அறத்திற் காக்கும்”**[41]

என அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது.

**வடவேங்கடத்தை ஆண்ட மன்னர்கள்**

சங்க இலக்கியத்தில் அகநானூறு, பெரும்பாணாற்றுப்படை, புறநானூறு ஆகியனவற்றில் வடவேங்கடத்தை ஆண்ட புல்லி, திரையன், ஆதனுங்கன் ஆகிய மன்னர்களின் பெயர்கள் கூறப்பெற்றுள்ளன. இது குறித்து ந.சுப்புரெட்டியார் விரிவான ஆய்வினை நிகழ்த்தியுள்ளார்.

**புல்லி** என்னும் சிற்றரசன் தமிழகத்தின் வட எல்லையாகிய வடவேங்கடத்தையும் அதனைச் சூழ்ந்த நாடுகளையும் ஆண்டவன் ஆவான். இப்புல்லி ஆண்ட நாட்டைக் கடந்து சென்றால் வடுகு மொழி பேசும் ‘வடுகர் நாடு’ உள்ளது. இதனை,

**“புடையலம் கழற்கால் புல்லி குன்றத்து**
**நடையரும் கானம் விலங்கி நோன்சிலைத்**
**தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்**
**பிழியார் மகிழர் கலிசிறந்து ஆர்க்கும்**
**மொழிபெயர் தேஎம்”**[42]

என்னும் அகநானூற்றுப் பாடலால் அறிய முடிகின்றது. இப்புல்லி என்னும் மன்னனைப் பற்றிக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், **“இப்புல்லி என்பான் கள்வர் இனத்தாரின் தலைவனாவான். சங்க காலத்திற்குப் பிறகு தமிழகத்தின் அரசியல் அமைதியைக் குலைத்து நாட்டைப் பாழாக்கிய களப்பிரர் என்ற இனத்தாரையும் கள்வர் குலத்தவராகவே கருதுவர் சில வரலாற்று ஆய்வாளர்கள். ‘தென்னவர்’ என வழங்கப்பெறும் பாண்டியர் கள்வர் தலைவராவார் என்றும், அப்பாண்டியர் படைக்குப் பயன்பெறும் யானைகள் யாவும் கள்வர் தலைவனாகிய புல்லி என்பான் வாழும் வேங்கடத்தினின்றே வந்தன என்றும் அகப்பாடல்களால் அறியக்கிடக்கின்றன”**[43] எனக் குறிப்பிடுகின்றார். இதற்கு அவர் அகநானூற்றுப் பாடல்களை (அகம். 342, 27, 83, 61)யும், நற்றிணைப் பாடலையும் (நற்.14) சான்றுகாட்டி விளக்கியுள்ளார்.

**திரையன்** என்பவன் தமிழகத்தின் மூவேந்தர்களோடு ஒருங்கே வைத்து மதிக்கத்தக்க மாண்புடையவன் ஆவான். ஆயினும் இவன் குறுநிலமன்னனே. கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவனாகிய தொண்டைமான் இளந்திரையனே இத்திரையன் ஆவான். சங்கப்பாடல்களில் ‘இனந்தரையனார்’ எனக் குறிக்கப்பெறுபவனும் இவனே. சங்கப் புலவனாகவும் விளங்கிய இவன் நற்றிணையில் (நற். 94, 99, 106) மூன்று பாடல்களையும், புறநானூற்றில் ஒரு பாடலையும் (புறம். 185) பாடியுள்ளான். வெல்வேற் கிள்ளி என்ற சோழனுக்கும், நாகநாட்டு மன்னன் மகள் பீலிவளை என்பாளுக்கும் மகனாகப் பிறந்து, கடலில் கலமூர்ந்து வந்தபோது அது சிதைந்து போனதால் இவன் திரையில் மிதந்து கரைசேர்ந்தான் என மணிமேகலையால்[44] அறியமுடிகின்றது. இக்காரணத்தினால்

இவன் **‘திரையன்’** என அழைக்கப் பெற்றான். அரசன் மகன் என்பதற்கு அடையாளமாக இவன் தொண்டைக்கொடியை அணிந்திருந்ததால் **‘தொண்டைமான்’** எனப்பட்டான். இவன் ஆண்ட தொண்டை நாட்டின் வடக்கெல்லை வேங்கடமாகும். நல்லிசைப் புலவா் வரிசையில் சோ்ந்து பெருமையும் புலமையும் பெற்ற இவன் **‘இளந்திரையம்’** என்னும் நூலினை இயற்றியதாக இறையனாா் அகப்பொருளுரையும் நன்னூல் மயிலைநாதா் உரையும் குறிப்பிடுகின்றன. இவன் பெயரில் **‘திரையனூா்’** என்னும் ஊா் ஒன்றும் உள்ளது.

ஆதனுங்கன் என்னும் குறுநிலமன்னனும் வடவேங்கடத்தை ஆண்டு வந்துள்ளான். ஆதன் அழிசி, ஆதன் அவினி ஆகியோரைப் போன்று ஆதன் நுங்கனும் ஒரு குறுநிலமன்னன் ஆவான். வேங்கடமலையும் அதன் சுற்றுப்புற ஊா்களும் இவனுக்கு உரியவை. இவனுக்குப் பின் வந்தவனே வேட்டுவா் தலைவனான புல்லி என்பான் ஆவான். வேங்கடத்தில் தற்போது திருமால் கோயில் கொண்டிருக்கும் பகுதியே ஆதனுங்கள், புல்லி முதலானோா் நகரமைத்து வாழ்ந்த இடமாகும். சங்கச் சான்றோா் காலத்திற்குப் பின்னரும் இளங்கோவடிகள் காலத்திற்கு முன்னருமாகிய காலப்பகுதியில் இவ்விடத்தில் திருமால் கோயில் எழுந்ததாகக் கருதலாம். இன்று வேங்கடத்தில் சிறுசிறு அருவிகள் ஓடுவதைப்போல அன்றும் ஓடின என்பதை,

**“கல்லிலி அருவி வேங்கடம்”**[45]

என்னும் ஆத்திரையனாா் என்னும் புறநானூற்றுப் புலவா் கூற்றால் தெளியலாம். ஆதனுங்கன் இரவலா் இன்மை தீா்க்கும் இனிய உள்ளம் கொண்டவன். கள்ளில் ஆத்திரையனாா் என்னும் சங்கப்புலவா் தொண்டை நாட்டைச் சோ்ந்தவா். இவா்தம் இளமைக் காலத்தில் ஆதனுங்கனை நாடிச் சென்றாா். இவனை ஆதனுங்கன் அன்புடன் வரவேற்று ஆதரித்ததைப் புறநானூற்றுப் (புறம். 389) பாடலால் அறியமுடிகின்றது.

## இன்றைய திருவேங்கடம்

இன்று கற்றறிந்த புலவா்களும் பொதுமக்களும் திருப்பதிமலையையே **‘வடவேங்கடம்’** எனக் கருதுகின்றனா். மகாகவி பாரதியாரும் வடவேங்கடத்தை **‘வடமாலவன் குன்றம்’**[46] என்றே குறிப்பிட்டுள்ளாா். கோவிந்தராசா் திருப்பதியில் திருக்கோயில் கொண்டிருப்பதால், இந்நகரத்தைப் பக்தா்கள் **‘கோவிந்தராசப்பட்டணம்’** என்றே அழைக்கின்றனா். இந்நகரத்தை ஒட்டிய மலையையும் மக்கள் **‘திருப்பதி’** என்கின்றனா். இதனைத் **‘திருமலை’** என்றும் குறிப்பிடுவா். மலையைத் **‘திருமலை’** என்றும், நகரைத் **‘திருப்பதி’** என்றும் குறிப்பிடுவதே சரியாகும். இந்த மலை தமிழ்கூறும் நல்லுலகத்தின் வட கிழக்கு மூலையிலுள்ள ஒழுங்கற்ற தாழ்வான சில குன்றுகளின்

கூட்டமாகும். இம்மலை **'ஏழுமலை'** என்றே வழிவழியாக வழங்கப்பெற்று வருகின்றது. பேருந்தில் மலைக்குச் சென்றுவர சாலையில் சென்றால் கீழிலிருந்து மேலாக முதலில் விருஷபாத்திரி (எருத்துமலை), அடுத்து முறையே நீலாத்திரி (நீலமலை), அஞ்சனாத்திரி (மைவரை), சேஷாத்திரி (சேடமலை என்னும் சேடம்பாம்பு), கருடாத்திரி (கருடமலை), நாராயணத்திரி (நாராயணமலை), வேங்கடாத்திரி (வேங்கடமலை) ஆகிய ஏழு மலைகளைக் காணலாம். **'அத்திரி'** என்னும் வடமொழிச் சொல் மலையைக் குறிக்கும். இந்த மலைக்குன்றுகள் நேராக ஓர் ஒழுங்கில் அமையவில்லை. அவை ஒன்றையொன்று தழுவிய நிலையில் ஒன்று சேர்ந்த கூட்டம்போல, ஒரு குழப்பமான சுருள்போல அமைந்து காணப்படுகின்றன. இக்குன்றுகள் கடல்மட்டத்திற்கு மேல் 100அடி முதல் 2500அடி வரை உயரம் கொண்டவை.

## 'வேங்கடம்' – சொற்பொருள் மாற்றம்

**'பக்தியியக்கம்'** செல்வாக்குப் பெற்ற இடைக்காலத்தில் **'வேங்கடம்'** என்னும் சொல் புதுப்பொருளைப் பெற்றது. திருவாய்மொழியிலுள்ள

**"வேங்க டங்கள்மெய் மேல்வினை முற்றவும்**
**தாங்கள் தங்கட்கு நல்லன வேசெய்வார்**
**வேங்க டத்துறை வார்க்கு நமதெனல்**
**ஆங்க டமைஅ துசுமந்த தார்கேட்கே"**[47]

என்னும் பாசுரம் **'வேங்கடம்'** என்பதற்குப் புதுப்பொருள் விளக்கம் தருவதாக அமைந்துள்ளது. ஆழ்வார்கள் காலம் வரையில் **'வேம்'** – வெந்துபோம், தடங்கள், பாவங்கள் என்னும் பொருளில் வழங்கின. தன்னை அடைந்தவர்கள் பாவம் அனைத்தையும் ஒழிப்பதனால் இதனை **'வேங்கடம்'** என்றனர். அவர்கள் காலத்திற்குப் பின்னர் **'வேம்'** என்ற சொல் **'எரித்தல்'** என்னும் பொருளை நீக்கி **'பாவம்'** என்னும் பொருளை ஏற்றது. பக்தியியக்கம் ஓங்கியிருந்த காலத்தில் சமயக் கருத்துக்களும் மக்கள் மனத்தில் நுழைந்து, ஏற்கனவே இருந்த சொல்லுக்குப் புதுப்பொருள் விளக்கத்தைக் கண்டதாகக் கொள்ளலாம். பாவமும் பாவச் செயல்களும் ஆன்மாவுக்குத் தாங்க முடியாத வெப்பத்தைத் தருவதாகும் என மனம் கற்பித்துக் கொள்ளத் தொடங்கியது. ஆதலால் **'வேம்'** என்ற சொல்லிற்குப் **'பாவம்'** என்னும் பொருளையும் ஏற்க வேண்டியதாயிற்று. **'கடம்'** என்னும் சொல் சங்ககாலத்தில் பாலை நிலத்தைக் குறித்தது. உரையாசிரியர்கள் **'கடம்'** என்பதற்கு **'அருஞ்சுரம்'** என உரையெழுதியுள்ளனர். **'வேங்கடம்'** என்னும் கூட்டுச்சொல் **'பாவங்களை எரித்தல்'** என்னும் பொருளில் வழங்கப்பட்டு, சங்க காலத்தில் இயற்பெயராக வழங்கப்பட்டு, பக்தி இயக்கக்

காலத்தில் காரணப்பெயராக மாறியது. ஆயினும் நாள்தோறும் வேங்கடத்திற்கு வரும் பக்தர்கள் அதனைத் திருத்தலப் பயணமாகக் கருதாமல் தமது பாவங்களையெல்லாம் **'தீயினில் தூசாக எரிக்கும்'** இடமாகவே கருதுகின்றனர். பல பக்தர்கள் **'வேங்கடம்'** என்னும் திவ்வியதேசம் அழிவில்லாத ஐஸ்வர்யங்களை வழங்கும் இடமாகவே கருதுகின்றனர். **'கலியுக வரதன்'** எழுந்தருளி இருக்கும் இடமாகக் கருதும் பக்தர்களுக்கு **'வேம்'** என்பது **'அழிவின்மை'** என்னும் பொருளையும் **'கடம்'** என்பது **'ஐசுவரியம்'** என்ற பொருளையும் தருவதாகக் கொள்ளலாம். தன்னை அடைந்தார்க்கு அழிவில்லாத ஐசுவர்யங்களைத் தருவதால் இந்தத் திவ்விய தேசம் **'வேங்கடம்'** எனப் பெயர் பெற்றதாக இவர்கள் கருதுகின்றார்கள். திருப்பதி மிதியாப் பாதத்தாலும், சிவனடியை வணங்காத சென்னியாலும் எவ்விதப் பயனும் இல்லை. **'உயிர் நிலையாமை'** குறித்து திருமூலர் பாடியுள்ள பின்வரும் திருமந்திரப்பாடல் குறிப்பிடத்தக்கது.

**"வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை**
**வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை**
**வேங்கடம் என்றே விரகதி யாதவர்**
**தாங்கவல் லாருயிர் தாமறி யாதே"**[48]

இப்பாடலில் **'வேங்கடம்'** என்ற சொல் உடலைக் குறிக்கின்றது. வேங்கடநாதன் வேகும் இயல்புள்ள உடலுக்கு நாதன் ஆவான். **'நாதன்'** என்பது இங்கு **'ஆன்மா'**வைக் குறிக்கின்றது. அது ஆன்மாவுக்கும் ஆன்மாவாக விளங்கும் அந்தர்யாமியாக இருக்கும். பரமான்வையும் குறிக்கின்றது. வைணவ தத்துவத்தில் உயிராகிய சித்தும், உடல், உயிரற்ற பொருள்கள் அனைத்துமாகிய அசித்தும் எம்பெருமானுக்கு உடலாக இருப்பதாகவே கூறப்படுவது எண்ணத்தக்கதாகும். இன்று **'வடவேங்கடம்', 'திரு'** என்னும் அடையைப் பெற்றுத் திருவேங்கடம் என வழங்கப் பெற்று வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

## 'திருப்பதி'யின் வரலாற்றுச் சிறப்பு

திருப்பதி பெரும்புகழைப் பெற்றது **'சமயச்சார்பு'** பெற்ற இடைக்காலத்திலேயே ஆகும். இடைக்காலத்தில் தான் **'திருப்பதி'** திருத்தலப் பயணிகளின் புனிதத்தலமாகக் கருதப்பெற்றது. **'திருப்பதி'** குறித்த சமயச்சார்பான குறிப்புக்கள் புறப்பொருள் வெண்பாமாலையிலும் சிலப்பதிகாரத்திலும் காணப்படுகின்றன. ஐயனாரிதனார்,

**"வெறிகொள் அறையருவி வேங்கடத்துச் செல்லின்**
**நெறிகொள் படிவத்தோய் நீயும் - பொறிகட்கு**

**இருளீயும் ஞாலத்து இடரெல்லாம் நீங்க**
**அருளீயும் ஆழி யவன்"**[49]

என்னும் பாடலில் வேங்கடத்தையும், அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன் திருவாழியுடன் இருப்பதை **'ஆழியவன்'** என்னும் சொல்லாலும் குறித்துள்ளார். இவ்வாறே சிலப்பதிகாரத்தில் **'மாங்காட்டு மறையோன்'** என்பான் திருத்தலப் பயணம் செய்து வருகின்றான். உறையூரையடைந்த கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளுடன் வைகறையாமத்தில் அவ்வூரைக் கடந்து தென்திசை நோக்கிச் செல்கின்றனர். வழியில் அவர்கள் ஒரு இளமரக்காவில் இளைப்பாறுவதற்காகத் தங்குகின்றனர். அப்போது தென்திசையிலிருந்து வடதிசை நோக்கிச் செல்லும் மாங்காட்டு மறையோனும் அங்கு வருகின்றான். அவன் **'தீதுதீர் சிறப்பின் தென்னனை'** என வாழ்த்திக் கொண்டே வருகின்றான். அவனிடம் கோவலன், **"யாது நும்மூர்? ஈங்கெவன் வரவு?"**[50] என வினவுகின்றான். இதற்கு மாங்காட்டு மறையோன் தரும் விடையில் திருவரங்கம், திருவேங்கடம் குறித்த வருணனைகள் வருகின்றன.

**"நீல மேக நெடும்பொற் குன்றத்துப்**
**பால்விரிந் தகலாது படிந்தது போல**
**ஆயிரம் விரித்தெழு தலையுடைய அருந்திறல்**
**பாயற் பள்ளிப் பலர்தொழு தேஎத்து**
**விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்**
**திருவமற் மார்பன் கிடந்த வண்ணமும்**
**வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்**
**ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை**
**விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி**
**இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து**
**மின்னுக் கொடியுடுத்து விளங்குவிற் பூண்டு**
**நன்னிற மேகம் நின்றது போலப்**
**பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்**
**தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி**
**நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு**
**பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய**
**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்**
**என்கண் காட்டென்று என்னிளம் கவற்ற**
**வந்தேன் குடமலை மாங்காட்டுள்ளேன்"**[51]

இதனைத் தவிர சிலப்பதிகாரத்தில்,

**"நெடியோன் குன்றமும் தொடியோன் பௌவமும்**
**தமிழ்வரம் பறுத்த தண்புலம் நல்நாட்டு"**[52]

எனவும்,

**“வேங்கட மயலயம் தாங்கா விளையுள்**
**காவிரி நாடும்”**[53]

எனவும் வேங்கடத்தைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. உறையூர், காவிரியின் தெற்கே உள்ளது. இது திருப்பாணாழ்வார் பிறந்த ஊராகும். உறையூருக்கு நேர் வடக்கில் காவிரி நதியின் வடகரையில் திருவரங்கம் உள்ளது. திருப்பாணாழ்வார் இறைவனோடு கலந்த வரலாறு திருவரங்கத்துடன் தொடர்புடையதாகும்.

மாங்காட்டு மறையோன், கோவலன் மதுரைக்குச் செல்லும் வழியை விளக்கிய பின்னர்,

**“நீள்நிலம் கடந்த நெடுமுடி அண்ணல்**
**தாள்தொழு தகையேன் போதுவல்”**[54]

என்று புன்னைத் திருமால் அடியான் எனக் குறிப்பிடுகின்றான். அவன் திருமாலின் திவ்விய தேசங்களுக்குத் திருத்தலப் பயணம் செய்வதையும் கூறுகின்றான். மாங்காட்டு மறையோன் கோவலனுக்கு மதுரை செல்லும் வழியை விளக்கிய பின்னர், கோவலன் மறையோனை வினவியதற்கு மாற்றாகத் திருவரங்கம், திருவேங்கடம் குறித்த வருணனைகள் வருகின்றன. இதற்கு முன்னர் மாங்காட்டு மறையோன் வேங்கடத்தைக் கண்டதில்லை; அவன் மற்றவர்கள் வாயிலாகக் கேள்விப்பட்டிருக்கின்றான். அவ்வளவே, மறையோன் இறை மேலீட்டால் நேரில் கண்ட திருவரங்கத்தைக் குறைவாகவும், இன்னும் சென்று காணாத திருவேங்கடத்தை மிகுதியாகவும் வருணித்துள்ளான் எனக்கருதலாம்.

## திருவேங்கடத்தின் புகழ்

திருப்பதியின் புகழ் வைணவ சமயச் சார்புடையதாகும். ஆழ்வார் பெருமக்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருவேங்கடம் கி.பி.பதினொன்றாம் நூற்றாண்டில்தான் பெரும்புகழ் பெற்றது. இராமாநுசர் திருவேங்கடத்துத் திருமாலின் மீது காட்டிய அக்கறையும், அவருடைய ஏகாந்தப் பெருமையும் சிறப்புமாகச் சேர்ந்து இத்திருக்கோயிலின் பெருமையை மிகவும் உயர்த்தி விட்டதாகக் கருதுகின்றார் ந.சுப்புரெட்டியார். இராமாநுசர் திருமலைக்கு மூன்று முறை வந்ததாக அவரது வரலாற்றால் அறிய முடிகின்றது. இன்று திருமலையில் நடைபெறும் வழிபாட்டு முறைகள் அனைத்தும் இராமாநுசர் வகுத்தவையே என்று **‘திருமலையொழுகு’**[55] என்ற நூல் கூறுவதாக ந.சுப்புரெட்டியார் கூறுகின்றார். இராமாநுசர் திருவேங்கடமுடையானுக்குக் கைங்கரியம் செய்யும் அர்ச்சகர்க்குக் குடியிருப்பு வசதிகள் உள்ளிட்ட வசதிகளைச் செய்து கொடுத்தார். அவர்தன் தாய்மாமனாகிய திருமலை

நம்பியை இவற்றை கண்காணிக்கும் மேலாளராக நியமனம் செய்தார். இராமாநுசருடைய சமூகச் சீர்திருத்தமும் தத்துவச் சிந்தனைகளும் பாமர மக்கள் உள்ளத்தகைக் கவர்ந்தன. இராமாநுசரின் வடமொழி அறிவு அவருக்குப் பலநிலைகளில் கைகொடுத்தது. அவரது கீதைப் பேருரையும் பிரம்மசூத்திரப் பேருரையும் (வடமொழி) அவரை வடநாட்டினருக்கும் அறிமுகம் செய்து வைத்தன. இதனால் திருவேங்கடத்தின் முக்கியத்துவமும் புகழும் நாடெங்கும் பரவின.

திருவேங்கடமுடையானைச் சைவர்கள் எங்கள் நாயனார், எங்கள் தலைவர் என்று உரிமை கொண்டாடியதாக ஆறாயிரப்படி குருபரம்பரை கூறுகின்றது. இதற்குப் பேயாழ்வாரின் பின்வரும் பாசுரமும் முக்கியக் காரணமாகும்.

**“தாழ்சடையும் நீள்முடியும் தண்மழுவும் சக்கரமும்**
**சூழ்சுரவும் பொன்நாணும் தோன்றுமால் - சூழும்**
**திரண்டருவி பரவும் திருமலைமேல் எந்தைக்கு**
**இரண்டுருவும் நன்றாய் இசைந்து”**[56]

இப்பாசுரம் அரி, அரன் வடிவத்தைக் காட்டுகின்றது. திருவேங்கடமுடையானிடம் சடையும் கிரீடமும் காணப்படுகின்றன. மழுவும் சக்கரமும் உள்ளன. சிவபெருமானுக்குரிய பாம்பாகிய அணியும் காணப்படும். திருமாலுக்குரிய பொன்நாணும் இருப்பதைப் பேயாழ்வார் இப்பாடலில் குறிப்பிடுகின்றார். இதனால் திருவேங்கடமுடையானுக்குச் சைவத்தொடர்பும் இருப்பதைப் பேயாழ்வார் ஒப்புக் கொள்வதாகக் கருதலாம். ஆதலால் பேயாழ்வார் காலத்தில் சிவச் சின்னங்களும் திருவேங்கடமுடையானுக்கு உரியனவாக இருந்ததை அறிய முடிகின்றது. இதனை **‘ஊகம்’** எனக் கொண்டாலும் **‘குருபரம்பரைக் கதை’** இதற்குச் சான்றளிப்பதாக ந.சுப்புரெட்டியார் குறிப்பிடுகின்றார்.

**‘இளங்கிரி’, ‘இளங்கோயில்’**

பிற்காலத்தில் வடவேங்கடத்தில் பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. பூதத்தாழ்வார் இம்மலையை **‘இளங்கிரி’** மலை எனக் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் வருமாறு:

**“நெறியார் குழற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து**
**அறியாது இளங்கிரி என் றெண்ணி – பிறியாது**
**பூங்கொடிகள் வைகும் பொருபுனற் குன்றென்றும்**
**வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு”**[57]

இப்பாடலில் **‘இளங்கிரி’** என்னும் சொல் **‘சிறுமலை’** என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது. இது தொல்காப்பியர் காலம் முதல் பூதத்தாழ்வார் காலம் வரையில், நிலவியல் கூறுகளின்

அடிப்படையில் இம்மலைகட்கு ஏற்பட்ட மாற்றங்களுக்கு ஒரு சான்றாகும். தற்பொழுது கூட வேங்கடம் மலைப்பகுதியில் கோடைக்காலத்தில் கதிரவனின் கடுமையான வெப்பமும், மாரிக்காலத்தில் பெய்யும் மழையும் இப்பகுதியிலுள்ள சிறு பாறைகளைப் பெரும்பெரும் பிறைத்துண்டங்களாகப் பிரிவுபடச் செய்துள்ளன. சில பாறைகளைக் கூரிய கற்குவியலாகவும் கூழாங்கற்களாகவும் சிதைவுபடுத்தியுள்ளன. இன்னும் சில பாறைகளுள் மணலும் மண்ணும் கலந்த மேடுகளாக மாறியுள்ளன. இதனால் ஒரு காலத்தில் வழுக்கைப் பாறைகளாக இருந்த இம்மலைகளில் தற்பொழுது புல் பூண்டுகள், காடுகள் எனப் பல்வேறு தாவர வகைகள் தோன்றியுள்ளன. இம்மலை பூதத்தாழ்வார் காலத்தில் மக்கள் வாழ்விடங்களாக மாறின. இதனால் அவர் இம்மலையைக் குறிக்க 'இளங்கிரி' என்னும் சொல்லை ஆண்டுள்ளார். பூதத்தாழ்வார் பாடிய பின்வரும் பாசுரத்தில் திருவேங்கடமுடையான் கோயில் **'இளங்கோயில்'** எனக் குறிக்கப் பெற்றிருப்பது நோக்கத்தக்கது.

> **"வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமென் றிவ்விரண்டும்**
> **நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல் - நிற்பென்ற**
> **உளம்கோயில் உள்ளம் வைத்துள்ளினேன் வெள்ளத்து**
> **இளங்கோயில் கைவிடேல் என்று"**[58]

இதில் **'இளங்கோயில்'** என்பதற்கு முதற்கோயிலைப் பழுதுபார்க்கும் போது அதிலுள்ள இறைவனின் திருமேனியை எழுந்தருளச் செய்வதற்குத் தற்காலிகமாக அமைக்கப்பெறும் கோயில் என்றே விளக்கம் தருவர். ஆயினும் இத்தகைய தற்காலிகக் கோயில் திருமலையில் இல்லை என்பதே ந.சுப்புரெட்டியார் தரும் சிந்தனையாகும். பூதத்தாழ்வாரின் பாசுரங்களுக்கு உரைவிளக்கம் தரும் ந.சுப்புரெட்டியார், **"ஆழ்வார் எம்பெருமான் திருவேங்கடமுடையானை நோக்கி திருமாலிருஞ்சோலைமலை, திருவேங்கடமலை ஆகிய இரண்டு மலைகளிலும் நீ எவ்வளவு மகிழ்ச்சியுடன் வாழ்கின்றாயோ அவ்வளவு மகிழ்ச்சியுடன் நீ என் இதயத்திலும் வாழ்கின்றாய் என்று கண்டறிந்த அடியேன் 'வெள்ளத்து இளங்கோயில் கைவிடேல்' என்று பிரார்த்திக்கின்றேன்"**[59] என இறைஞ்சுவதாகக் குறிப்பிடுகின்றார். **'வெள்ளம்'** என்பது திருப்பாற்கடலைக் குறிக்கும். திருப்பாற்கடலே திருமாலின் அனைத்து அவதாரங்களுக்கும் மூலமாகும். விபஅவதாரங்களும் அர்ச்சா அவதாரங்களும் திருப்பாற்கடல் வாயிலாகவே நிகழ்வதாக வைணவர்களிடம் நம்பிக்கை உள்ளது. இக்காரணம் குறித்தே திருப்பாற்கடல் **'இளங்கோவில்'** என அழைக்கப்படுகின்றது. **'இளங்கோவில்'** என்பதற்கு **'பாலான்யம்'** என்பது பொருளாகும். இக்காலத்தும் திருக்கோயில்களைப் பழுதுபார்த்துப் புதுப்பிக்கும்போது அங்குள்ள எம்பெருமான் திருமேனியைப் பாலாயப் பிரதிஷ்டை செய்வது வழக்கமாக நடைமுறையில்

இருப்பதைக் காணமுடிகின்றது. வேறொரு பெருங்கோயிலில் சென்று சேர்வதற்கு உறுப்பாகச் சிறுகக் கொள்ளும் கோயில் **'பாலாயம்'** ஆகின்றது. திருமலை முதலிய திவ்விய தேசங்களும் அன்பர்களுடைய இதயம் ஆகின்ற பெருங்கோயிலில் சென்று சேர்வதற்கு – அங்கு இறைவன் வாழ்வதற்குப் பூர்வாங்கமாகவே எம்பெருமான் திருப்பாற்கடலில் வாழ்வதாக ஆழ்வார்கள் உள்ளம் சிந்திப்பதனால், அந்த அநுசந்தானத்திற்கு இணங்கத் திருப்பாற்கடலை **'இளங்கோயில்'** எனக் கூறுதல் பொருத்தமுடையதே.

**"பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்துஎன்**
**மனைக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ"**[60]

என்னும் பெரியாழ்வார் திருமொழி வாக்கிற்கு இணங்க, திருப்பாற்கடலையும் புறக்கணித்துவிட்டுத் தம் இதயத்துள் வந்து சேரும்படியான பேரன்பு எம்பெருமானுக்கு விளைந்தமையைத் தெரிவிப்பதே பூதத்தாழ்வார் பாசுரத்தின் உட்பொருளாகும். இதனால் **'இளங்கோயில்'** என்பது திருமலையிலுள்ள மற்றொரு கோயில் அன்று என்பது தெளிவாகின்றது. இவ்வாறு ந.சுப்புரெட்டியார் சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை, முதல் ஆழ்வார்கள், மகாகவி பாரதியார் ஆகியோர் கூறும் வேங்கடம் தற்போதைய **'திருவேங்கடமே'** என்றும், சங்க காலவேங்கடம் இதிலிருந்து வேறுபட்டது என்றும் தெளிவுபடுத்தியுள்ளார். ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளுள் **'திருவேங்கடமும் வடவேங்கடமும்'** குறித்து அவர் நிகழ்த்தியுள்ள இந்த ஆய்வுப்பணி குறிப்பிடத்தக்கது.

## இலக்கிய வகை ஆராய்ச்சி

ந.சுப்புரெட்டியார், தமிழ் இலக்கிய வகைமையின் தோற்றம், பின்புலம், வளர்ச்சி, இக்கால இலக்கிய வகைமைகளின் போக்குகள் ஆகியனவற்றை விளக்கி சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்கி அறக்கட்டளையின் சார்பில் இலக்கியச் சொற்பொழிவு நிகழ்த்தி உள்ளார். அச்சொற்பொழிவு **'இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இவக்கியங்களும்'** என்னும் தலைப்பில் நூலாக வெளிவந்துள்ளது. இந்நூலினுள் அவர் தமிழ் இலக்கிய வகைமை குறித்த தம் ஆராய்ச்சி நுண்திறனை ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தியுள்ளார். அவரது தமிழ் இலக்கியப் பணிக்கு இந்நூல் ஒன்றே போதுமான சான்றாதாரம் எனக்கொள்ளலாம்.

## தமிழ் இலக்கியத்தின் வரலாற்றுப் பின்னணி

சங்க காலத்திற்கும் கி.பி.ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் சமஸ்சுகிருதம் கற்ற அறிஞர்களின் தொடர்பு தமிழகத்தில் இருந்தது. சமணமும் பௌத்தமும் தமிழகத்தில் பரவத் தொடங்கிய பின்னர், அச்சமயங்களைச்

சார்ந்தவர்கள் சமஸ்கிருதம், பிராகிருதம், பாலி முதலான மொழிகளைக் கற்றனர். இதனால் வடநாட்டு மொழிகளின் சொற்கள் தமிழில் கலந்தன. **“அக்காலத்தில்தான் வடசொற்கள் பல தமிழ் இலக்கியத்திலும் ஏறின. இந்நிலையில் தென்னகத்தில் இலக்கிய மொழிகளாக தமிழும் சமஸ்கிருதமும் திகழ்ந்தன. தமிழைத் ‘தென்மொழி’ என்றும், சமஸ்கிருதத்தை ‘வடமொழி’ என்றும் குறிப்பிட்டனர்”**[61]. அக்காலத்தில் வடமொழியாளர் தமிழைத் **‘திராவிடம்’** என அழைத்தனர். கி.பி.ஏழாம் நூற்றாண்டினரான திருநாவுக்கரசர் வடமொழியான ஆரியத்தையும், தென்மொழியான தமிழையம் **‘ஆரியன் கண்டாய்’ ‘தமிழன் கண்டாய்’** எனச் சமநிலையில் போற்றினார். அவர் இந்தியாவின் கலைவழிப்பட்ட பாகுபாட்டை ஆரியம், தமிழ் என இரண்டு இனமாகவே போற்றினர். கி.பி.எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் தமிழர்களுடன் வடமொழியாளர் தொடர்பு பல நிலைகளில் ஏற்பட்டது. சமணர்கள் சில வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தும் தழுவியும் எழுதினர். வடமொழியை ஆழ்ந்து கற்ற பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் வடமொழியிலேயே **‘மத்தவிலாசம்’** என்ற நாடக நூலை எழுதினார். காஞ்சியில வாழ்ந்த தண்டி என்பவன் வடமொழியில் **‘காவ்யதர்ஷம்’** என்னும் நூலினை எழுதினார். இந்நிலையில் வடமொழி வெறியர்கள் வடமொழியைத் **‘தேவபாஷை’** எனப்போற்றி, தமிழ்மொழியை **‘நீசபாஷை’** என இகழ்ந்தனர். இதனால் தமிழுக்கு இழுக்கு நேரிடும் என்பதை உணர்ந்த தமிழ்ப் பற்றாளர்கள் தேவாரம், திருவாசகம், திவ்வியப் பிரபந்தம் முதலான பக்திப் பனுவல்களுக்கு தமிழ், சமஸ்கிருதச் சொற்களைக் கலந்து மணிப்பிரவாள நடையில் - புதுமொழியில் உரைகளை எழுதினர். ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு வைணவ ஆசாரியர்களும், ஸ்ரீபுராணம் முதலான சமண நூல்களுக்குச் சமணர்களும் மணிப்பிரவாள நடையிலேயே உரையெழுதினர். இசுலாமியப் படையெடுப்பைத் தொடர்ந்து, தமிழகத்தில் விசய நகரப்பேரரசின் ஆட்சி தோன்றியது. நாயக்க மன்னர்கள் தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்றனர். தெலுங்குமொழி பேசுவோர் தமிழ்நாட்டில் குடியேறினர். இதனால் பன்னிரு ஆழ்வார்களின் பாசுரங்கள் தெலுங்கில் மொழிபெயர்க்கப்பெற்றன. காஞ்சிபிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் தெலுங்கு எழுத்தில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை வெளியிட்டுள்ளார்.

## தமிழ் இலக்கிய வளர்ச்சி

தொல்காப்பியத்தைத் தொடர்ந்து பண்டைக் காலத்தில் அகம், புறம் என்னும் துறைகளில் வரையறை செய்யப்பெற்ற ஆயிரக்கணக்கான பாடல்களைப் புலவர்கள் இயற்றினர். கற்பனைக்கு விரிவு கொடுக்கும் அகப்பாடல்கள் மிகுதியாகத் தோன்றின. இப்பாடல்கள் நாடக வழக்கில் புனையப்பெற்றவை. கி.பி.ஐந்து – ஆறாம் நூற்றாண்டுகளில் பக்திப் பாடல்கள்

மிகுதியாகத் தோன்றின. இவற்றையடுத்துக் காப்பியங்களும், பின்னர்ப் புராணங்களும் தமிழில் மிகுதியாகத் தோன்றின. வடமொழிப் புராணங்களின் தமிழ் மொழிபெயர்ப்பே இவற்றுள் மிகுதி. இசுலாமியரின் படையெடுப்புக்குப் பின்னர்த் தமிழ்நாட்டில் அமைதி குன்றியிருந்த காலத்தில் பெருங்காப்பியங்கள் தடைப்பட்டு சிற்றிலக்கியங்களாகிய பிரபந்தங்கள் மிகுதியாகத் தோன்றின. தூது, உலா, மடல், கலம்பகம், பிள்ளைத்தமிழ் முதலான இலக்கிய வகைகள் இவற்றுள் குறிப்பிடத்தக்கவை. ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் ஆங்கில மொழி மற்றும் ஆங்கில இலக்கியத் தொடர்பினால் இலக்கியப் படைப்புலகில் புதிய திருப்பங்கள் தோன்றின. இவ்வாறு தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிப் படிநிலைகளை வரலாற்றுப் பார்வையில் ந.சுப்புரெட்டியார் தெளிவுபடுத்தியுள்ளார்.

## தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கிய வகைகள்

பண்டைக் காலத்தில் தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் செய்யுள் வடிவத்திலேயே படைக்கப் பெற்றன. செய்யுளின் இலக்கணத்தைத் தொல்காப்பியர் செய்யுளியலில்[62] நூற்பாக்களில் தொகுத்துக் கூறியுள்ளார். அவர் 34 செய்யுள் உறுப்புக்களைக் குறிப்பிட்டுள்ளார். இவற்றை மாத்திரை, எழுத்தியல் வகை முதல் **'மாட்டு'** என்னும் யாப்பிலக்கணப் பகுதி வரை இருபத்தாறு என்றும், காப்பியமாகிய தொடர்நிலைச் செய்யுளுக்கு உரியவை அம்மை, அழகு முதல் இழைபு வரையுள்ள **'எட்டு'** என்றும் வகைப்படுத்திக் காட்டியுள்ளார் தொல்காப்பியர். இவ்வாறு தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கிய வகைகளைக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார் **'பா'** என்னும் செய்யுள் உறுப்பினை மட்டும் தெளிவாக ஆராய்ந்து விளக்கியுள்ளார். **'பா'** என்பதற்குப் பேராசிரியர், **"பாவென்பது சேட்புலத்தில் இருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமல் பாடல் ஓதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற்கு ஏதுவானதாகிய பரந்து பட்டுச் சொல்வதோர் ஓசை"**[63] என விளக்கம் தருவார். இந்தப் **'பா'** ஏழு வகைப்படும். அவை பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுமொழி என்பனவாகும்.

> **"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே**
> **அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்"**[64]

இவற்றுள் **'பா'** என்பது அடிவரையறை உடையது ஆகும். **'பா'** என்பது செய்யுளே. ஏனையவே அடிவரையறை அற்றவை. இந்த அடிவரையறை இல்லாதவற்றைத் தொல்காப்பியர்,

> **"எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்**
> **அடிவரை இல்லன ஆறென மொழிப"**[65]

எனத் தெளிவாகவே கூறியுள்ளார். இந்நூற்பாவில் **'எழுநிலம்'** என்பதற்கு இளம்பூரணர் பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்னும் ஏழுவகையான இலக்கிய வகை என்றே உரையெழுதியுள்ளார்.

## செய்யுள் வகைகள்

தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னரும் தமிழில் இலக்கியங்கள் நான்கு வகையான பாக்களால் இயற்றப் பெற்றன என்பதை ந.சுப்புரெட்டியார் தக்க சான்றுகளுடன் தெளிவுபடுத்துகின்றார். அடிநிலையால் பெயரிட்டு வழங்கப்பெறும் ஆசிரியப்பா நான்கு வகைப்படும் என்பார் இளம்பூரணர்,

**"ஆசிரியம் வஞ்சி வெண்பா கலியென**
**நாலியற் றென்ப பாவகை விரியே"**[66]

என்பர். பாவின் இலக்கணத்தை அவர் செய்யுளியலில் பத்தொன்பது நூற்பாக்களில் (செய்.நூற். 101–119) விளக்கியுள்ளார். ஆசிரியப்பா இயற்சீரானும் ஆசிரிய உரிச்சீரானும் ஆசிரியத்தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளையானும் அடியானும் வருவது. ஆசிரியர் அறிவித்தல் போலப் பொருள்களை அறிவித்து நிற்றலால் இது ஆசிரியப்பா என்னும் பெயரினைப் பெற்றது. நேரிசை ஆசிரியம், இணைக்குறளாசிரியம், நிலைமண்டில ஆசிரியம், அடிமறி மண்டில ஆசிரியம் என ஆசிரியப்பா நான்கு வகைப்படும். இதனை ந.சுப்புரெட்டியார் பாரதிதாசன் கவிதைகள், பாரதிதாசனின் குடும்ப விளக்கு, ஐங்குறுநூறு ஆகியனவற்றிலிருந்து சான்றுப் பாடல்களைக் காட்டி விளக்கியுள்ளார். **"ஆசிரியப்பாவின் பெருக்கத்திற்கு எல்லை ஆயிரம் அடியாகும். சுருக்கத்திற்கு எல்லை மூன்றடியாகும். பெருக்கத்திற்குச் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை போன்றவற்றிலுள்ள பாடல்களை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். சுருக்கத்திற்கு 'ஐங்குறுநூறு' என்ற தொகை நூலிலுள்ள பாடல்களைக் எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம்"**[67] என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

## வெண்பா

வெண்ணிறம் போன்ற இயல்புடைமை பற்றி ஒப்பினாகிய பெயரே வெண்பா. இது வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசையானும் அகவலடியானும் முச்சீரடியானும் வருவது ஆகும். நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு, கைக்கிளை, பரிபாடல், அங்கதச் செய்யுள் என்பனவும் அளவொத்தவையும் வெண்பா யாப்பின என்பர் தொல்காப்பியர்.

**''நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே**

**கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோடு**
**ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின”**[68]

இவையெல்லாம் ஓசையால் ஒக்குமாயினும் அளவானும் தொடையானும் பொருளானும் இனத்தானும் வேறுபடும் என்பார் இளம்பூரணர். நெடுவெண்பாட்டிற்குக் குடும்ப விளக்கிலிருந்தும் ந.சுப்புரெட்டியார் உதாரணச் செய்யுளைத் தந்துள்ளார். ந.சுப்புரெட்டியார் வஞ்சிப்பாவினையும் கலிப்பாவினையும் தொல்காப்பிய நூற்பாக்களைக் கொண்டு விளக்கியுள்ளார். துள்ளல் இசையைக் கொண்டு தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் ஆகிய உறுப்புக்களைப் பெற்று வருவதே ‘கலிப்பா’ ஆகும். ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, கொச்சக ஒருபோகு, அம்போதரங்க ஒருபோகு, கலிவெண்பாட்டு, உறழ்கலி ஆகியனவற்றின் இலக்கணத்தை ந.சுப்புரெட்டியார் எளிமையாக விளக்கியுள்ளார்.

## ஒலிநயமும் யாப்பும்

அச்சு வடிவத்தில் காணும் பாட்டு அரையுயிர் பெற்றது. அதைப் பாடிய புலவர் தற்போது இல்லை. பாடிய புலவர்கள் தம் பாடல்களில் முகக்குறிப்பு, கையசைவுகள், இசை ஆகியனவற்றை விட்டுச் செல்லவில்லை. ஆயினும் ஒலிநயம், கற்பனை, மோனை, எதுகை போன்ற கூறுகளையும் அவற்றின் சாயல்களாக விட்டுச் சென்றுள்ளனர். ஆதலால் அச்சுவடிவத்தில் காணும் பாட்டு **‘ஒளிப்பட நெகடிவ்’** போன்றது. கவிதையைப் பாடிய கவிஞன் தான் விட்டுச் சென்ற சாயல்களிலிருந்து கவிதைகளைப் படிப்போர், அதை இயற்றியவரின் உணர்ச்சியை உண்டாக்குதல் வேண்டும். பாரதம், இராமாயணம், பெரியபுராணம் போன்ற காவியங்களைத் தலைமுறை தலைமுறையாகப் படித்து ஒரேவகையான உணர்ச்சியைப் பெற்று வருவதை ந.சுப்புரெட்டியார் இதற்குச் சான்றாகக் குறிப்பிடுகின்றார். **“பாட்டை வாய்விட்டு உரக்கப் படிக்கும் பொழுது பாட்டிலுள்ள ஒலிகள் இயங்குகின்றன. அந்த இயக்கத்தில் ஏற்பட்ட ஒழுங்கே ஒலிநயம் எனப்படுவது. வண்ணம் என்பதும் சந்தம் என்பதும் அதுதான். ‘இழுமென் மொழியால் விழுமியது நுவலல்’ என்று தொல்காப்பியர் கூறுவதும் இதுவே. ‘இழுமென்’ என்பது ஓசையளவில் நின்று பொருளுணர்த்தும் ஓர் ஒலிக்குறிப்புச் சொல் போலாகும். இந்த ஒலிக்குறிப்பு கவிதைக்கு இன்றியமையாது வேண்டப்பெறும் ஓர் உறுப்பாகும். ஒலிகளுக்கு மூன்று தன்மைகள் உண்டு. 1.ஒலியின் கால அளவு; அதனால் அமையும் நீட்டம் குறுக்கம் வேறுபாடு. 2.ஒலியின் தன்மை; வன்மையாகவும் மென்மையாகவும் ஒலிக்கும் வேறுபாடு. 3.ஒலிக்கும் முறை; எடுத்தும் படுத்தும் நலிந்தும் ஒலிக்கும் பொழுது உண்டாகும் அழுத்த வேறுபாடு. இந்த மூன்று கூறுகளும் பல்வேறு அளவிலும் வகையிலும் சேர்ந்து உண்டாகும் ஒலிவிகற்பங்களே ஒலிநயமாகும். இசைக்கலையில்**

**இது அமையும் விதம் வேறு; பாட்டுக்கலையில் இது பயன்படும் விதம் வேறு……. கவிஞனின் உணர்ச்சி அனுபவத்தைப் பெறுவதற்கு ஒலிநயம் துணைசெய்வதைப் போல யாப்பும் துணைபுரிகின்றது. பாட்டினைப் படிக்கும் போது மனம் அறிவுநிலையில் வேகமாக இயங்குவதில்லை. அது உணர்ச்சி வயப்பட்டுக் கற்பனையில் அறிதுயில் கொள்ளகின்றது. இதனால்தான் நெடுந்தொலைவுப் பயணத்தில் கவிதை இலக்கியத்தை விரைவாகப் படிக்க முடிவதில்லை''**[69] என ஒலிநயத்தையும் யாப்பையும் உறழ்ந்து கூறுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

### உணர்ச்சிக்கேற்ற யாப்பு

ந.சுப்புரெட்டியார் கவிதைகளில் உணர்ச்சிக்கேற்ற யாப்பு வடிவம் வேண்டும் என்கின்றார். அப்பொழுதுதான் கவிதையின் வடிவம் சிறக்கும் என்கின்றார்.

### கவிதைச் சுவைகள்

கவிதைகளைக் கனிவித்துப் படிப்போருக்கு இன்பத்தைத் தருவது. அதிலுள்ள உணர்ச்சிக் கூறுகளே. அந்த உணர்ச்சியால் உள்ளம் மகிழ்ந்து பொங்கியெழும் இன்பத்தையே தமிழ் அகஇலக்கண நூலார் **'மெய்ப்பாடு'** என்கின்றனர். வடமொழியாளர் இதனை **'ரஸம்'** என்கின்றனர். தொல்காப்பியர் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியலில் **'மெய்ப்பாடு'** குறித்த செய்திகளை விளக்கியுள்ளார். வடமொழியில் சுவை இலக்கணமும் தமிழில் அணி இலக்கணமும் சிறந்து வளர்ந்துள்ளன. தொல்காப்பியர் குறிப்பிடும் மெய்ப்பாடுகள் வடநூலில் காணப்பெறும் **'ரஸம்' 'பாவம்'** என்னும் இருவகையுள் அடங்கும். தமிழில் இவற்றை முறையே **'சுவை', 'பாவம்'** என்பர் எனக் குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், வடமொழியிலும் தமிழிலும் உள்ள சுவைகளைப் பின்வருமாறு ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றார்.

| | **வடமொழி** | **தமிழ்மொழி** |
|---|---|---|
| 1 | சிருங்காரம் | உவகை |
| 2 | கருணம் | அழுகை |
| 3 | வீரம் | பெருமிதம் |
| 4 | ரௌத்திரம் | வெகுளி |
| 5 | ஹாஸ்யம் | நகை |
| 6 | பயானகம் | அச்சம் |
| 7 | பீபத்ஸம் | இழிவரல் |
| 8 | அற்புதம் | மருட்கை |
| 9 | சாந்தம் | (நடுவு நிலைமை)[70] |

இவற்றுள் **'சாந்தம்'** என்னும் இரசம் உலகியலின் நீங்கியார்க்கு உரியதாகும். அதனை நீக்கி ஏனைய எட்டினையும்

பரதமுனிவர் தமது நாட்டிய நூலில் விளக்கிக் கூறியுள்ளார். தொல்காப்பியரும் இவ்வாறே எண் சுவைகளை விளக்கிக் கூறியுள்ளார்.

## உலகியல் நிகழ்ச்சிகள்

உலகியல் நிகழ்ச்சிகளினால் ஏற்படும் இன்பத்தைச் **‘சுவை’** (இரசம்) எனக் கொள்ள இயலாது. உலகியல் செயல்களுள் நகை, உவகை ஆகியனவற்றில் இன்பம் கிடைப்பதைப் போன்று அழுகை, இழிவரல், அச்சம், வெகுளி ஆகியனவற்றால் இன்பம் கிடைப்பதில்லை. இதனால்தான் சுவை இலக்கண நூலார் உலகியல் இன்பத்தைச் சுவையென்று கொள்ளாமல் நாடகம், காப்பியம் ஆகியனவற்றுள் அச்செயல்கள் நிகழும்போது அவற்றைக் கண்டு கேட்டலால் நல்லறிவாளர் உள்ளத்தில் ஏற்படும் சுவையையே **‘ரசம்’** என்றனர்.

## பாவினங்கள் - தோற்றம்

வாழ்க்கையை ஓர் இயக்கமாகக் கொண்டால், அந்த வாழ்க்கையிலிருந்து தோன்றும் இலக்கியமும் இயக்கமே; இயற்கையின் அனைத்து இயக்கங்களும் சில நியதிகளுக்குக் கட்டுப்பட்ட இயக்கங்களே ஆகும். இவ்வாறு ஓர் அழுத்தம், ஓர் இடை நிறுத்தம் என்ற முறையில் ஒழுங்காக நடைபெறும் இயக்கமே **‘ஒலிநயம்’** என்கின்றார் ந.சுப்புரெட்டியார். ஆழ்ந்த உணர்ச்சியை வெளியிடுவதற்கு செய்யுள் வடிவமே ஏற்றது. டி.கே.சி.செய்யுளின் ரசனையின் முக்கியத்துவத்தை அடிக்கடி வலியுறுத்திக் கூறியுள்ளார். செய்யுளில் ஒலிநயம் அளவுடன் அமைகின்றது. செவிக்கு இனிமைதரும் இந்த ஒலிநயத்தை, செய்யுள் இலக்கியப் பண்பை வளர்த்து வாய்ப்பாடுகளாக்கி ஒருவகைச் செயற்கை அமைப்பைத் தந்து, இந்த வாய்பாடுகள் அமையும் முறையை **‘யாப்பு’** எனப்பெயரிட்டனர். இவ்வாறு வரையறுக்கப்பெற்ற ஒலிநயமே **‘யாப்பு’** ஆகும். கவிஞன் சொற்களின் மூச்சை அறிந்து அவற்றைத் தம் கவிதைகளில் கையாளுகின்றான்.

பழைய **‘பா’** வடிவங்களாகிய வெண்பா, அகவற்பா, வஞ்சிப்பா, கலிப்பா என்பனவற்றுள் **‘கலிப்பா’** மட்டுமே ஓசைநயம் மிக்கதாகும். ஒரு காலத்தில் கலிப்பாவும் பரிபாடலும் செல்வாக்குடன் இருந்ததைத் தொல்காப்பியர் எடுத்துக்காட்டியுள்ளார்.

> **“நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
> **பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
> **கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்**
> **உரிய தாகும் என்மனார் புலவர்”**[71]

எனத் தொல்காப்பிய நூற்பாவை எடுத்துக்காட்டும் ந.சுப்புரெட்டியார், இவை காதல் உணர்ச்சியை விரிவுபடுத்திக்

காட்டுவதற்குப் பயன்படும் என்கின்றார். கலிப்பாவோடு வழங்கிய மற்றொரு பாட்டு வஞ்சிப்பா; இவ்விரண்டும் முறையே துள்ளல், தூங்கல் ஓசைகளைப் பெறும். இவ்விரண்டும் இசையின்பம் மிக்கவை. ஆயினும் இவை செல்வாக்கை இழந்தன. இன்று வரை வெண்பாவும் ஆசிரியப்பாவும் போற்றப்பட்டு வருகின்றன.

### ஆசிரியப் பாவினம்

ந.சுப்புரெட்டியார் ஆசிரியத் தாழிசையை சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையைச் சான்று காட்டி விளக்கியுள்ளார். ஆசிரியத்துறையைத் திருப்பாணாழ்வாரின் அமலனாதிப் பிரான் பாடலை (பா.எ. 9) சான்றுகாட்டித் தெளிவுப்படுத்தியுள்ளார். அவர் ஆசிரிய விருத்தத்தைப் பெரியாழ்வார் (திருப்பல்லாண்டு), திருமங்கையாழ்வார் பெரிய திருவந்தாதி ஆகிய பாசுரங்களைக் காட்டி விளக்கியுள்ளார். அவர் அறுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம், எழுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம், எண்சீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம் ஆகியனவற்றை எளிமையாகவும் சுருக்கமாகவும் நுணுக்கமாகவும் விளக்கியுள்ளார்.

### வெண்பா இனம்

ந.சுப்புரெட்டியார் இரண்டடியாய்த் தம்முன் அளவொத்து வருவதை **‘வெண்செந்துறை’** அல்லது **‘செந்துறை வெள்ளை’** என்று பெயரிட்டு வழங்குவதைக் குறிப்பிடுகின்றார். அவர் வெண்பாவின் இனமான குறட்டாழிசை, வெளிவிருத்தம் ஆகியனவற்றை தக்க சான்றுகளுடன் எளிமையாக விளக்கியுள்ளார்.

### கலிப்பாவினம்

இரண்டடியும் பலவடியுமாக வந்து, ஈற்றடி மிகுந்தும், அல்லாத ஏனைய அடிகள் தம்முன் ஒத்தும் ஒவ்வாதும் வருவது கலித்தாழிசையாகும் என கலிப்பாவின் இலக்கணத்தை விளக்கும் ந.சுப்புரெட்டியார், கலித்துறை, கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, கலிவிருத்தம் ஆகியனவற்றைத் தேவாரம் மற்றும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களைச் சான்றுகாட்டி, எளிமையாக உரை விளக்கம் தந்துள்ளார். யாப்பிலக்கணத்தில் தேர்ந்த புலமை பெற்ற அவர், தமிழ் யாப்பிலக்கணத்தை எளிமையாக அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் விளக்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### வஞ்சிப்பா இனம்

இருசீரடி நான்காய் மூன்று செய்யுள் ஒரு பொருள்மேல் அடுக்கி வருவதே வஞ்சித் தாழிசையாகும். இதனை ந.சுப்புரெட்டியார் திருவாய்மொழிப் பாசுரத்தைக் கொண்டு (திருவாய். 9.4:9) விளக்கியுள்ளார். அவர் வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் ஆகிய வஞ்சிப்பாவின் இனங்களையும் எளிமையாக திருவாய்மொழிப் பாசுரங்களைக் காட்டி விளக்கியுள்ளார்.

## அடிவரையறை இல்லாச் செய்யுள்வகை

நால்வகைப் பாக்களையும் தாழிசை, துறை, விருத்தம் ஆகியனவற்றையும் தொல்காப்பியர் அடிவரையறை உள்ளனவாகப் பாகுபடுத்தினார். அவர் அடிவரையறை இல்லாதனவாக நூல், உரை, பிசி, அங்கதம், முதுசொல், மந்திரம் என்னும் ஆறினையும்[72] குறிப்பிட்டுள்ளார். இவற்றுள் **'நூல்'** என்பது இலக்கணத்தைக் குறிக்கும் சொல்லாகும். தொல்காப்பியர் நூலின் இயல்பினை மரபியலில் இரண்டு நூற்பாக்களில் விளக்கியுள்ளார். (மர.நூற்.100,101). நூலின் அமைப்பைத் தொல்காப்பியர் சூத்திரம் (நூற்பா), ஓத்து, படலம், பிண்டம் என நான்கு வகையாகப் பாகுபடுத்தி விளக்கியுள்ளார்.

தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்னரும் தமிழில் உரை (Prose) நூல்கள் இல்லை என்றே கருத வேண்டியுள்ளது. அக்காலத்தில் அனைத்துமே செய்யுள் நடையிலேயே எழுதப்பட்டன. ஆயினும் தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் இருந்த உரைவகையினை,

**"பாட்டிடை வைத்த குறிப்பினாலும்**
**பாவின் றெழுந்த கிளவி யானும்**
**பொருள்மர பில்லாப் பொய்மொழியானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்று**
**உரைவகை நடையே நான்கென மொழிப"**[73]

என்னும் நூற்பாவினால் அறியமுடிகின்றது. இவற்றுள் **'பாட்டிடை வைத்த குறிப்பு'** என்பது உரையிடைப்பட்ட பாட்டுடைச் செய்யுளாகிய சிலப்பதிகாரத்தில் இடையிடையே வரும் உரைநடையைப் போன்றது. **'பாவின்றெழுந்த கிளவி'** என்பது உலகவழக்கில் பாட்டின்றித் தனியே வழங்கும் வசனநடையாகும். இதனை **'வழக்கின்கண் ஒரு பொருளைக் குறித்து வினவுவாரும் செப்புவாரும் கூறும் கூற்று'** என்பார் இளம்பூரணர். **'பொருள் மரபில்லாப் பொய்மொழி'** என்பது **'ஒரு பொருளின்றிப் பொய்மொழி'** என்பது ஒரு பொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து கூறுவதாகும். அதாவது யானையும் குருவியும் தம்முன் நட்பாடி இன்னவிடத்தில் இன்னவாறு செய்தன என்று அவற்றின் இயல்புக்கு ஒவ்வாத வகையில் இயைத்துரைக்கப் பெற்றுக் கதையளவாய் வரும் உரைநடையாகும். **'பொருளொடு புணர்ந்த நகைமொழி'** என்பது பொய்யெனப்படாது மெய்யெனப்படும் நகைப்பொருள் அனவாக வருவது. அதாவது முழுதும் பொய்யென்று தள்ளப்படும் நிலையிலமையாது உலகியலாகிய உண்மை நிலையை ஒருவற்றான் அறிவுறுத்துவனவாய்க் கேட்போர்க்கு நகைச்சுவையை விளைவிக்கும் பஞ்ச தந்திரக் கதை போலுள்ள உரைநடை, பண்டைக் காலத்தில் வழங்கி

வந்த சிறுகதை இலக்கியத்தையே தொல்காப்பியர் இவ்வாறு குறிப்பிடுவதாக ந.சுப்புரெட்டியார் கருதுகின்றார். இன்றைய **'புதிர்'** அல்லது **'விடுகதை'** போன்றதே **'பிசி'**யாகும். இது ஒப்புமைத் தன்மையோடு பொருந்திய உவமப்பொருளும், ஒன்று சொல்ல மற்றொன்று தோன்றும் துணிவுபட வரும் சொல்நிலையும் என இருவகைப்படும். **" 'யானை செல்லும்' என்று வெளிப்படையாகச் சொல்லாமல் 'பிறை கவ்வி மலை நடக்கும்' என்ற உவமானத்தாலே குறிப்பிற் புலப்பட வைத்தலே 'ஒப்பொடு புணர்ந்த உவமம்' என்பது.**

**அப்பன் சொரியன்**
**ஆத்தாள் சடைச்சி**
**அவர்கள் பிள்ளை**
**சர்க்கரைக் கட்டி**

**என்று இக்காலத்தில் பலாப்பழத்தைக் குறிக்கும் விடுகதையும் அது. மற்றும்**

**நீராடான் பார்ப்பான் நிறஞ்செய்யான் நீராடில்**
**ஊராடும் நீரிற் காக்கை**

**என்பது 'நெருப்பு' என்னும் பொருள் குறிப்பில் தோன்ற அமைந்த சொற்றொடர் நிலை. இது 'தோன்றுவது கிளந்த துணிவு' என்னும் பிசி வகைக்கு எடுத்துக்காட்டு"**[74] எனப் **'பிசி'** வகையை விளக்குகின்றார் ந.சுப்புரெட்டியார். கருத்துப் புலப்பாட்டுக்கும் தெளிவிற்கும் அவர் இதுபோன்ற எளிமையான விளக்கங்களைத் தருவது குறிப்பிடத்தக்கதாகும்.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் தோன்றிய மறைமொழியைத் தொல்காப்பியர் **'மந்திரம்'** என்றார். இதனை ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியர் குறிப்பிடும் ஓர் இலக்கிய வகையாகவே கொள்கின்றார். சொல்லிய சொல்லின் பொருண்மை எங்கும் குறைவில்லாமல் பயன்தரச் சொல்லும் ஆற்றலுடையவரே **'நிறைமொழி மாந்தர்'** ஆவர். **'புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடரே மறைமொழி'** என விளக்கம் தருவார் பேராசிரியர். இதனை விளக்க வந்த ந.சுப்புரெட்டியார், **":திருமறைகள் பூசித்து மூடிச்சென்றிருந்த திருமறைக்காட்டுக் கோயிலின் திருக்கதவுகளைத் திறக்கப்பாடிய 'பண்ணினேர் மொழியாளுமை' (5. 10) என்ற அப்பர் தேவாரமும், அத்திருக்கதவுகளை மூடவும் திறக்கவும் பாடிய 'சகரம்மறை' (2.37) என்ற சம்பந்தர் தேவாரமும், சம்பந்தர் மற்றும் அப்பர் அருளிய திருநீற்றுப் பதிகங்களும் நமச்சிவாயப் பதிகங்களும் 'மந்திரம்' என்று மதிக்கத்தக்கவை"**[75] என்கின்றார். இதிலிருந்து

அவர், தொல்காப்பியர் **‘மந்திரம்’** எனக் குறிப்பிட்டதை ஓர் இலக்கிய வகையாகவே கொண்டிருப்பதை அறிய முடிகின்றது.

எழுத்தின் இயல்பினாலும் சொல்லின் தொடர்ச்சியாலும் புலப்படாது, சொல்லினால் உணரப்படும் பொருட்டுப் புறத்தே பொருளுடையதாய் நிற்பதே குறிப்பு மொழி என்கின்றார் ந.சுப்புரெட்டியார். தொல்காப்பியர் இதனைக் **‘கூற்றிடை வைத்த குறிப்பு’** என்றார்.

**“எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப்**
**பொருள்புறத் ததுவே குறிப்பு மொழி என்ப”**[76]

இதனைத் தவிரப் **‘பண்ணத்தி’** என்ற இலக்கிய வகையையும் தொல்காப்பியர் குறித்துள்ளார். பண்ணத்தி என்பது இசை நூலின் பாவினமாகும். பாட்டில் கலந்த பொருளுடையனவாகிப் பாட்டுக்களின் இயல்புடையனவே **‘பண்ணத்தி’**யாகும். சிற்றிசையும் பேரிசையும் முதலாக இசைத்தமிழில் ஓதப்படுவன பண்ணத்தி என்பார் இளம்பூரணர். இப்பண்ணத்தி பிசியோடு ஓத்த இயல்பினது. பண்ணத்தி என்னும் இவ்விசைப் பாடல்களின் அடியளவின் பேரெல்லை பண்ணிரண்டு அடியாகும். இவ்வாறு ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கிய வகைகளை வகைப்படுத்தி விளக்கம் தந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## தமிழ் இலக்கிய வகைகள் - வளர்ச்சி வரலாறு

தொல்காப்பியர் தம் காலத்தில் செய்யுள் வடிவங்களில் வழங்கிய இலக்கிய வகைகளைத் தம் இலக்கணநூலில் குறிப்பிட்டுள்ளார். கலிப்பாட்டும் பரிபாடலும் தொல்காப்பியர் காலத்தில் ஒருவகையான நெகிழ்ச்சியான ஒலியமைப்பைக் கொண்டிருந்தமையால் அவை நாட்டுப்பாடல்வடிவத்தோடு ஒத்திருக்க வேண்டும். அகப்பாடல்களைப் பாடுவதற்கு அவை ஏற்றனவாகத் திகழ்ந்தன. ஆயினும் எப்படியோ இவை தம் செல்வாக்கினை இழந்துவிட்டன. வெண்பாவும் ஆசிரியப்பாவும் வாழ்வு பெற்றன. சங்க இலக்கியத்திற்குப் பிறகே வெண்பா செல்வாக்குப் பெற்றது. கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோவடிகள் நாட்டுப்புறப்பாடல்களின் பல வடிவங்களைத் தம் காப்பியத்தில் பரவலாகக் கையாண்டுள்ளார். மங்கல வாழ்த்துப் பாடலை மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்பார் அடியார்க்கு நல்லார். கனாத்திறம் உரைத்த காதையை அவர் ‘கலிவெண்பாட்டு’ எனக் குறித்தார். ஆய்ச்சியர் குரவையை அடியார்க்கு நல்லார் மயங்கிசைக் கொச்சகம் என இனங்காட்டியுள்ளார். அவர் கூற்றுப்படி 51 அடிகளைக் கொண்ட வஞ்சினமாலை கலிவெண்பாட்டாகும். அடியார்க்கு நல்லார் துன்பமாலையை மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்றும், ஊர்சூழ் வரியை

அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்னும் வகைப்படுத்தியுள்ளார். அரும்பத உரைகாரர் குன்றக்குரவையை கொச்சகக் கலிப்பா என்றார். வாழ்த்துக்காதையையும் அத்தகையதொரு கொச்சகக் கலிப்பாவாகக் கொள்ளுவதற்கு ஏற்றதே என்பார் அரும்பத உரைகாரர். வழக்குரைகாதையும் அத்தகையதே. சிலப்பதிகாரத்தின் 2, 3, 4, 5, 6, 8, 10, 11, 13, 14, 15, 16, 22, 25, 26, 27, 28, 30 எண்களைக் கொண்ட பதினெட்டுக் காதைகளும் நிலைமண்டில ஆசிரியப்பாக்களாகும். ஆதலால் சிலப்பதிகாரம் பாவகையால் ஒவ்வொரு காதையும் தனித்தனிச் செய்யுட்களாக அமைந்துள்ளன. இப்போக்கு பண்டையப் புலவர்களிடம் பரவலாகக் காணப்படுகின்றது.

## சிலப்பதிகாரத்தில் நாட்டுப் பாடல் வடிவங்கள்

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் நாட்டுப்பாடல் வடிவங்களையும் பரவலாகக் கையாண்டுள்ளார். **‘கானல்வரி’** என்பது நெய்தல் பாட்டு வகையாகும். இங்குள்ள வரிப்பாட்டு மக்களைப் பழிச்கும் வரிப்பாட்டாகும். அரும்பத உரைகாரர் வரிப்பாடல்கள் ஏழுவகைப்படும் என்கின்றார். அவை ஆற்றுவரி, சார்த்துவரி, திணைநிலைவரி, மயங்கு திணைநிலைவரி, முகமுடைவரி, முகமில்லாவரி, படைப்புவரி என்பனவாகும். கானல்வரியில் **‘திங்கள்மாலை வெண்குடையான்’** என்ற பாடல் முதல் தொடர்ந்து வரும் இரண்டு பாடல்களும் காவிரியைப் பாடுவதைப்போல் ஆற்றைப்பாடுவதாகும். கோவலன் இவற்றைப் பாடியுள்ளான். **‘பாட்டுடைத் தலைவன் பசியோடும் பேரொடும் சார்த்திப் பாடின் சார்த்தெனப்படுமே’** என்னும் ஒரு நூற்பாவை எடுத்துக்காட்டி அரும்பத உரைகாரர் சார்த்துவரியை விளக்கியுள்ளார். கானல்வரியில் பாட்டுடைத் தலைவனாக வரும் சோழன் என்ற பெயரொடும் அவன் ஊராகிய பூம்புகாரோடும் சார்த்துவரி வருவதை ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டியுள்ளார். சிலப்பதிகாரத்தில் வேட்டுவரியும் ஊர்சூழ்வரியும் நாட்டுப்புறப்பாடலும் கூத்துமாக அமைந்துள்ளன. குன்றக் குரவையும் ஆய்ச்சியர் குரவையும் வரிப்பாடல்களாகும். வெண்பா, ஆசிரியப்பா இரண்டிலும் வெண்பா இசை இன்பம் மிக்கது. ஆயினும் அவை ஓசை வேற்றுமைக்கு இடம் தராதவை. கி.பி.ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் பக்திப் பாடல்களைப் பாடிய நாயன்மார்களும் ஆழ்வார்களும் இளங்கோவடிகளைப் பின்பற்றி நாட்டுப்புறப் பாடல்களின் கூறுகளைப் பயன்படுத்தியுள்ளார். இதிலிருந்து தோன்றியதே **‘விருத்தம்’** என்னும் செய்யுள் வடிவம்[77] என்பார் ந.சுப்புரெட்டியார். இந்த விருத்த வகைப் பாடல்களைப் பயன்படுத்தியே ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தி இயக்கத்தை வளர்த்தனர். **‘விருத்தம்’** தமிழ் பா வகையைச் சார்ந்தது.

## விருத்தக் காப்பியங்கள்

பல்வேறு வடிவங்களைக் கொண்ட விருத்தப் பாவில் காப்பியத்தை இயற்றினால் அது பொதுமக்களின் வரவேற்பைப்

பெறும் என்ற சிந்தனை திருத்தக்கத்தேவரின் உள்ளத்தில் தோன்றியது. அவர் இதனை மனத்தில் கொண்டே **'சீவக சிந்தாமணி'** என்னும் பெருங்காப்பியத்தை(சமணம்) இயற்றினார். இதுவே விருத்தம்பாவில் தோன்றிய முதல் தமிழ்க் காப்பியமாகும். இவருக்குப் பின்னர் **'இராமகாதை'**யைப் படைத்த கம்பர் விருத்தப்பாவின் உச்சத்தைத் தொட்டார். **'விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்'** எனப் போற்றப்பட்டார். கம்பன் நான்கு சீர்களைக் கொண்ட கலிவிருத்தத்தில் அறுபது வகை ஓசையுள்ள கவிதைகளை இயற்றியுள்ளார்.

## தமிழ் இலக்கியம் - வகைமைப்பாடு

ந.சுப்புரெட்டியார் தமிழலக்கியங்களைப் **'பேரிலக்கியங்கள்'** என்றும் **'சிற்றிலக்கியங்கள்'** என்றும் வகைமைப்படுத்திக் காட்டியுள்ளார். அவர் கருத்துப்படி அடிகளால் மிகுந்து பொருள்களால் சிறந்து மக்கள் வாழ்வைச் செம்மைப்படுத்தி இன்பம் அளிக்கத் தோன்றியவையெல்லாம் பேரிலக்கியங்கள் ஆகும். சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் ஆகியவை பேரிலக்கியங்கள் ஆகும். அடிகளால் குறைந்து கற்பனைவளம் மிகுந்து கடவுள்களையும் வெற்றியால் நாட்டு எல்லையை விரிவுபடுத்திய மன்னர்களையும், கொடை வன்மையாலும் பிறவற்றாலும் புகழ்பெற்ற வள்ளல்கள் மற்றும் வேளிர்களையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு இயற்றப்பெற்றவை எல்லாம் **'சிற்றிலக்கியங்கள்'** ஆகும். **'பிரபந்தங்கள்'** என்னும் வடசொல்லால் குறிக்கப் பெறுபவை அனைத்தும் சிற்றிலக்கியங்களே.

## சிற்றிலக்கியங்களின் வளர்ச்சி

கி.பி.எட்டாம் நூற்றாண்டு முதல் சிற்றிலக்கியங்கள் வளர்ந்து பல்கிப் பெருகின. இவை கோவை, உலா, பரணி, பிள்ளைத்தமிழ், அந்தாதி, கலம்பகம், தூது, குறவஞ்சி, பள்ளு, மடல், அல்லி அரசாணி மாலை, பவளக் கொடிமாலை, ஏணி ஏற்றம், நல்லதங்காள் கதை என பல்வேறு வகைமைப்பட்டவையாகும். இச்சிற்றிலக்கியங்களை விளக்கும் ந.சுப்புரெட்டியார், **"இவற்றுள் உலகியல் கடந்த கற்பனை நிகழ்ச்சிகளும் புராணக்கதைகளும் உயர்வு நவிற்சியணிகளும் திரிசொல்லாட்சிகளும் இல்பொருள் உவமைகளும் நிறைந்து கற்பவர் உள்ளங்களைக் கவர்ந்து நிற்கும். இச்சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகைப்படும் என்று கூறும் மரபும் உண்டு. சிற்றிலக்கியங்களின் இலக்கணம் கூறும் நூல்களும் பிற்காலத்தில் எழுந்தவையேயாகும். பன்னிரு பாட்டியல், வச்சணந்திமாலை என்னும் வெண்பாப்பாட்டியல், நவநீதப்பாட்டியல், சிதம்பரப்பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் போன்ற நூல்களே சிற்றிலக்கியங்களுக்கு இலக்கணம் கூறும் நூல்களாகும். இதில் ஒரு விநோதம் என்னவென்றால், சமுதாயத்தில் சாதிக்கொடுமையை வகுத்து வைத்ததைப்போல**

**எழுத்து இலக்கணத்திலும் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என்ற சாதியாருக்கும் உரியவையாக எடுத்துக்களைப் பாகுபடுத்திக் கூறும் மரபும் எழுந்தமை கொடுமையிலும் கொடுமையாகும்”**[78] என்கின்றார். சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு என்ற வரையறைக்குள் அடங்காத நொண்டி நாடகம், கப்பற்பாட்டு, வில்லுப்பாட்டு, கும்பிப்பாட்டு, கோலாட்டப்பாட்டு, ஆனந்தக் களிப்பு, கிளிக்கண்ணி, விலாசம், புலம்பல், உந்திபறத்தல், காதல், ஏற்றப்பாட்டுமுதலான பலவகைச் சிற்றிலக்கியங்களும் காணப்படுகின்றன.

**‘பரணி’** என்பது நாளின் நட்சத்திரத்தின் பெயராகும். **‘பரணி’** நாளில் கொண்டாடப் பெறும் போர் வெற்றிவிழா, **‘பரணி’** என்னும் நூலுக்கும் பெயராயிற்று. **‘பரணியில் பிறந்தான் தரணி ஆள்வான்’** என்னும் முதுமொழி தோன்றியது போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனின் வெற்றியைப் புகழ்ந்து பாடுவது **‘பரணி’** இலக்கிய மரபாகும். ஆயினும் தோற்றோனைச் சார்ந்தே தமிழில் பரணி நூல்களுக்குப் பெயரிடப் பெற்றுள்ளன. கலிங்கத்துப்பரணி, இரணியவதைப் பரணி, கஞ்சவதைப் பரணி ஆகிய நூல்களின் பெயர்கள் இதற்குச் சான்றளிக்கின்றன. பரணி நூல்கள் ஈரடிக் கலித்தாழிசையால் பாடப்பெற்றுள்ளன.

கோவை நூல்கள் பெரும்பாலும் கட்டளைக் கலித்துறை யாப்பால் பாடப்பெறும் எனக்கூறும் ந.சுப்புரெட்டியார், **“கலிப்பாவின் இனமான கட்டளைக் கலித்துறை யாப்பு காரைக்கால் அம்மையாரின் ‘திருவிரட்டை மணிமாலை’யில் தான் முதன்முதலாகக் காணப்படுகின்றது. இந்த யாப்பு கி.பி.ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தேவராத் திருமுறைகளிலும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களிலும் பயின்று வந்துள்ளன. அகத்திணை ஒழுகலாற்றினை நானூறு துறைகளாக வகுத்தமைத்துப் பொருள் தொடர்நிலையாக நானூறு செய்யுட்களால் முதன்முதலாகக் கோவை பாடியவர் மாணிக்கவாசகப் பெருமானே ஆவார். இவ்வாறு அவர் தேர்ந்து கொண்டமைக்கு நற்றிணை நானூறு, குறுந்தொகை நானூறு, நெடுந்தொகை நானூறு என அமைந்த சங்கத்தொகையே அடிப்படையாக அமைந்திருத்தல் வேண்டும். இந்நூல் இயற்கைப்புணர்ச்சி முதல் பரத்தையிற்பிரிவு ஈறாக இருபத்தைந்து கிளவிக் கொத்துக்களாகப் பகுக்கப்பெற்ற இருபத்தைந்து அதிகாரங்களையுடையதாகும்”**[79] என மாணிக்கவாசகரின் திருக்கோவையாரின் அமைப்பினைத் தெளிவுபடுத்துகின்றார்.

**பாண்டிக்கோவை**

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தான் இறையனார் களவியலுரை எழுத்து வடிவம் பெற்றது. களவியலுரையில் விரித்துக் கூறப்பெறும் துறைகளுக்கு இலக்கியமாக அந்நூலில் உரையாசிரியரால் காட்டப்பெறும் மேற்கோள் செய்யுட்களில்

கட்டளைக் கலித்துறையில் அமைந்த கோவைச் செய்யுட்கள் 326, பாண்டிக்கோவை என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றன. இப்பாடல்களின் பாட்டுடைத் தலைவன் மாறவர்மன் அரிகேசரி என்னும் சிறப்புப்பெயரினைக் கொண்ட நெய்வேலிப் போரில் வென்ற நின்றசீர் நெடுமாறன் ஆவான். இவன் திருஞான சம்பந்தர் காலத்துப் பாண்டிய மன்னன் ஆவான். களவியலுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ள பாண்டிக்கோவைப் பாடல்களுள் ஒரு துறைக்கே ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்கள் உள்ளன. பாண்டிக்கோவைச் செய்யுட்களாக 326, களவியலுரையில் காணப்பெறினும் அப்பாடல்களால் 175 அகத்துறைகளே விரித்துக் கூறப்பெற்றுள்ளன. தொல்காப்பியத்திலும் இறையனார் களவியல் உரையிலும் அகத்திணைத் துறைகள் நானூறு என்னும் வரையறை கூறப்படவில்லை. இவ்வாறு ந.சுப்புரெட்டியார் விருத்தம், தாழிசை, துறை என்னும் யாப்புக்களில் அமைந்த சிற்றிலக்கியங்களை நுணுக்கமாக விளக்கிக் காட்டியுள்ளார்.

## புதிய வகைச் செய்யுட்கள்

ந.சுப்புரெட்டியார் **'புதியவகைச் செய்யுட்கள்'** என்னும் பகுதியில் கும்மி, சிந்து போன்ற யாப்பு வகைகளை விளக்கியுள்ளார். இந்த யாப்பு வடிவத்தில் இராமலிங்க அடிகளார், பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை போன்றோர் பல அரிய பாடல்களை இயற்றியுள்ளனர். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் **'மலரும் மாலையும்'** என்னும் கவிதை நூலில் காணப்பெறும் பிச்சைக்காரர் கொம்மாளம், செல்வமும் சிறுமையும் ஆகியனவற்றிலிருந்து கும்பிப்பாடல்களுக்குச் சான்றுகளைக் காட்டியுள்ளார் ந.சுப்புரெட்டியார். பாரதியாரின் **'பெண்கள் விடுதலைக் கும்மி'** இதற்குத் தக்க சான்று என்கின்றார். **'சிந்து'** வகைப் பாடல்களுக்கு ந.சுப்புரெட்டியார் மகாகவி பாரதியாரின் பெண்கள் விடுதலைக் கும்மி, திரிகூட ராகப்ப கவிராயரின் குற்றாலக் குறவஞ்சி, பாரதியாரின் கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகியனவற்றிலிருந்து தக்க சான்றுப் பாடல்களைத் தந்து எளிமையாக விளக்கியுள்ளார். அவர் சிந்துப்பாடல்களைச் சமநிலைச் சிந்து, வியனிலைச் சிந்து, நொண்டிச் சிந்து, காவடிச் சிந்து என வகைப்படுத்திப் பிற்காலத்தில் புதுவகைச் செய்யுட்களின் வளர்ச்சியை விளக்கியுள்ளார்.

## குழந்தை இலக்கியம்

ந.சுப்புரெட்டியார் புதிய வகைப் பாடல்களுக்குப் பின்னர் தோன்றிய இலக்கிய வகைகளாகக் குழந்தை இலக்கியம், புதுக்கவிதை இலக்கியம் ஆகிய இரண்டினையும் குறிப்பிடுகின்றார். புதுக்கவிதைக்குச் சற்று முன்னரோ, பின்னரோ குழந்தைப்பாடல்கள் தோன்றின. தேசியகவி பாரதியார் தான் முதன்முதலாக **'பாப்பா பாட்டு'** என்னும் கவிதையின்

வாயிலாகக் குழந்தை இலக்கியத்திற்கு வித்திட்டார். அவரது **‘புதிய ஆத்திசூடி’**யிலும் **‘முரசு’**ப் பாட்டிலும் குழந்தை இலக்கியக் கூறுகள் காணப்படினும் இவையிரண்டும் வயது முதிர்ந்தோரின் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டவை. பாப்பா பாட்டின் கோழி, காக்கை, பசு, நாய், குதிரை, மாடு, ஆடு இவற்றை ஆதரிக்க வேண்டுமெனவும், பொய்சொல்லல், சோர்வு, சோம்பல், தாய் சொல்லைத் தட்டாதிருத்தல், நாட்டுப்பற்று, தமிழ், இந்தியநாடு, சாதி, நீதி, அன்பு ஆகியன குறித்த கருத்துக்களும் குழந்தை அனுபவங்களை ஒட்டியவை.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் **‘மலரும் மாலையும்’** என்னும் கவிதைத் தொகுப்பு நூலினுள் இடம்பெறும் **‘மழலை மொழி’**ப் பகுதியில் இடம்பெற்றுள்ள **‘முத்தந்தா’** என்பது முதல் **‘பாண்டியாடுதல்’** வரையுள்ள பதினாறு பாடல்களும் குழந்தைகளின் அனுபவத்தைச் சித்திரிப்பவை. கவிமணியின் கோழி, நாய், கிளி, பசு, பால் ஆகிய பாடல்கள் அற்புதமானவை. குழந்தைகளின் நாவில் எளிமையாகப் புகுந்து இன்பம் தருபவை. பாரதியாரின் குழந்தைப் பாடல்களை விட கவிமணியின் குழந்தைப் பாடல்கள் வளர்ந்து விரிந்தவை.

கவிமணியைத் தொடர்ந்து பாவேந்தர் பாரதிதாசன் ஒரு தாயின் உள்ளம் மகிழ்கின்றது. இளைஞர் இலக்கியம் ஆகிய இரண்டு தனி நூல்களை இயற்றி சிறுவர் மற்றும் இளைஞர் இலக்கியப் படைப்பை விரிவுபடுத்தியுள்ளார். இம்மூவர்களையும் தவிரக் குழந்தை இலக்கியப் படைப்பிற்காகவே தோன்றியவர்களுள் முதன்மையர் அழவள்ளியப்பா ஆவார். இவர் குழந்தைகளுக்காக **‘மலரும் உள்ளம்’** என்னும் கவிதைத் தொகுப்பு நூலினை விட்டுச் சென்றுள்ளார். இவரைத் தொடர்ந்து இவரது வாரிசு போல் செட்டிநாடு தந்த இளங்குழந்தைக்கவிஞர் குழ.கதிரேசன் என்பவர் ஆவார். இவரது முதல் நூலாகிய **‘எலிகடித்த பூனையும்’** மற்றொரு நூலாகிய **‘பேசும் கிளியும்’** தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்களாகும்.

## பேச்சுப் பயிற்சி

ந.சுப்புரெட்டியார் குழந்தைகளுக்கு மொழி கற்பித்தலில் பேச்சுப்பயிற்சி இன்றியமையாதது என்கின்றார். குழந்தைகள் சற்று வளர்ந்த நிலையில் இல்லத்தில் தாயும் குழந்தைப் பள்ளிகளில் ஆசிரியர்களும் குழந்தைகளுக்குப் பேச்சுப் பயிற்சி தரவேண்டும் என்கின்றார். அப்போது தான் குழந்தைகளின் நாக்குத் திருந்தும் என்கின்றார். அவர் குழந்தைகளின் பேச்சுப் பயிற்சிக்கு ஏற்றனவாக பாரதியாரின் பாப்பா பாட்டு, கவிமணியின் மலரும் மாலையும், அழ.வள்ளியப்பாவின் மலரும் உள்ளம், பாரதிதாசனின் இளைஞர் இலக்கியம் ஆகிய நூல்களின் குழந்தைப் பாடல்களைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

## புதுக்கவிதை இலக்கியம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட புதிய முயற்சியில் பிறந்ததே புதுக்கவிதையாகும். இது தமிழன்னைக்குச் சூட்டப்பெற்ற புதியதோர் அணியாகும். தமிழ் இலக்கியத்தில் இயல்பாகவே ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியாகப் புதுக்கவிதையைக் கொள்ளலாம். ஆங்கிலத்தில் 'New Poetry' எனக் கூறப்பெறுவதையொட்டியே தமிழில் **'புதுக்கவிதை'** எனப்பெயரிட்டனர். புதுக்கவிதை வரலாற்றையும் அதன் நோக்கு மற்றும் போக்குகளையும் ந.சுப்புரெட்டியார் **'புதுக்கவிதை போக்கும் நோக்கும்', 'பாட்டுத்திறன் (மூன்றாம்பகுதி)'** என்னும் இருநூல்களிலும் தெளிவாக விளக்கி உள்ளார்.

## புதுக்கவிதை - இலக்கணம்

புதுக்கவிதையின் இலக்கணத்தை மு.மேத்தா **'ஊர்வலம்'** என்னும் கவிதை நூலினுள்,

> **"இலக்கணச் செங்கோல்**
> **யாப்பு சிம்மாசனம்**
> **எதுகைப் பல்லக்கு**
> **மோனைத் தேர்கள்**
> **தனிமொழிச் சேனை**
> **பண்டித பவனி**
> **இவை எதுவும் இல்லாத**
> **கருத்துகள் தம்மைத் தாமே**
> **ஆளக் கற்றுக் கொண்ட**
> **புதிய மக்களாட்சி முறையே**
> **புதுக்கவிதை"**[80]

என விளக்கிக் கூறியுள்ளார். புதுக்கவிதை தோன்றிய பின்னர் மரபுக்கவிதையை எள்ளி நகையாடும் பாங்கில் பல புதுக்கவிதைகள் படைக்கப் பெற்றுள்ளன. சி.மணி என்னும் புதுக்கவிஞர் புதுக்கவிதையை உடையையும் ஒப்பனையையும் நீக்கிவிட்ட கன்னியாகவே காணுகின்றார்.

> **"யாப்புடைத்த கவிதை**
> **அணையுடைத்த காவிரி**
> **யாப்பாற்ற கவிதை**
> **இயற்கை யெழில் இருக்க**
> **செயற்கையணி எதற்கென்று**
> **உடையுடன் ஒப்பனையையும்**
> **நீக்கிவிட்ட கன்னி"**[81]

என்பது அக்கவிதையாகும். யாப்பைத் தவிர்க்கும்போது தான் கவிதை தன் அனைத்து ஆற்றல்களோடும் வெளிப்படுவதாக சி.மணி கூறுகின்றார்.

### புதுக்கவிதையின் தோற்றம்

ந.சுப்புரெட்டியார் புதுக்கவிதையின் தோற்றம் குறித்து விளக்கும் போது மகாகவி பாரதியாரையே புதுக்கவிதையின் **'பிதாமகன்'** என்கின்றார். பாரதியார் தம் அனைத்துக் கவிதைகளையும் முற்றிலும் மாறுபட்ட படைப்புக்களாக அமைத்து அவற்றை **'நவகவிதை'** என்றார்.

**"சுவைபுதிது பொருள்புதிது வளம்புதிது**
**சொற்புதிது சோதிமிக்க**
**நவகவிதை"**[82]

என்று அவர்தம் கவிதைகளைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

பாரதியார் தம் கவிதை உணர்வுகளையும் அகத்தெழுச்சிகளையும் கனவுகள், கற்பனைகள், முற்போக்கு எண்ணங்கள், சமுதாயப் பார்வைகள், நாட்டுநிலைகள் ஆகிய அனைத்தையும் மரபுநிலை கெடாமல் எளிய, இனிய, புதியபுதிய யாப்புக்களில் சந்த நயங்களுக்கு உட்படும் பல்வேறு புதிய கவிதை வடிவங்களில் வெளிப்படுத்திய இலக்கண விதிகட்குக் கட்டுப்படாத புதிய வடிவத்திலும் படைக்க முயன்றுள்ளார். அவரது வசனகவிதைகள் என்னும் பகுதியிலுள்ள **'காட்சி'** என்ற கவிதை இதற்குத் தக்க சான்றளிக்கின்றன. இதனால் பாரதியாருக்குப் புதுக்கவிதையில் இருந்த பேரவா புலனாகின்றது. இத்தகைய அவாவினைக் கொண்ட பாரதியாரே புதுக்கவிதையின் தந்தையும் முன்னோடியுமாகின்றார்.

### மரபுக்கவிதையும் புதுக்கவிதையும்

வசனம், செய்யுள் இரண்டிற்கும் அப்பாற்பட்டதே கவிதையாகும். வசனமும் செய்யுளும் கவிதை இயங்கும் தளங்களாகும். இவ்விரண்டும் கவிதையின் புறவடிவங்களாகும். கவிஞன் கையாளும் இவ்விரண்டு சாதனங்களில் மட்டும் கவிதையைக் காண இயலாது. இவற்றைக் கவிஞன் கையாளும் முறையில்தான் கவிதை வெளிப்படும். ஆற்றலும் படைப்புத்திறனும் கொண்ட கவிஞனுக்குச் செய்யுளிலும் கவிதை கிடைக்கும். வசனத்திலும் கவிதை கிடைக்கும். மரபுக் கவிதையாளர்கள் எழுதும் புதுக்கவிதையைக் கொண்டு இதனைத் தெளியலாம்.

**"நாடு**
**உடுத்தியிருந்த**
**நாலு வர்ணத்துணிகளை**
**அவன்தான்**
**தன்**
**பாட்டுநெருப்பில்**

**போட்டுப் பொசுக்கினான்”**[83]

இக்கவிதை வாலியின் பார்வையில் வருணாசிரம தர்மத்தை வெறுத்த பாரதியாரின் கருத்தைப் பளிச்சிடுவது. வசனம் போன்ற இதில் கவிதை உள்ளது.

## புதுக்கவிதையின் உருவம்

மரபுக்கவிதைக்குரிய இறுக்கமான கட்டுப்பாடுகளும் யாப்புவிதிகளும் புதுக்கவிதைக்கு இல்லை; ஆயினும் புதுக்கவிதைக்கு உருவம் உண்டு என்கின்றார் ந.சுப்புரெட்டியார். செய்யுளும் வசனமும் புதுக்கவிதையின் வடிவங்களாகும். **‘இந்த வடிவம் புராணத்தில் வரும் மன்மதனை ஓவியத்தில் வடித்துக் காட்டுவதற்கு ஒப்பானதாகும். சிவனால் எரிக்கப்பெற்ற மன்மதன் இரதிதேவியின் கண்களுக்கு மட்டுமே தென்படுவதைப்போல, இலக்கணத் தெய்வத்தின் நெற்றிக்கண் நெருப்பிற்கு இடையான புதுக்கவிதையின் உருவமும் உண்மையான இலக்கிய இரதிகட்கே தென்படக்கூடும்’**[84] என்னும் மீராவின் கூற்றை ஏற்கும் ந.சுப்புரெட்டியார், கவிதையில் கருத்து வெளிப்படும் அழகே புதுக்கவிதையின் வடிவச் சிறப்பு என்கின்றார். உணர்த்தும் முறையையே புதுக்கவிதையின் வடிவம் எனக் கொள்கின்றார் ந.சுப்புரெட்டியார். **“உணர்த்தும் முறை கவிஞர்களின் மனவெளிக்குப் புலப்படும் சூக்குமத் தன்மை கொண்டது. எனவே தான் புதுக்கவிதையின் உருவம் திருமலை நாயக்கர் மகாலின் தூணைப் போலத் தூலமாகத் தெரிவதில்லை”**[85] என்றார் மீரா. ந.சுப்புரெட்டியார் உருவத்தாலேயே சிறக்கும் கவிதைக்கு வாலியின் **‘எருமை’** குறித்த கவிதையைச் சான்று காட்டுகின்றார்.

**“காக்கைகள்**
**சவாரி செய்யும்**
**டாக்ஸி**
**பொறுமைப் பாடத்தை**
**போதிப்பதற்கென்றே**
**நடமாடும்**
**பல்கலைக்கழகம்”**[86]

## புதுக்கவிதை உத்திகள்

ந.சுப்புரெட்டியார் படிமம், குறியீடு, துல்லியம் - தெளிவு, சுருக்கம் ஆகியனவற்றைப் புதுக்கவிதையின் உத்திகளாக எடுத்துக்காட்டி, அவற்றைத் தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளார்.

## புதுக்கவிதை உள்ளடக்கம்

புதுக்கவிதையின் **‘உள்ளடக்கப் பொருள்கள்’** குறித்துக் குறிப்பிடும ந.சுப்புரெட்டியார், **“இலக்கியம்**

**இலக்கியத்திற்காகவே", "கலை கலைக்காகவே" என்ற கொள்ளைக்குரல்கள் ஓய்ந்து போய்விட்டன. 'இன்பம்' என்பது கவிதையின் ஒரு பயனாக இருக்கலாமேயன்றி அதுவே இலக்கியமாகாது என்ற உண்மை ஞானம் தட்டுப்பட்டு விட்டது. இன்று 'வாழ்க்கையின் திறனாய்வே கவிதை' என்ற அங்கீகாரம் பெற்றுவிட்டது. 'கவிதை சமூதத்திற்காகவே' என்ற முடிவுக்கு வந்துவிட்டது இலக்கியத் திறனாய்வு. சமுதாய வாழ்வைச் சித்தரிப்பதும், சமுதாய மேன்மைக்கு வழிகோலுவதும் வழிகாட்டுவதும் இலக்கியத்தின் இயல்புகள் என்பன ஏற்றுக் கொள்ளப் பெற்ற முடிவுகள், புதுக்கவிதை படைப்போர் இவற்றை நன்கு உணர்ந்துள்ளனர். அதனால் புதுக்கவிதையின் உள்ளடக்கம் மரபுக்கவிதையின் உள்ளடக்கத்தினின்றும் முற்றிலும் வேறுபட்டதாக அமைந்துவிட்டது. சுதந்திரம், ஜனநாயகம், ஜனநாயகச் சோசலிசம், அரசியல், உழைப்பவர் உலகம், வறுமை, கல்வியின் நிலை, சமுதாயத்தின் இழிவான நிலை போன்றவை பாடுபொருளாக அமைந்துவிட்டன. காதலுணர்வும் முருகுணர்வும் முதலிடம் பெற்றன. மார்க்சியக் கொள்கை வழியிலும், தனிமனிதத்தத்துவ நோக்கிலும், நகைச்சுவை எள்ளல் போக்கிலும் புதுக்கவிதைகள் மழைக்காலக் கொசுக்கள் போல உற்பத்தியாகிக் கொண்டிருக்கின்றன"**[87] எனக்குறிப்பிட்டுள்ளார். வறுமையின் தத்துவம், வியாபாரக் கொள்கை, விலைவாசி, உழைப்பவர் விழிப்புணர்வு, தமிழ்ப்பற்று குறித்த கிண்டல், சாதியம் ஆகியனவற்றை ந.சுப்புரெட்டியார், தக்க புதுக்கவிதைகளைச் சான்றுகாட்டிச் சிந்திக்கும் வகையில் எடுத்துரைத்துள்ளார்.

## புதுக்கவிதை - இலக்கியக் கொள்கைகள்

ந.சுப்புரெட்டியார் மேனாட்டில் தோன்றி வளர்ச்சி பெற்ற படிமக் கோட்பாடு, குறியீட்டியல், மீமெய்ம்மையியல், நனவோடை,, இருப்பியல் கொள்ளை, இருண்மைவாதம் ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையில் தமிழில் படைக்கப்பெற்றுள்ள புதுக்கவிதைகளை எடுத்துக்காட்டி, புதுக்கவிதை இலக்கியத் திறனாய்விற்குப் புதுவழி காட்டியுள்ளார்.

## இயல் முடிபுகள்

- 1939 முதல் திருக்குறளில் தோய்ந்த ந.சுப்புரெட்டியார், **'மனத்துக் கண் மாசிலனாதல்'** என்னும் குறள்நெறிப்படி வாழ்ந்தவர். மனம், வாக்கு, மெய்யால் பிறர்க்குத் தீங்கு செய்யாமல் வாழ்வாங்கு வாழ்ந்தவர். எதற்கும் கவலைப்படாமல் வாழவேண்டும் என்பதே அவரது வாழ்க்கை இலக்கு. அவர் செய்வனவற்றைத் திருந்தச் செய்தல் வேண்டும் என்னும் கொள்கையினர்.
- ந.சுப்புரெட்டியார் குறள்நெறி வாழ்க்கையைப் போற்றிய தமிழ்ச் சான்றோர் ஆவார். அவர் மு.வரதராசனைப் போன்று திருக்குறளுக்கு மிக எளிமையான உரையினை

எழுதியுள்ளார். **‘திருக்குறள் தெளிவு’** என்னும் அந்த உரைநூல் மிக எளிமையான, தெளிவான வாழ்வியல் சிந்தனைகளைக் கொண்டிருக்கின்றன. இந்நூல் இளைஞர் முதல் வளர்ந்தவர் வரை அனைவரும் எளிதாக அறிந்த பின்பற்றும் வாழ்வியல் சிந்தனைகளைக் கொண்டதாகும். இதனைப் படிப்போர் இதன் ஒரு சில உண்மைகளையாவது பின்பற்றி வாழவேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

- திருக்குறளைப் போலவே ந.சுப்புரெட்டியாரின் உரையும் சுருக்கமும் திட்டபமும் நுட்பமும் கொண்டது. அவர் எளிய தமிழில் இரண்டு வரிமுதல் மூன்று வரிக்குள் தம் உரையைச் சுருக்கமாகவே எழுதியுள்ளார். ஆயினும் அவர் உரைத்திறன் நுணுக்கமானவை.
- ந.சுப்புரெட்டியார் திருக்குறளுக்குத் தாம் எழுதிய தெளிவுரையில் அதன் வைப்புமுறையில் சிறப்புக்கவனம் செலுத்தியுள்ளார். அவர் அதிகார அகராதியை அகரவரிசையில் அமைத்து அந்தந்த அதிகாரங்கள் இடம்பெறும் பக்கங்களைக் குறித்துள்ளார். இயல்கள் மற்றும் அதிகாரங்களின் வைப்புமுறையில் முரண்பாடுகள் இல்லை. சொற்பொருள் விளக்கம் தருதல், அனுபவ மொழிகளை எடுத்தாளுதல் என்னும் நிலைகளில் ந.சுப்புரெட்டியாரின் திருக்குறள் உரை தனித்திறன் கொண்டதாக விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும்.
- ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணிகளுள் முத்திரை பதிப்பது அவரெழுதிய **‘வடவேங்கடமும் திருவேங்கடமும்’** என்னும் அரிய ஆராய்ச்சி நூலேயாகும். அறுபத்தைந்து பக்கங்களைக் கொண்ட இச்சிறிய நூலினுள் அவர் சங்ககால வேங்கடம் குறித்து விரிவான ஆய்வுத் தகவல்களை சங்கப் பாடல்களில் இருந்து தொகுத்துத் தந்துள்ளார். இந்த வட வேங்கடத்தை ஆண்ட மன்னர்களைப் பற்றிய அரிய வரலாற்றுக் குறிப்புக்களையும் தொகுத்து ஆராய்ந்துள்ளார். இன்றைய வேங்கடம் குறித்தும் அவர் பயனுள்ள தகவல்களைத் தந்துள்ளார். இவை தமிழ் இலக்கிய வரலாற்றுக்கும் தமிழக வரலாற்றுக்கும் தமிழிலக்கிய ஆய்வுக்கும் என்றும் ஆதாரங்களாக இருப்பவை.
- வடவேங்கடத்தை ஆண்ட புல்லி, திரையன், ஆதனுங்கன் ஆகிய மன்னர்களைப் பற்றிய குறிப்புக்களை ந.சுப்புரெட்டியார், அகநானூறு, பெரும்பாணாற்றுப்படை, புறநானூறு ஆகிய இலக்கியச் சான்றுகளைக் கொண்டு விரிவாக ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். இது அவரது வரலாற்றியல் அணுகுமுறைக்குச் சான்றாகும்.
- இன்று கற்றறிந்த புலவர்களும் பொதுமக்களும் திருப்பதி மலையையே **‘வடவேங்கடம்’** என்கின்றனர். மகாகவி

பாரதியாரும் வடவேங்கடத்தை **‘வடமாலவன்குன்றம்’** என்றே குறித்துள்ளார். கோவிந்தராசர் திருப்பதியில் திருக்கோயில் கொண்டிருப்பதால் இந்நகரத்தைப் பக்தர்கள் **‘கோவிந்தராசப் பட்டணம்’** என்றே அழைக்கின்றனர். இந்நகரை ஒட்டிய மலையையும் **‘திருப்பதி’** என்கின்றனர். இதனைத் **‘திருமலை’** என்றும் கூறுவர். மலையைத் **‘திருமலை’** என்றும். நகரைத் **‘திருப்பதி’** என்றும் குறிப்பிடுவதே சரியாகும். இம்மலை தமிழ் கூறும். நல்லுலகத்தின் வடகிழக்கு மூலையிலுள்ள ஒழுங்கற்ற தாழ்வான சில குன்றுகளின் கூட்டமாகும். இம்மலை **‘ஏழுமலை’** என்றே வழிவழியாக வழங்கப்பெற்று வருகின்றது.

- **‘பக்தியியக்கம்’** செல்வாக்குப் பெற்ற காலத்தில் - ஆழ்வார்களின் பாசுரங்களின் **‘வேங்கடம்’** என்னும் சொல் **‘தன்னை அடைந்தவர்களின் பாவங்கள் அனைத்தையும் ஒழித்தல்’** என்னும் புதுப்பொருளைப் பெற்றது. பாவமும் பாவச் செயல்களும் ஆன்மாவுக்குத் தாங்க முடியாத வெப்பத்தைத் தருவதாகும் என மனம் கற்பித்துக் கொண்டது. ஆதலால் **‘வேம்’** என்னும் சொல்லிற்கு **‘பாவம்’** என்னும் பொருளும் ஏற்கப்பட வேண்டியதாயிற்று.
- பக்தர்கள் வேங்கடம் என்னும் திவ்வியதேசம் அழிவில்லாத ஐஸ்வர்யங்களை வழங்கும் இடமாகவே கருதுகின்றனர். **‘கலியுக வரதன்’** குடி கொண்டிருப்பதால் **‘வேம்’** என்பது **‘அழிவின்மை’** என்னும் பொருளையும், **‘கடம்’** என்பது **‘ஐசுவரியம்’** என்னும் பொருளையும் தருவதாகக் கொள்ளலாம். தன்னை அடைந்தவர்களுக்கு அழிவில்லாத ஐசுவர்யங்களைத் தருவதால் இத்திவ்வியதேசம் ‘வேங்கடம்’ என்னும் பெயரினைப் பெற்றது.
- திருப்பதி பெரும்புகழ் பெற்றது சமயச்சார்பு பெற்ற இடைக்காலத்திலேயே இடைக்காலத்தில் தான் **‘திருப்பதி’** திருத்தலப் பயணிகளின் புனிதத்தலமாகியது. திருப்பதி குறித்த சமயச்சார்பான குறிப்புக்கள் புறப்பொருள் வெண்பாமாலையிலும் சிலப்பதிகாரத்திலும் காணப்படுகின்றன.
- திருப்பதியின் புகழ் வைணவ சமயச் சார்புடையது. ஆழ்வார் பெருமக்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருவேங்கடம் கி.பி.11ஆம் நூற்றாண்டில் பெரும் புகழ் பெற்றது. இராமாநுசர் திருவேங்கடத்துத் திருமாலின் மீது காட்டிய ஈடுபாடும் அவரது சொந்தப் பெருமையும் சேர்ந்து இத்திருக்கோயிலின் பெருமையை மிகவும் உயர்த்தி விட்டதாக ந.சுப்புரெட்டியார் கருதுகின்றார். இராமநுசர்

திருமலைக்கு மூன்று முறை வந்ததாக அவரது வரலாற்றில் அறியமுடிகின்றது.

- பிற்காலத்தில் வடவேங்கடத்தில் பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. பூதத்தாழ்வார் இம்மலையை **‘இளங்கிரிமலை’** எனக் குறித்துள்ளார். இது **‘சிறுமலை’** என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது. பூதத்தாழ்வார் திருவேங்கடமுடையான் கோயிலை **‘இளங்கோயில்’** என்றே தம் பாசுரத்தில் சுட்டியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார், தமிழ் இலக்கிய வகைமையின் தோற்றம், பின்புலம், வளர்ச்சி, இக்கால இலக்கிய வகைமைகளின் போக்குகள் ஆகியனவற்றை விளக்கிச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் கல்கி அறக்கட்டளையின் சார்பில் இலக்கியச் சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார். அப்பொழிவு **‘இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்’** என்னும் தலைப்பில் நூலாக்கம் பெற்றுள்ளது. இதில் தமிழ் இலக்கிய வகைமை குறித்த தம் ஆராய்ச்சி நுண்திறனை ஆழமாக வெளிப்படுத்தியுள்ளார். ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிக்கு இந்நூல் ஒன்றே போதுமான சான்றாதாரம் ஆகும்.
- மொழி வரலாற்றில் ஆழ்ந்த புலமையுடைய ந.சுப்புரெட்டியார் தமிழைத் **‘தென்மொழி’** என்றும் வடமொழியைச் **‘சமசுகிருதம்’** என்றும் குறிப்பிடும் மொழி வரலாற்றுப் பின்புலத்தில் தமிழ் இலக்கியத்தின் வரலாறு மற்றும் தோற்றப் பின்னணியை விளக்கியுள்ளார். வடமொழியாளர் தமிழைத் **‘திராவிடம்’** என்றழைத்த காரணத்தை விளக்கியுள்ளார்.
- தமிழகத்தில் ஆரியமொழி செல்வாக்குப் பெற்ற பின்னர் வடமொழி வெறியர்கள் வடமொழியைத் **‘தேவபாஷை’** என்றும், தமிழை **‘நீசபாஷை’** என்றும் இகழ்ந்தனர். இதனால் தமிழுக்கு நேர்ந்த இழுக்கினைப் போக்குவதற்காகவே தமிழ்ப் பற்றாளர்கள் வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் பக்திப் பனுவல்களுக்கு உரைகளை எழுதினர்.
- அகம், புறம், பக்திப்பாடல்கள், காப்பியங்கள், புராணங்கள், சிற்றிலக்கியங்கள் எனத் தமிழ் இலக்கிய வகைகளின் வளர்ச்சி வரலாற்றை ந.சுப்புரெட்டியார் வரலாற்று, சமூகப் பின்புலங்களில் தெளிவுபடுத்தி உள்ளார்.
- இசுலாமியப் படையெடுப்பால் பெருங்காப்பிய வளர்ச்சி குன்றி, சிற்றிலக்கியங்கள் தோன்றியதைச் சுட்டியுள்ளார். ஆங்கிலேயர் ஆட்சியில் தான் தமிழில் புத்திலக்கிய வகைகள் தோன்றின.

- ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கிய வகைமைகளில் அடிவரையறை உள்ளன. அடிவரையறை இல்லன எனப்பாகுபடுத்தி விளக்கியுள்ளார். அக்காலத்தில் இலக்கியங்கள் ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா என்னும் நான்கு வகைப்பாக்களிலேயே படைக்கப்பெற்றன.
- செய்யுட்களின் ஒலிநயத்திற்கும் யாப்பிற்கும் உள்ள தொடர்பை ந.சுப்புரெட்டியார் நுணுக்கமாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். தமிழ்க்கவிஞர்கள் உணர்ச்சிக்கேற்ப யாப்பு வடிவங்களையே ஆண்டுள்ளனர்.
- பழைய பாவகைகளைக் கொண்டு உணர்ச்சிக்கேற்றவாறு பாட்டின் ஓசைகளை வேறுபடுத்திக் காட்ட இயலாமையால் அவற்றை ஈடுசெய்வதற்காகப் பிற்காலத்தில் தாழிசை, துறை, விருத்தம் போன்ற பாவினங்கள் தோன்றின என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இவற்றுள் ஆசிரியத்தாழிசை சிலப்பதிகாரத்திலும், ஆசிரிய விருத்தம் ஆழ்வார் பாசுரங்களிலும் முதன்முதலாக இடம்பெற்றன.
- வெண்பாவின் பாவினங்கள், வஞ்சிப்பாவின் பாவினங்கள், கலிப்பாவின் பாவினங்கள் ஆகியன தோன்றி வளர்ந்த பின்னர் புலவர்கள் தமிழ்ச் செய்யுட்களில் இலக்கிய விருந்தினை அள்ளி வழங்கினர். இவை அடிவரையறை உள்ளவையாகும்.
- இவற்றுள் தாழிசையைக் கையாண்டு பரணி இலக்கியங்களும், கட்டளைக் கலித்துறையைக் கையாண்டுக் கோவை இலக்கியங்களும் விருத்தத்தைக் கையாண்டு சிந்தாமணி, இராமகாதை, பெரியபுராணம் போன்ற பெருங்காப்பியங்களும் தோன்றி, தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தியுள்ளன.
- புலவர்களுக்குப் புதியவகைப் பாக்களில் ஆர்வம் தோன்றியமையால் கும்மி, சிந்து, தாலாட்டு, ஊசல் இலக்கியங்கள் தோன்றின. இவற்றைச் சித்தர்கள், இராமலிங்க அடிகளார், பாரதியார், அண்ணாமலை ரெட்டியார், பாரதிதாசன், கவிமணி போன்ற இக்காலக் கவிஞர்கள் கையாண்டு மிகுபுகழ் பெற்றதைத் தக்க சான்றுகள் காட்டி விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.
- குழந்தை இலக்கியத்திற்கு முதன்முதலாக வித்திட்ட பாரதியார், அவரைத் தொடர்ந்து கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பாரதிதாசன், குழந்தை இலக்கியத்திற்கென்றே தம்மை அர்ப்பணித்துக்கொண்ட அழ.வள்ளியப்பா, குழ.கதிரேசன் ஆகியோரின் குழந்தை இலக்கியப் பங்களிப்புக்களை ந.சுப்புரெட்டியார் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிவுசெய்துள்ளார்.
- அவர் பேச்சுப் பயிற்சி குழந்தைக் கல்வியின் முக்கியக் கூறு என வலியுறுத்தியுள்ளார். அவர் புதுக்கவிதையின்

இலக்கியச் சாதனைகளையும் தக்க சான்றுகளுடன் மதிப்பீடு செய்துள்ளார்.

~~~~~

## குறிப்புகள்

1. ந.சுப்புரெட்டியார், திருக்குறள் தெளிவு, 'நூல்முகம்'.
2. குறள். 10.
3. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 2.
4. குறள். 34.
5. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 8.
6. குறள். 240.
7. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 48.
8. குறள். 280.
9. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 56.
10. குறள். 388.
11. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 80.
12. குறள். 448.
13. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 92.
14. குறள். 799.
15. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 162.
16. குறள். 937.
17. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 19.
18. அகம்., ப.எ. 85.
19. அகம்., ப.எ. 141.
20. அகம்., ப.எ. 393.
21. அகம்., ப.எ. 209.
22. குறுந்., ப.எ. 11, ஐங்குறு., ப.எ. 321, அகம்., ப.எ. 67.
23. S.Krishnaswami Iyyengar, A History of Thirupati, Part – I, pp. 4-5.
24. அகம்., ப.எ. 61.
25. புறம்., ப.எ. 372.
26. புறம்., ப.எ. 9.
27. பரி., ப.எ. 6, 7, 10, 11, 12, 16.
28. புறம்., ப.எ. 84.
29. குறுந்., ப.எ. 10.
30. குறுந்., ப.எ. 41.
31. அகம்., ப.எ. 115.
32. புறம்., ப.எ. 113.
33. குறுந்., ப.எ. 174.
34. சிலம்பு., காடுகாண்., வரி 90.
35. நற்., ப.எ. 48.
36. கலித்., ப.எ. 9.
37. அகம்., ப.எ. 295.
38. அகம்., ப.எ. 213.
~~~~~

39. அகம்., ப.எ. 263.
40. அகம்., ப.எ. 359.
41. அகம்., ப.எ. 27.
42. அகம்., ப.எ. 295.
43. ந.சுப்புரெட்டியார், வடவேங்கடமும் திருவேங்கடமும், ப. 29.
44. மணிமேகலை, இருபத்து நான்காம் காதை.
45. புறம்., ப.எ. 389.
46. பாரதியார் கவிதைகள், செந்தமிழ்நாடு, பா.எ. 5.
47. திருவாய். 3:3:6.
48. திருமூலர், திருமந்திரம், பா.எ. 190.
49. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், புலவரலாற்றுப்படை, உதாரணச் செய்யுள், 23.
50. சிலம்பு., காடுகாண்., வரி 32.
51. மேலது., வரி 35–53.
52. சிலம்பு., வேனிற் காதை, வரி 1-2.
53. சிலம்பு., கடலாடு காதை., வரி 31–32.
54. சிலம்பு., காடுகாண்., வரி 148–149.
55. ந.சுப்புரெட்டியார், வடவேங்கடமும் திருவேங்கடமும், ப. 56.
56. மூன்றாம் திருவந்தாதி, பா.எ. 63.
57. இரண்டாம் திருவந்தாதி, பா.எ. 53.
58. மேலது., பா.எ. 54.
59. ந.சுப்புரெட்டியார், வடவேங்கடமும் திருவேங்கடமும், ப. 64.
60. பெரியாழ்வார், திருமொழி, 5:4:9.
61. ந.சுப்புரெட்டியார், இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், ப. 4.
62. பேராசிரியர் (உ.ஆ.), தொல். பொருள். செய்யுள். நூற். 1.
63. மேலது.
64. மேலது., நூற். 7.
65. மேலது., நூற். 157.
66. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள். செய்யுள்., நூற். 101.
67. ந.சுப்புரெட்டியார், இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், ப. 16.
68. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள். செய்யுள்., நூற். 114.
69. ந.சுப்புரெட்டியார், மு.நூ., பக். 38-39.
70. மேலது., ப. 43.
71. மேலது., பக். 47-48.
72. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள். செய்யுள். அகத்., நூற். 59.
73. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள். செய்யுள். நூற். 158.
74. மேலது., நூற். 166.

75. ந.சுப்புரெட்டியார், இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், ப. 69.
76. மேலது., பக். 70–71.
77. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள். செய்யுள்., நூற். 172.
78. ந.சுப்புரெட்டியார், மு.நூ., ப. 77.
79. மேலது., பக். 82–83.
80. மேலது., பக். 85-86.
81. மு.மேத்தா, ஊர்வலம், ப. 70.
82. சி.மணி, வரும்போகும், ப. 16.
83. பாரதியார் கவிதைகள், வெங்கடேச ரெட்ட பூபதி (2) – 3.
84. வாலி, ‘பாரதி ஒரு பிள்ளையார் சுழி’, பொய்க்கால் குதிரைகள், ப. 18.
85. மீரா, புதுக்கவிதையின் உருவம், ப. 32.
86. மேலது., ப. 82.
87. வாலி, ‘எருமை’, பொய்க்கால் குதிரைகள், ப. 66.

# ஆய்வு நிறைவுரை

**'ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்'** என்னும் இவ்ஆய்வுரையில் இயல்தோறும் கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள், அந்தந்த இயல்களின் இறுதியில் தொகுப்புரைகளாகத் தரப்பெற்றுள்ளன. **'ஆய்வு நிறைவுரை'** என்னும் இப்பகுதியில் சில முக்கிய ஆய்வு முடிவுகள் மட்டுமே திறனாய்ந்து வெளிப்படுத்தப் பெற்றுள்ளன.

ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கையும் இலக்கியப் பின்புலமும் தமிழுக்குப் பல அரிய இலக்கண, இலக்கிய நூல்களை வழங்கியுள்ளது. வைணவத்திற்குத் தொண்டு என்ற வகையில் அவர் பல வைணவ இலக்கியத் திறனாய்வு நூல்களை எழுதியுள்ளார். கல்வியியல் துறைக்குப் பயன்படும் வகையில் அவர் கற்றல் - கற்பித்தல் முறை குறித்த பல நூல்களைத் தமிழில் எழுதியுள்ளார். இந்த வகையில் அவருடைய தமிழ்ப்பணிகள், தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு ஏற்றம் தருவதாகும்.

- ந.சுப்புரெட்டியார் தமிழ்ப்பணிகளுள் அவர் ஆசிரியப்பணி குறித்து எழுதியுள்ள நூல்கள் கல்வியியல் நோக்கில் தமிழாசிரியர்களுக்கும் தமிழ் இலக்கியம் பயிலும் மாணவர்களுக்கும் பெரிதும் பயன்பாடுடையன. இவ்வகையில் **'தமிழ் பயிற்றும் முறை', 'கவிதை பயிற்றும் முறை'** ஆகிய அவருடைய இருநூல்களும் குறிப்பிடத்தக்கவை.
- அறிவியல் பயிற்றுவிக்கும் முறையை விளக்கித் தமிழில் **'அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்'** யுனெஸ்கோ நிறுவனத்தால் பதிப்பித்து வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.
- ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டிருந்த அவர் கல்வியியல் மாணவர்களுக்குத் திறம்படக் கற்பித்த அனுபவத்தின் வெளிப்பாடாக அமைந்த **'கல்வி உளவியல் கோட்பாடுகள்'** என்ற நூல் குறிப்பிடத்தக்கது.
- ந.சுப்புரெட்டியார் கற்பித்தல் நெறிமுறைகளை ஊக்குவித்தல், செயல்மூலம் கற்றல், கற்பனவற்றை வாழ்க்கையுடன் இணைத்துக்காட்டல், கற்றலில் அக்கரையை உண்டாக்குதல், மனத்தைத் தயாரித்தல், பாடநோக்கம், எழுத்துக்கூறல், ஒப்பிடல், பொதுவிதி காணல் என வகைப்படுத்தி விளக்கியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் கல்வி பயிற்றும் கிண்டர்கார்ட்டன் முறை, விளையாட்டு முறை, செயல்திட்ட முறை, வார்தாக் கல்வி முறை, நடிப்பு முறை என்னும் ஐவகை முறைகளை சுட்டிக்காட்டி விளக்கியுள்ளார்.

- வாய்மொழி வினாக்கள், விளக்கம் தருதல், துணைக் கருவிகள், வீட்டு வேலை தருதல் ஆகியனவற்றை அவர் பயிற்றல் உத்திகளாகக் குறிப்பிடுகின்றார்.
- ந.சுப்புரெட்டியார் ஆசிரியரின் செயல் திட்டங்கள், பள்ளிக்குரிய நூல்கள், கல்வித்துறைச் சோதனைகள், தாய்மொழி ஆசிரியர்களின் முக்கியத்துவம், அவர்களது பணிகள் ஆகியன குறித்து தெளிந்த நோக்கில் விளக்கியுள்ளார்.
- கவிதை பயிற்றும் முறை, கவிதையைக் கற்பிப்பவர் தகுதி, ஆசிரியத் துறையின் சிறப்பு, கவிதையைத் தேர்ந்தெடுத்தல், கவிதை அறிமுகம், கவிதையைப் படித்தல், கவிதை விளக்கம், கவிதையும் வாழ்க்கையும், கவிதைகளை மனப்பாடம் செய்தல், கவிதையைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்கள் பின்பற்ற வேண்டிய நான்கு வழிமுறைகள் என்ற நிலைகளில் ந.சுப்புரெட்டியார் கவிதை பயிற்றுவிக்கும் முறைகளை விளக்கியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் தமிழ் மரபு சார்ந்த சமய தத்துவச் சிந்தனைகளைத் தமிழ்ப்பக்தி இலக்கியங்களிலிருந்து எடுத்துக்காட்டி, தமிழ்ச்சூழலில் அதன் சிறப்புக்களையும் தேவைகளையும் முக்கியத்துவத்தையும் சுட்டிக்காட்டியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் சைவ சமயத்தவர் ஆயினும் அவர் வைணவ சமயத் தத்துவங்களிலேயே மிகுந்த ஈடுபாடுடையவர் என்பதை அவர் வைணவ சமயத் தத்துவங்கள் குறித்து எழுதியுள்ள நூல்களின் வாயிலாக அறியமுடிகின்றது.
- ந.சுப்புரெட்டியார் வைணவத் திருத்தலங்களுப் புனிதப் பயணங்களை மேற்கொண்டு, அத்திருத்தலங்களின் புனிதம் மற்றும் பெருமைகளை விளக்கிச் சமய மற்றும் ஆன்மீகப் பார்வையில் புனிதப் பயண நூல்களையும் எழுதியுள்ளார்.
- **‘திவ்வியப்பிரபந்தங்கள்’** தென்புலத்து வைணவ நெறியின் அடிப்படை என்பதை அவர் நிறுவிக்காட்டியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களைப் பன்முகப் பார்வையில் விரிவாகச் சிந்தித்து பல புதிய சிந்தனைகளை வைணவ நெறியின் உட்பொருள் விளக்கத்தோடு தெளிவுபடுத்தி உள்ளார். அவரது இந்த வைணவப் புலமைக்குச் சான்றளிப்பதாக **‘சில நோக்கில் நாலாயிரம்’** என்னும் இவரது நூல் அமைந்துள்ளது.
- வைணவ சமய வரலாற்றையும், வைணவத் தத்துவங்களையும் முழுமையாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

- திருமங்கையாழ்வாரிள் வாழ்க்கையையும் வைண சமய இலக்கிய வரலாற்றில் அவரது பங்களிப்பினையும் ந.சுப்புரெட்டியார் **‘கலியன் குரல்’** என்னும் நூலினுள் ஆய்ந்து தெளிவுப்படுத்தி உள்ளார்.
- பன்னிரு ஆழ்வார்களில் சடகோபர், **‘நம்மவர்’** எனப்போற்றும் பெருமைபெற்றவர் **‘நம்மாழ்வார்’** ஆவார். ஏனைய ஆழ்வார்களை நம்மாழ்வாரிள் ஒவ்வொரு அவயமாகவும், நம்மாழ்வாரை அவயவியாகவும் வழங்குவதே வைணவ மரபாகும்.
- அவர் சரீர – சரீரி பாவனையில் சித்து – அசித்து குறித்த வைணவத் தத்துவக் கோட்பாடுகளை விளக்கியுள்ளார். வைணவ சமயக் கொள்கைகளை தத்துவம், இனம், புருஷார்த்தம் என மூவகைப்படுத்தி விளக்கியுள்ளார்.
- **‘திருமங்கையாழ்வார்’** தாமான தன்மையை விடுத்து இறைவனின் தன்மையை ஏற்றுத் தன்னைப் பெண்ணாகவும் (நாயகி), இறைவனைத் தலைவனாகவும் (நாயகன்) கொண்டு சில பாசுரங்களைப்பாடி அனுபவித்துள்ளார். இந்த உறவே தத்துவத்தில் நாயகன் - நாயகி உறவெனப் போற்றப்படுவதை ந.சுப்புரெட்டியார் தம் ஆய்வுகளில் தெளிவுப்படுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் திருஞான சம்பந்தர் - திருமங்கையாழ்வார் விவாதம் குறித்துத் தந்துள்ள வரலாறு புதுமையானதாகும்.
- ந.சுப்புரெட்டியார் **‘வைணவத் திருத்தலங்கள்’** குறித்து எழுதியுள்ள சமயப் புனிதப் பயண நூல்களில் வைணவத் திருப்பதிகளின் பெருமைகளையும், அத்திருப்பதிகளை வழிபடும் முறைகளையும் குறித்துப் பாமர மக்களுக்குப் பயன்படும் பல அரிய செய்திகளை எளிமையாகத் தந்துள்ளார்.
- **‘வைணவத் திருப்பதிகள்’** குறித்த தம் ஆய்வுகளில் ந.சுப்புரெட்டியார் **‘ஊர்ப்பெயர்’** குறித்த ஆய்வுகளிலும் சிறப்புக் கவனம் செலுத்தி இருப்பது சிந்தனைக்குரியதாகும்.
- அவர் சைவ சமயம் மற்றும் சைவ சமய இலக்கியம் குறித்து சைவ சமய விளக்கு, சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், முருகன் துதியமுது, மூவர் தேவாரம் - புதிய பார்வை முதலான நூல்களையும் எழுதியுள்ளார்.
- தேவாரப் பாடல்கள் மறைந்த நிலையில் அவற்றைத் திருமுறை கண்ட சோழனாகிய இராசராசசோழன், திருநாரையூரில் ஆதிசைவர் குலத்தில் தோன்றிய நம்பியாண்டர் நம்பியின் உதவியுடன் தொகுத்த வரலாற்றை ந.சுப்புரெட்டியார் வரலாற்றுப் பார்வையில் தெளிவுப்புடுத்தியுள்ளார்.

- ந.சுப்புரெட்டியார் தேவாரப் பாடல்களுக்குப் பண் வகுக்கப்பட்ட முறை, தேவாரப் பதிகங்கள் தொகுக்கப்பட்ட வரிசைமுறை, மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களின் சிறப்பு, முருகப் பெருமானின் ஆற்றுப்படை வீடுகளின் சிறப்பு ஆகியனவற்றை ஆழமாகவும் அழுத்தமாகவும் வெளிப்படுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் இலக்கிய நயம் காணல், இலக்கியச் சுவைகளை எடுத்துக்காட்டுதல், கவிதை நயம் காணல், சொல்லாட்சித் திறனைச் சுட்டிக்காட்டல், உட்பொருள் விளக்கம் கூறல், தத்துவச் சிந்தனைகளை வாழ்க்கைக்குப் பயன்படுமாறு பொருத்திக் காட்டுதல், கற்பனை வளத்தைப் பாராட்டுதல் என்னும் முறைகளில் தம் திறனாய்வுப் பார்வையை வளர்த்துக் கொண்டுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் 1988 இல் **'பாட்டுத்திறன்'** என்னும் கவிதைத் திறனாய்வு நூலினை எழுதியுள்ளார். பாட்டுத்திறன், உணர்ச்சியின் தத்துவம், கவிதையின் தத்துவம், புதுக்கவிதைத்திறன் என்னும் நான்கு பெரும்பிரிவுகளில் இந்நூல் கவிதையை நுணுக்கமாகத் திறனாய்ந்து வெளிப்படுத்துகின்றது. தமிழ்க் கவிதைகளைப் பன்முகப் பார்வையில் ஆய்வு செய்வதற்கு இந்நூல் பெரிதும் பயன்பாடு உடையதாக அமைகின்றது.
- உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்னும் நான்கு கவிதைக் கூறுகளுள் உணர்ச்சியைக் கவிதையின் உள்ளமாகவும், ஏனையவற்றைக் கவிதையின் உடலாகவும் ந.சுப்புரெட்டியார் தக்க சான்றுப் பாடல்களைச் சுட்டி வெளிப்படுத்தியுள்ளார். கவிதையின் உணர்ச்சியைத் தூண்டல் - துலங்கல் முறையில் புரிந்து கொள்ள வேண்டுமென்கின்றார். மனிதனின் உடலில் நிகழ்களும் செயல்களும் மனத்தால் மேற்கொள்ளப்பெறும் செயல்களும் தூண்டல்-துலங்கல் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டதாகும். இவ்வாறு செயல்படும் உள்ளக்கிளர்ச்சியை கவிதையின் விழுமிய உணர்ச்சி என்றும், அதுவே கவிதையின் உயிராகவும் உள்ளமாகவும் இருப்பதை அவர் தெளிவுப்படுத்தியுள்ளார்.
- மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள், தமிழ் இலக்கண, இலக்கிய நூல்கள், தமிழ்க்கவிஞர்கள் தரும் கவிதை இலக்கணங்களைச் சுட்டிக்காட்டும் ந.சுப்புரெட்டியார், கவிதையின் பாடுபொருள் கவிஞனின் புலன்காட்சி, முருகியல் உணர்ச்சி ஆகியனவற்றைத் தக்க சான்றுப்பாடல்களைக் காட்டித் திறனாய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். உணர்ச்சி, கற்பனை, அணிநலன்கள், தொடை நயங்கள், சுவைகள் அமைய செந்தமிழ்ச் சொற்களால் நல்ல வடிவ ஒழுங்குடன் அமைக்கப்படுவதே கவிதை என்கின்றார்.

- தமிழில் தோன்றிய வசன கவிதையின் வளர்ச்சி, உரைநடைக் கவிதையின் செல்வாக்கு ஆகியனவற்றை ந.சுப்புரெட்டியார் **'இருபதாம் நூற்றாண்டின் இலக்கியப் புரட்சி'** எனப் போற்றுகின்றார்.
- தொல்காப்பியரின் அகத்திணைக் கொள்கைகளைத் தமிழ் ஆர்வலர்களும் ஆய்வாளர்களும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காகவே அவர் **'அகத்திணைக் கொள்கைகள்'** என்னும் திறனாய்வு நூலினை எழுதியுள்ளார். வடமொழியில் தொனிப்பொருள் விளக்கங்களைக் கூறும் நூல்கள் மிகுதி. தமிழில் தொல்காப்பியரின் மெய்ப்பாட்டியலில் இருபத்தேழு நூற்பாக்களும், பொருளியலில் இரண்டு நூற்பாக்களும் மட்டுமே சுவையிலக்கணம் பற்றியது எனக்குறிப்பிடும் ந.சுப்புரெட்டியார், இதனை விளக்கித் தமிழில் பல நூல்களைத் தமிழறிஞர்கள் எழுதவேண்டும் என்கின்றார்.
- தமிழ்த் திறனாளிகள் உவமை, உருவகம் போன்ற அணிகளைக் கவிதைகளில் கண்டு சுவைத்து இன்புறுவதைப் போலவே, மேனாட்டுத் திறனாய்வாளர்கள் **'படிமங்கள்'** என்னும் உருக்காட்சியைக் கவிதைகளில் கண்டு இன்புறுகின்றனர். இத்திறனாய்வுக் கொள்கையை ந.சுப்புரெட்டியார் தமிழில் மிக எளிமையாகத் திறனாய்வு உலகிற்கு அறிமுகப்படுத்தியுள்ளார். அவர்தம் ஆய்வு நூலில் கட்புலன், செவிப்புலன், சுவைப்புலம், நாற்றப்புலம், தொடுபலம், இயக்கப்புலம், மரபு சார்ந்த படிம வகைகளைத் தக்க தமிழ்க் கவிதைகளைச் சான்று காட்டித் தெளிவுப்படுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் வடமொழி – தமிழ்மொழிக் கவிதைச் சுவைகளில் காணலாகும் ஒற்றுமை – வேற்றுமைகளை நுட்பமாக ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் புதுக்கவிதைகளை அறிமுகப்படுத்தும் பாங்கு, **'வழிவழியாக மரபுகெடாது யாப்பு இலக்கணத்தோடு பொருந்திவரும் கவிதைகளினின்றும் மாறுபடும் கவிதைப் படைப்புத்தான் புதுக்கவிதை'** எனப் புதுக்கவிதைக்குத் தரும் விளக்கம், புதுக்கவிதையின் வரலாறு, உருவம், புதுக்கவிதை உத்திகள், உள்ளடக்கப்பொருள்கள் சில இலக்கிய இயக்கக் கொள்கைகளின் அடிப்படையில் புதுக்கவிதைகள் எனப் புதுக்கவிதைத் திறனாய்வினை மிகவும் எளிமையாகவும், தெளிவாகவும் தந்துள்ளார். **'புதுக்கவிதைத் திறனாய்வு'** புதியது இல்லை என்றதும் ந.சுப்புரெட்டியார் தரும் விளக்கங்கள் புதுமையானவை.
- ந.சுப்புரெட்டியாரின் **'பாஞ்சாலி சபதம் - ஒருநோக்கு'** என்னும் திறனாய்வு நூல் அறிமுகம், தமிழில் காவியங்கள், கதைக்கரு, காவியத்தின் ஒருமைப்பாடு,

காவியத்தலைவி – திரௌபதி, காவியத்தின் எதிர்நிலைத் தலைவன்-திரியோதனன், பிற காவிய மாந்தர்கள், தெய்வீகக் கூறுகள், காப்பிய நடை, உருக்காட்சிகள், காவியம் உணர்த்தும் உண்மை என்னும் ஆய்வுப் பகுப்புக்களைக் கொண்டதாகும்.

- ந.சுப்புரெட்டியாரின் **‘குயில்பாட்டு – ஒரு மதிப்பீடு’** என்னும் திறனாய்வு நூல் குயில்பாட்டின் பின்னணி, குயிலின் காதற்கதை, பாட்டில் இயற்கை எழில், பாட்டில் இசைக் கவர்ச்சி, பாட்டின் உள்ளுறை, குயில்பாட்டு ஒரு மதிப்பீடு என்னும் ஆய்வுப்பகுப்புக்களைக் கொண்டதாகும்.
- **‘பாரதியார் குயில்பாட்டு’** என்ற தம் கற்பனைக் கதைக் காவியத்திற்கு வேதாந்தப் பொருள்காண விழைகின்றார். இறுதி மூன்றடிகளில் அவர் குயிலைக் கவிதா சக்தி, கவிதைக் காதலி என்று குறியீடாகவும், உள்ளுறையாகவும் கொண்டிருப்பதை ந.சுப்புரெட்டியார் நுட்பமாக ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் அறிவுக்கு விருந்தாகவும், ஆன்மீகப் பெட்டகமாகவும், மனித வாழ்க்கையை வழி நடத்திச் செல்லும் வழிகாட்டியாகவும் கம்பராமாயணத்தில் கம்பனால் படைக்கப்பெற்ற அனுமன் என்ற பாத்திரத்தை விளக்கித் திறனாய்வுப் பார்வையில் **‘அண்ணல் அனுமன்’** என்னும் நூலினை எழுதியுள்ளார். அவரது பார்வையில் அனுமன் அடக்கம், ஒழுக்கம், அறிவு, பணிவு, வீரம், வீவேகம் முதலான அருங்குணங்களின் ஒட்டுமொத்த வடிவமாகத் திகழ்கின்றான்.
- பண்டைத்தமிழர் வானநூல் துறையில் பெற்றிருந்த அறிவிற்கு புறநானூறு, பெரும்பாணான்றுப்படை, சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களில் சான்றுகள் கிடைத்துள்ளன. உலகம் எது என்பதற்கு மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் குறிப்பு காணப்படுகின்றது.திருமழிசையாழ்வார் திருமங்கயைாழ்வார் தாயுமானவர் பாடல்களில் பரம்பொருளின் அறிவியல் தன்மை விளக்கப்படுகின்றது.
- அண்டங்கள் குறித்த கருத்து மாணிக்கவாசகர், பாரதியார் பாடல்களில் காணப்படுகிறது. விஞ்ஞானத்தையும், மெய்ஞானத்தையும் இணைத்து காட்டுவதற்கு மாணிக்கவாசகரும், சேக்கிழாரும் முயன்றுள்ளனர். கதிரவனின் இயக்கத்தை கம்பன் தெளிவாக காட்டியுள்ளான். இராசி மண்டலத்தில் உள்ள இராசிகளைப் பற்றிய குறிப்புகள் பழந்தமிழ் இலக்கியத்தில் சோதிடக்கலை அறிவோடு பதிவு செய்யப்பட்டுள்ளன.
- பண்டைத்தமிழர்களின் பொறியியல் அறிவு கரிகாலனின் கல்லணை, கம்பன் பாடல் ஆகியவற்றின் வாயிலாக தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

- பண்டைத்தமிழ்ர்களின் உயிரியல் அறிவையும், உயிரியலின் மரபு வழிப்பண்பையும் திருவாசகம், திருக்குறள், கபிலர் அகவல் ஆகியவற்றின் துணை கொண்டு விளக்கப்பட்டுள்ளன.
- வானியல் துறையில் தமிழர்கள் பெற்றிருந்த அறிவியல் அறிவு கம்பராமாயணப்பாடலாலும் மருத்துவ துறையில் தமிழர்கள் பெற்றிருந்த அறிவு திருக்குறள், கம்பராமாயணம் ஆகிய நூல்களாலும் கணிதவியல் துறையில் தமிழர்கள் பெற்றிருந்த நுண்மான் நுழைபுலம் கம்பராமாயணம், பிங்கலந்தை நிகண்டு ஆகிய நூல்களாலும் விளக்கப்பட்டுள்ளன.
- வானொலி தொலைக்காட்சி பற்றிய இக்கால அறிவியல் அறிவு பாரதிதாசனின் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு பழந்தமிழ் இலக்கியம் முதல் இக்கால இலக்கியம் வரையில் தமிழ் இலக்கியங்களில் பரவலாக குறிப்புகளாகவும், செய்திகளாகவும், துணுக்குகளாகவும் இடம் பெற்றுள்ள அறிவியல் சிந்தனைகளை ந.சுப்புரெட்டியார் இன்றைய வளர்ந்து வரும் அறிவியலில் பல துறைகளாக வகைதொகைப்படுத்தி வெளிப்படுத்தி இருப்பது அவரது அறிவியல் சிந்தனைக்கு ஒப்புதல் அளிப்பதாக அமைகின்றது.
- ந.சுப்புரெட்டியார் ‘தொலை உலகச் செலவு’ என்னும் நூலில் விண்வெளி ஆராய்ச்சி, விண்வெளிப் பயணம், அதன் பயன்கள் ஆகியனவற்றை எளிய தமிழில் தேர்ந்த விண்ணியல் நிபுணரைப் போல செறிவாகவும் சுருக்கமாகவும் விளக்கியுள்ளார்.
- ந.சுப்புரெட்டியார் குறள்நெறி வாழ்க்கையைப் போற்றிய தமிழ்ச் சான்றோர் ஆவார். அவர் மு.வரதராசனைப் போன்று திருக்குறளுக்கு மிக எளிமையான உரையினை எழுதியுள்ளார். **‘திருக்குறள் தெளிவு’** என்னும் அந்த உரைநூல் மிக எளிமையான, தெளிவான வாழ்வியல் சிந்தனைகளைக் கொண்டிருக்கின்றன. இந்நூல் இளைஞர் முதல் வளர்நதவர் வரை அனைவரும் எளிதாக அறிந்து பின்பற்றும் வாழ்வியல் சிந்தனைகளைக் கொண்டதாகும். இதனைப் படிப்போர் இதன் ஒரு சில உண்மைகளையாவது பின்பற்றி வாழவேண்டும் என்கின்றார் ந.சுப்புரெட்டியார்
- திருக்குறளைப் போலவே ந.சுப்புரெட்டியாரின் உரையும் சுருக்கமும் திட்டபமும் நுட்பமும் கொண்டது. அவர் எளிய தமிழில் இரண்டு வரிமுதல் மூன்று வரிக்குள் தம் உரையைச் சுருக்கமாகவே எழுதியுள்ளார். ஆயினும் அவர் உரைத்திறன் நுணுக்கமானவை.

- ந.சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணிகளுள் முத்திரை பதிப்பது அவரெழுதிய **‘வடவேங்கடமும் திருவேங்கடமும்’** என்னும் அரிய ஆராய்ச்சி நூலேயாகும். அறுபத்தைந்து பக்கங்களைக் கொண்ட இச்சிறிய நூலினுள் அவர் சங்ககால வேங்கடம் குறித்து விரிவான ஆய்வுத் தகவல்களை சங்கப் பாடல்களில் இருந்து தொகுத்துத் தந்துள்ளார். இந்த வட வேங்கடத்தை ஆண்ட மன்னர்களைப் பற்றிய அரிய வரலாற்றுக் குறிப்புக்களையும் தொகுத்து ஆராய்ந்துள்ளார். இன்றைய வேங்கடம் குறித்தும் அவர் பயனள்ள தகவல்களைத் தந்துள்ளார். இவை தமிழ் இலக்கிய வரலாற்றுக்கும் தமிழக வரலாற்றுக்கும் தமிழலக்கிய ஆய்வுக்கும் என்றும் ஆதாரங்களாக இருப்பவை.
- வடவேங்கடத்தை ஆண்ட புல்லி, திரையன், ஆதனுங்கள் ஆகிய மன்னர்களைப் பற்றிய குறிப்புக்களை ந.சுப்புரெட்டியார், அகநானூறு, பெரும்பாணாற்றுப்படை, புறநானூறு ஆகிய இலக்கியச் சான்றுகளைக் கொண்டு விரிவாக ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார். இது அவரது வரலாற்றியல் அணுகுமுறைக்குச் சான்றாகும்.
- **‘பக்தியியக்கம்’** செல்வாக்குப் பெற்ற காலத்தில் - ஆழ்வார்களின் பாசுரங்களின் **‘வேங்கடம்’** என்னும் சொல் ‘**தன்னை அடைந்தவர்களின் பாவங்கள் அனைத்தையும் ஒழித்தல்’** என்னும் புதுப்பொருளைப் பெற்றது. பாவமும் பாவச் செயல்களும் ஆன்மாவுக்குத் தாங்க முடியாத வெப்பத்தைத் தருவதாகும் என மனம் கற்பித்துக் கொண்டது. ஆதலால் **‘வேம்’** என்னும் சொல்லிற்கு **‘பாவம்’** என்னும் பொருளும் ஏற்கப்பட வேண்டியதாயிற்று.
- பக்தர்கள் வேங்கடம் என்னும் திவ்வியதேசம் அழிவில்லாத ஐஸ்வர்யங்களை வழங்கும் இடமாகவே கருதுகின்றனர். **‘கலியுக வரதன்’** குடி கொண்டிருப்பதால் **‘வேம்’** என்பது **‘அழிவின்மை’** என்னும் பொருளையும், **‘கடம்’** என்பது **‘ஐசுவரியம்’** என்னும் பொருளையும் தருவதாகக் கொள்ளலாம். தன்னை அடைந்தவர்களுக்கு அழிவில்லாத ஐசுவர்யங்களைத் தருவதால் இத்திவ்வியதேசம் ‘வேங்கடம்’ என்னும் பெயரினைப் பெற்றது.
- திருப்பதி பெரும்புகழ் பெற்றது சமயச்சார்பு பெற்ற இடைக்காலத்தில் தான் **‘திருப்பதி’** திருத்தலப் பயணிகளின் புனிதத்தலமாகியது. திருப்பதி குறித்த சமயச்சார்பான குறிப்புக்கள் புறப்பொருள் வெண்பாமாலையிலும் சிலப்பதிகாரத்திலும் காணப்படுகின்றன.

- பிற்காலத்தில் வடவேங்கடத்தில் பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. பூதத்தாழ்வார் இம்மலையை **‘இளங்கிரிமலை’** எனக் குறித்துள்ளார். இது **‘சிறுமலை’** என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது. பூதத்தாழ்வார் திருவேங்கடமுடையான் கோயிலை **‘இளங்கோயில்’** என்றே தம் பாசுரத்தில் சுட்டியுள்ளார்.
- மொழி வரலாற்றில் ஆழ்ந்த புலமையுடைய ந.சுப்புரெட்டியார் தமிழைத் **‘தேன்மொழி’** என்றும் வடமொழியைச் **‘சமசுகிருதம்’** என்றும் குறிப்பிடும் மொழிவரலாற்றுப் பின்புலத்தில் தமிழ் இலக்கியத்தின் வரலாறு மற்றும் தோற்றப் பின்னணியை விளக்கியுள்ளார். வடமொழியாளர் தமிழைத் **‘திராவிடம்’** என்றழைத்த காரணத்தை விளக்கியுள்ளார்.
- தமிழகத்தில் ஆரியமொழி செல்வாக்குப் பெற்ற பின்னர் வடமொழி வெறியர்கள் வடமொழியைத் **‘தேவபாஷை’** என்றும், தமிழை **‘நீசபாஷை’** என்றும் இகழ்ந்தனர். இதனால் தமிழுக்கு நேர்ந்த இழுக்கினைப் போக்குவதற்காகவே தமிழ்ப் பற்றாளர்கள் வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் பக்திப் பனுவல்களுக்கு உரைகளை எழுதினர்.
- இசுலாமியப் படையெடுப்பால் பெருங்காப்பிய வளர்ச்சி குன்றி, சிற்றிலக்கியங்கள் தோன்றியதைச் சுட்டியுள்ளார். ஆங்கிலேயர் ஆட்சியில் தான் தமிழில் புத்திலக்கிய வகைகள் தோன்றின.
- செய்யுட்களின் ஒலிநயத்திற்கும் யாப்பிற்கும் உள்ள தொடர்பை ந.சுப்புரெட்டியார் நுணுக்கமாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். தமிழ்க்கவிஞர்கள் உணர்ச்சிக்கேற்ப யாப்பு வடிவங்களையே ஆண்டுள்ளனர்.
- வாழ்க்கையில் காண்பது **‘சுவை’** அல்ல; காப்பியம், நாடகம், நாட்டியத்தில் காண்பதே சுவை என்கின்றார் ந.சுப்புரெட்டியார். அவர் வரையறுக்கப்பெற்ற ஒலிநயமே யாப்பு என்கின்றார்.
- பழைய பாவகைகளைக் கொண்டு உணர்ச்சிக்கேற்றவாறு பாட்டின் ஓசைகளை வேறுபடுத்திக் காட்ட இயலாமையால் அவற்றை ஈடுசெய்வதற்காகப் பிற்காலத்தில் தாழிசை, துறை, விருத்தம் போன்ற பாவினங்கள் தோன்றின என்கின்றார் ந.சுப்புரெட்டியார். இவற்றுள் ஆசிரியத்தாழிசை சிலப்பதிகாரத்திலும், ஆசிரிய விருத்தம் ஆழ்வார் பாசுரங்களிலும் முதன்முதலாக இடம்பெற்றன.
- தொல்காப்பியத்தை ஆதாரமாகக் கொண்டு ந.சுப்புரெட்டியார் அடிவரையறை இல்லாதவையாக நூல், உரை, பிசி, அங்கதம், முதுசொல், மந்திரம் என்னும்

பாவகைகளில் இலக்கியங்கள் தோன்றியதை எடுத்து ஆராய்ந்துள்ளார்.

- புலவர்களுக்குப் புதியவகைப் பாக்களில் ஆர்வம் தோன்றியமையால் கும்மி, சிந்து, தாலாட்டு, ஊசல் இலக்கியங்கள் தோன்றின. இவற்றைச் சித்தர்கள், இராமலிங்க அடிகளார், பாரதியார், அண்ணாமலை ரெட்டியார், பாரதிதாசன், கவிமணி போன்ற இக்காலக் கவிஞர்கள் கையாண்டு மிகுபுகழ் பெற்றதைத் தக்க சான்றுகள் காட்டி விளக்கியுள்ளார் ந.சுப்புரெட்டியார்.
- குழந்தை இலக்கியத்திற்கு முதன்முதலாக வித்திட்ட பாரதியார், அவரைத் தொடர்ந்து கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பாரதிதாசன், குழந்தை இலக்கியத்திற்கென்று தம்மை அர்ப்பணித்துக் கொண்ட அழ.வள்ளியப்பா, குழ.கதிரேசன் ஆகியோரின் குழந்தை இலக்கியப் பங்களிப்புக்களை ந.சுப்புரெட்டியார் ஆழமாகவும் அழுத்தமாகவும் பதிவுசெய்துள்ளார்.
- அவர் பேச்சுப் பயிற்சி குழந்தைக் கல்வியின் முக்கியக் கூறு என வலியுறுத்தியுள்ளார். அவர் புதுக்கவிதையின் இலக்கியச் சாதனைகளையும் தக்க சான்றுகளுடன் மதிப்பீடு செய்துள்ளார்.

இவ்வாறு ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகளை வெளிப்படுத்தும் இந்த ஆய்வுரை ந.சுப்புரெட்டியார் என்ற தமிழ் ஆளுமையின் பன்முகத் திறனை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

## மேலாய்வுக் களன்கள்

**'ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்'** என்னும் பொருளில் அமைந்துள்ள இவ்ஆய்வுரை, இனிவரும் ஆய்வாளர்களுக்குப் பின்வரும் தலைப்புகளில் மேலாய்வு செய்வதற்கு ஆய்வுக்களன்களை அமைத்துக் கொடுப்பதாக அமைகின்றது.

1. **ந.சுப்புரெட்டியாரின் பன்முகப் பார்வை**
2. **ந.சுப்புரெட்டியாரின் ஆளுமைத்திறன்.**
3. **ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் வைணவ இலக்கியங்கள்**
4. **ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுக் கொள்கை**
5. **ந.சுப்புரெட்டியாரின் நோக்கில் தமிழிலக்கிய வகைமை**
6. **ந.சுப்புரெட்டியாரின் மொழியாளுமை**
7. **ந.சுப்புரெட்டியாரின் இலக்கியக் கொள்கைகள்**

~ ~ ~ ~ ~

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


**சுப்புரெட்டியார், ந.,** **அண்ணல் அநுமன்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 2002.

” **அணுவின் ஆக்கம்,** எஸ்.ஆர்.சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு, சென்னை, 1994.

” **அணுக்கரு பௌதிகம்,** தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1996.

” **அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 2001.

” **ஆன்மிகமும் அறிவியலும்,** பாரி நிலையம், சென்னை, 1985.

” **ஆழ்வார்கள் ஆரா.அமுது,** வேங்கடம் வெளியீடு, சென்னை, 1987.

” **இல்லற நெறி,** தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1979.

” **இலக்கிய வகைமையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்,** ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1996.

**சுப்புரெட்டியார், ந.,** **கலியன் குரல்,** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், 1989.

” **கல்வி உளவியல்,**
எஸ்.வாசன் கம்பெனி,
சென்னை, 1984.

” **கவிதை பயிற்றும் முறை,**
இளங்கணி பதிப்பகம்,
சென்னை, 2009.

” **கவிதை பயிற்றும் முறை,**
பாரி நிலையம்,
சென்னை, 1983.

” **கண்ணன் பாட்டுத்திறன்,**
சர்வோதய இலக்கியப் பண்ணை,
மதுரை, 1982.

” **கவிதையனுபவம்,**
கழக வெளியீடு,
சென்னை, 1961.

” **கண்ணன் துதி,**
எம்.ஆர்.துரைசாமி ரெட்டியார் தனலட்சுமி அம்மாள் மணிவிழா வெளியீடு,
சென்னை, 1987.

” **காஞ்சிபிரதியாதி,**
அன்னங்கராச்சாரிய சுவாமிகள்,
அவ்வை வெளியீடு,
சென்னை, 2004.

” **சடகோபன் செந்தமிழ்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1989.

**சுப்புரெட்டியார், ந.,** **சில நோக்கில் நாலாயிரம்,**
பாரி நிலையம்,
சென்னை, 1998.

| | |
|---|---|
| ” | **சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்,**<br>பூம்புகார் பதிப்பகம்,<br>சென்னை, 2010. |
| ” | **சைவ சமய விளக்கு,**<br>வேங்கடம் வெளியீடு,<br>சென்னை, 1982. |
| ” | **சோழநாட்டுத் திருப்பதிகள் பகுதி I & II,**<br>பாரி நிலையம்,<br>சென்னை, 1981. |
| ” | **சோழநாட்டுத் திருப்பதிகள் - பகுதி 1**<br>அவ்வை வெளியீடு,<br>சென்னை, 2004. |
| ” | **சோழநாட்டுத் திருப்பதிகள் - பகுதி 2**<br>அவ்வை வெளியீடு,<br>சென்னை, 2004. |
| ” | **தமிழ் பயிற்றும் முறை,**<br>மெய்யப்பன் பதிப்பகம்,<br>சிதம்பரம், 2008. |
| ” | **தம்பிரான் தோழர்,**<br>வேங்கடம் வெளியீடு,<br>சென்னை, 1985. |
| ” | **திருக்குறள் தெளிவு,**<br>சுரா புக்ஸ் லிமிடெட்,<br>சென்னை, 2005. |
| **சுப்புரெட்டியார், ந.,** | **திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்,**<br>பாரி நிலையம்,<br>சென்னை, 1974. |
| ” | **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,**<br>சந்தியா பதிப்பகம்,<br>சென்னை, 2011. |

” **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,**
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை, 2002.

” **தொலை உலகச் செலவு,**
கழக வெளியீடு,
சென்னை,1976.

” **தொண்டை நாட்டுத் திருப்பதிகள்,**
எஸ்.ஆர்.சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு,
சென்னை, 1973.

” **பாகலன் பைந்தமிழ்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1992.

” **பாட்டுத்திறன்,**
ஸ்டார் பதிப்பகம்,
சென்னை, 1988.

” **பாண்டி நாட்டுத் திருப்பதிகள்,**
எஸ்.ஆர்.சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு,
சென்னை, 1977.

” **வடநாட்டுத் திருப்பதிகள்,**
பாரி நிலையம்,
சென்னை, 1980.

**சுப்புரெட்டியார், ந.,** **வடவேங்கடமும் திருவேங்கடமும்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1963.

” **வாழையடி வாழை,**
மணிவாசகர் நூலகம்,
சென்னை, 1991.

” **விட்டுசித்தன் விரித்த தமிழ்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1987.

” **வைணவ உரைவளம்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1985.

” **வைணவச் செல்வம்,**
தொகுதி -1,
தமிழ்ப்பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர், 2010.

” **வைணவச் செல்வம்,**
தொகுதி -2,
தமிழ்ப்பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர், 2010.

” **நாவுக்கரசர்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1986.

” **நினைவுக் குமிழிகள் - I,**
பாரி நிலையம்,
சென்னை, 1988.

” **ஞானசம்பந்தர்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1986.

**சுப்புரெட்டியார், ந.,** **மலரும் நினைவுகள்,**
தேன்மழை பதிப்பகம்,
சென்னை, 1989.

” **மணிவிழா மலர்,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1997.

” **மலைநாட்டுத் திருப்பதிகள்,**
பாரி நிலையம்,
சென்னை, 1988.

”　　**முத்திநெறி,**
பாரி நிலையம்,
சென்னை, 1982.

”　　**மூவர் தேவாரம் - புதிய பார்வை,**
வேங்கடம் வெளியீடு,
சென்னை, 1978.

**துணைமை ஆதாரங்கள்**

1. **அரங்கநாத முதலியார், ஆ.,** **ஸ்ரீவைணவம்**
சுவர்ண விலாஸ்,
சென்னை, 1988.

2. **அமிர்தசாகரர்,** **யாப்பருங்கலக்காரிகை மூலமும் குணசாகரர் இயற்றிய உரையும்,**
வேங்கடசாமி நாட்டார் பதிப்பு,
கழக வெளியீடு,
சென்னை, 1944.

3. **ஆழ்வார்கள்,** **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்,**
கி.வேங்கடசாமி ரெட்டியார் வெளியீடு,
திருவேங்கடத்தான் திருமன்றம்,
சென்னை, 1946.

4. **இளங்கோவடிகள்,** **சிலப்பதிகாரம்,**
ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை,
கழக வெளியீடு,
சென்னை, 1962.

5. **இளம்பூரணார் (உ.ஆ.),** **தொல்காப்பியம் - பொருளதிகாரம்,**
கழக வெளியீடு,
சென்னை, 1953.

6. **இலட்சுமணன், கி.,** **இந்திய தத்துவஞானம்,**
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு, 1980.

7. **இராசகோபாலன், கு.ப., & சுந்தரராசன், பெ.கோ.,** **கண்ணன் என் கவி,** பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1982.

8. **இராமலிங்க சுவாமிகள்,** **திருவருட்பா – ஆறாம் திருமுறை,** இராமலிங்கப் பணிமன்றம், சென்னை, 1979.

9. **இராசமாணிக்கனார், மா.,** **தமிழ்மொழி இலக்கிய வரலாறு,** பாரி நிலையம், சென்னை, 1970.

10. **இன்குலாப்,** **வெள்ளை இருட்டு,** அகரம், சிவகங்கை, 1979.

11. **ஐயனாரிதனார்,** **புறப்பொருள் வெண்பா மாலை,** உ.வே.சா. பதிப்பு, 1942.

12. **கம்பர்,** **கம்பராமாயணம் உரையடன்,** வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியர், திப்பு, 1942.

13. **கிருஷ்ணவேணி அம்மையார், எஸ்.,** **செம்பொருள்,** திருமலை – திருப்பதி தேவஸ்தான வெளியீடு, திருப்பதி, 1952.

14. **கைலாசபதி, க.,** **பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,** குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, 1966.

15. **கைலாசபதி, க., & முருகையன், இ.,** **கவிதை நயம்,** குமரன் புத்தக நிலையம், சென்னை, 2011

16. **சந்திரசேகரன், நா. (ப.ஆ.),** **குறுந்தொகை – சௌரிப்பெருமாள் அரங்கனார் உரையுடன்,** முல்லை நிலையம், சென்னை, 2000.

17. **சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.),** **ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும்,** உ.வே.மா.நூல் நிலையம், சென்னை, 1965.

18. **சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.),** **குறுந்தொகை மூலமும் உரையும்,** உ.வே.மா.நூல் நிலையம், சென்னை, 1962.

19. **சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.),** **சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும்,** தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986.

20. **சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.),** **புறநானூறு மூலமும் பழையவுரையும்,** தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

21. **சித்பவாநந்த அடிகள்,** **கடவுளின் வடிவங்கள்,** தபோவன வெளியீடு, திருப்பராய்த்துறை, 1957.

22. **சிதம்பரனார், சாமி.,** **பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும்,** அறிவுப்பதிப்பகம், சென்னை, 2003.

23. **சிதம்பரனார், சாமி.,** **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2000.

24. **சுப்பிரமணியபிள்ளை, கா.,** **சேக்கிழார் சுவாமிகள் சரித்திரமும் பெரியபுராண ஆராய்ச்சியும்,** கழக வெளியீடு, சென்னை, 1928.

25. **சுப்பிரமணியபிள்ளை, கா.,** **தனிப்பாடல் திரட்டு,** I & II பகுதிகள், கழக வெளியீடு, சென்னை, 1959.

26. **செல்வம், த.பீ.,** **‘விதி’ (புதுக்கவிதைகள் தொகுப்பு),** இலக்கியப் பண்ணை, இராசபாளையம், 1972.

27. **சேக்கிழார்,** **பெரியபுராணம்,** திருப்பனந்தாள் வெளியீடு, ஸ்ரீவைகுண்டம், 1970.

28. **திருகூடராசப்ப கவிராயர்,** **குற்றாலக் குறவஞ்சி,** கழக வெளியீடு, சென்னை, 1963.

29. **திருவள்ளுவர்,** **திருக்குறள் - பரிமேலழகர் உரை,** கழக வெளியீடு, சென்னை, 1937.

30. **தாயுமான அடிகள்,** **தாயுமான சுவாமிகள் பாடல்கள்,** தருமையாதீன வெளியீடு, 1965.

31. **தேசிய விநாயகம் பிள்ளை,** **மலரும் மாலையும்,** புதுமைப் பதிப்பக வெளியீடு, சென்னை, 1944.

32. **நச்சினார்க்கினியர் (உ.ஆ.),** **தொல்காப்பியம் பொருளதிகாரம்,** முதற்பாகம், கழக வெளியீடு, 1934.

33. **பாரதியார்,** **பாரதியார் கவிதைகள்,** லியோ புக் பப்ளளிஷர்ஸ், சென்னை, 2014.

34. **பாரதிதாசன்,** **பாரதிதாசன் கவிதைகள்,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1956.

35. **பாலசுப்பிரமணியன், கு.வெ.,** **சங்க இலக்கியக் கொள்கை,** மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2008.

36. **புருடோத்தம நாயுடு, பு.ரா.,** **ஈட்டின் தமிழாக்கம்,** 10 தொகுதிகள்,

சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, 1976.

37. **பேராசிரியர் (உ.ஆ.),** **தொல்காப்பியம் பொருளதிகாரம் - இரண்டாம் பாகம்,** சாது அச்சுக்கூடம், சென்னை, முதற்பதிப்பு, 1935.

38. **ஜெகத்ரட்சகன், எஸ். (உ.ஆ.),** **நாலாயிரத் திவ்ய பிரபந்தம்,** ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை, 1993.

39. **மறைமலையடிகளார்,** **மாணிக்கவாசகர் காலமும் கருத்தும்,** கழக வெளியீடு, சென்னை, 1958.

40. **மணி. சி.,** **வரும் போகும்,** கிரியா வெளியீடு, சென்னை,1974.

41. **மாணிக்கம், வ.சுப.,** **தொல்காப்பியம் புதுமை,** செல்வி பதிப்பகம், காரைக்குடி, 1964.

42. **மெய்கண்டார் முதலியார்,** **மெய்கண்ட சாத்திரம் பதினான்கு - இரண்டு பகுதிகள்,** கழக வெளியீடு, சென்னை, 1969.

43. **மேத்தா, மு.,** **ஊர்வலம்,** விஜயா பதிப்பகம், கோவை, 1976.

44. ” **காத்திருந்த காற்று,** பாரி நிலையம், சென்னை, 1979.

45. **வரதராசன், மு.,** **இலக்கிய ஆராய்ச்சி,** பாரி நிலையம், சென்னை, 1962.

46. ” **இலக்கியத்திறன்,**
பாரி நிலையம்,
சென்னை, 1959.

47. ” **இலக்கிய மரபு,**
பாரி நிலையம்,
சென்னை, 2006.

48. **வல்லிக்கண்ணன்,** **புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்,**
அகரம் வெளியீடு,
சிவகங்கை, 1976.

49. **வாலி,** **பொய்க்கால் குதிரைகள்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, 1978.

50. **வானமாமலை, நா.,** **புதுக்கவிதை – முற்போக்கும் பிற்போக்கும்,**
மக்கள் வெளியீடு,
சென்னை, 1972.

51. **வெள்ளைவாரணன், க.,** **பன்னிரு திருமுறை வரலாறு – முதற்பகுதி,**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம், 1961.

52. ” **பன்னிரு திருமுறை வரலாறு – முதல், இரண்டாம் பகுதிகள்,**
அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு,
சிதம்பரம், 1961.

53. **வைத்தீஸ்வரன், எஸ்.,** **உதய நிழல்,**
சாரல் வெளியீடு,
சென்னை, 1974.

54. **வையாபுரிப்பிள்ளை, எஸ்.,** **சங்க இலக்கியம் - இருதொகுதிகள்,**
சைவ சித்தாந்த மஹாசமாஜம்,

சென்னை, 1956.

**ஆங்கில நூல்கள்**

1. **Bhandarkar, R.A.,** **Vaishnvaism, Saivism and other Minor Religious Systems,** Bhandarkar Oriental Research Institute, Pune, 1967.

2. **Meenakshi Syndaram, K.,** **A Study of the Poetical works of Subramania Bharathi,** Paari Nilayam, Madras, 1965.

3. **Srinivasa Iyengar, P.T.,** **History of Tamils,** Asian Publications, New Delhi, 1965.

4. **Subbu Reddiar, N.,** **Collected Papers,** Paari Nilayam, Madras, 1985.

5. **Subbu Reddiar, N.,** **Religion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar,** S.V. University, Tirupati, 1978.

~ ~ ~ ~ ~

## ஆய்வில் அமைந்தவை

* ந சுப்புரெட்டியாரின் வாழ்க்கைத் தகவல்களும் இலக்கியப் பின்புலமும்
* ஆசிரியப் பணிக்கு ந சுப்புரெட்டியாரின் பங்களிப்பு
* ந சுப்புரெட்டியாரின் தமிழ்மரபு சார்ந்த சமய, தத்துவச் சிந்தனைகளும், இலக்கியப் பணிகளும்
* ந சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பணிகள்
* ந சுப்புரெட்டியாரின் அறிவியல் தமிழ்ப்பணிகள்
* ந சுப்புரெட்டியாரின் தமிழ் இலக்கியப் பணிகள்

## மேலாய்வுக் களன்கள்

'*ந சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணிகள்*' என்னும் பொருளில் அமைந்துள்ள இவ்ஆய்வுரை, இனிவரும் ஆய்வாளர்களுக்குப் பின்வரும் தலைப்புகளில் மேலாய்வு செய்வதற்கு ஆய்வுக்களன்களை அமைத்துக் கொடுப்பதாக அமைகின்றது.

ந சுப்புரெட்டியாரின் பன்முகப் பார்வை
ந சுப்புரெட்டியாரின் ஆளுமைத்திறன்.
ந சுப்புரெட்டியாரின் பார்வையில் வைணவ இலக்கியங்கள்
ந சுப்புரெட்டியாரின் திறனாய்வுக் கொள்கை
ந சுப்புரெட்டியாரின் நோக்கில் தமிழிலக்கிய வகைமை
ந சுப்புரெட்டியாரின் மொழியாளுமை
ந.சுப்புரெட்டியாரின் இலக்கியக் கொள்கைகள்

"Research is to see what everybody else has seen,
and to think what nobody else has thought."

"*What we find changes who we become.*"

**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**




# ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

**1) Tamil Payitrum Murai [1957]**
**2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
**3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
**4) Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21
b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)




பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற
100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]

www.nasubbureddiar100.in